ஸ்ரீ:

தெய்வப்புலமை

அரிதாசர் அருளிச்செய்த

# இருசமய விளக்கம்.

(வசனம்)




பண்டித. ஆ. அரங்கராமாநுஜன்

உரைநடையிலியற்றியது.



ஹரிஸமய திவாகரப் பிரசுரம்.







ஹரிஸமய திவாகரம் பிரஸ்,

மதுரை.

1933.




விலை ரூ. 1—8—0












அந்தணர் சந்நிதியில்
ஆகமவல்லி ஆரணவல்லி என்ற மாதர்கள்
வழக்கெடுத்துரைத்தல்.







ஸ்ரீமதேராமாநுஜாயநம:

அரிதாசர்திருவடிகளேசரணம்.

# தனியன்கள்.




## விருத்தம்.

விரிதாதுகமழ்துளவத் தொடைமாயன்பழவடியே
வேதஞ்சாகை
பெரிதாகமொழிவதனை மோகனசாத்திரமயக்காற்
பிணக்குப்பேசிக்
கருதாதகயவர்தமை யறுத்துமிகச்சினந்தெழுகூர்க்
கதிர்வாளான
அரிதாதனிருசரண மெந்நாளுந்தொழுதேத்தி
யகத்துள்வைப்பாம். (க)

விரியோதநெடுங்கடல்சூழ் வியனுலகிற்கமலவிழி
மேகமேனிக்
கருதாதிபகவனுல கெவ்வுயிரும்படைத்தழித்துக்
காக்குந்தன்மை
பிரிவேதுமில்லாது டழமறைகடுணிபொருளைப்
பேணிப்பேசும்
அரிதாதனிருசரண மெனதுசிரத்தணிந்துதய
ரகற்றினேனே (உ)

வேறு.

பதுமமலர்மகண்மார்பன் வளரொளிர்முகுந்தனே
பரவுதசசதமோலி திகழ்முடியனந்தனே

பயிலவழகியசேனை முதல்வனெனுநம்பனே
 பலவுகனிபொழின்மேவு குருகைவருமொய்ம்பனே
சதுரனெதிபதியோபொன்மதிலுயரரங்கனுர்
 தமதுசெவியுறுகேள்வி யிதமொழிபிரசங்கனே
சகமதனிலெவரோவிவ் வடிவுகொடிணங்கினேர்
 தவசுருபமிதுவாகு மெனவிவணடைந்துசேர்
விதமுறுமரன்மாய னிவர்தரமிலங்குமா
 வியனியல்புபெறவோது பெயர்குணநிறைந்துசீர்
விவரமவைவெளியாக வரியமறையங்கமாய்
 மிகுமிருதியிதிகாச முதலுளவரம்பினுல்
அதுலவபிநவவாய்மை யுரைகளிலடங்கிநீ
 டமைதிபெறுபிரமாண வகைதொகைசெய்தின்பமே
அமரிருசமயதீப விரிபனுவலெங்கள்பால்
 அருள்புரியுமரிதாச ரடியிணையிறைஞ்சுவாம். (௬)

---

## நூற்பயன்.

வளங்கெழுசெல்வமுண்டா மனக்கருத்தெல்லாமுற்றும்
கலங்கமின்ஞானமெய்துங் காட்சிசேர்முத்திவாய்க்கும்
தளங்கமழ்துளவக்கோலத் தாரரிதாதன்வாக்கால்
விளங்கிருசமயநூலின் மெய்ப்பொருள்விரும்புவோர்க்கே. (க)

கண்ணகன்ஞாலத்தீர்நுங் கருப்பற்றறையறுக்கவேணும்
எண்ணியவெண்ணியாங்கே யெண்மையினெய்தவேணும்
நண்ணிருசமயமாண்பு நன்கறிவிளக்கமேபோல்
திண்ணநூற்பிறிதோன்றின்மை தெரிந்திடீர்விரைந்திடீரே. (உ)

வேறு.

இந்துதவழ்பைம்பொழில்சூழ் வளமிக்கஅரிதைநக
 ரிறைவனென்னும்
மந்தரபுயத்தண்ண லரிதாதனருள்சுரந்து
 வகுத்துச்செய்த

முந்தையிருசமயவிளக் கப்பெருநூலொருகவியை
மொழிந்தோர்கற்றோர்
பைந்துளவப்பரஞ்சுடரி னருட்பேற்றுலிகபரமும்
படைப்பர்மாதோ (௩)

பொய்ம்மைபுகலாகமவாதியர்கள் செருக்குத்திமிரம்
புடைபேர்ந்தோட
மெய்ம்மைபெறுபர வத்து விண்டுவேனயாவருக்கும்
விளக்கமாக
மும்மையெனுந்தமிழ்ப்புலமை யேறரிதாதன்பரிந்து
மொழிந்தவிந்தச்
செம்மையுறுவிருசமய விளக்கமுணரறிஞர்கள்போற்
சிறந்தோர்யாரே (௪)

வேறு

இருமாசமய விளக்கமேனப்பேர்
வருமாநூல்புவி வாய்ந்திடலாலிப்
பெருமாமன்னுயிர் பேதைமைநீங்குற்
றிருமாமுத்தியை யேய்வதுதிடனே. (௫)

வேறு.

வேதமேமுதலவாய விண்ணவர்முனிவரேனோர்
ஓதுநூற்புராணஞ்சிற்ப முறுபுறத்துறைநூன்மற்றம்
நீதியினுணர்ந்தோராவர் நீடிருசமயத்தன்மை
போதமாம்விளக்கநூலைப் புரையறத்தெரிகல்லோரே. (௬)

பொன்னிதழ்மலர்த்தண்டேனைப் புரிந்தயில்சுரும்பரென்ன
மன்னிருசமயநீர்மை வகுக்குநல்விளக்கநூலை
நன்னர்மெய்யறிஞர்கொள்வர் நாறுபுண்ணீருண்ணீப்போல்
அன்னியபுன்னூல்வேட்ப ரறிவழிமாந்தர்மாதோ. (௭)

வேறு.

ஆரணத்தின்சாரமென்கோ ஆரிடத்தினுரையென்கோ
வணிவேதாங்க
காரணநூற்கருத்தென்கோ கனதமிழ்வாரிதிக்கோளிர்தண்
கதிரேயென்கோ

தாரணியுமிருபுயக்குன் றசிதாதன்றண்ணருளாற்
றந்தவாய்மைச்
சீரணியுமிருசமய விளக்கமுறைவிழுப்பொருளைத்
தேறுங்காலே. (அ)

## பழிச்சினர்ப்பரவல்.

சேதுமதியரிடும்புகூர் சிறியவரோடிணங்கியே
திரிதருமேனையன்பின்வா சிலவுறுதிவிளம்புகேம்
இதுபொருண்மருடங்கிடா தினிதுணர்தியென்றுநீ
டிருசமயவிளங்குநூ லெனதிதயமழுந்தவே
முதுகுருவடிவங்கொளா முறைதவறுதலன்றியே
முழுவுறவகளங்கமாய் மொழிமுதன்மையனெம்பிரான்
மதுகையினுயர்சிங்கமேர் வயிணவகுலதுங்கனும்
வடிவழகியநம்பிசே வடியிணைகள் வணங்குவாம். (க)

வேறு.

சுத்தரமிலங்குபழ மறைகட்குமாறுய
சொல்லுமேழுநான்காகமம்
துன்மார்க்கமேன்றுதெரியாமற்புகழ்ந்திடுந்
துட்டர்கள்செய்செருவடங்க
வந்தனைக்கருகன்மா லென்றுவெளியிட்டாண்ட
வடிவழகியநம்பிபோன்
மலரடிபணிந்துநங் குருவாயடைந்துமிக
மனமகிழ்ந்தேயுயர்ந்தோன்
சந்ததஞ்சிறியவர்க ளோடேயிணங்கித்
தலத்திற்றிரிந்தவென்னைத்
தயையினாலேயழைத் திருசமயநூலினைச்
சங்கையறவோதியேநீ
சிந்தையிலினித்தெளிந் தேயறிந்திடென்வுரை
செப்பியறிவித்தவாசான்
செயசமயசிங்கேறு பேத்தபெருமாளெனுஞ்
செல்வனடிபோற்றுவோமே (உ)

ஸ்ரீ:

தெய்வப்புலமை

# அரிதாசர் வரலாறு.

[சென்னை லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைத் தமிழாசிரியர்
ஸ்ரீ. உ. வே. மு. இராகவையங்கார்ஸ்வாமி எழுதுவது].

தெய்வப்புலமை **அரிதாசரால்** அருளிச்செய்யப்பெற்றதும் சைவ வைணவக் கொள்கைகளை **ஆகமவல்லி ஆரணவல்லி** யென்ற பெண்களிருவர் கூற்றில் வைத்து விளக்கி முடிவில் **திருமாலே** பரம்பொருள் என்பதை நிலைநாட்டுவதுமான இருசமயவிளக்கம் என்ற நூலின் அரியபெரிய பொருட்கூறுகளை இனியதமிழ்நடையில் எழுதி யாவரும் அறிய வெளியிட்ட **பண்டித ஆ. அரங்கராமாநுஜப் பிள்ளையவர்களின்** உதவி புகழ்ச்சிக்குரியது. இந்நூலின் உள்ளீடான நுண்பொருள்களையெல்லாம் அவர்களுரைநடை நன்கு விளக்குவதாகும். இதன் புறப்பொருளான ஆக்கியோன் முதலிய பாயிர வரலாற்றையும், நம்மவர் அறியவிரும்புதல் இயல்பாதலால், அச்செய்திபற்றித் தெரிந்தவற்றை எழுதித்தரும்படி பண்டிதரவர்கள் விரும்பியவாறு ஆராய்ச்சியில்யான் அறிந்துகொண்டவற்றை இங்குக் குறிப்பிடுகின்றேன்.

அரிதாசர் வரலாறுகளை நாம் ஒருமுகமாகத் தெரிந்ததற்கேற்ற சாதனங்கள் நமக்குக் கிடைக்கவில்லையாயினும் அவர் நூலிற் சிற்சில செய்யுட்களிலிருந்து ஒருசிலசெய்திகள் இப்போது தெரியவருகின்றன. இஃதன்றிச் சாஸனங்களும் இவ்விஷயமாகத் தக்க உதவி புரிவனவாகும். இவ்வாசிரியர், அரிவாசபுரம் அரிதை என்று வழங்கப்பட்ட நகரில் திருக்கோயில் கொண்டருளுந் திருமாலுக்குப் பல கைங்கர்யங்களும் புரிந்துகொண்டு பரமபாகவதராய் அவ்வூரிலே வாழ்ந்தவர் என்பது,

“அம்மாநகர்சீடரிவாசப்புரப்பெரும்பேர்
இம்மாநிலத்திலிலகித்தழைத்தேடுலாவும்
செம்மாமலராள்திகழ்வைபவஞ்சேர்ந்துதிங்கள்
மும்மாரிபொழிந்திடநற்செகமூன்றுமேத்த

"வளப்பார்புகழும்படிவாழுமிம்மாநகர்க்கண்
பிளப்பாவொருதூணினில்வந்துபிறந்துளானுக்
குளப்பாவணேகூரரிதாதனென்றோதுநாமக்
களப்பாளன்தானத்தளங்கள்கரைகண்டநாளில்

"அரிதைப் பதிவாழரிதாதன்" (சிந்தாந்தம் 40) (நகரப்படலம் 4,6) என்ற பாடல்களால் அறியலாம். அரிவாசபுரம் என்பது வேதபுரி என்றும் இதனையடுத்த மலையும் ஆறும் வனமும் முறையே வேதகிரி, வேதநதி, வேதவனம் என்றும் வழங்கப்பட்டன என்பதும், வேதங்களைக் கவர்ந்து சென்ற சோமுகாசுரனை திருமால் மச்சாவதார ரூபியாய், சங்கரித்து அவற்றை மீட்டுப் பிரமதேவனுக்கு உபதேசித்த ஸ்தலமாகப் புராணப்பிரசித்திபெற்றதென்பதும்,

"மருவார்துளவத்தொடைமாலொருமச்சமாகிப்
பெருவாரிதியிற்புகுசோமுகன்பேரைமாய்வித்
தருவாகியமாமறையைக்கமலோதயற்குத்
திருவாய்மலர்ந்தானொருசீதளச்செய்யகுன்றில்"

(நகரப்படலம் 1)

"விரியுந்தடங்குன்றதுநாண்முதன்மின்னுவேத
கிரியென்றுதன்பேர்விளக்கின்றதுகீழ்நிவந்த
புரியுஞ்சுரமும்புனலாறுமப்புண்ணியப்பேர்
தெரியும்படியேநிகழ்கின்றவித்தேயமெங்கும்" (ஷை 2)

என்று அரிதாசரே விளக்குதல் காண்க. மேற்கூறியபாடலில் "அரிதாதனென்றோதுநாமக்களப்பாளன்" என்று தம்மை ஆசிரியர் குறிப்பிடுதலால், இவர் களப்பாளர் குடியில் உதித்தவர் என்பது பெறப்படும்.

களப்பாளர் என்பார் வேளாண்குலத்தவராய் முற்காலமுதலே தமிழ்நாட்டில் அரசுரிமை வகித்துவந்த கூட்டத்தார் ஆவர். சிவனடியார் அறுபத்துமூவருள் ஒருவரான கூற்றுவநாயனார் இக்குடியினரென்பது திருத்தொண்டர் திருவந்தாதித் தொடராலறியப்படும். 1 அச்சுதக்களப்பாளன் என்பான், மூவேந்தரையும் ஒருகாலத்து அடக்கியாண்டவனென்பது தமிழ்நாவலர் சரிதையால் தெரியவருகின்றது.

---

1 "ஓதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவனே"

ஒட்டக்கூத்தர் புலவர்களைக் கொலைபுரிவித்து வந்தபோது, "கோக் கண்டு மன்னர் குரைகடற்புக்கிலர்" என்ற செய்யுள் கூறி அவரைத் தடுத்த **நெற்குன்றவாணமுதலியார்** என்பவர் இவ்வகுப்பினரென்பது, அவரியற்றிய புலியூரந்தாதி யிறுதிச் செய்யுளால் அறியலாம். 2. சைவ சந்தானசாரியத்தலைவரான மெய்கண்டதேவருடைய தந்தையாருக்கும் அச்சுதகளப்பாளர் என்பதே பெயராதலின் அவரும் அம்மரபின ரென்பதில் தடையில்லை. "களப்பாளராஜர்" எனவும் சாஸனம் இன்னுரைக்கூறும். 3. இதற்கேற்ப இக்குலத்தவரான அரிதாஸரை "விரிதாதணியுந் தொடைமேவியவேந்தனான அரிதாசன்" என இரு சமயவிளக்கப் பாயிரங்கூறுதல் இவர் இராசவமிசத்தவர் என்பதை விளக்குவதாகும்.

இனி இவ்வரிதாசர் நான்முகப்பில் தம்மூர்த் திருமாலின் வணக்கங் கூறுமிடத்து—

> "கிரிபோல்விளங்கிக்கிளரும்புயக்கிட்ணராயர்
> தரைமீதுசிங்காத்திரியிற்சயத்தம்பநாட்ட
> வரமாதரவாலளித்தேவடகூவமேவுங்
> கருமாமணிவண்ணனைநீடுகெருத்துள்வைப்பாம்."

என்று பாடுகின்றார். இதனுள் கிருஷ்ணராயர் **சிங்காத்திரி** யென்றவிடத்து **ஜயத்தம்பம்** நாட்டுவதற்கு வடகூவத்திற் கோயில்கொண்ட திருமால் வரமளித்தருளியவர் என்று கூறப்பட்டுள்ளது. இங்கே கூறப்பட்ட கிருஷ்ணராயர் யாவர்? இவர் ஜயஸ்தம்பம் நாட்டிய வரலாறு யாது? என்பவற்றைப்பற்றிக் கூறுவேன்.

பரதகண்டத்தின் தென்பகுதியை நீதிநெறி தவறாது ஆட்சி புரிந்து, அதன் சநாதனதர்மங்களும் கோயில் முதலியஅறப்புறங்களும் பரசமயிகளாற் கேடுறாதபடி பல தலைமுறைகளாகப் பாதுகாத்து வந்தவர் விஜயநகர வேந்தரென்பதும், அவருள் தலைசிறந்து விளங்கிய பெருந்தகையார் கிருஷ்ணதேவராயர் என்பதும், பிரசித்தமானவை.

---

2 "களப்பாள னெற்குன்ற வாணனந்தாதி கலித்துறையே" என்பது அவ்விறுதியடி.

3. T. A. S. Vol. II P. Fn.

இவ்வரசர் கி. பி. 1497 முதல் 1540 வரை ஆட்சிபுரிந்தவர். கலிங்க தேசத்தைக் கடகம் (Cuttak) என்ற தலைநகரிலிருந்து ஆண்டுவந்த கஜபதியரசனுன பிரதாபருத்திரனென்பான் (1497—1540) தமக்கு அடங்காதிருந்ததனுல், இக்கிருஷ்ணதேவர் உத்தேசம் 1520-ல் அவன் நாட்டின் மேற்படையெடுத்துச்சென்று போரில் அவனை வென்றனர் என்பது அவர் சரித்திர விசேடங்களுள் ஒன்று.

**சிங்காத்திரி** யென்பது விசாகபட்டணத்துக்கு வடமேற்கே 4-மைல் உள்ள **சிம்மாசலம்** என்ற திருப்பதியாகும். இவ்வூரில் நாட்டப்பட்டதாக அரிதாசர் கூறும் ஜயஸ்தம்பம் மேலேகூறிப்போந்த கலிங்கவரசனுடன் இவ்வரசர் நடத்திய போரின்வெற்றிக்குறியாம். இவ்விராயர்பெருமானே பாடிய **ஆமுக்தமால்யதாவும்,** இவரது ஆஸ்தான கவியாகிய **அல்லஸானிபெத்தன்ன** பாடிய மனுசரிதமும் ஆகிய தெலுங்கு காவியங்களில் இந்த சிம்மாசல ஜயஸ்தம்பத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன என்பர். சிம்மாத்திரியில் அத்தம்பம் நாட்டப்பட்டதாக அரிதாசர் முதலியோர் கூறினும், அது பொட்டுநூர் என்ற விடத்துத்தாபிக்கப்பட்டதாகவே தெரியவருகின்றது. இச்செய்தி—

**" இந்தக் கோபுரம் ராஜாதிராஜன் ராஜபரமேசுவரன் ஸ்ரீவீரப்பிரதாப கிருஷ்ணதேவ மஹாராயரின் தர்மம் ஆக சிம்மாத்திரி பொட்டுநூர்க்கு எழுந்தருளி ஜயஸ்தம்பம் நாட்டித் திரும்பிப் பொன்னம்பலநாதனையும் சேவித்து வடக்குக்கோபுரம் கட்டி வைத்த ஸேவை " என்னும் சிதம்பர சாஸனத்தாலும்,** (S. I. I. Vol. iv. No. 199, P. 622).

**" சிம்மாசலத்துத் திருமாலுடைய பிரமோற்சவத்தைச் சேவிக்கவரும் தேவர்கள், பொட்டுநூர் என்ற ஊரில் கிருஷ்ணதேவராயர் நாட்டிய ஜயஸ்தம்பத்தின்மேல் வரைந்துள்ள சாஸனம் இன்னதென்பதைப் பார்க்க வந்து, அதனெழுத்துக்கள் தெளிவாயில்லாமையால் கலிங்க (ராசனுன பிரதாபருத்ர) னுடைய அபகீர்த்தியாகிய மையைத் தடவி வாசிப்பாராயினர் " (மனுசரிதம்).**

என்ற பொருளில் **அல்லாசனி பேத்தன்ன** என்ற ஆந்திரமகாகவி பாடிய பத்தியங்களாலும் விளக்கமாம். ஆகவே, பொட்டுநூர் என்பது சிம்மாசலத்தின் அடிவாரத்தில் உள்ளது என்பதும், அது பற்றிச் சிம்மாத்திரிப் பொருட்டுநூர் என வழங்கப்படுவதென்பதும்

விளங்கும். இப்போதும் அப்பெயருடன் அவ்வூர் உள்ளதேயாம். இதனுல் சிம்மாசலத்துக்கு 30 மைல் தூரத்துள்ள வேறு பொருட்டு நூரொன்றை ஜயஸ்தம்பம் நாட்டிய இடமாகச் சரித்திரவறிஞர் கருதியது தவறுதல் காண்க. சிம்மாத்திரித் திருமாலிடம் கிருஷ்ண தேவர் பெரும்பக்திபூண்டிருந்தவர் என்பது, 1516, 1522-ம் ஆண்டு களில், பல கிராமங்களும் திருவாபரணங்களும் அப்பெருமானுக்கு அவரளித்தனர் என்று சிம்மாசல சாசனங்கள் பல கூறுதலால் தெளி வாகின்றது.

இவ்வாறு, சிம்மாத்திரிப் பொட்டுநூரில் நாட்டப்பட்ட ஜயஸ்தம் பமே அரிதாசராலும் கூறப்பட்டதென்க. இத்தகைய செயத்தம்பம் நிறுத்தும்படி அவ்விராயர் பெருந்தகைக்கு வரமளித்தருளியவர் "வடகூவமேவும் கருமாமணிவண்ணன்" என்று இவ்வாசிரியர் கூறு கின்முர். வடகூவம் என்பது, மேற்கூறிய அரிவாசபுரமாகிய வேத புரியின் பக்கத்தோடும் வேதநதிக்கு அக்காலத்து வழங்கிய பெயரா கும். இதனுல் கிருஷ்ணதேவர் கலிங்கவெற்றிக்குமுன் இவ்வடகூவக் கரையிற் கோயில்கொண்டுள்ள திருமாலின் அநுக்ரஹம் பெற்றுக் கொண்டு அப்போர்க்குச் சென்று அதனில் சித்திபெற்றவரென்பது பெறப்படுகின்றது. எனவே அரிதாசர் தம் காலத்தவரான அரசர் செய்தியே கூறினவராவர். தம் காலத்துக்குமுன் நிகழ்ந்த கலிங்க வெற்றி தம்மூர்த் திருமாலருளால் முன்னையரசரொருவர்க்குக் கிடை த்ததென்று, அப்பெருமான் அடியார்க்கருளுஞ் சிறப்புக்கு இப்புலவர் ஓர் ஐதிகம் காட்டினர் என்று கொள்ளுதல் கூடாதோ எனின், யான் இவ்விஷயமாகப் புதியவாய்க்கண்ட அரியசெய்தி சிலவற்முல், அவ் வாசங்கைக்கு இடமேயில்லையாகின்றது. அதனை இனி விளக்குவேன்.

தொண்டைமண்டலத்தே திருவெவ்வுளூருக்கு (திருவள்ளூருக்கு) வடக்கே 18-மைலிலும் ஆரணி என்ற ஊர்க்குக் கிழக்கே 10-மைலி லும் 'நாகலாபுரம்' என்ற ஊரொன்று உள்ளது. இதனை 'நகரி நாகலாபுரம்' என்று இக்காலத்தார் வழங்குவர். இவ்வூரில் மலையும், அம்மலைப்பக்கத்தே நதியும், திருமால் கோயிலும் உள்ளன. இத்திரு மாலின் திருநாமமாக இப்போது வழங்குவது, வேதநாராயணப்பெரு மாளென்பது. இக்கோயிலுள்ள சாசனங்கள், அவ்விலாகாத்தலைவரால்

பிரதியெடுக்கப்பட்டுள்ளன. விஜயநகர வேந்தரான கிருஷ்ணதேவர் சகவருஷம் 1445 (கி. பி. 1523)-ல் இக்கோயிற்குப் பூதானம் அளித்துள்ள செய்தியை அச்சாஸனங்கள் கூறுகின்றன. அச்செய்திகளுள், மிகவும் அருமையானவை அவ்வேந்தர் பெருமான் வடநாட்டில் அடைந்த பெருவெற்றிக்குப்பின் மஹாமஹத்தின் பொருட்டு கும்பகோணஞ் சென்றுவந்தனரென்றும், அவ்வாறு சென்றுவருமிடையில் நாகலாபுரத்துக்கு விஜயஞ் செய்தனர் என்றும், அப்போது அவ்வூரெம்பெருமான் தம் கனவில்தோன்றி ஆணையிட்டருளியபடி அரிதாசர் என்ற பெரியாரால் ஆங்குத் திருமால்கோயில் கட்டி முடிக்கப்பட்டது என்றும், அக்கோயிலின் வடகோபுரவாயிலிற்கண்ட சாசனமும், 1 நீலமாணிக்கதேவர் கோயில் கைங்கர்யங்கள் நடத்துவதற்கும், ஆங்குத் திராவிடவேதமும் (நாலாயிர திவ்யபிரபந்தம்) வேதாந்தமும் (ஸ்ரீபாஷ்யாதிகளும்) ஓதுவதற்கும் பல கிராமங்களை அவ்வரசர் அளித்ததோடு, பெரியாரான ஹரிதாசர்க்கும் பலவூர்களைத் தானமளித்து, அப்பெரியாரிடமே அக்கோயிலதிகாரம் முழுமையும் ஒப்பிவித்தனர் என்று இரண்டாங்கோபுரத்தும் வெளிப்பிரகாரத்தின் கிழக்குத் திருமதிலினும் கண்ட சாஸனங்களும் 2 கூறுகின்றன என்பதேயாம்.

இனி கிருஷ்ணதேவராயர் அமைத்த கன்னடச்சாசனமொன்றில் அரிதாசரைப்பற்றிக் காணப்படும் குறிப்புக்கள் மிக முக்கியமானவை. அதன் மொழிபெயர்ப்புச் சுருக்கம் வருமாறு :—

சகாப்தம் 1445-ல் சுபானுவூ கார்த்திகைமீ திட்கட்கிழமை சுக்லபக்ஷம் உத்தான த்வாதசியில், துங்கபத்திராதீரத்தில் ஹேமகூடபர்வதத்தால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ விட்டலேச விரூபாக்ஷர் சந்நிதியில், ஹரிவாசபுரேசரும் வேதாசலத்தில் எழுந்தருளியிருப்பவரும், தேவர்களின் முடிகளில் விளங்குந் திருவடிகளை உடையவருமான ஸ்ரீ நீலமாணிக்கதேவருக்கு—சந்திரகிரி ராஜ்யத்தில் கங்கை மரபிற் பிறந்தவரும், திருமாலின் திருவடிகளில் வண்டுபோன்றவரும், நீலமாணிக்கப் பெருமாளுக்குக் கைங்கர்யங்கள் புரிவதையே புருஷார்த்தமாக உடையவரும், அப்பிரானுக்கு, கோபுர மண்டப விமான ஆவரண ரதாதித் திருப்பணிகள் எல்லாஞ் செய்தவரும், வடமலை

[1 Ep. Rep 628 of 1904 ]
[2 Ipid 627, 628 of 1904; C. P. No. 12 of 1905.]

என்ற பெயருள்ள மந்திரி சிரேஷ்டரைத் தம் தமையனாகக்கொண்டவரும், திருமால் பக்தருள் சிறந்தவருமான அரிதாசரால் கேட்டுக்கொள்ளப்பட்டுப் பெருமாளுக்குத் திருவமுதுக்கும், நிர்த்த கீத மகாவாத்யாதிகட்கும் நாகலா புரம் என்னும் பிரதிநாமங்கொண்ட அரிகண்டபுரம் ஸர்வமான்யமாகக் கொடுக்கப்பட்டது '' என்பதாம்.

இச்சாஸனத்தால், வேதபுரியான நாகலாபுரம் அரிகண்டபுரம் என்றும் வழங்கியதென்பதும், அவ்வூர் வருவாய் முழுதும் வேதநாரா யணப்பெருமாள்கோயிற் கட்டளையாக ராயரால் அளிக்கப்பட்டது என்பதும் தெரியலாம். அன்றியும் யான் மேலேகூறிப்போந்தவாறு, வேளாளருட் களப்பாளக் குடியினர் என்றற்கேற்பக் கங்கைமரபின ரென்றும், திருமாலிற்குத் திருப்பணிகள் பலவும் புரிந்தவரென்றும், அரிதாசர் இச்சாஸனத்துட் சிறப்பிக்கப்படுதல் அறியத்தகும். இவற்றை :—

''அரிதாதன் நினைந்தவெலாமுடித்தாண்டகோவை'' (பாயிரம், 6.)

''அரிதாதனென்றேதுநாமக்களப்பாளன் தானத்தளங்கள்கரைகண்டநாளில்'' (நகரப், 6.)

என்ற தொடர்களிற் காண்க.

'' முன்னாள் ஸ்வாமி கிருஷ்ணதேவ மஹாராயர் நாகலாதேவியம்மன் புரத்தை எம்பெருமானுக்குத் திருப்பதியாகக் கட்டளையிடுவதுக்கு முன்னே தங்களுக்கு எம்பெருமான் ஸ்வப்பனத்திலே ஸாக்ஷாத்காரமாய்த் திருவாய் மலர்ந்தருளித் திருக்கோயில் கட்டச்சொல்லித் திருவுள்ளம்பற்ற, அந்தப் படியிலே தாங்கள் கரியமாணிக்கத் தெம்பெருமானுக்குத் தங்களுபயமாகக் கைங்கர்யங்கள் பண்ணவேண்டிப் பெருமாள் திருக்கோயில் கட்டுகிறதற்கும் .........என்றுள்ள அக்கோயிற் சாஸனப்பகுதியால், அரிதாசருடைய திருமால் பத்தியின் பெருமை இத்தகையதென்பதும், அவரே வேதபுரியின் சிறப் புக்குக் காரணமாயிருந்தவரென்பதும் தெரியலாகும்.

மச்சாவதார மூர்த்தியாய் வேதங்களைச் சோமுகாசுரனிடமிருந்து மீட்டருளியதுபற்றி, நாகலாபுரத் திருமால் வேதநாராயணனென் றும், தாயார் வேதவல்லி யென்றும் வழங்கப்பெற்றதோடு அவ்வூரும் மலையும் ஆறும் முறையே வேதபுரி, வேதகிரி, வேதநதி என வேத சப்த சம்பந்தமுடைய பெயர்களைப் பெறலாயின. இவற்றுள் வேதநதி

ஆரணியென்றும், வடகூவம் எனவும் அரிதாசர் காலத்தும் பேர்பெற்றிருந்ததென்பது,

"வடகூவமேவுங்கருமாமணிவண்ணனே" (பாயி.)

"வானநதிநேராரணியின்வடதீரத்துவேதபுரித்
தானநின்றகருமணியந்தாமப்பெருமான்சந்நிதியில்"
(சம்மத பரிச். 33.)

"ஆரணிதீர்த்தமாட.........அணைந்தார்" (நதிப். 5.)

என்று இவ்வாசிரியர் பாடுதலால் தெரியலாம். ஆரணி என்பதும் வேதமாகிய ஆரணசப்த சம்பந்தம்பற்றி வழங்கியதேயாகும். இன்றும் இப்பெயருடன் இந்நதி வழங்கப்பெறுதல் காண்க. சென்னைப்பக்கத் தோடுவது தென்கூவமாதலின் இவ்வேதநதி வடகூவம் என வழங்கப் பட்டதுபோலும். திருமாலின் திருநாமம் நீலமாணிக்கதேவர் என்று சாஸனங்கூறுமாறே, அரிதாசர் தம்மூர்த் திருமாலை "கருமாமணி வண்ணன்" "கருமணியந்தாமப்பெருமான்" என்று பலவிடத்துங் கூறுதல் ஒப்பிடத்தக்கது. "ஹரிராயபுரமான நாகலாதேவியம்மன் புரத்துப் பெருமாள் கரியமாணிக்கப்பெருமாள்" என்று அவ்வூர்ச் சாஸனம் கூறுதலுங் காண்க. கலிங்கவெற்றிக்கு முன்பே, கி. பி. **1514**-ல் கிருஷ்ணதேவர் ஷை கோயிலிற் சாஸனங்கள் அமைத்திருத்தலாலும், அவர் தாயாரான **நாகலாதேவி**யின் பெயரால் நாகலாபுரம் என்ற பெயரை அவ்வூர் பெற்றிருத்தலாலும், அக்கலிங்கப்போர்க்குப் பலவாண்டுகட்கு முன்பே அவ்வரசரது அபிமானம் இவ்வூரின்கண் மிக்கிருந்தது என்பது தெரியலாம்.

இனி அரிதாசரைப்பற்றியதாக மேலே நான் காட்டிய கன்னட சாஸனத்துள்ள மற்றோர் அரிய செய்தியும் குறிப்பிடத்தக்கது. அஃதாவது :—

"வடமலையென்றபெயருள்ளமந்திரிசிரேஷ்டரைத்
தம்தமையனாகக்கொண்டவரும்"

என்று இவ்வாசிரியர் விசேடிக்கப்படுதலே யாம். இதனையே, அரிதாசரும் தம் இருசமயவிளக்கப் பாயிரத்தில்,

" படமாசுணமுமுதிராவிளம்பச்சையாலும்
திடமாமறையந்தமுமாதிநற்செல்வனை
வடமாமலையண்ணனதுள்ளமும்வைகநாளும்
இடயாமொருவற்கடியோங்களியாங்கள்தாமே "

என்ற பாட்டிற் கூறுதல் காணலாம். இதனால், வடமலை யென்பவர் மந்திரி பதவி வகித்தவர் என்பதும், திருமாலடிமையிற் சிறந்தவரென் பதும், நம் ஆசிரியர்க்கு அண்ணன் என்பதும் நன்கு விளங்குவன. இவ்வடமலையார் மந்திரி பதம் வகித்தது கிருஷ்ணதேவராயரின் கீழ் என்பது, அறியத்தக்கது. திருவாரூரில் விளங்கிய தத்துவப்பிரகாசர் என்ற சைவத்துறவியான புலவர் அவ்வூர்ச் சிவாலயத்து நடந்த சில அதிக்கிரமங்களை முன்னிட்டு திருவிழாவுக்கு ஏற்றிய கொடியை இறக்கவிடாமல் தகைந்தபோது,

" மருவுபுகழ்க்கிட்ணமகராசனாணை
அரியவடமலையாரானை—திருவாரூர்ப்
பாகற்கொடியறுப்பார்பாதத்திருவாணை
தியாகக்கொடியிறக்காதே "

என்று பாடினரென்பது தமிழ்நாவலர் சரிதையால் அறியப்படுகின் றது. இப்புலவர், அரசன் மேலும் அவன் அமைச்சன் மேலும் கட வுள்மேலும் ஆணைவைத்துத் தகையும்போது, கிருஷ்ண மகாராஜர், வடமலையார், பாகற்கொடியறுப்பார் (தியாகராசர்) என்பவர்களை முறையே கூறுவதினின்று, வடமலையார் என்பவர் இராயர் மந்திரி யென்பது பெறப்படத் தடையில்லையன்றோ? கிருஷ்ணதேவ மகா ராஜர் தமிழகமுழுதும் ஆட்சிபுரிந்த பேரரசர் ஆதலின், அவர் கீழ்த் தமிழமைச்சர் சிலரும் அமைந்திருந்தனர். இவ்வமைச்சருள் **அம்பி அறம் வளர்த்த முதலியார்** என்பவரும் ஒருவர். 1 தொண்டைநாட்டுச் செம்பூர் இவரது ஊராகும். 2 இவரைப் பாண்டியனும் புகழ்ந்து பாடி யுள்ளான். விஜயநகர வேந்தர் தலைநகரான அம்பி (Hampi) யில் சென்று வாழ்ந்தவராதலில் அம்பி அறம் வளர்த்த முதலியார் என விசேடிக்கப்பட்டனராவர். ஆகவே, தமிழ்நாட்டை நன்கறிந்து ஆட்சி

---

1. அபிதான சிந்தாமணி.
2. தமிழ்நா. 219.

புரிவதற்கு உதவவல்ல தமிழமைச்சர்களை விஜயநகர வேந்தர்கள் உடையராயிருந்தனர் என்பதில் சிறிதும் வியப்பொன்றும் இல்லை. இத்தகையாருள் ஒருவரே நம்மாசிரியரது தமையனாகிய வடமலையாரும் என்க. "**தங்கள் தமையனார் வடமலையண்ணகனய்யன்**" என்று அரிதாசரைப்பற்றியமைந்த சாஸனமொன்றிற் காணப்படுவதால், அக்காலத்து அவ்வாறு இவ்வமைச்சர் பெயர் வழங்கப்பட்டார் என்று சொல்லலாம். "**வடமலையண்ண**" என்று இவரையே அனந்தபுர ஜில்லா நிட்டூர்ச் சாஸனமொன்றும் குறிப்பிடுகின்றது. 3

இவற்றால், அரிதாசர் என்ற ஆசிரியர் வாழ்ந்த வேதபுரி, அரிவாசபுரம், அரிகண்டபுரம் என வழங்கிய ஊர் நாகலாபுரமே என்பதும், இவர் வடமொழி தென்மொழிகளில் வல்லவராகவும், வேத வேதாந்தங்களைக் கரைகண்டவராகவும் மகாகவியாகவும் திருமாற்குப் பல திருப்பணிகளும் புரிந்து அப்பெருமான் திருவருள்பெற்ற பெரியாராகவும் விளங்கினர் என்பதும், இவரது அருமை பெருமைகளை அறிந்து விஜயநகர வேந்தர்பெருமானான கிருஷ்ணதேவராயர் அவரைப் பெரிதும் கௌரவித்தவர் என்பதும், திருமாலின் பேரருள் பெற்றிருந்த இவர் வாயிலாகத் தாம் அடையப்போகும் வெற்றியை முன்னறிந்து கலிங்கப்போரை அவ்வரசர் நடத்திச் சித்திபெற்றனர் என்பதும், அதனால் அப்பெரியார் திருப்பணிபுரிந்த திருமால் கோயிலுக்கும் அவர்க்கும் இராயர்பெருமான் பல கிராமங்கள் தானமளித்துப் பெரிதும் சிறப்பித்தனர் என்பதும், இவர் தமையனார், ராயரது பேரமைச்சராய் விளங்கியவர் என்பதும் பிறவும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

கிருஷ்ணதேவராயர் தென்னாட்டு ஸ்ரீவைஷ்ணவ சமயத்தைத் தழுவியவர். ஆயின் அதுபற்றிப் பிறவைதிகசமயக் கடவுளரை வணங்காத விரதம் பூண்டிருந்தவரல்லராதலின் அக்கடவுளர்க்கெல்லாம் நாடெங்கும் பல திருப்பணிகள் நடத்தியுள்ளார். ஆயினும் இவரது அபிமானம் வைணவத்தில் மிகவிருந்ததென்பதற்குச் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் திவ்விய சரிதங்களை ஆந்திரத்தில் அழகாக அமைத்து இவர் பாடிய '**ஆமுக்தமால்யதா**' என்ற அரிய காவியமே சிறந்த

3. I. M. P. Ap. 189.

சான்றாகும். "சூடிக்கொடுத்த மாலையினுள்" என்பது இக்காவியப் பெயரின் பொருளாம். இதனுள், ஆழ்வார்களுடையவும், ஸ்ரீவைஷ்ணவ பரமாசார்யர்களான, ஆளவந்தார், உடையவர், வேதாந்ததேசிகன், மணவாளமாமுனிகள் முதலிய பெரியோர்களுடையவும் அவதார மகிமைகள் மிகவழகாக இவராற் கூறப்பட்டுள்ளன. ஆண்டாள் பாசுரங்களின் கருத்துக்களையெல்லாம் இவ்வரசர்பெருமான் தம் நூலுள் விளக்கியுள்ள மாதிரிகையால், ம்பிரதாய கிரந்தங்களில் சிறந்த பயிற்சியுடையவர் இவர் என்பது விளங்குகின்றது என்பர். ஆகவே, தமிழ் நாடு முழுமைக்கும் உரிய தனியரசராகவும், தென்னாட்டு வைஷ்ணவ மதத்தவராகவும் விளங்கிய இவர் தமிழ்ப்பாஷையை அறிந்தவராயிருத்தலும், தமிழ்நாட்டுப் பெரியார்களையும், புலவர்களையும் அபிமானித்திருத்தலும் கூடியனவே யாம். திராவிடவேதம் ஓதுவதற்கென்று இவர் பூதானம் அளித்திருத்தலாலும், இவர்க்கு அத்திவ்வியப் பிரபந்தங்களில் இருந்த பற்று மிகுதிபுலனாம்.

அக்காலத்துப் புகழ்பெற்றிருந்த ஞானப்பிரகாசர், தத்துவப்பிரகாசர், மண்டலபுருடர், குமாரசரசுவதி யென்ற தமிழ்ப்புலவர்களால் இவர் பாடல்பெற்றுள்ள செய்தி தமிழ்நாவலர் சரிதை முதலியவற்றால் தெரிகின்றன. இப்புலவர்களுள் குமாரசரஸ்வதி யென்பார், அரிதாசனரப்போலவே கலிங்கவெற்றியில் கிருஷ்ணதேவர் பெற்ற மற்றொரு விசேடச்செய்தியைப் பாடியிருத்தல் இங்கு அறியத்தகும். மேலே நான் கூறியபடி, இவ்விராயர்பெருமான் கலிங்கவரசனை வென்று சயமகளைக் கைப்பற்றியதோடு, அக்கஜபதியின் அருமைப் பெண்ணும், அழகு குண முதலியவற்றாற் சிறந்தவளுமான துர்க்காதேவி யென்ற குலமகளையும் மணந்துகொண்டனர் என்பது அவரது பிரபல வரலாறாம். இச்செய்தி நிகழ்ந்தகாலத்தே, இக்குமாரசரசுவதியும் உடனிருந்து அவ்வேந்தர்பெருமானது அத்திருமணத்தைச் சிறப்பித்துள்ளார். அவ்விவாக காலத்தே இப்புலவர் பாடிய அழகிய வெண்பா அடியில் வருமாறு:—

**"கலிங்கமிழந்து நுதிக்கைச்சங்கந்தோற்று**
**மெலிந்துகடகங்கழுவவிட்டான்—மலிந்தமலர்ப்**
**பொன்னிட்டமானகிருஷ்ணபூபாலாவுன்றனக்குப்**
**பின்னிட்டவொட்டியன்போற்பெண்"**

என்பதே. இப்பாட்டில் 'உனக்குப் போரிற் பின்னிட்டுக் கலிங்கம், நுதிக்கைச்சங்கம், கடகம் என்பவற்றை இழந்த ஒட்டியனை (கலிங்க அரசனை)ப் போலவே, அவன் பெண்ணும் அம்மூன்றனையும் நெகிழ விட்டாள்' என்று சிலேடை நயம்பெறப் புலவர் பாடுகின்றார். ஒட்டியன் கலிங்கத்தையும் (கலிங்க தேசத்தையும்) நுதிக்கைச் சங்கத்தையும் (நுதிக்கையுடைய யானைக்கூட்டத்தையும,) கடகத்தையும் (கடகம் Cuttack என்னுந் தலைநகரையும்) போரில் இழந்தோடினன்; அங்ஙனம் இழக்கும்படி செய்த உன் பிரதாபத்தை அறிந்த அவன் மகளும், பெருவீரனான உன்னை யடைய விரும்பியதனால் உண்டாய தன் உடன்மெலிவால், தானும் கலிங்கத்தையும் (அரையாடையையும்) நுதிக்கைச் சங்கத்தையும் (முன்கையில் அணிந்த வளைகளையும்), கடகத்தையும் (தோள்வளையையும்) நழுவ விடலானாள் என்று புலவர் சமத்காரமாகக் கூறுமழகு அறிந்து மகிழத்தக்கது. இப்பாட்டாலும் இதுபாடிய புலவர் பெயராலும் இவர் அதிபாலியத்திலே ஆசுகவி பாடவல்ல பெரும் புலவராயிருந்தனர் என்பதும், அதுபற்றிக் கிருஷ்ணதேவராற் பெரிதும் அபிமானிக்கப் பெற்று, சென்ற இடமெல்லாம் உடனிருந்து அவராஸ்தானத்தை அலங்கரித்தவர் என்பதும், நன்கு புலப்படக் கூடியன. இவற்றால், இராயர் பெருமானுக்குத் தமிழ்மக்களிடம் இருந்த அபிமானமிகுதி நன்கு விளங்கும். ஆகவே கிருஷ்ணதேவராயர், அரிதாசர் போன்ற திருமாலடியராயும் பெரும் புலவராயும் விளங்கிய பெரியாரிடம் பத்தியும் பெருமதிப்பும் வைத்திருந்ததற்குத் தக்க காரணங்கள் உள்ளன என்றே சொல்லலாம்.

இனி, ஆன்றோர்கள் இவ்வாசிரியர் விஷயமாகப் பாடிய அழகிய பாக்களே, இவரது பெரும்பத்தி நிலையையும் அருங்கவித் திறத்தையும் விளக்கவல்லன வாதலால், அவற்றில் இரண்டைக் குறிப்பிட்டு விட்டு இவ்வாராய்ச்சியை முடித்திடுகின்றேன்.

"பதுமமலர்மகண்மார்பினவளரொளிமுகுந்தனே
பரவுதசசதமோலிதிகழ்முடியனந்தனே
பயிலவழகியசேனைமுதல்வனெனுநம்பனே
பலவுகனிபொழின்மேவுகுருகைவருமொய்ம்பனே

சதுரனெதிபதியோபொன்மதிலுயராங்கனூர்
தமதுசெவியுறுகேள்வியிதமொழிப்ரசங்கரே
சகமதனிலெவரோவிவடிவுகொடிணங்கினோர்
தவசொருபமிதவாகுமெனவிவணடைந்துசேர்
விதமுறுமரன்மாயனிவர்தரமிலங்குமா
வியனியல்பபெறவோதுபெயர்குணநிறைந்தசீர்
விவரமவைவெளியாகவரியமறையங்கமாய்
மிகுமிருதியிதிகாசமூதலுளவரம்பினால்
அதுவலபிரவவாய்மையுரைகளிலடங்கிநீ
டமைதிபெறுபிரமாணவகைதொகைசெய்தின்பமே
அமரிருசமயதீபவிரிபனுவலெங்கள்பால்
அருள்புரியுமரிதாசரடியிணையிறைஞ்சுவாம்."

"ஆரணத்தின்சாரமென்கோவாரிடத்தி
னுரையென்கோவணிவேதாங்க
காரணநூற்கருத்தென்கோகனதமிழ்வா
ரிதிக்கொளிர்தண்கதிரேயென்கோ
தாரணியுமிருபுயக்குன்றரிதாதன்
தண்ணளியாற்றந்தவாய்மைச்
சீரணியுமிருசமயவிளக்கமுரை
விழுப்பொருளைத்தேருங்காலே."

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை.

---

"இருசமயவிளக்க" மெனப் பெயரிய இந்நூல் அரிதாசரென்ற புலவர்பெருமானுல் செய்யுள் நடையில் இயற்றப்பெற்றது. இப்பெரியாரது வரலாற்றை லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைத் தமிழாசிரியர் **ஸ்ரீ உ. வே. மு. இராகவையங்கார்ஸ்வாமி** சிலாசாசன முதலிய கருவிகளானும், தம் நுண்மாணுழை புலனானும் நன்காராய்ந்து மிகத்தெளிவாய் எழுதியுள்ளார். இதுகாறும் இவரது வரலாற்றுமுறையினை ஆராய்ச்சி முறையில் எழுதி வெளியிட்டார் எவருமில்லை. இதுவே, இவ்விருசமய விளக்க உரைநடை நூலுக்குச் சிரோபூஷணம்போல் பேரழகைத்தருகிறது. இத்துணை உதவிசெய்த இப்பெரியாரது நன்றியை என்றும் மறவாதிருப்பதன்றி வேறென்ன கைமாறு செய்யவியலும்?

இந்நூலில் நான்கு காண்டங்களும், இருபத்தாறு படலங்களும், தொண்ணூற்றெட்டு பரிச்சேதங்களும், ஆறு கதைகளும் அடங்கியிருக்கின்றன. இவற்றில் தம் யுக்திகற்பிதங்களை இவ்வாசிரியர் ஓரணுவளவேனும் உரைக்காது பிரமாணங்கள் இங்ஙன மிருக்கின்றன வென்றே உரைக்கின்றனர். "தர்க்காப்ரதிஷ்டாநாத்" யுக்திக்கு முடிவில்லையாதலால் வஸ்து நிச்சயம் பிரமாணத்தாற் செய்யவேண்டும் என்று ஸூத்திரகாரர் ஆணையிட்டபடி இவரும் பிரமாணத்தால் பரவஸ்து இன்னதென்று சித்தாந்தஞ் செய்துள்ளாராதலால் இவர் பிரமாணபரதந்தரரிற் சிறியரென்பது வெளியாகும். அதனால் இவரை ஆப்தரென்றே உரைக்கலாம்.

பரவஸ்து இன்னதென்று ஐயந்திரிபற அறிந்த மெய்யுணர்வுடையாரே வீடுபேறெய்துவர். அஃதிலார் வீடுபேறெய்தாரென்பது வைதிகசமயவாதியரனைவர்க்குமொப்ப முடிந்ததொன்றும். அம்முறை பற்றியே இந்நூலாசிரியர் உலகினருக்கு மெய்யுணர்வினைப் பிறப்பித்தலாகிய பேருபகாரத்தைச் செய்யவேண்டுமென்றே இந்நூலை இயற்றி

னர். அதனால் இந்நூல் மெய்யுணர்வினைப்பிறப்பித்தற்கு ஓர் சிறந்த சாதனமாகும். இதனை, "......தயையினாலேயழைத் திருசமய நூலினைச்சங்கையறவோதியேநீ, சிந்தையிலினித் தெளிந்தே யறிந்திடென வுரைசெப்பி யறிவித்தவாசான்......" என்று அபியுக்தர் உரைத்ததாலுமறியலாம்.

முற்காலத்திலும் மதவாதங்களைப்பெண்கள்கூற்றில்வைத்து நூல்களாக இயற்றினார் பலருளர். இதனைக் "குண்டலகேசி" "நீலகேசி" முதலிய நூற்பெயர்களாலறியலாம். அம்முறைபற்றியே இந்நூலாசிரியரும் சைவ வைணவக்கோட்பாடுகளை முறையே ஆகமவல்லி ஆரணவல்லி என்ற இரண்டு மாதர்களின் கூற்றில் வைத்து இந்நூலினை இயற்றினர். மேலும், சைவசமயத்தினர் ஆகமத்தையே முக்கிய பிரமாணமாகக் கொள்வர். வைணவசமயத்தினர் ஆரணத்தையே முக்கிய பிரமாணமாகக் கொள்வரென்ற மரபுதோன்ற சைவவைணவக் கோட்பாடுகளை முறையே ஆகமவல்லி ஆரணவல்லி என்ற மாதர்களின் கூற்றில் வைத்து நாட்டியுரைத்த நயமும் போற்றத்தக்கதே.

சிலர் தாம் கைக்கொண்ட சமயத்தின் கோட்பாடே சீரியதென்று பிடிவாதங்கொண்டு பிறசமயத்தை வெற்றிகொள்ளக் கருதி வஞ்சனையாக அச்சமயத்தின் கோட்பாட்டை நன்கெடுத்தியம்பாது தம் சமயத்தைச் சித்தாந்தஞ் செய்ததாகச் சொல்வதுண்டு. அதுபோல இந்நூலாசிரியர் செப்பாது சைவசமயக்கொள்கைகள் பெரும்பாலும் எத்தனையுண்டோ அத்தனையும் ஒரு சிறிதும் மறைக்காமல் எடுத்தோதி, அதனைப் பூர்வபக்ஷமாக்கித் தம் சமயத்தைப் பிரமாணபூர்வகமாக எடுத்துக்காட்டிச் சித்தாந்தஞ் செய்கிறார். ஆகமவல்லி கூற்றினைத்தனியே ஒரு புஸ்தகரூபமாக்கினால், அதனைச் சைவசித்தாந்தமென அச்சமயவாதியர் பெரிதும் கொண்டாடுவர். இதனால் இவ்வாசிரியர் ஓரஞ்சாராமல் நடுநிலையினின்றுரைக்கின்றாரென்பது தெற்றெனப் போதரும்.

இவ்விருசமயவிளக்க மென்ற நூலொன்றினாலே அரிய பல விஷயங்களை யறிந்துகொள்ளுமாறு இந்நூலாசிரியர் இயற்றியுள்ளாரென்பதையும், மாந்தர்கள் ஐயத்தினீங்கித் தெளிதற்கிது பெருந்துணையா

யிருக்குமென்பதையும் யாவரு மறிந்துகொள்வதற்காகவே இந்நூல் இங்ஙனம் வசனநடையில் எழுதப்பெற்றது.

அரிய பல தத்வார்த்தங்களை எளிதிற் றெறிந்துகொள்ளுமாறு இந்நூலாசிரியர் முறைப்படுத்தி யுரைக்கின்றவன்மை வியக்கத் தக்கதே. இந்நூலினை முன்னர் அப்யஸிப்பவர், வேதாந்தங்களிற் பொதிந்துகிடக்கும் உண்மைப் பொருள்களை எளிதிற் றெரிந்து கொள்ளும் பெற்றியராவர். வேதத்திற் பூர்வோத்தர காண்டங்களிற் கூறியபடியே இந்நூலில் பகவதாராதனமுறையும், ஆராத்யனான பகவானது இயல்பும் மிகத்தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

அடிப்பட்ட சான்றோர்பால் கேட்டுத் தெளியவேண்டியவையும், சில நூல்களைப் பார்த்துப் பொருண்முடிவு செய்யவேண்டியவையும் இந்நூலிற் சிலவுள்ளன. இத்தகைய விஷயங்களைக் குறிப்பிடுகிற செய்யுட்பகுதியை உரைநடையில் எழுதவில்லை. மறுபதிப்பில் இவற்றை யெல்லாம் நன்காராய்ந்து பொருண்முடி வெழுதப்பெறும். சோர்வா லுண்டாகிய பிழைகளும் இப்புத்தகத்திலிருக்கக்கூடும். அவற்றைச் சான்றோர்கள் எடுத்துக்காட்டினால் மறுபதிப்பில் திருத்தமுற வெளியிடுவதற்கு அநுகூலமாயிருக்கும். அப்பெரியார்பால் என்றும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

நாற்பத்தைந்தாண்டுகட்கு முன்னர் வடகரை வித்வான் பள்ளிக்கூடம் சிங்கமையங்கார் ஸ்வாமி என்பவர் இந்த இருசமயவிளக்கச் செய்யுளைப் பரிசோதித்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இப்பொழுது இது விலைக்குக் கிடைப்பதில்லை. இந்நூல் பாராயணக்கிரந்தம்போல அடிக்கடி பயிலத்தக்கதொன்றாதலால் மறுமுறையும் இச்செய்யுள் நூலினைப் பதிப்பிக்கவேண்டியதும் சிறந்த கைங்கர்யமாகும். அபிமானிகளின் உபகாரம் மிகுதியும் குறைவாயிருக்கின்றதனால் இக்காரியத்தைச் செய்வதற்கு நெஞ்செழவில்லை. ஆதரிப்பார் முன்வருவரேல் இந்நூலினை விரைவில் வெளியிடலாம்.

"இவ்விருசமயவிளக்க"த்திற்குப் பிரமாணத்திரட் டெழுத வேண்டுமானால் பல வித்வான்களின் உதவியும், பல நூல்களின் துணை

யும் வேண்டும். பொருட்செலவு மிகுதியுமாகும். தனத்திலும்கொடையிலும் சிறந்தவர்களாலே இக்காரியஞ் செய்யத்தக்கது. இதுநிற்க, இவ்விருசமயவிளக்கத்திற்கு முன்னோர்கள் இயற்றிய பிரமாணத்திரட்டொன்றுண்டென்று கேள்விப்படுகிறேன். எவரேனும் அந்நூலினை வைத்திருப்பார் கொடுத்துதவுவரேல் அவர் வைஷ்ணவ உலகிற்குப் பேருபகாரஞ் செய்தவராவர். அவர் நன்றி எழுமையும் மறக்கற்பாலதன்று.

இன்னும் இதுபோன்ற பல நூலை நம் திவாகரத்தில் வெளியிடுவதற்கு எல்லாம்வல்ல எம்பெருமான் இன்னருள்புரிவானாக.

பண்டித. ஆ அரங்கராமாநுஜன்.



ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# இருசமய விளக்கம்.

## (வசனம்.)

---

## பாயிரகாண்டம்.

### க-வது, கடவுள் வாழ்த்துப்படலம்.

---

எதிராஜர்.

அலையினையுடைய கடனீரானது ஆரவாரித்துக் கரையைக் கடந்து உலகினையழித்துவிடாமல் அதன்வலியினை அடக்கும் வடவாமுகாக்கினிபோல ஆரவாரித்துப் பிரமாண மரியாதையைக் கடந்து குதர்க்கவாதஞ்செய்து உலகைக்கெடுக்க முயல்கின்ற சாக்கியர் முதலான சமயவாதியர்களை வென்று மலையினுச்சியில் ஏற்றிய தீபம்போலத்திருமால் சமயத்தை இப்பூமியில் நிலைநாட்டிய பூதூரில் வாழ்கின்ற எதிராஜரை மனத்துள்வைத்து வாழ்த்துவோமாக.

நம்மாழ்வார்.

மணங்கமழ்கின்ற மகிழமாலையினின்றும் அழகியதேன் சொரியப்பெற்ற திண்ணியதிருத்தோள்களையுடைய தலைவரும், பிறவிக்கடலில் ஆழ்ந்து வருந்துகிற என்னைக் கரையேற்றுதற்காக வேதந்தமிழ்செய்த ஞானப்பிரானுமாகிய திருக்குருகூரிலவதரித்த ஆழ்வார் திருவடிகளைத் துதிப்போமாக.

சேனைமுதலியார்.

பலமுகமாக நின்று சொல்கின்ற (கற்றுணர்ந்து வல்லோர் நாவினின்றும் மொழிகின்ற) ஸரஸ்வதிதேவியானவள் என்னுவிற் பொருந்தியுறைய, சிவன் பிர்ம்மா என்பவர்க்கும் இவர்கள்போன்ற தேவக்குழாங்கட்கும் அதிபதியாய் எப்பொழுதும் கையிற் பிரம்

பேந்திய பெருமையுடைய தெய்வச்சேனைபதியாழ்வாரின் தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளையும் தலைக்கணியாக வைப்போமாக.

வடகூபத்திருமால்.

மலைபோல் விளங்குகின்ற புயத்தையுடைய கிருஷ்ணதேவராயரென்பவர் பூமியில் தாமே அரசர் என்பதற்கறிகுறியாக, சிம்மாசலத்தில் வெற்றிக்கொடியை நாட்டுமாறு அன்புடன் வரமீந்து வடகூபம் என்கிற திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கும் கரிய மாணிக்கம்போன்ற திருமேனியுடைய எம்பெருமானை மனத்திலிருத்தித் தியானிப்போமாக.

பயன்.

தாதுக்களையுடைய மலர்ந்த மாலையணிந்த அரசராகிய அரிதாசர் கருதியவையெல்லாம் பூர்த்திசெய்து ஆட்கொண்ட தலைவனாகிய வேதகிரியில் எழுந்தருளியிருக்கின்ற திருமாலை மிகவும் பக்தியுடன் போற்றுவார்க்குப் பரமபதத்திலிருந்து வாழும் பேறானது அரிதாகமாட்டா.

---

## உ-வது, நூற்பெயர் விளக்கப்படலம்.

திருவனந்தரழ்வானுடைய படங்களாகிய காட்டின் இடையே விளங்குகின்ற ஜீவர்கட்குத் தலைவனும், வானிலுள்ளமேகத்தைப் போன்ற திருமேனியையுடைய அழகிய தேவனுமாவான் எவனோ? அவனே மாட்சிமையுற்ற அருளினையுடைய பரவஸ்துவாவான். அத்தகைய இறைவனையே என்மனமானது தெளிவாகக் காணவேணுமென்று விரும்புகிறது. நான்கு வேதங்களானும், ஆகமங்களானும் சாரங்கமென்னும் வில்லையேந்திய கையனாகிய திருமாலும் சந்திரமௌலியாகிய சிவனும் என்ற இம்மூர்த்திகளின் மேன்மையை ஆராய்ந்தால் ஒலியினையுடைய எழுகடலாற் சூழப்பெற்ற உலகத்தவர்கட்கெல்லாம் ஓர் முடிவின்றி அதுவே பரம் இதுதான் பரமென்னும் வியப்புண்டாகும். அழகிய வேதம் ஆகமம் இதிஹாஸம் முதலிய நூல்களானும் பொதுநூல்களானும் உண்மை

யாராயுமிடத்து அந்தந்த நூல்களிலும் சிவன், திருமால் என்பவரின் புகழெடுத்துரைப்பதறியலாகும். இங்ஙனமெடுத்தியம்புகின்ற அவ்வழகிய மொழிக்குப் பதிலுரைக்கவேண்டிய தவசியமாதல் பற்றி ஆகமத்தை ஒரு பெண்ணாகவும் அருமையான வேதத்தை மற்றொரு பெண்ணாகவும் கற்பித்து உமைபங்கனையும் திருமாலையும் உகந்து போற்றுகின்ற இரண்டு சமயத்தின் விளக்கத்தைச் சொல்லத் தொடங்கினேன்.

ஒருதேவதையே உலகிற்கெல்லாம் சிறந்த தலைவனாவானென்று அரிய வேதங்கள் நிச்சயித்துரைத்த முடிவிருக்க, இருசமயவிளக்கமென்று இந்நூலிற்கு நிலைபெற்ற பெயர் வருதற்குக்காரணம் இன்னவென்றுரைக்கலுறின்; இந்தச் சிறந்த நூலில் உலகிற்குப் பிர்ம்மவஸ்து இரண்டுள்ளனவென்று பிரித்துரைக்கவில்லை. இதில் சைவ வைணவ சமயங்கள் இன்னின்ன இயல்புடையனவென்று விளக்கியுள்ளதாதலால் இருசமய விளக்கமென்று இந்நூலிற்கெய்திய பெயர் தக்கதேயாமென்பதறியலாம்.

இந்நூலைச் சொல்லுதற்கு நான் கற்பித்துக்கொண்ட வேல்போன்ற கண்ணையுடைய மாதர் இருவரில் முக்கண்ணனுடைய சிறப்பெடுத்துரைப்பாள் ஒருத்தி. அவள் ஆகமவல்லி யெனப்படுவாள். செந்தாமரைக்கண்ணனாகிய திருமாலே பரதேவதை யென்றுரைப்பாள் ஒருத்தி. அவள் ஆரணவல்லியென்று சொல்லப்படுவாள். இந்த இரண்டுபெண்களும் கூறியதாக இப்பூமியிலுள்ளார் மதிக்கும்படி நடைபெறுகின்ற பதினெண் புராணங்களிற் பொதிந்துள்ள சொற்களையும் வைதிகவாக்குகளையும் ஒப்பநாடி இங்குஒருங்குகூட்டி யெடுத்துரைக்கலுற்றேன்.

---

## ௩-வது, விடயத்திறப்படலம்.

மகரந்தப்பொடியினையுடைய துளசிமாலையணிந்த அரியையும், சங்கரனையும் துதிக்கின்ற வேதாகமத்தைத் தெரிந்து சொல்லுகின்ற இந்த மெய்நூலில் குற்றம் சிறிதுமில்லாத விஷயத்தின் வகை எம்முறையிற் சொல்லி நிலைநாட்டப்பட்டதென்று கேட்கில் கூறுதும்,—

ஆரணவல்லி ஆகமவல்லி யென்று வழங்கப்படுகின்ற இந்தப் பெண்கள் எல்லாப் பூமியையும் திக்குகளையும் வியாபித்திருக்கின்ற இருளானது விரைந்தோட வானில் ஊர்ந்துவருகின்ற சூரியன் மகர ராசியை வந்தடைந்தபோது (உத்தராயண காலத் தொடக்கமாகிய தைமாதத்தில்) அழகமைந்த ஆரணி யென்ற நதியில் நீராடுதற்குச் சென்றார்கள்.

சென்ற இவர்கள் குளிர்ச்சியினையுடைய அந்நீரில் முழுகுகின்றகாலத்தில் தத்தம் கருத்தில் அமைந்துகிடக்கின்ற சங்கரன் நாரணன் என்ற இவர்களில் சங்கரனே பரதேவதையென்று ஆகமவல்லிகூறினாள். ஆரணவல்லி யென்பாள் நாராயணனே பர தேவதையென்றியம்பினாள். அதனால் அவ்விருவர்க்கும் வாதப் போர் விளையலாயிற்று.

பின்னர் அவ்விருவரும் அழகிய அவ்வாரணி நதிக்கரையினுள்ள ஆரணச்சோலையை யடைந்துநின்றபோது அங்கு வந்திருந்த வேதியர் முன்னிலையில் சிறந்த தத்வ நிச்சயஞ் செய்யத்தொடங்கினார்கள். முன்னர் ஆகமவல்லியானவள் பூமியிலுள்ளவர்கள் தன் வழக்கையே விரும்பியேற்றுக்கொள்ளுமாறு விரிவாகவிருக்கின்ற சைவாகம முதலான நூல்களிற் கூறப்பட்டுள்ள பொருள்களைச் சூழ்ச்சியினால் நன்காராய்ந்து இயம்பத்தொடங்கினாள்.—

சிற்பநூலில் உமைபாகனாகிய சிவபெருமானை யொழிய ஏனையோர்கட்கு ஆலயங்களில் பிர்ம்மஸ்தானமாகப் பிரதிஷ்டைவிதிக்கப் படவில்லை என்பது நிலைபேறுற்ற உலகவழக்கால் நன்கறியலாகும். மேலும், சந்திரன் அணியப்பெற்ற சடையினையுடைய சங்கரர்க்குச் சாரங்கபாணியாகிய திருமால் பரிவாரதேவதையா யிருப்பதோடு எமது சிவபெருமானுடைய மெல்லிய திருவடிகளை வராகரூபியாகித் தேடலுற்றானன்றே! இஃதல்லாமலும் அரியானவன் மோகினியாய் அரனைச் சேர்ந்து ஐயனாரைப் பெற்றானென்பதும் உலகறிந்த தொன்றே. இன்னும் கருமுகில் போன்ற நிறைத்தையுடையபற்பநாபன் சாபவசப்பட்டவனென்பதும் பிரசித்தம்.

நிற்க, பிர்ம்மதேவன் இந்திரன் முதலானதேவர்கள் சிவபெருமானை யொழிய வேள்வி நடத்தி அதனால் இறந்து பட்டனர். நீலகண்டன் சரபபக்ஷியாகி நரசிங்கனை வெற்றிகொண்டானென்பதை அறியாதாருண்டோ? நான்முகன் சாரதியாய் நின்று தேர் கடவ, அசுரர் முப்புரம் தீயெழும்படி புன்முறுவல்செய்தகாலத்து அரியானவன் ரிஷபமாயும் மஹா மேருவாகிய வில்லிற்கு அம்பாயும் ஏவல்புரிந்தானென்பதும் யாவருமறிந்ததொன்றே.

க்ஷீர சமுத்திரத்தில் வாசுகியென்ற பாம்பானது மஹாகாள விஷத்தைக்கான்றபோது அந்த விஷாக்கினியானது ஆகாசத்தோடு எல்லாத்திசைகளிலும்பற்றி எரித்ததன்றே. அப்பொழுது தேவர்கள் துன்புறுவண்ணம் மஹாதேவனாகிய சிவபிரானே அதனை நுகர்ந்தனன். கண்ணன் புத்திரப்பேற்றை விரும்பிகைலயங்கிரிசென்றுசிவபிரானை வேண்டினன். பரசுராமன் சிவாம்சமுடைய ஜமதக்னியிடத்திற்பிறந்து சிவபிரான்பால் வில்வித்தை முதலியவற்றைப் பயின்றனன். கண்ணன் அர்ஜுனனிமித்தமாகக் குற்றமற்ற பாசுபதாஸ்திரத்தைப் பெறவேண்டி ஈசன்பாற்சென்று நல்லுரையாடி இரந்து பெற்றனன். இன்னும் மதுசூதனன் தன்கண்ணையிடந்து சிவபிரானைப் பூஜித்ததனால் சிறந்த ஆழிப்படையைப் பெற்றுத் திகழ்ந்தான். கோதண்டராமன் சேதுவில் சிவனைப் பூஜித்துப் பிரம்மஹத்தியாகிய பாபத்தினின்றும் விடுபட்டனன். மகேசுவரன் தனக்குறைவிடமாகிய காசியில் வந்தடைபவர்க்கெல்லாம் முக்தி கொடுக்கின்றனன். யாவராலும் புகழ்ந்து கொண்டாடப்படுகிற விபூதி பஞ்சாக்ஷர ருத்ராக்ஷ தாரணத்தால் எவரும் சிறந்த புண்ணியத்தை யடைகின்றார்கள். ஒப்பற்ற சிவதீக்ஷையும் பூஜையுமென்ற இரண்டும் இம்மை மறுமை என்ற இரண்டிற்கும் சிறந்த சாதனமாகும்.

சரியை கிரியை யோகம் ஞானமென்ற இவற்றால் மனத்தினை ஒருவழிப்படுத்துகின்றவர்க்கு மழுப்படை யேந்திய ஈசன் சாலோக சாமீப சாரூப சாயுஜ்யமென்ற பதவிகளையுகந்தளிக்கின்றான். தன்னையேபணிந்து தவஞ்செய்வோர்கட்குப் பின்னர்த்தருவோம் என்

ஞது உடனே வரமாகிய பலனைக்கொடுப்பவன் பொன்னேபோற் போற்றத்தக்க சிவபிரானேயன்றிப் பூதலத்தில் வேறியாருளர்?

சிவாகமத்தில் விதிக்கப்பட்ட தொண்ணூற்ருறு சரீரதத்வத்தினையும், நற்பயனுடைய அஞ்சனப்பெயர் தீக்ஷையையும், ஆறு முத்திரைப்பேதங்களையும் தெளிவாக அறியாதவர்கள் முக்தராகார். ஐந்து பூங்கணைகொண்டு எதிர்த்துப் போர்செய்த மன்மதன் எரிக்கிலக்காயழியுமாறு விழித்த சங்கரன், உருநான்கு அருநான்கு அருவோடுருவொன்று என்ற ஒன்பான் ஸ்வரூபமாய்ப் பரம்பொருளாய் எங்கும் நிறைந்துளேன் என்றுரைத்தனன். பிருதிவிதொடங்கிக்கணக்கிடுகின்ற தத்வங்கள் இருபத்து நான்கும், மாயைகள் ஏழும், சிவதத்வம் ஐந்தும் என்ற முப்பத்தாறு தத்வத்தினையும் நன்கறிந்தவர்கள் சிறந்த முக்தராவார்கள். உலகத்தில் நிர்மலர் ஒருவருமில்லையென்றே சிவநிர்மாலியந் தீண்டலாகாதென்றுரைத்ததேயன்றி வேறில்லை.

பிறதெய்வங்களைப்பணிந்து துதிசெய்தாலும், அத்துதியானது ஐந்து முகத்தையுடைய சிவபிரானையே சாரும். இவன் நற்குண நற்செயல்களாலே ஒப்பற்றவனுவான். இங்ஙனங்குணங்களாற் சிறந்தவனென்பதுபற்றியே இவ்வுலகில் பகவான் என்ற பெயர் படைத்தவனுய் விளங்குகிருன். நல்லொழுக்கமுறைகளைத் தெரிவிக்கின்ற நான்கு வேதங்களிற் சிறந்த நாராயணேபநிடந்தன்னில் செந்தாமரைப் புஷ்பம் போன்ற கையையுடைய உமாதேவியாரை வாமபாகத்திற்கொண்ட சிவபெருமானது உபாஸனையே குறிப்பிட்டுள்ளது. இந்த மகேசுவரனே எழுபரிபிணைக்கபெற்ற ரதத்தினையுடைய சூரியமண்டலத்தில் ஜோதிஸ்வரூபனுய் விளங்குகின்ருன். தன்கட்டளைக்குட்பட்ட எல்லாவுயிர்களின் இருதயத்திலிருந்துகொண்டு அவ்வுயிர்கள் காரியங்களில் முயலுமாறு ஏவுகின்றவனும் இவனே.

வேதத்தால் சொல்லப்பெற்றவனுய்ப் பசுபதியாய் விளங்குகின்றவனுர், யாகத்தில் ஹவிர்ப்பாகம் விரும்புகின்றவனும், வேள்விப்பதியாகித்திகழ்கின்றவனும் வெற்றிமழுவேந்திய கையினனுகிய

சிவபெருமானன்றே! இங்ஙனம் ஆகமவல்லியானவள் சிவாகம முறைமுழுமையும் சூழ்ச்சியுடன் எடுத்தியம்பினள்.

பின்னர் இவளுரைக்கெதிராக ஆரணவல்லியென்ற மாதரசி, வேதங்களானும வேதாந்தச் சார்பாகிய முப்பத்திரண்டு நியமோப நிடதங்களானும், அறிவுடையோர் ஆராய்கின்ற சிறப்பினை யுடைய உபபுராணங்களானும், தாமஸ ராஜஸ ஸாத்விக புராணங் களானும், பொருளுணர்தற்கரிய ஸ்மிருதிகளானும், அவற்றிற் கிசைந்த உபஸ்மிருதிகளானும், புகழினையுடைய பாஞ்சராத்திரத்தா னும், வாய்ப்புடைய வைகானஸத்தானும், அறுசமயநூல்களானும், சோதிட வாகட நூல்களானும், பொருத்தமுடைய பொது நூல் களானும், ஏனைய நூல்களானும் சொல்லப்பட்ட உண்மையானது புவியில் விளங்க, சைவஸித்தாந்த கண்டனஞ் செய்யத் தொடங் கினாள்.—

செம்மையுடைய உலகவழக்கினுள்ள சிற்பநூல்கள் முப்பத்திர ண்டினும் பிர்ம்மஸ்தானமூர்த்தியாகப் பிரதிஷ்டிக்கப்படுகிறவன் திருமாலே யாவன். இந்தத் திருமாலிற்கு நீரமலிசெஞ்சடையன் முதலானவர்களைப் பரிவாரதெய்வங்களென்றும், துவாரபாலர்க ளென்றும், மதுசூதனனை ஈசற்கீசனென்றும், மேலும் இவனே உத்தமனென்றும், ஏனையோர்கள் மத்தியரென்றும் உரைக்கப் ட்டன. தாமரைமலரினுறையும் நான்குமுகங்களுடைய பிர்ம்ம தேவன்மிகுந்த அன்பினால இரண்டு திருவடிகளைப்போற்ற, புவிதே வியைத்தன் கொம்பிலேற்ற ஸ்ரீவராகப்பெருமாள் சிவனுடைய கழலைத் தேடினனென்பது யாண்டையது ?

சிறந்த சக்ககரப்படையையுடைய அரியானவன், கபால மேந்திய சிவனை மோகினியாய் மயக்கித் தன்னுருக்கொண்டனன். வாலகில்லியர்கள் பிர்மமாவினிடத்தி லுதித்ததுபோல இடபவாக னத்தையுடைய சிவனிடத்திற் சாத்தன் பிறந்தான். திருமாலே புருஷோததமனாவான். ஏனையோாகள் தேவமாதர்கள் போல்வார் களென்றும பலபிரமாணங்கள் புகன்றன. முனிவரிட்டசாபம், எம் மாயனை இடையூறு செய்யவில்லையெனபதும் வெள்ளிடை மலை யன்றோ !

பிர்ம்மதேவன் தாதையாகிய எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளைத் தஞ்சமாகப்பற்றிய சிறந்தவறிவினையுடைய அம்பரீ

ஷன் முதலானவர்கட்கு முனிவரிட்ட சாபமும், மாரணயாகமும் அன்னவர்களைச் சென்றடையவில்லை. உமையோர்பாகனே மிகவும் சாபவசப்பட்டவன். அமைந்த புகழினையுடைய விச்வசிருஷ்டியர் செய்தவேள்வியிடத்தில் தக்ஷன் வந்து சிவனை வைதுரைக்க அவன் அது பொறுக்கலாற்ருது கைலயங்கிரியைச் சார்ந்தனன். தக்ஷன் செய்த வேள்வியை யடைந்த கரியநிறமுடைய சசிதேவியானவள் உயிர்துறந்தாள். அதனுல் நீலகண்டன் வெகுளிகொண்டு அந்த வேள்வியைச் சிதைத்துச் சில தேவதைகளைக் கொலை செய்தனன்.

பயந்தோடிய தேவர்கள் ஸத்யலோகத்தை விரைவிலடைந்து பிர்ம்மதேவனைப் பணிந்து நின்று வேள்வியிடத்துத் தேவர்கள் பட்டபாட்டை அறிவித்தனர். அதன்மேல் நான்முகன் சிவனுடைய கோபத்தையகற்றிப் போர்க்களத்தில் மடிந்ததேவர்கள் உய்யுமாறு வேண்டினன். அழித்திட்ட வேள்வியிடத்தில் பிர்ம்மதேவனும் சிவனும் வந்து தக்ஷன் உயிர்பெறும்படி பணித்துக் குறைவுடைய வேள்வியைத்தொடங்க ஆங்குத்திருவஷ்டாக்ஷரத்தால் சொல்லப்படுமவனுகிய எம்பெருமான் எழுந்தருளியபோது பிர்ம்மாவும் சிவனுந்துதி செய்துவணங்கினுர்கள்.

அயனும் அரியும் விரும்பிய வேள்வியை சூலப்படையான் அழித்த செயலெல்லாம் ரிஷிகள் விரும்பிச்செய்த வேள்வியைக் கொடியோனுகிய இராவணன் சிதைத்ததற்கொப்பாகுமென்று நூல் கூறும். அழகிய பினுகமென்ற வில்லை ஏந்திப் போர்க்களம் புக்கபோதும், வலிமைசான்ற வாணுசுரன் அமர்க்களத்திலும், நாரணமாமுனியோடு போர்தொடங்கிய காலத்திலும் சூலப்படை யேந்திய சங்கரன் தோல்வியுற்றனன். இந்திரன் கபாலமேந்திய சிவன் பிர்ம்மா முதலான தேவக்குழுவினரெல்லாம் அடங்குகின்ற ஊழிக்காலத்தில் ஓருயிரேனும் எஞ்சாது மாண்டொழியுமாறு தகிக்கும்படி செய்கிற ஸர்வஸம்ஹார கர்த்ருத்வவஸ்து அரியேயாவானென்பதை ஆய்ந்தோய்ந்தவறிவுடையார் நன்கறிவரன்றே. அழியாததன்மையுடைய வச்சிரத்தூணையும், மிக்க வலிமையுடைய இரணியன தகல்மார்பையும் பிளந்ததுபோல கூரிய பற்களையுடைய சிவனுகிய

சரபத்தைக்கூறுசெய்து சிங்கப்பிரான் ஆக்கமுற்றுத்திகழ்ந்தனன். மேலும் நரசிங்கப்பிரான் தேவர்கள்மீதும் சிவன்பாலுமிரக்கமுற்று இரணியனதுதிரத்தில் உண்டாகிய சத்திசமுகப்படைகளைவென்று இப்புவியில் விளங்கினன்.

பண்போன்றமொழியையுடைய அம்பிகைபாகன் திரிபுரத்தை அக்கினிக்கிரையாக்கவுன்னித் தேவர்களையுந் துணைகொண்டு தன் சடையே சமித்தாகவைத்து சிறந்த வேள்வி செய்தனன். முப்புரத்திலுள்ளவர்கள் மனம் வருந்தும்படி வெற்றிகொண்ட காலத்தில் அருளுடைய திருமறுமார்பன் பூமியாகிய தேர் பதிந்துவிடாமல் அதனைத் தாங்குதற்கு இடபமாயும், அம்பாயும், ஆத்திசூடிய அரனுக்கந்தர்யாமியாயும், அமிர்தகூபத்திலுள்ள அமிர்தத்தைப் பருகவேண்டுமென்ற கருத்தொன்றிய பாற்பசுவாயும், புத்தனாகியும் நின்று அருள் செய்தான்.

மேலும், தாமரைமலரில் வீற்றிருப்போனாகிய நான்முகப்புத்தேள் தேவர்களின் வேண்டுகோளிற்கிரங்கிச் சாரதியாயிருந்து தேரைக்கடாவி, சிவனுக்கு அரிபஞ்சரம் என்ற மந்திரத்தையுமுபதேசித்தான். பூதியணிந்த புண்ணியனாகிய சிவபிரான் திருப்பாற்கடலினின்றும் ஊழித்தீபோலெழுந்த நஞ்சைக் கருடக்கொடியுடையவனாகிய பரந்தாமனைத் தியானஞ்செய்து உட்கொண்டனன். திருப்பாற்கடலில் அறிதுயிலமருமமலன் ஒரு புத்திரனை வேண்டி கைலயங்கிரி சென்றபோது, ஆலாலகண்டன் கேசவநாம வியாக்யானத்தைத் தன் தேவியாகிய உமைக் குபதேசித்துக்கொண்டிருந்தனன்.

பரசாயுதமேந்திய இராமன் சிவாம்சமுடைய ஜமதக்னிமுனிவரைத் தந்தையாகவும், குருவாகவும் கொண்ட காரணத்தால் சிவன் பரம்பொருளாவானென்பது எங்ஙனம்? எத்திக்குகளிலும் ப்ரஸித்தியுடைய பாரதப்போரை விஜயன் வெற்றிகொள்வதற்காக மாயன் சிவன்பால் நயமொழிபுகன்றிரந்தானென்பது ஆதாரமற்றவுரையன்றோ! அரியானவன் கண்ணையிடந்து அரனை அர்ச்சித்து ஆழிப்படையைப் பெற்றானென்பது வலியற்றவுரையாம். திருமாலிற்கு ஆழிப்படை பண்டேயுளது. 'அந்தத் திருவாழியாழ்வானை

உபாஸித்தன்றோ திரிசூலப்படையைப் பெற்றேனென்று சிவன் உமைக்குரைத்த உறுதிமொழி உலகறியுமன்றோ!

மதிதங்கிய செஞ்சடையீசன், மதியீன்ற இயதமாமலருடைய அண்ணலை ஆராதனைபுரிய அதனால் அவன் ஞானக்கண்ணையும், யாவரும் துதிக்கத்தக்க பெருமையும், திரிமூர்த்திகளில் சேர்த் தெண்ணுந்திறனையும் ஈசற்கீந்தனன். இவ்வீசனுக்கீந்த வரபாலனஞ்செய்வதற்காக மாயன் புவியில் சிவபூஜை செய்தனன். ஒளியுற்ற நேமிப்படையோன் அருளால் கண்டாகர்ணனுக்குப் பிர்ம்மஹத்திதோஷம் சாராதொழிந்தது. முத்து, சங்கு முதலியவற்றைக் கொழிக்கின்ற அலையினையுடைய கங்காநதியானது திருவநந்தாழ்வானாகிய படுக்கையின்மீது அறிதுயில்மரும் செங்கண்மாலுக்குரிய ஸ்தலமன்றோ! இத்தகைய ஸ்தலத்தை யணுகியவுடன் சிவனைவிட்டு நீங்காத பிர்ம்மஹத்தி யகன்றது. இதனைக் கண்ணுற்ற கண்ணுதலோன் 'அடியேற்கு இத்தலத்தை யுறைவிடமாக நல்கவேண்டும்' என்று பிரார்த்திக்க உந்திக்கமலோன் அன்புடன் அத்தலத்தினையீந்து தான் பிரயாகையை யடைந்தனன்.

மிகவும் தாரகமாயிருக்கிற ராமநாம மந்திரத்தைப் பிர்ம்மதேவன் உபதேசஞ்செய்தபின்னர் குளிர்ந்த நீரால் சூழப்பெற்ற காசியில் ஜீவகோடிகட்கு ஆதாரமாய் அரன் முக்தியளிக்கின்றனன். குற்றமற்ற சிவபூஜை செய்வதானும் ஐந்தெழுத்தை (நமசிவாய என்ற மந்திரத்தை) அநுஸந்திப்பதானும் திருநீறணியும் பெற்றியானும் குற்றமற்ற ஞானமும் காமமும் வாய்ப்பதல்லால் இவை வீடு பேற்றுக்குக் காரணமாக மாட்டா.

ஸாத்விகபூஜை, ராஜஸபூஜை, தாமஸபூஜை என்ற மூவகைப் பூஜைகளான் சிவனை ஆராதிப்பதுண்டு. இவற்றுள் ஸாத்விகபூஜை செய்ததக்கோர்கட்கே ஈசன்காமியத்தினோடு ஞானத்தையுந்தருகின்றனன். சிவாகமமுறை வழுவாது நிறைந்த அன்பினோடு பூஜை செய்கின்றவர்கட்கும் கொன்றை நறுமாலையணிந்த இறைவன் கொடுக்கும் பதம் நிலையற்றதாம். பூமி முதல் சிவாந்தம் ஈறாக எண்ணப்பட்ட முப்பத்தாறு தத்வமும், அரனுக்கு அருநான்கு உருநான்கு,

அருவோடுரு ஒன்று என்ற ஒன்பான் உருவுண்டென்பதும் வேதத்தில் விதிக்கப்படவில்லை.

சரீரதத்வம் தொண்ணூற்றாறென்பது மாத்திரமில்லை. வேதத்தில் இன்னும் அநேகமுண்டென்று பிண்டோற்பத்தியில் அறியாதாரும் அறியும்வண்ணம் அறைந்துளது. நீலமணிமிடற்றோனாகிய சிவனை ஆகமநெறி பிறழாமல் பூஜை செய்கின்றவர்ககள் * பஞ்சசுத்தி நிமித்தமாகப் பஞ்சாக்ஷரத்தை ஓங்காரமாகிய ப்ரணவ சகிதமாக உச்சரிக்கின்றார்கள்.

அத்தன்மைத்தாகிய ப்ரணவமானது ஸ்ரீ ஹரியின் மயமென்று வேதமும் ஏனைய நூல்களுங் கூறுகின்றன. உத்துங்கமான திருவஷ்டாக்ஷரத்தோடு இப்பிரணவமும் ஒரெழுத்தாக வைத்தெண்ணப்படும் பெற்றியதாய் விளங்கும். வேத தாற்பர்ய நிர்ணயமுணர்ந்து முக்குறும்பகற்றிய முற்றத்துறந்த சந்யாஸிகள் திருவஷ்டாக்ஷர மந்திரத்தை மிகவும் பரிவுடன் ஓதுவதுபோலச் சிவபஞ்சாக்ஷரத்தைக் கடந்த மெஞ்ஞானியர் ஓதுவதில்லை. ஆதலால் இது சாமான்ய மந்திரங்களோடொப்பாகும்.

சிவ நிர்மாலியந் தீண்டுதற்குரிகரில்லையென்று நவில்வது வேத சம்மதமாகாது. சிவபுராணங்களில் வேதப்பொருட்கொவ்வாத தாமஸநீதிதோன்ற வுரைத்தவையெல்லாம், ஆசுரப்ரகிருதிகள்முக்தி பெறுதிருக்கக் கற்பித்த மோஹன சாஸ்திரங்களாகும். மேலோர் கீழோராகவும் கீழோர் மேலோராகவும் நிலைதடுமாறி வாழ்கின்ற கலிகாலத்தில் பலர் அநந்தசயனனிடத்தில் அன்பில்லாதார் பாஷண்டிகளாய்த் திரிவார்கள்.

சக்கரத்தண்ணலையே பரவஸ்துவாகப் பகர்கின்ற புராணம் வேதப்பொருளோடியையு மியல்பிற்றாதலால் இது ஸாத்விக பாகத்தைச் சார்ந்ததாகும், திருவிலச்சினையும் திருமண்காப்பு மணிதல் வேதத்தாற் புகழ்ந்துரைக்கப்படும் முக்தரினியல்பாம். பார்த்தற்கு

---

* பஞ்சசுத்தியாவன.— ஆத்மசுத்தி, லிங்கசுத்தி, திரவியசுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி என்பன.

ஒப்பற்ற சாரதியாய் விளங்கிய எம்பெருமானுடைய ஸ்ரீபாதம் விளக்கிய தீர்த்த ப்ரசாதம் நுகர்ந்திடுஞ் செய்கையெல்லாம் சொல்லுதற்கரிய முக்திக்கேதுக்களாம்.

நான்கு வேதத்தானும் அவ்வேதப்பொருளிற்கியைந்த சாஸ்திரங்களானும் சொல்லப்படுகின்ற வாய்மையுடைய பல பிரமாணங்களை யெடுத்தியம்பி உந்திபூத்த இறைவன் மகிழ்ந்துறைகின்ற பதமே பரமபதமாகுமென்று பகர்ந்தனள். மேலும், தர்மார்த்த காம மோக்ஷமென்ற நான்குவகையான உறுதிப்பொருள்களைச் சார்ங்கபாணியாகிய ஸர்வேசுவரனே ஸ்திரமாக நல்கிறான். இவனருளன்றி அகண்டமுக்திப் பேற்றுக்கு வேறு மார்க்கமொன்றுமில்லை.

சிலர் சிவனே வந்தனைக்குரிய பாத்திரமாவானென்றுரைப்பதெல்லாம் அவன் காமியபலமனைத்தையும் தயையுடன் நல்குறானென்பதனாலும் அவன்பாலுள்ள பயபுத்தியினாலுமாமென்க. எப்பொருளிற்கும் பரமாய் விளங்குகின்றவனும் அரியமுக்திப்பேற்றையளிப்பவனும் வந்தனையை ஏற்றுக்கொள்ளும் வரபாத்திரமாய் விளங்குகின்றவனும் திருமாலே யாவான். சூரிய சந்திரர்கட்கும் பகவச்சப்தத்தை இயைத்துச் சூரியபகவான் சந்திரபகவானென்று உபசாரத்தாலுரைப்பதுபோலக் கண்ணுதலோனையும் ருத்திரபகவானென்றுரைப்பதுண்டு. அழகிய துளசிமாலையணிந்த ஸ்ரீஹரியே ஆறு குணங்களாலும் நிறைந்த ஒப்பற்றவனென்று அரிய மாமறைகள் தெளிவாக அறைகின்றதனன் இவனே பகவச்சப்த வாச்சியனாவான்.

நான்கு வேதங்களின் பொருளைத் தொகுத்துச் சொல்கின்ற நாராயணோப நிடதம், பலவிடங்களில் ஸ்ரீமந் நாராயணனே பரனென நவின்று நிறுவி அன்னவனது உபாஸனைதான் செய்யத்தக்கதென்றுஞ் செப்புவது. இங்ஙனம் இவ்வுபநிடத முரைத்ததுபோலப் பல பிரமாணங்களும் நாரியோர்பாகனால் ஆராதிக்கப்படும் பெருமைவாய்ந்தவன் நாராயணனேயென்றும் நவின்றன. முதலையின் வாயிலகப்பட்ட கஜேந்திரன் மூலப்பெயரிட்டழைத்தஞான்று 'இப்பெயருக்குரியோம் நாமல்லேம்' என்று நான்முகன் ஐமுகன் முதலானோரெல்லாம் தத்தம் பதம்விட்டு அடிப்பெயராதிருந்தனரன்றே.

முக்கண்ணன் முகுந்தனை உபாஸித்தது மாத்திரமல்லாமல் தன் மனைவியாகிய உமைக்கும் மிருகண்டுவின் புதல்வராகிய மார்க்கண்டேயருக்கும் திருமாலின் உபாஸனையை உபதேசித்துச் செய்வித்து அவர்கள் நீடூலகத்தில் உவந்திருக்கும்படி செய்தனன். இந்தத் திருமாலின் உபாஸனை ஒருபுறமிருக்க, அத்திருமாலின் திருமார்பகத்திறையும் அகலாதுறையும் இறைவியை உபாஸனை செய்து சிவன் முதலிய பற்பலோரும் தத்தமக்குரிய பலவிதமான பதவியைப்பெற்றனர்.

நான்முகன் கண்ணுதலோனென்ற இவ்விருவருக்கும் நாராயணன்பால் தோற்றமொடுக்கமுள்ளனவாம். அத்தோற்றவொடுக்கங்கள் இவனுக்கில்லை. அறிதுயிலமரும் அச்சுதன் அவதாரமெல்லாம் தருமம் சுருதித்தொகை என்பவைகளைக் காத்தற்கும் துஷ்டர்களை யழித்தற்குமென்றே நிகழ்வனவாம். சூரியமண்டலத்தில் ஒளியுற்றிலங்கி,யாவரிதயத்தினையும் முயல்விப்பவன் முக்கணீசனென்று இயம்புவது வேதத்தொடு மாறுபாடாம். எல்லாருடைய இருதய கமலத்திலுறைபவனும் சூர்யமண்டலத்தில் வர்த்திப்பவனும் செந்தாமரைக்கண்ணனேயென்று மாமறை முதலிய நூல்களியம்புகின்றமையால் அந்தப் பீதகவாடைப்பிரானே பரம்பொருளாவானென்று நிச்சயிக்கலாம். தேவர்கள் தாம்செய்த வேள்வியில் சிவனையகற்றி அவியின்மிச்சிலை அவ்வரனுக்கு நல்கினர். மேலும், இந்தச் சுரர்களே அன்புடன் சிவனுக்குப் பசுபதி யென்ற வரத்தைக் கொடுத்தனர். அதனால் அன்னவனுக்கு அப்பெயர் நிலைபெற்று வழங்கலாயிற்று. நளிர்மதிச்செஞ்சடையினன் வேள்விக்குப் பதியாகான். இவ்வரனும் சுரர்களும் பூசுரர்களும் செய்யும் ஒப்பற்ற வேள்விகளிடத்தில் எசிக்கநின்றவன் உந்திக்கமலனாகிய இறைவனே யாவான்.

யாவரும் ஏற்கும்படி இங்ஙனமுரைத்தபின்னர், ஆகமவல்லி ஆரணவல்லி யென்ற மாதர் இருவரும் உண்மையாகக்கண்ட பரவஸ்துவைப்பாரின்மீது யார்க்கும் புலனாகுமாறு இயம்பலானேன்.—

---

## ௪-வது, புராணவிவேகப்படலம்.

பரவஸ்துவின் ஸ்வரூபம் இன்னதென்றறியாதவர்கள் வீடு பேற்றையடையார்களென்பது ஒருதலையாம். அரிக்கும் அரனுக்குமுள்ள பேதமின்னதென்று ஆராய்ந்தாலன்றி இன்னாரிடத்தில் பரத்வமுள்ளதென்று தீர்மானிக்கவொண்ணாது. ஆதலால் இவ்விருவர்க்குமுள்ள பேதமறிவது இன்றியமையாததாம். இதுபற்றியே இந்நூலில் இவ்விருவரின்பேதம் ஆராய்ந்துரைக்கப்படுகிறது. இதனால் போந்த பிரயோஜனமொன்றுமில்லையென்பதில்லை. இதுவே சாலவும் பயனுமென்க.

சிறந்த பரவஸ்துவை உண்மையாக அளவிடுதற்கு அது எளிதாமோ? நான்மறையோடு நான்முகனும் அவ்வஸ்து இன்னபெற்றியதென்றறிதற்கரியராவரென்றால் உலகத்தினர் அதனியல்பை அறியுமாறெங்ஙனம்? அப்பரம்பொருளைக் காணுவது அரிதாகவிருந்தாலும் வேதபுருஷனும் பிர்ம்மதேவன் முதலானவர்களும் பரஸ்வரூபமின்னதென்றும், பெயரின்னதென்றும் ஒருவகையான் உரைத்தவுரையின்படி தமியேனும் சொல்லத்தொடங்கினேன். வேதமும், வேதனும் இன்னான் உலகிற்குப் பரம்பொருளாவானென்று முன்னர்க்கூறிய அதனையே பின்புள்ளவனாகிய யான் எடுத்தியம்புவதும் ஓர் பணியாமன்றே.

மனம் மாச்சர்யமற்ற பெரியோர் பரந்துகிடக்கிற வேத நன்னூலினை நன்காராய்ந்து பரம்பொருளைக் காண்கிறார்கள். அப்பரவஸ்துவைக்காண்பதற்குக் கருவியாயிருக்கின்ற வேதத்தைப் பயில்வதற்கு எல்லோருக்கும் அதிகாரமில்லை. ஆதலால் யான் தண்டமிழ்ப் பாத்தொகையால் அவ்வேதார்த்தங்களை உலகினர்க்கிதமாகச்சொல்லத்தொடங்கினேன். நீலமணிமிடற்றோனாகிய சிவனையும் நீலவண்ணனாகிய அச்சுதனையும் துதிக்கின்ற இந்தத் தொகைநூலிற் சொல்லப்படுகிற உரையெல்லாம், பழமையான வேதநன்னூலறிந்த பெரியோர் செவிக்கேற்கும். ஒன்றுங்கல்லாதவர்க்கு இது பொருள் செய்தற் கெளிதாகுமோ? சிறியகன்று தழையைக்கோதி மென்று தின்னும் தன்மைபோல நூலினை நன்கறியாதவர் தாம் கற்ற புல்லிய கல்வியைக்கொண்டு பெரியோர்களைப் பொருட்படுத்தாமல் கொடு

மை பேசுவார்கள். இத்தகைய மனமாசுடைய மாக்கள், உலகினைப் படைக்கின்ற பிர்ம்மதேவன் நேரில்வந்துரைத்தாலும் அவ்வுரையினையும் நம்பமாட்டார்களன்றோ!

உப்பு விற்பானொருவன் கற்பூரத்தின் விலையறியானேனும் அதனால் கற்பூரத்தின் விலை குன்றிவிடுமோ? அதுபோல சில மூடர்கள் இந்நூலை விரும்பாதொழிந்தாலும் அழகினையுடைய இந்நூலிற்கொரு புன்மையுண்டாகமாட்டாது. ஆகாயத்தொடு பூமியையும் வியாபித்திருக்கிற கொடிய இருட்டானது அகல உதிக்கின்ற சூரியனது தோற்றம், மரத்தின் பொந்துகளில் பதுங்கி உறைகின்ற குகைக்கு நன்மைபயக்காதொழியினும், அதனால் சூரியனது தோற்றத்திற்கோர் குறைவுண்டோ? அதுபோல் சில மதுகையில்லாத மாக்கட்கு இந்நூல் இதத்தைச்செய்யாதொழியினும், அதனால் இந்நூலின் பெருமைக்கோர் குறைவுண்டாக மாட்டாது. ஒரு பொருளே பலருக்கு நன்மைபயக்கவும், சிலர்க்குத் தீமை பயப்பதுமாயிருப்பது இவ்வுலகத்தியற்கையாம்.

நாரியோர் பாகனொடு நாராயணனுடைய சிறப்பெல்லாம் பல நூல்களிற் சொல்லப்பட்டுள்ளன. அங்ஙனமுரைத்துள்ள பல பிரமாணங்களையும் எடுத்துக்காட்டி அவை நிலைநிற்கும்படி இயம்பலுற்றேன். வேங்கைப்புலியானது கொடிய பாய்ச்சல் பாய்வதற்காகப் பதுங்கி நிற்கும். வெள்ளாடு மெல்லிய பாய்ச்சலன்றிப் பிறிதறியாது. அதுபோல அறிவிற்சிறந்த பெரியார்கள் பின்னர்த் தம் சக்தியைத் தெரிவிக்க முன்னர் அவையடக்கங்கூறினர்கள். அங்ஙனம் சக்தியில்லாத புல்லியனாகிய யான் அவையடக்கம் கூறாதொழிந்தேன்.

---

## ரு-வது, நகரப்படலம்.

மணங்கமழப்பெற்ற துளசிமாலையணிந்த திருமால் ஒப்பற்ற மச்சரூபியாகி வேதத்தைக்கவர்ந்து கடலிற்புகுந்த சோமுகாசுரனை மாய்வித்து அவ்வேதத்தை வேதனுக்குத் திருவாய்மலர்ந்தருளினன் ஓர் சிறந்த குன்றிடத்து. அன்றுமுதல் அம்மலைக்கும் அம்மலையினடிப்புறத்துள்ள காட்டிற்கும் நதிக்கும் முறையே வேதபுரி வேதாரண்யம் வேதநதியென்று பெயர் வழங்கலாயிற்று.

அந்த வேதபுரியில் நீரில் மூழுகிய பூமியைச் சுடராழிப்படையேந்திய மாயன் சுவாயப்புமனுக்குப் பரிவுடனளித்தனன். மேலும் அவ்வூரில் வேதத்தை நன்கறிந்த பெரியோர்கள் வேதவேத்யனுகிய எம்பெருமானுக்கு முதற்பூஜைசெய்தார்கள். இஃதல்லாமலும் அம்மாநகர் அரிவாசபுரம் என்ற சிறந்த பெயரைப்பெற்று, செந்தாமரைமலர்மேலுறையும் செய்யாளின் வைபவத்தை யடைந்து, மூவுலகத்தினரும் துதிசெய்ய மாதமும்மாரி பெய்யப்பெற்றுச் செழிப்புற்றோங்கியது. அந்நகரிலுள்ள மடாலயமெங்கணும் வேத புராண முழக்கமும், சிறந்த தேவாலயங்களில் விழாக்களின் ஆர்ப்பும், தெருக்களிற் கட்டிய விருதுக்கொடிகளின் வனப்பும் எல்லாருடைய புலன்களைக் கவரும் பெற்றியன.

செழிப்புற்ற இப்பூமியிலுள்ளவர்கள் புகழுமாறு வாழ்கின்ற இம்மாநகரில் இரண்யன் தூணில் தோன்றிய சிங்கப்பிரானை அநவரதம் தியானஞ்செய்த அரிதாஸரென்ற அரசர் பல திக்குகளிற் சென்று போர்செய்து வெற்றியின் முடிவுகண்ட காலத்தில் நிகழ்ந்தது வருமாறு.—

---

## ௩-வது, நதிப்படலம்.

சிகரத்தையுடைய மஹாமேருபருவதத்தைச் சூழ்ந்துவருகின்ற சூரியன் மகரராசியைப்பொருந்தும் புண்ணியகாலம் வந்தெய்திய போது அந்த வேதபுரியிலுள்ள மைந்தரும் மாதரும் கடல்போன்றுள்ள நதியில் நீராடுதற்குச் சென்றார்கள். இங்ஙனஞ் சென்ற திரளில் திருவாழி திருச்சங்குகளை மெல்லியதோள்களிலணிந்து கொண்ட குறியும், திருநாமமும் மார்பில்வனமாலையும் விளங்க ஒரு வனிதை சென்றாள். விற்போன்ற நெற்றியில் வெண்ணீற்றுத் திரிபுண்ட்ரமும், கருங்குழலில் கொன்றை நறுமலரும் மார்வகத்துச் சங்குமணிமாலையுந் தயங்க இனிய சொல்லையுடைய மற்றொரு தோகையுஞ் சென்றாள்.

இம்மாதர் இருவர்களும் முன்னர்யான் அரியார்களைப்புகழ்கின்றவர்களாக நாட்டிய ஆரணவல்லியும் ஆகமவல்லியுமாவார்கள். காதைப்பொரும்கடை நோக்கைக்கொண்டு மதனாகமத்தைப்பயிலும் பாவை உயிர்பெற்றுலாவுவன போல இம்மின்னனையார் ஆரணி தீர்த்தமாட வேதப்படித்துறையைச் சார்ந்தார்கள்.

## எ-வது, தோத்திரப்படலம்.

இந்த நதிதீரத்தில் நான்முகன் வேள்விநடாத்தி * அவபிருத ஸ்நாநஞ்செய்தற்கு, 'பரிசுத்தமான நதியனைத்தும் இவ்வழியேசெல்லுக' என்றுரைத்துத் தம் கையிலுள்ள அரணிக்கட்டையாற்கீற, அங்குப் பெருமைமிக்க ஆரணியென்ற நதிப்புனலுண்டாகக்கண்டு மகிழ்வெய்தினர்.

மயில்போன்ற சாயலையுடைய இம்மாதரிருவரும் இந்நதியினைக் கண்டு களித்தார்கள். அப்பொழுது ஆகமவல்லியானவள் அந்நதித் துறையையடைந்து முழுகுகின்றபோது கொன்றைமலரையும் பிறையையுமணிந்த சடையையுடையவானவர் தம்பிரானை மனமார மகிழ்ந்து துதிக்கத்தொடங்கினள்.—

ஆலமரத்தையடக்கிய வித்தென அண்டமெலாமெளிதில்
சாலவடக்கியளிப்பவனே திசழ்சந்திரசேகரனே
மாலயனுக்கும் அனந்தமறைக்கும் நல்வானவருக்குமெலாம்
மூலமெனத்தகுகாரணனே நமமுக்கணனே நமவே.

மெய்ப்புனலில்குளிரும்கிளர்வன்னியில்வெம்மையும்மென்மலர்சேர்
ஒப்பறுநன்மணமும்மணியில்திகழ் ஒள்ஒளியுமெனலாய்
செப்புசராசரமெங்கும் நிறைந்ததிகம்பரனேயடையார்
முப்புரம்வேகநகைத்தவனேநம முக்கணனே நமவே.

மேலும், நான்முகன் உருக்கொண்டு எல்லாப்புவனங்களையுஞ் சிருஷ்டிக்கின்றாய்; உண்டாக்கப்பட்ட எல்லாவுயிர்களையும் அச்சுதனாய் நின்று பாதுகாக்கின்றாய்; நிச்சயமாகிய நின்வடிவால் அனைத்தையும் சாம்பலாக்குகின்றாய்; இங்ஙனம் முத்தொழில்களையுஞ் செய்கின்ற திரிசூலப்படையேந்திய அண்ணலே நம:

எட்டுத்திக்குகளைப் புயமாகவும், அக்கினி சூர்ய சந்திரர்களை மூன்றுகண்களாகவும், பெரிய அண்டகடாமுகட்டை முடியாகவும், நாகலோகத்தை யடியாகவுங்கொண்ட திருமேனியையுடையவனே! மேகவண்ணனும் நான்முகனும் தெளிதற்கரியாய் நம: முக்கண்ணனே நம: ஆதிபரபிரமத்தொளியுருவாய், அந்தப் பிரம்மத்தினின்றுந்

* அவபிருதஸ்நாநம்:- யாகமுடிந்தபின் அதற்கு அங்கமாகச்செய்யும் ஸ்நாநம்.

தோன்றிய மூவுருவாய், வேதத்தின் விழுமியபொருளாய், ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்ற பஞ்சபூதமாய், சராசரப்பொருளாய், உடலுயிராய் யோகியராலுணரப்படும் அற்புதனே! நம: முக்கண்ணனே நம: என்று ஆகமவல்லியானவள் துதித்துப் புனலாடி நதிக்கரையேறினள். அங்கு அன்புள்ள சேடியர்வந்து பட்டணிவித்து, அழகியமேனியைப் புலர்த்தி ஒளியிணையுடைய ஆபரணங்களால் அலங்கரித்துத் துதிக்கவிருந்தனள்.

இந்த ஆகமவல்லிக்கெதிரே ஒலியிணையுடைய சிலம்பணியப் பெற்றதாளிணையுடைய ஆரணவல்லியென்பவள், சென்னியிற் செங்கைகுவித்து ஸ்ரீதரனைத் துதிக்கத்தொடங்கினள்.—

நாரணனேநம நீயுதவும் பதினலுவகைப்புவன
பாரணனேநம சங்கரனைத்தருபங்கயனைப்பெறுநால்
ஆரணனேநம அற்புதனேநம அண்டமெலாமுதவும்
பூரணனேநம நீயருள்வாய் மிகுபுத்தியும்முத்தியுமே.

பண்ணமர்வேதமும் எட்டரிதாகிய பாவனநின் உருவத்
தெண்ணும் உரோமஒழுக்கில் அரும்பியிலக்கமிலாதனவாய்
நண்ணிய அண்டசமூகவளர்ச்சியும் நாசமும்நின்வயினும்
புண்ணிய லீலையனேயரியே பரிபூரணனே நமவே.

மேலும், அத்திப்பழத்தினுள்ளுறைகின்ற சிலவுயிர்களே அத்திமரமறியும் சக்தியில்லாததுபோல, உனதாகிய தத்துவமும், உன்னிடத்தில் உற்பத்தியாகிய அண்டமனைத்தும் நின்வயினுறைகின்ற சங்கரராலும் பல பிரம்மாதியராலும் புத்திசெய்தற்கரியனவாய். அத்தகைய அருமையினையுடைய அரியே! பரிபூரணனே! நம: பாலிற்கலந்த நீர்போல நின்வயிற்கலந்திருக்கிற புவனங்களிலே நான்முகனும்,முக்கண்ணனும் ஒப்பற்ற நாயகரென்று தம்மைத்தாமே மதிக்குமாறு அவர்களின் மதியை மயக்கி, சிருஷ்டி சங்கார கர்த்தாக்களாகிய அவர்களோடொக்க நீயும் பாலனகர்த்தாவாகவிருந்து விளையாடும் பரம்பரனே! பரிபூரணனே நம:

இங்ஙனம் நாராயணனுடைய திருநாமத்தைச்சொல்லித்துதித்துத் தன்னுள்ளம்போலத் தெளிந்த நீரில் முழுகி காவேரி பாகீரதி முதலிய தெய்வநதிக்கொப்பாகிய ஆரணி நதிக்கரையேறினள்.

அப்பொழுது இவளுக்குப் பட்டணிவித்து மேனியைப்புலர்த்திய சேடியர்கள் கண்டுகளிக்குமாறு; பலவாபரணம்பூண்டு பன்னிரு நாமமும் வனமாலையும் பசுந்துளபமுமணியும் தற்பரனேபோல ஆரணவல்லி ஓர் ஆசனத்தில் வீற்றிருந்தனள்.

## அ-வது, கடாவிடைப்படலம்.

ஆரணவல்லியை ஆகமவல்லிநோக்கி, 'நீ நாராயணனே பரதத்வமெனவும் எவ்வுலகிற்கும் காரணமெனவும் ஈசனையும் படைத்த காவலனெனவும் பூரணனெனவும் சொல்லினை. இது மிகவும் புதுமையாக விருக்கிறதே' என்றனள். இதனைக்கேட்ட ஆரணவல்லி மகிழ்ந்து புன்முறுவல்கொண்டு அவளைநோக்கி 'நீ சிவனைப்பற்றிச் சில பொய்மை மொழிந்தனை; தேவர்கள் துதிக்கின்ற முகுந்தனது மிகுபுகழைச் செப்புதல் ஆயிரம் நாவுடைய அநந்தனுக்கு மரிதாமென்றால் நம்போல்வாருக்கு அவனது புகழ் எடுத்துரைப்பதற்கு எளிதாகுமோ? நீ சீரியதொன்றை யறிந்தாயில்லை; மாமேருவை நேரேகண்டறியாதவர் வேறோர் மலையைக்கண்டு வியந்துசொல்வது போல சிவனே பரம்பொருளென்று சொல்லினை; ஒவ்வொரு பூமியிலும் ஒவ்வோர்யுகத்திலும் ஒவ்வொரு நூல் விரிவாயிருக்கும்; இவ்வுண்மைகளையறியும் பேராற்றலில்லாதவர்க்குத் தாம் கண்டதொன்றே பெருமையாகத்தோற்றும்' என்றனள்.

ஆக'ம.—ஆரணவல்லி! நீ இங்ஙனஞ்சொல்வதென்ன? சைவவைணவமென்ற இரண்டு பெருஞ்சமயத்தைப்பற்றிப் பேசுகின்ற நூல்கள் இந்தப் பூமியில் இந்த யுகத்திலும் வழங்குகின்றனவன்றோ! அப்பெருநூல்களிலும், சமயங்களிலும் சொல்லப்படுகின்ற தெய்வங்களினியல்பை எடுத்துரைத்தால் அவற்றின் பெருமை சிறுமை நன்கு தெளியலாகும்.

ஆரண.—சந்திரன் போன்ற முகத்தையுடைய ஆகமவல்லி! இந்த நாடு திராவிடநாடென்பதை நன்கறிவாய். அதற்கேற்ப உங்கள் சமயநூல்களை உங்கள் முன்னோர்கள் ஒன்று நூறாக முத்தமிழாற்செய்தார்கள். ஆதலால் அவை எங்குந்தழைத்தோங்கலாயின. எங்கள் சமயத்திலும் மயர்வறமதிநலமரு

ளப்பெற்ற முதலாழ்வார் முதலானவர்கள் தண்டமிழ்ப் பாக்களாலுரைத்தவை சிலவுண்டு. அந்நூல்கள் வேதங்களை நன்காராய்ந்த அறிஞர்க்கன்றி ஏனையோர்கட்கு அவற்றினுட்பொருள் விளங்கமாட்டா. ஆதலால் அச்சுதனாகிய அமலன்பெருமை அறிதற்கரிதாயிருக்கும்.

ஆகம.—எங்கள் சமய நூல்களைப் பலர் செந்தமிழ்ப்பாவாற் செய்துள்ளாராதலால் அவை எங்கும்பரவி வழங்கலாயின என்றனை. அப்படியானால் இராமசரிதம், பாரதம் முதலிய நூல்களைப் பலர் செந்தமிழ்ப்பாக்களால் செய்திருக்கின்றனரே. அவற்றில் திருமாலின் திறமறியலாகாதோ?

ஆரண.—எங்கள் மாயனது அனந்தலீலையின் மகிமையால் தோன்றிய ஸ்ரீராமாயணம் பாரதம் முதலிய நூல்களைச் செந்தமிழாற் செய்தார்கள். அங்ஙனஞ்செய்த நூல்களில் முதனூலை நோக்க விஷயம் ஆயிரத்துள் ஒன்றுமில்லை. அதிலும் நீயறிந்து கொண்டது அற்பம்.

ஆகம.—(பொறுமைகொண்டு) தென்றமிழால் உங்கள் சமயநூல் சில மாத்திரமே இருக்கின்றன வென்றால் வேறெந்தப் பாஷையில் உங்கள் சமயம் மிகுதியாகச் சொல்லப்படுகிறது?

ஆரண.—நான்குவேதம் தைத்திரியம் பிருகதாரணியம் லிங்கம் சாரீரம் நாரசிங்கம் சதபதப்பிராமணம் காருடம் கல்பம் சாந்தோக்கியம் கடவல்லி முண்டகம் முற்கலோபநிடதம் பிரமவிந்து சுவாபனோபநிடதம் ஞானவற்கம் யாச்சவற்கம் மயித்திராவருணம் சிற்குணலயம் மந்திரோபநிடதம் மானதீபம் மகோபநிடதம் காலாக்கினி உருத்திரம் சாபாலம் நாரணம் சுவேதாச்சுவதரம் சுபாலம் பாரமாற்பம் அதருவசிரம் பிரம்மதேவனுரைத்த வேதாந்தம் முப்பத்திரண்டு வாசிஷ்டம் ஆரிதம் காசிபம் பரத்துவாசம் பராசரீயம் (என்றசாத்விக தருமசாஸ்திரம் ஆறும்) ஆனதாக்கியம் காத்தியாயனம் ஆத்திரேயம் மானவம் யாச்சவற்கம் வைஷ்ணவம் (என்ற இராஜஸ தருமநூல் ஆறும்) வாருகற்பத்தியம் சாம்வர்த்தம் ஔசனசம் சாத்தம் கோதமம் யாமிகம் (என்ற தாமஸதருமநூல் ஆறும்)

ஸ்கந்தம் ஆக்கினேயம் சைவம் கூர்மம் மச்சியம் இலிங்கம் (என்ற தாமஸபுராணம் ஆறும்) பாகவதம் பத்மம் வராகம் வைணவம் கருடம நாரதீயம் (என்ற சாத்விகபுராணம் ஆறும்) பிரமாண்டம் பிரமகைவர்த்தகம் மார்க்கண்டேயம் வாமனம் பிராமம் பௌடிகம் (என்ற இராஜஸபுராணம் ஆறும்)பார்க்கவம் சோமம் சாம்பம் வருணம் மானவம் காந்தம் வாயவியம் துருவாசம் நாரசிங்கம் பராசரம் மாரீசம் நாரதம் காபிலம் ஆதித்யம் கௌசிகம் வாசிட்டம் பிரமாண்டம் சிவதருமம் (என்ற உபபுராணம் பதினெட்டும்)

அங்கிராவியாதனர் கற்பாலனர் ஆபத்தம்பர் வருணனர் போதாயனர் சாபாலர் ஆர்தர் தாக்தர் சுமந்தமனர் சுபோதர் லோகாக்கியார் யாக்கிரபாதர் பிரமசம்பவர் ஜமதக்கினியார் காரிடினியாசினன் பௌடீனன் சரர் சாண்டில முனிவர் என்ற பதினெண்மர் உரைத்த பதினெட்டு ஸ்மிருதிகள், பரத்துவாசன் வாசிஷ்டன் பராசரன் சவுனகன் நாரணன் அகிர்ப்புத்தினிமுனி நாற்பத்தெண்ணாயிரம் மஹாரிஷிகளுள் எண்ணப்பட்ட அகஸ்தியர் இரணியகர்ப்பன் என்ற இவர்களால் சொல்லப்பட்ட சங்கிதைகள் பற்பம் பற்போற்பவம் வைபவம் புட்கரம் நாரதீயம் சனற்குமாரம் நளகூபரம் வாசிட்டம் சனகம் ஐந்திரம் சத்துவாக்கியம் திலகம் புவனமோசம் பரமம் மாயேச்சுரம் ஜயம் பவுரிடம் நூற்றெட்டு சங்கிதைகளையுடைய பாஞ்சராத்திரம் வைகானசம் வால்மீகர் செய்த இராமகாதை பாரதகாதையான பஞ்சமவேதம் பிரமதேவன் சிவன் என்ற இவ்விருவரும் ஆடிய பாதநூல் வாகடம் சோதிடம்,

வையாசிகம் காபிலம் கவுதமீயம் சைமினியம் பாணினீயம் கணதமுனிவரால் இயற்றப்பெற்ற ஆறுதரிசன நூல் யாதவம் மாயாவாதம் இரணியகெர்ப்பம் இராமாநுஜ தரிசனம் பார்க்காம் தத்துவவாதம் ஆறுசமயநூல் பௌத்தம் ஆருகதம் சார்வாகம் பாசுபதம் மற்றுளசமயநூல் என்ற இவைகளில் திருமாலின் பெருமை பேசப்படுகிறது. இரும்

யைக் காந்தம் பற்றுவதுபோல நெஞ்சில் நன்கு பதியபிறி தோர்பணியில்லாமற்கற்று மெய்ப்பொருளாராய்ந்து மாச்சர்யமற்ற பெரியோர்கட்கே ஸ்ரீய:பதியாகிய எம்பெருமானுடைய மகிமை புலனுகுமேயன்றி ஏனையோர்கட்கு அது விளங்குமாறெங்ஙனம்?

ஆகம.—(பற்கள் தெரியும்படி நகைத்து) நீ ஈண்டுக்கூறிய நூல்களில் திருமாலின் மகிமையன்றிச் செஞ்சடையினுன்றன் செவ்வியபுகழ்சொல்லப்படவில்லையோ?

ஆரண.—யான் ஈண்டுரைக்கப்பெற்றுள்ள அரிய பெரிய நூல்களில் திருமால் ஈசன் என்ற இவ்விருவரின் பெருமை சொல்லப் பெறுவதினுலன்றோ இவ்விருவருள் ஒருவர்க்கொருவரின் சிறுமை பெருமை கையிலங்கு நெல்லிக்கனிபோல நன்கறியப்படுகின்றன.

ஆகம—ஆரணவல்லி! அழகிதாகக்கூறினை. எங்களுடைய ஈசன் பெருமையைக்குறித்து, நான்மறை முப்பத்தாறு புராணம் முப்பத்திரண்டு வேதாந்தம் முப்பத்தாறு தரும சாஸ்திரம் சங்கிதைகள் காமிகம் யோகசம் அசிதம் தீத்தம் சூக்குமம் பிம்பம் சிந்தியம் விசயம் வீரம் கிரணம் சித்தம் வாதுளம் சுப்பிரபேதம் சந்திரஞானம் சகத்திரம் மகுடம் சந்தானம் பாரமேச்சுரம் விமலம் ஞானபுஞ்சம் நிச்சுவாசம் சாயம்பு அம்புரோற்கீதம் அஞ்சுமான் சர்வஉக்தம் அனலம் லளிதம் ரௌரவம் (என்ற ஆகமங்கள் இருபத்தெட்டும்) வீரமாயேச்சுரம் பரமாத்தம் சிவசாயுச்சம் மந்திரகோப்யம் அட்டோத்தரச்சதம் உருத்திரியம் அரிகரபாடணம் தத்துவசாரம் பரமமாரகச்சியம் பௌடிகம் சைவதன்மோத்தரம் சிவதருமம் பேதசைவ சித்தாந்தம் சொரூபப்பிரவேசம் வச்சிரசூசி என்ற நூல்களும் இன்னும் எண்ணிறந்த சாஸ்திரங்களும் விரிவாக எடுத்துரைக்கின்றன.

ஆரண—கயற்கண்நல்லாய்! ஈசனைப்பற்றி வேதசாஸ்திரபுராணங்கள் எடுத்துரைக்கின்றன என்று நீ உத்தரங்கூறினை. இவ்வுத்தரத்தினையுமெடுத்துக் களைவேன். நான் உனக்குத்தோல்வி

யடையேன். நிற்க; நீ இங்குரைத்த ஆகமங்களெல்லாம் வேதசாஸ்திர புராணங்கட்கு விரோதமில்லாதிருக்கிலன்றோ அவற்றைக்கொண்டு சிறந்த தத்துவத்தை நிரூபணஞ் செய்யலாம். சிற்றரசர் அமைச்சர் படைத்தலைவர் என்ற இவர்கள் ஒவ்வொருவரையும் உலகினர் நோக்கிப் பூமியை ஆளும் அதிகாரி என்று புகழ்ந்து, பின்னர் இவர்கட்கெல்லாம் தலைவனாயிருப்பானோர் அரசனுளன் என்றும் புகழ்வார்கள். அதுபோல வேதம், ஈசன் இந்திரன் முதலானவர்களைத் துதிக்கின்றபோது அவரவரைச் சிறந்தவர்களாகவே புகழ்ந்துரைக்கும். இங்ஙனம் சிறப்பித்துரைக்கின்ற வேதத்தை முன்பின் ஆராய்ந்து பார்த்தால் இந்த ஈசன் இந்திராதியர்க்கெல்லாம் இறைவன் நாராயணனென்று தெற்றென்றறியலாம்.

வேதத்தின் மெய்ப்பொருளறிய வேண்டுமேல் வேதவியாசரருளிய பிர்ம்மசூத்திரத்தைக் கருவியாகக்கொள்ள வேண்டும். புராண முதலியவைகளின் சிறந்தபொருளின்னதென்று ஆராயவேண்டுமானால் பேதவுணர்ச்சியின்றி வேதத்தைப் பின்பற்றவேண்டும். இவ்வாறின்றி வேதத்தில் முக்கண்ணனுடைய பெயர் வந்துளதென்று வல்வழக்கும் வாதும் செப்புதல் திறமையாக மாட்டா. சிறந்த சாஸ்திர புராணங்களை வேதத்திற்கேற்பப் பொருளுரைப்பதுதான் சால்புடைத்தாகும். சாஸ்திரம் வேதம் என்ற இவ்விரண்டும் உலகினர்க்கு இரண்டு கண்களாகும். இவ்விரண்டில் ஒன்றில்லாதார் மெய்ப்பொருளறியார். அஃதொன்றுமில்லாதவர் எதற்கும் பாத்திரராகார்; இவர்கள் குருடரென்றே மதிக்கப்படுவார்கள்.

---

## கூ-வது, அந்தணர் சந்நிதிப் படலம்.

இங்ஙனஞ்சொல்லக்கேட்ட ஆகமவல்லியானவள் உலகிற்கெல்லாம் ஒப்பற்ற பரம்பொருள் திருவாதிரையானாகிய சிவபெருமானாகுக; திருவோணத்தானாகிய திருமாலாகுக; இங்கு வேதசாஸ்திர புராணங்களை விளக்கியுரைத்தால் இவ்விருவருள் இன்னவனே பரம்பொருளாவானென்பதைக் காண்போமென்றனள். இதனைக்கேட்ட ஆரணவல்லியானவள் தனக்குள் கருதலாயினள்.—'நிரம்பிய கல்வியறிவுடையவளாகிய இவளிடத்தில் எதனையுஞ் சொல்லத்தகும்; சொல்லப்பட்ட தக்க உத்தரங்களை ஒப்புக்கொள்ள வல்லளுமிவளே' என்று மகிழ்ச்சியுற்றிருந்தாள்.

இங்ஙனம் இவ்விரண்டு மாதரும் ஒருவரோடொருவர் உரையாடிக்கொண்டிருந்தகாலத்தில் ஆரணிநதியில் நீராடித் தத்தமநுஷ்டானங்களைக் குறைவறச் செய்துமுடித்துக்கொண்டு பூமியில் வேதமே அநேக வடிவுடன் உலாவுவனபோல வருகிற புண்ட்ரம் தரித்தவரும், அழகிய வடிவினரும், உடையைத் தலையிற்சுற்றிப் போர்த்துக்கொண்டவரும், காஷாயவுடையினரும், கிருஷ்ணாஜினத்தை (மான்தோலை)யுடைய பற்றற்ற யோகியரும் ஏகதண்ட சன்னியாசிகளும், முக்கோற்பகவரும் ஒருபுறம் விளங்கினர்.

மற்றோர்புடையில் கவித்த குடையினரும், கமண்டலத்தையுடையவரும், மூங்கில்தண்டையேந்தியவரும், தருப்பைப்பவித்திரத்தையும் சமித்தையுங்கொண்ட கையினரும், தவத்தொழிலல்லது மற்றொன்றைச் செய்தற்கு மனக்களிப்பில்லா அந்தணரும் குழுமிவிளங்கினர். இன்னுமோரிடத்தில் தோளில் சங்குசக்கரங்களை யணிந்துகொண்டவரும், வனமாலை தரித்த ஸ்ரீதரனது பன்னிருநாமக் குறியுடையவரும், திருமால் திருவடியல்லது மற்றொன்றை வியவாதவரும், யோகியரும், பாகவதரும்கூடித் திகழ்ந்தனர்.

வேறோர்புறத்தில் விபூதியினால் திரிபுண்ட்ரமணிந்தவரும், மார்பில் பூணூலணிந்தவரும், சோதிபோல் விளங்குகின்ற சடையினரும், வேதபுராணத்தாகமநூல்களின் விரிவெல்லாம் நன்கு பயின்ற

பாசுபதத்தினரும் நிறைந்திருந்தனர். பலர் ஸர்வாதாரபூதனுய் விளங்குகின்ற திருநாராயணன் திருவடியைத் தொழுதற்குச் செல்பவர் வேதபுராணங்களின் பொருள்களைக்கேட்பதற்கு வேதாரண்யத்தையடைந்தனர். அப்பொழுது ஆரணவல்லி ஆகமவல்லி என்ற இவ்விருவரும் சென்றஞ்சலி செய்தார்கள். இங்ஙனம் அஞ்சலி செய்த அவ்விருவரையும் ஆங்குள்ள பெரியார்கள் அருள்செய்து 'நீங்கள் இருவீரும் என்ன சொல்கின்றீர்? வேதபுராணஙகளில் உங்கட்கு நேர்ந்த வழக்கென்ன? என்று வினவியபோது அவர்கள் கூறத்தொடங்கினுர்கள்.—

"அளிவற்ற ஞானசம்பத்தையுடையவர்களே! நாங்கள் இருபேரும் எங்களுடைய புல்லிய அறிவால் சங்கரனையும் திருமாலையும் புகழ்கின்றேம். வல்லுநர்களாகிய நீங்கள் இந்தச் சோலையிடத்துச் சிறிதுபோது வசித்து நாங்கள் கூறுமவைகளுள் நல்லது இன்னதென்றும் தீயதின்னதென்றும் மதித்து மகிழ்வுற்றுச் செல்வீராக" என்று இவ்விருவரும் பணிந்து நின்றனர். அப்போது தவவேதியரனைவரும் இப்பெண்களின் கொள்கைக்கு வியந்து அவர்களோடு அச்சோலையின்கண்ணிருந்தனர்.

---

ஸ்ரீ:

# உ-வது, பூர்வகாண்டம்.

## க-வது, உலகவழக்கப்படலம்.

## முதலாவது,

### அறுபத்துமூவர் பரிச்சேதம்.

---

ஆகமவல்லியானவள் ஆரணவல்லியை நோக்கி, அணங்கே! தெள்ளிய அறிவுடையார்க்கு எங்கள் சைவசமயத்தின் பெருமையை நூலான் எடுத்தியமப வேண்டுமோ? ஈசன் திருவடியை இடைவிடாது போற்றிய அறுபத்துமூன்று நாயன்மார்கள் சிறந்த பதங்களைப் பெற்றுய்ந்ததும், தெய்விகமும் உலகறியக் கலியுக திருஷ்டாந்தமாகக் காணலாமன்றோ!

இதனைக்கேட்ட ஆரணவல்லி ஆகமவல்லியைப் பார்த்து, நாயன்மார்கள் பதவிபெறறுய்ந்ததும் தெய்விகமும் என்ற இவற்றை மேற்கொண்டு ஆலாலகண்டனுக்கு ஏற்றஞ்சொல்லத் துணிகின்றாய்; தேவர்களுங்கூட தம்மை வழிபட்டவர்கட்குப் பதவியையும் பலனையுங் கொடுப்பதற்குச் சக்தியுடையவர்களாயிருக்கின்றார்கள், இதனால் அவர்கட்கோர் வற்றஞ்சொல்லிவிடலாயா? தெய்விகமும் அவரவர்சமயந்தோறும் திருஷ்டாந்தமாய் உலகிற் சிறப்புடன் விளங்காதிருக்கின்றதோ?

---

இவை ஒருபுறமிருக்க; அரிசமயத்தாழ்வார் பதின்மரும், எழுநூற்றெழுபது தத்வவாதியரும் முக்திப்பேறெய்தி மகிழ்ந்தனரன்றே. ஆராய்ந்துபார்ப்போமாகில் சங்கரன் முதலான தேவர்கள் மனமகிழ்ந்தீயும் பதவிகட்கும், கூராழிப்படையேந்திய செங்கண்மால் உதவும் பதத்திற்கும் எத்துணையோ பேதமுண்டென்பது தெற்றென்றறியலாகும். இன்னும் இதுவிஷயத்தை எடுத்துரைக்கிற்பெருகும். வெங்காள விஷமுண்டகண்டன், வெண்ணெயுண்டானுடைய சீலமிகுசிறப்பினை எடுத்தியம்பினன். அந்தச்சிரீதரனது பெயர் விளங்கப்பெற்ற வேதநூலோடு சாஸ்திரங்களென்னும்பாலிருக்க நீரருந்துவதுபோல நீ உலகவழக்கையே மிகவும் பாராட்டிப்

பேசுகின்றாய்; அது சிறந்த அறிவினையுடைய பெரியோரது திருவுள்ளத்திற்குப் பொருத்தமாகுமோ? என்றியம்பினள்.

---

## உ-வது, சிற்பசாஸ்திரப் பரிச்சேதம். *

ஆகமவல்லியானவள் சொல்லத்தொடங்கினள்.— ஆரணவல்லி! கையிலிருக்கின்ற பொருளைக்காணுவதற்குக்கண்ணாடிவேண்டுமோ? ஆலயங்கள்தோறும் பிர்ம்மஸ்தானத்தில் வாழ்வான் இடபவாகனாகிய ஈசனோ? கருடவாகனாகிய திருமாலோ? கங்கைசேர் செஞ்சடையினனாகிய எங்கள் சிவபெருமான் கோயில் கிழக்குத் திசையிலுள்ளது. மாயனாகிய திருமாலே பரிவாரதெய்வமாக விளங்குகிறான். இதனால் சிவபெருமானுக்கும் சீதரனுக்குமுள்ள பெருமை சிறுமை தெளிவாகுமன்றோ.

இதனைக்கேட்ட ஆரணவல்லி சொல்வாள்.— நீ விரிவாயும் பழமையாயுமுள்ள சிற்பநூலில் துணிபொருள் உணர்ந்திலைபோலும். அந்தச் சிற்பநூல் (1) விச்சுவதருமம் (2) விச்சுவேசம் (3) விச்சுவசாரம் (4) தாவட்டம் (5) நளம் (6) மயம் (7) அநுமான் (8) வித்துப்பானு (9) மானகற்பாரியம் (10) சிருட்டம் (11) மானசாரம் (12) வித்துவித்தியாபதி (13) பராசரீயம் (14) மாரிடகம் (15) சமித்தக்கம் (16) வரத்துப்போதம் (17) வித்தாரம் (18) ஐந்திரம் (19) மால்வச்சிரம் (20) சௌமம் (21) விச்சுவகாசிபம் (22) பகதந்திரம் (23) விசாலம் (24) சித்திரம் (25) காபிலம் (26) காலயூபம் (27) நாமசங்கிதை (28) சாத்திகம் (29) விச்சுவபோதம் (30) ஆதிசாரம் (31) வெகுச்சுருதம் (32) மானபோதம் என்ற முப்பத்திரண்டு வகையினதாகத் திகழ்கிறது.

இந்தச் சிற்பநூல்கள், ஒவ்வோரூர்க்கும் நடுநாயகமாக விளங்குகின்ற பிர்ம்மஸ்தானத்தில் செங்கண்மாலைப் பிரதிஷ்டித்து, மற்ற தேவதைகளைத் திக்குத்தெய்வங்களாக ஊர்ப்புறத்துப் பிரதிஷ்டை

---

* இந்தச் சிற்பசாஸ்திரப் பரிச்சேதத்திலுள்ள சில செய்யுட்கள் மொழிபெயர்க்காமல் விடப்பட்டன. பின்னர் அநுபந்தத்தில் இவற்றினுண்பொருள்கள் விளக்கப்பெறும்.

செய்யவேண்டுமென்றும் விதித்தன. மேலும், சிவலிங்கமும் உத்தமமான ஸ்தானத்தில் பிரதிஷ்டிக்கவேண்டுமென்று விதிக்கவில்லை.

இன்னும் பசுந்துளவத்தாராகிய திருமாலின் கெர்ப்பகிரகத்தின் இயல்பினைக் கேட்பாயாக. இந்தப் பீதகவாடைப்பிரானாகிய எம்பெருமான் * பஞ்சபேர ஸ்வரூபமாகிப் பிர்ம்மஸ்தானத்தில் விளங்குகிறகாலத்தில் உங்கள் சிவபிரானாகிய பேரத்தில் (விக்ரஹத்தில்) செய்த பூஜையானது கர்த்தாவாய் விளங்குகிற திருமாலின் விக்ரஹத்தைச்சார்ந்து ஒன்று பலவாய்ப்பெருகும். ஒரு நகரத்தில் நடுவான ஸ்தானத்திற் பிரதிஷ்டிக்கப்படுகின்ற திருமாலே எல்லாத் தெய்வங்கட்கும் அதிபதியாவானென்பது தெளிவன்றோ!

சாத்விகராஜஸதாமஸ குணங்களோடு கூடிநின்று பாலன சிருஷ்டி சங்காரகாரியங்களைச்செய்கிற திருமாலின் பிரதிஷ்டாஸ்தானமும், கெர்ப்ப க்ருஹத்தினியல்பும் பிராமியமென்ற சிற்பநூலில் பல சூத்திரங்களான் விரித்துரைக்கப்பட்டிருக்கின்றனவன்றோ! மேலும், இந்நூலில் நாராயணனைப் பெரியபிராட்டியாரோடு பிர்ம்மஸ்தானத்தில் பிரதிஷ்டிக்கும்படி விதித்துளது.

ஆகமவல்லி! உங்கள் மாதுறைபாகனாகிய சிவன் சிற்பவாக்கால் நான் திருமாலின் ஆலயத்தில் பரிவாரதெய்வமாக விளங்கத்தக்கவன்; இந்திரன் கணபதி சுப்ரமண்யன் என்பவர்கள் துவாரங்களைக் காவல்புரியத்தக்கவர்கள் என்றுரைத்தனன்றே. இங்ஙனம் சிவன் மொழிந்ததுபோல எங்கள் செங்கண்மால் சிவன் ஆலயத்தின் திக்குத்தெய்வமாக விளங்கத்தக்கவன் என்று பகர்ந்ததுண்டோ?

பராமியம் என்ற சிற்பநூலில் ஐந்தாம் அத்யாயத்தில் ஸர்வாதாரபூதனாய் விளங்குகின்ற திருமாலிற்குச் சிவனும் பிர்ம்மனும் கின்னரரும் கிம்புருடரும் கெருடரும் கந்தர்வரும் கேசரரும் நாகரும் தும்புருநாரதரும் என்ற இவர்களெல்லாம் பரிவாரதெய்வங்களாம் என்ற விவரம் சொல்லப்பட்டுளது. சக்கரப்படையினனாகிய திருமாலையல்லாத் தேவர்களெல்லாம் தத்தம் ஆலயத்திலன்றி மற்றவிடங்களிலிருக்கும்போது வேண்டியிரந்தாருக்குச்செல்வப்பேற்றையளித்தற்குச் சக்தியற்றவராவார்கள். வேதாந்தப்பொருளாய் விளங்

---

* பஞ்சபேரர்கள்.— மூலபேரர், உற்சவபேரர், நித்யோற்சவபேரர், யாகபேரர், ஸ்நபனபேரர் என்பன.

குகின்ற செங்கண்மால் எந்தத் தேவாலயங்களிலிருந்தானேனும் வேண்டியிரந்தார்க்கு மிக்க பெருஞ்செல்வத்தை நல்குவானென்று பாராசர சிற்பநூல் கூறுகின்றது.

மேலும், இந்தப் பராசரம் என்ற நூல், சிவன் வீரபத்திர தேவன் தக்ஷிணாமூர்த்தி என்ற தேவர்களெல்லாம் திருமாலுக்குப் பரிவாரங்களாவார்களென்று பகராநிற்கும். இது, உங்களுடைய கொள்கைக்கு மாறுபட்டதாயிருக்கின்றதென்று ப்ரமாணமாகாதென்று தள்ளிவிடலாமோ? சங்கீரணம் என்ற சிற்பநூலில் வேத பாஹ்யர்களாகிய ஜைனன் புத்தன் என்பவர்களின் ஆலயங்களின் இலக்கணமும் உரைக்கப்படுகின்றது. இங்ஙனமுரைக்கின்ற இந் நூலும் கேசவனுடைய பெருமையை நன்கெடுத்துக்கூறும். மற்றுள்ள நூல்களும், திருநாராயணனது ஆலயத்தின் விசேஷங் களின்னவென்றும், அவனே மற்றுள்ள தெய்வங்கட்கும் காரண பூதனுவானென்றும், மற்றத் தெய்வங்கள் பரிவாரங்களென்றும் எடுத்தோதுகின்றன

இதுநிற்க; மாயனாகிய திருமாலின் தசாவதாரமூர்த்திகளையும் ஆலயங்களில் மிகவும் பரிவுடன் அர்ச்சிப்பார்கள். சிவன் பிர்ம்ம தேவன் முதலானவர்கள் தாமஸராஜஸகுணமுடையவர்களாதலால் பலவிடங்களிலும் விரும்பிப் பிரதிஷ்டை செய்யமாட்டார்கள். செங் கண்மாலின் ஆலயங்களில் சிவன் பரிவார தெய்வமாகப் பிரதிஷ்டிக் கத்தக்கவனென்பதற்குத் திருஷ்டாந்தமாகத் திருக்குறுங்குடி யிலும், திருவெள்ளறையிலும், அரிவாசபுரத்திலும் கண்கூடாகக் காணலாம். பிராமியம் என்ற சிற்பநூல் செங்கண்மாலே எல் லோர்க்குமிறைவனென்றும் இவன்றனக்கோர் நாதனிலனென்றும் செப்பாநிற்கும் மானோபகரணத்தில் காலபேதமெடுத்துரைக்கின்ற விடத்தில் பிரமதேவனேடு அரனையும் படைத்தவன் அரவணை யானாகிய எம்பெருமானென்று குறிப்பிடப்பெற்றுளது. இதனை, * கேசவநாம வ்யாக்யானத்தினால் நன்கறியலாம்.

---

* கா + ஈச: = கேச:. கா என்றபெயர் பிர்ம்மாவையும் ஈச: என்றபெயர் சிவனையுங்குறிப்பிடும். இவ்விருவரும் திருமாலின் அங்கத்தினின்று தோன் றினார்களாதலால் அந்தத் திருமாலிற்குக் கேசவனென்று பெயர் வழங்கலா யிற்று.

## உ-வது, வராகாவதாரப்படலம்.

### க-வது. திருவாழிமலை யென்கிற திருவண்ணமலைப்பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணவல்லியானவள் எடுத்தியம்பியதைக்கேட்ட ஆகமவல்லியானவள் நகைத்து நீ இங்ஙனமெடுத்தியம்பிய சிற்ப நூல் ஒருபுறமிருக்க யானைத்தோலையுடுத்தவனாகிய அரன் முடிதனைப் பிரமதேவன் தேடிச்செல்ல அப்பொழுது உங்களுடைய திருமால் அன்னவனது இரண்டு பாதங்களைத் தேடுவதற்காகப் பன்றியாய்த் தோன்றினனன்றோ என்றனள் இதனைக்கேட்ட ஆரணவல்லியானவள் சொல்லத்தொடங்கினள்.—

மின்னே! நீ இங்குரைத்தது வேதத்தோடு முரண்பட்டாத புராணத்தொன்றிலும் ஓதவில்லை. ஆதலால் இது உறுதியாமோ? இனி உன் மனமினையுமாறு சொல்லுகிறேன் கேட்பாயாக.— நாராயணன் பாரளந்தருளுகிறகாலத்தில் மாமேரும் கைலையும் சிவனும் மற்றுள புவியுமெல்லாம் அவன் திருவடியி லகப்படாதொழிந்தனவோ! இதுவுமல்லாமல் வேதத்தாற் புகழப்படுகின்ற திருமால் அனைத்தையு முண்டருள்கிறகாலத்தில் நாரியோர் பாகனாகிய சிவன் அவன் வயிற்றைவிட்டு நழுவினனோ?

அன்னமென்னடைபாய்! இஃதோர்புறமிருக்க; எசுச்சாகை ஆதிபருச்சத்திற் பொருந்திய மூன்றனுவாகங்களிலும், வேறு பலவிடங்களிலும் பூமியைத் தாங்குவதற்காகவே திருமால் வராகரூபியாய் அவதரித்தானென்றுரைக்கப்பட்டுளது. திருமால் வராகரூபியாதற்கேது இஃதன்றி வேறில்லை யென்ற வேதத்திற்கு மாறுபாடாகத்தாமதபுராணங்கூறும். இந்தத் தாமதபுராணத்தியற்கையைப் பின்னர்க் கூறுகிறேன்.

---

### உ-வது, மோகினிவேடமென்கிற நாய்ச்சியார் திருக்கோலப் பரிச்சேதம்.

இதனைக்கேட்ட ஆகமவல்லியானவள், ஆரணவல்லி! ஆதிநாராயணன் பூமியைத்தாங்க வராகரூபியாயவதரித்தானென்று விடையளித்தாய். அந்தத் திருமால் சிவபிரானுக்குத் தேவியாகிக் காதலுற்று அவன்பின் சென்றதற்குக்காரணம் யாது? கட்டுரைப்பாய்

இன்னும் பலதலையினையுடைய அரவரசிற்பள்ளிகொள்ளும் கொண்டல்வண்ணனாகிய திருமால் மோகினி வடிவாகி மான்மழுவேந்திய அரனுடன்கூடி ஐயனாரைப்பெற்றனனென்பதற்கு ஐயமுண்டோ? கூர்மபுராணத்தில் முப்பத்தெட்டாமத்தியாயத்தில் நாராயணன் ஓர் பெண்ணாகவும், சிவன் புருஷனாகவும் தாருகாவனத்திற் சஞ்சரித்தாரென் றுரைத்தது பொய்யோ? என்றனள்.

இவ்வுரையினைக்கேட்ட ஆரணவல்லி புன்முறுவல்கொண்டு ஆகமவல்லியை நோக்கி, நீ இங்குரைத்தவைக்கெல்லாம் தக்கவாறு தப்பாது தெளிவாக உத்தரஞ்சொல்கிறேன்.— கொன்றையணி செஞ்சடையனாகிய சங்கரன் வைகுந்தத்தையடைந்து துளபநறு மாலையணிந்த எம்பெருமானைக் கண்டபோது 'எந்தாய்! இன்றுபோல் என்றுமுள்ளாய்! தேவர்கட்கு அமிர்தமளித்தபோது பெண்ணுருக்கொண்டனையே; அவ்வுருவினைக்காண என் மனம் விரும்புகின்றது; என்றனன். இதனைக்கேட்ட திருமால், 'செஞ்சடையினாய்! நீ அக்காலத்தில் யான் கொண்ட பெண்ணுருவைக்காண விழைகின்றனையே; அவ்வுருவினை நீ இப்பொழுது காணுவையேல் மனப்பற்றுடையவனாய் மாயைவலையுட்படுவாய்; என்றனன். இதனைக்கேட்ட சிவன் மீண்டும் சொல்லலுற்றான்.—

யானைக்கஞ்சலென்றருளிய ஆழிப்படையினாய்! நீ செய்யும் மாயையில் யான் அகப்படமாட்டேன்; என்றான். இதனைக்கேட்ட எம்பிரான் புன்முறுவல்கொண்டு குளிர்ந்த சந்தனச்சோலையும் வாவியும் பொன்னூஞ்சலுமுடைய ஓர் சூழலில் அழகிய பெண்வடிவினனாய்த் திகழ்ந்தனன். பொன்னூசலில் அவ்வுருவினைக்கண்ட சிவன் காமமுற்றுத் தன் வாமபாகத்திலுள்ள உமையும், சென்னியில் (தலையில்) இருக்கின்ற கங்கையும் சிரிப்பார்கள் என்பதையும் நோக்காது, பரிமளமுள்ள புதுமலரில் மன்னும் வண்டுபோல மோகினியின் வடிவினைத்தழுவ மேலவிழத்தொடங்கினான். அப்பொழுது மோகினி தன் வடிவினைத்தொடுவானென்றுகருதி பொன்னூஞ்சலிலிருந்திழிந்து ஓட, விடையினானும் (இடபவாகனத்தையுடையவனும்) கானலைப்புனலென்று தொடர்ந்துசெல்பவர்போலக் காடுகளையும் ஆறுகளையுங்கடந்து இளைப்புற்று நடந்தோடி மோகினியைக்

கிட்டியவளவிலே திருமால் தன்னுருவுடன் விளங்கினன். அப்பொழுது சிவன் 'இவனது மாயைவலையுளகப்பட்டோம்' என்று தனக்குட்கருதி நாணமுற்றனன். இவ்வரலாற்றினைப் பாகவதம் எட்டாவது ஸ்கந்தம் நன்கெடுத்தியம்பும்.

இன்னும் இவ்வரலாற்றினை இதுபோலவே பல புராணங்களும் கூறுநின்றன. பக்தியினால் துதிசெய்தாரை வாழ்விக்கும் ஐந்து முகத்தையுடையவனாகிய சிவன் மோகினியைக்கண்டு காதலுற்றதனால் கால்வழியே சோர்ந்த இந்திரியவுற்பத்தியின் காரணத்தால் நீ முன்னுரைத்த ஐயனாரென்பவன் தோன்றினான்.

ஆனால் உலகத்தில் புதல்வருற்பத்தியென்பது ஆண்பெண்களின் மெய்க்கலவியின் சக்தியினாலாவதேயன்றி மற்றோர்வகையாலாவதுண்டோ? என்று வினவுவையேல் அதற்கும் விடை தருகிறேன்.— சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்ம்மதேவன் ஒருகாலத்தில் ஒப்பற்ற அழகினையுடைய திலோத்தமை யென்ற மாதுசிரோமணியைப் படைத்தனன். அவளது பேரழகைக்கண்டவுடனே பிர்ம்மதேவனுடைய வுணர்வு தன்வசமின்றி யொழிந்தது. அதனால் அவனது இந்திரியம் வீழ, அதற்கவன் நாணமுற்று அதனைத் தன்னகத்தால் அறுபதிற்றாயிரங் கூறுசெய்தான். பின்னர் அத்துளிகளினின்றும் வாலகில்லியர் என்பவர் தோன்றினர். இஃதன்றி, அகஸ்தியர் வசிஷ்டர் என்ற மஹரிஷிகளும் புருஷவிந்துவினால் தோன்றினார்களென்பது ஐந்தாம் வேதமாகிய பாரதத்திற்கண்டறிந்ததொன்றே. அதுபோல ஐயனாரும் உங்களுடைய சிவனிடத்தினின்றும் தோன்றினனென்றறியத்தக்கது.

---

## ௩-வது, பலமுனிவர் சாபப்படலம்.

### ௧-வது, தாருகாவன சாபப்பரிச்சேதம்.

ஆகமவல்லி! இவையெல்லாம் ஒருபுறமிருக்க, இன்னுஞ்சொல்லக்கேட்பாயாக.—தாருகாவனத்தில் சங்கரன் புருஷனாகவும் திருமால் பெண்ணாகவும் இங்கிதம்பெற மருவி உலாவித்திரிந்தனர் என்று புகர்ந்தாய். இதற்கும் தக்கவாறுத்தரந்தருகிறேன்.— தாருகாவனத்திலுறையும் முனிவர்களின் வைராக்யநிலைமையை ஆராய்

உலககாரணனுமாயோங்குபல்லுயிர்களுக்குயிருயாவான்
இலகுபாதங்கள்கண்வதனமென்பவைகளாயிரமதானன்
அலகிலாநாரணப்பெயரிஞனென்றுபண்பாலுரைத்தான்
புலமைகூர்மாதவத்தலைவரும்தெளியவப்போதறிந்தார்.

உலககாரணனும், எல்லாவுயிர்கட்கும் உயிராய் விளங்குகின்றவனும், ஆயிரப்பாதம் ஆயிரங்கண் ஆயிரமுகங்களையுடையவனும், நாராயணனென்ற பெயரையுடையவனுமாகிய பரவஸ்துவே அங்கு அழகிய பெண்வடிவந்தாங்கி வந்தனன் என்றான். இதனைக்கேட்ட முனிவார்கள் தமக்குள்ள ஐயப்பாடு நீங்கி நன்கு தெரிந்துகொண்டார்கள். ஆகமமடந்தாய்! இவ்வளவே தாருகாவனத்தில் நிகழ்ந்த செய்திகளாம். இதனல் முனிவரர்கள் செங்கண்மாலே பரனெனத் தெளிந்ததும், சிவன் அங்குச் சாபமெய்திநின்றதுமறியத்தக்கன. இங்ஙனம் யானுரைத்தவையெல்லாம், முன்னர் நீயுரைத்த கூர்ம புராணத்தில் முப்பத்தெட்டாம் அத்யாயத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளன.

மேலும், ஆரணையினனாகிய ஹரியே புருஷோத்தமனாவான்; மற்றவரெல்லாம் பெண்கட்கொப்பாவார்களென்ற விவரம், பதும புராணத்திலும் வராகபுராணத்திலும் பாரதத்திலுங் குறிப்பிடப்பட்டுளது; என்றாள். இவ்வுரையினைக்கேட்டு ஆகமவல்லியும் உரைக்கத் தொடங்கினள்.

---

உ-வது தன்வினை தன்னைச்சூழ்ந்த பிருகுசாபப் பரிச்சேதம்.

ஆரணவல்லி! சிஷ்டர்கள் தியானிக்கின்ற சிரீதரனை புருஷோத்தமனென்னும், உமாபதியாகிய சிவன் சாபசம்பந்தமுடையவனென்றங் கூறினய். தபசிரேஷ்டனாகிய பிருகுமுனிவரிட்ட சாபத்தினலன்றோ திருமால் பல அவதாரங்களெடுத்தனன்; இஃதல்லாமலும் கண்ணுவகவுசிகனென்பவன், ‘யதுகுலத்தினர்கள் யானைகளாகிடுக’ என்று சபித்தபோது உங்கள் செங்கண்மால் மாத்திரம் அந்தச் சாபவசப்படாமல் தப்பினனோ? மடந்தாய்! நீ இவ்விஷயத்தை மறைத்தாலும் இவ்விஷயம் கடலாற்சூழப்பெற்ற மண்ணுலகிலும், விண்ணுலகிலும் மறையுமோ? என்றாள். இதனைக்கேட்ட

ஆரணவல்லி புன்முறுவல்கொண்டு சொல்லலுற்றாள்.— அணங்கே! உங்கள் சிவனைப்பற்றிய சாபம் யான் முன்னுரைத்தமாத்திரமுண்டென்று கருதற்க; இன்னும் எத்தனையோ சாபங்கள் உள்ளன. அவையெல்லாம் பின்னர் விரிவாக எடுத்தியம்புகிறேன்; நீ இப்பொழுது கேட்ட கேள்விக்கே ஈண்டு விடையளிக்கிறேன்.—

பதினான்கு உலகிலும் பரமவைகுந்தம் பருதிவைகுந்தமென பல்வேறுவகை வைகுந்தமுண்டு. அவ்வவ்வுலகத்திலும் மாயனாகிய ஒருவனே தன்னபாரகருணையால் பலவுருக்கொண்டு உலகினைக் காக்கின்றனன். அத்தகைய பரப்பரனே மீனுருமுதல் பலவுருவுடன்தோன்றினன். இங்ஙனம் பலவவதாரங்களெடுத்த எம்பிரான் ஸர்வஸம்ரக்ஷணஞ்செய்யத் திருவுள்ளம்பற்றி அவுணர் களைகட்ட சக்கரப்படையை அவர்கள்மீது விடுத்தனன். அவுணர்கள் அப்படைக்கஞ்சி, பிருகுமுனிவரின் மனைவியின்பாற் சென்று அடைக்கலம் புகுந்தனர். அப்பொழுது அந்தச் சக்கரப்படை அவுணர்கட்கு அடைக்கலந்தந்த பிருகுவின் மனைவியையும், அவுணர்களையும் அதஞ்செய்தது.

அதன்பிறகு ஞானமுடைய பிருகுமுனிவர் தம் பத்தினி மரித்துக்கிடத்தலைக்கண்டு மனம் பொறாமல் ஞானமற்றவராய், 'என் பத்தினியைக்கொன்ற மாயன் உலகிற் பிறந்து வருந்தக்கடவன்' என்று சபித்தனர். இங்ஙனமிட்ட சாபமானது, சூரியன்மேற்பட்ட தூசிபோலத் திருமாலைக்கிட்டுதற்கஞ்சி முனிவரையே சூழ்ந்துகொண்டது. அப்பொழுது முனிவர் இன்னது செய்வது தவிர்வதென்பது தெரியாது அலமலருற்றனர். இவரது நிலைமையைப் பிர்ம்மதேவனுக்கொப்பாராகிய * சப்தரிஷிகளுங்கண்டு, 'இவ்வினையெல்லாம் தண்டுழாய்மாலையணிமார்பனாகிய ஸர்வேசுவரனால் வந்தனவாம்' என்று அவனையே தியானித்துக்கொண்டு பிருகுவுக்கருள் புரிந்தனர். இங்ஙனமருள்புரிந்த அவ்விருடிகளின் அடிகளைப் பிருகுமுனிவர் பணிந்து, 'அடியேனது அஞ்ஞானமாகிய இருளொழிந்

* சப்தரிஷி—அகஸ[illegible]யர் ஆங்கிரசர் கௌதமர் காசியர் புலஸ்தியர் மார்க்கண்டேயர் வசிஷ்டர்.

திடத் தேவரீர் எழுந்தருளினீர்கள்; இனி என் இதயத்தில் சிறந்த ஞானம் பொருந்திட வரந்தருதற்கு அநுமதி செய்தருண்மின்' என்றனர். அப்பொழுது அவ்விருடிகளுஞ் சொல்லத்தொடங்கினர்கள்.—

முனிவரரே! வருந்தன்மின்; நான்முகனும் சிவனும் புகழ்கின்ற நாராயணன் திருவருள் புரிந்திடுவான் என்றுரைத்துத் தங்கள் ஆச்சிரமம் சென்றனர். பின்னர் பிருகுமுனிவர் திருநாராயணனது திருத்தாள்மலரைத் தம்மிதயத்திருத்தித் தியானஞ்செய்தனர். அவ்விறைவனும் இவரது தியானத்திற்கிரங்கி, இவரெதிரில் ப்ரசன்னமாயினன். அப்பொழுது முனிவர் அவ்வேதனையகனைத்தொழுது, 'தேவரீருடைய அரிதற்கரிய பெருமையையறியாது துர்ப்புத்தியால் பிழை செய்தேன்; அதனுன் விளைந்த துன்பமெல்லாமொழிய சிறந்த வரந்தந்தருளவேண்டும்' என்று வேண்டினர். அஞ்ஞான்று உபநிடதப்பொருளை முழுதுமுணர்ந்தவராலு மறிதற்கரிய அவ்வரியானவர் புன்முறுவல்கொண்டு, 'முனிவ! அன்பருக்கிடுக்கண்செய்கின்ற அசுரவர்க்கங்களை வேரோடு களையெடுப்பதற்கு நம்மிச்சையால் மனிதலோகத்தில் அவதரிக்கச்சங்கற்பித்துள்ளோம்; அதனால் பரமபக்தரில் ஒருவனாக விளங்குகின்ற உனது சாபத்தையும் உண்மையாக்குவோம்; இனி, உன்னைச் சூழ்ந்துகொண்ட சாபமும் துயர் செய்யாது' என்றுரைத்து மறைந்தருளினர்.

மின்னிடையினையுடைய ஆகமமடந்தாய்! இவ்விஷயம் வால்மீகி பகவானால் இயற்றப்பெற்ற உத்தரராமாயணத்தில் குறிப்பிடப்பெற்றுளது. பிருகுமஹரிஷிக்குத் தந்த வரத்தின்படியே பரப்பரனாகிய ஸர்வேசுவரன் பூமியிலவதரித்து அஞ்ஞானபாவனைசெய்து திரிந்தனன். எம்பிரான் இராகவனையும் கண்ணபிரானையும் வந்தவதரித்தகாலத்தில் தன் தாய்தந்தையர் சொல்லைத் தலைமேற்கொண்டு காட்டிற் சஞ்சரித்தும், உரலிடைப்பிணியுண்டுகண்பிசைந்தும், இடையரோடு கூடி பசுமேய்த்தும், தன் தாய்முன் எல்லா வுலகங்களும் § வாயுளேகாணுமாறழுதும், அவ்வளவிலே ஓர் மாயை

§ 'வையமேழுங்கண்டாள்பிள்ளைவாயுளே' பெரியாழ்வார் திருமொழி)

செய்து வெண்ணெய்க்கு நின்றுடியும் இவ்வாறு அவன் செய்த வெகு விநோத பாவனைகளுக்கோர் எல்லையுண்டோ?

---

௩-வது, கண்ணுவகவுசிகச் சாபப்பரிச்சேதம்.

மான்போன்ற விழியினையுடையாய்! இவையெல்லாம் ஒருபுற புறமிருக்க; இன்னுஞ்சொல்வேன் கேட்பாயாக. கண்ணுவகவுசிகன் என்பான் 'யானைகளாகிடுக' என்று யாதவகுலத்தினரை நோக்கி யிட்ட சாபத்தால் எங்கள் மாதவனும் உடலழிந்தானென்றுரைத் தனை. எங்கள் இறைவனை * அநந்தனென்றும் ‡ அச்சுதனென்றும் வேதமும் வேதாந்தமும் உரைத்திருக்க, அதற்கு விரோதமாக அவன் மரித்தனன் என்றுரைக்கும் இவ்வசனம் பொய்மையோ? திருப் பாற்கடலில் அறிதுயிலமரும் அச்சுதன் பூமியில் அவதரித்தருள்வ தெல்லாம் தன்னிச்சையினாலாமென்பதும், அவனது விக்ரஹமும் நித்யமென்பதும் வேதத்திற் சொல்லப்பட்டுள்ளன. இவற்றைப் பின்னர் யான் விரிவாக எடுத்தியம்புவேன். வீரலக்ஷ்மீ வசிக்கப் பெற்ற புயத்தையுடைய நந்தகோபன் பெற்ற தேவதேவன், அன்ப ராகிய முனிவரிட்ட சாபத்தைப் பரிபாலிப்பதற்காகவே உலகிலவ தரித்தனன். இங்ஙனமவதரித்த இவன் நீதியினையுடைய யாதவக் குலமெலாமரித்தபின்னர் ஓர் மாயை செய்து உத்தவன் என்பவனை நோக்கி 'நீ உயிர் விடாது இங்கு வசிப்பாய்' என்று அநுக்ரஹித் தனன். அவனும் அவ்வாறே இன்றளவும் வாழ்கின்றனன். அவன் யாதவகுலத்திறைவனன்றோ! இவ்விஷயம், கையிலங்குநெல்லிக்கனி போலப் பாகவதம் ஏகாதச ஸ்கந்தத்தில் குறிப்பிடப்பட்டுளது. இங்ஙனம் செயற்கருஞ்செயல் செய்கின்ற மாயனது நிலைமையை நன்காராய்ந்து 'இவனே இறைவன்' என்று பேதையர்க்குரைப்பது அரிதாயிருக்கும். இத்துணையுங் கூறியவாற்றால் மாயன் சாபவசப் பட்டவனில்லையென்பதை நன்கறியலாகும். இனி அந்த மாதவ னுடைய திருவடியை மறவாதேத்தும் மெய்யடியார்களேயும் சாபம் சென்றடையமாட்டா. இதனை உதாரணங்களால் விளக்குகிறேன்.—

---

* அனந்தன்—முடிவில்லாதவன்.

‡ அச்சுதன்—நழுவுதலில்லாதவன்,

## ச-வது, நாரதமுனி சாப நிவாரணப் பரிச்சேதம்.

அறிவொழுக்கங்களிற் சிறந்த தபோதனர்கள் நாரதமுனிவரை நோக்கி 'நீர் ஓரூரில் ஒருநாள் மாத்திரம் தங்கியிருப்பீரல்லது மறுநாள் அவ்வூரில் தங்காது திரிந்தலையக்கடவீர்' என்று சபித்தார்கள். நாரதரும் அங்ஙனமே அலைந்துதிரிந்தவர் ஒப்பற்ற துவாரகாபுரியில் நெடுநாள் தங்கியிருந்தனரென்று பாரதம் புகலாநிற்கும். இது விஷயத்தில் ஐயமுற்ற சில முனிவர்கள் வேதவியாசபகவானை யடுத்து, 'ஸ்வாமீ! தபோதனரிட்ட சாபமானது நாரதமுனிவர் விஷயத்தில் பலியாதொழிந்ததற்குக் காரணமென்னை? என்று வினவினர். வேதவியாசர் அவர்களை நோக்கி, முனிவர்களே! ஒப்புயர்வற்ற பரம்பொருளாகிய ஸர்வேசுவரனடியார்களைச் சாபம் சென்றணுகமாட்டா. இது நிச்சயம். திருமால் முனிவரிட்ட சாபத்தை அருளினால் அங்கீகரித்தருளியதுபோல அவனடியார்களும் ஒருவாறு அங்கீகரித்தருளினும், எம்பெருமான் விரும்பியுறையும் தெய்வத்தன்மையுடைய திவ்யஸ்தலத்தைச் சூழ்ந்துகொள்வதற்கு அச்சாபத்திற்கு ஆற்றலுண்டோ? இல்லையே; என்றனர். ஆகமவல்லி! இன்னும் இதற்கோர் உதாரணம் எடுத்தியம்புவேன். கேட்பாயாக.—

---

## ரு-வது, அம்பரீடர் சாப நிவாரணப்பரிச்சேதம்.

துருவாசமாமுனிவர் ஒரு துவாதசிதினத்தன்று அம்பரீஷனை அணுகி 'அரச! இன்று § ஆதித்யந்தருக' என்றனர். அம்பரீஷனுமதற்கிசைந்து, 'முனிவரே! பாரணைப்பொழுது போவதற்கு முன் உமது நியம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு வந்தருள்வீர்' என்று வேண்டினன். முனிவரும் அதற்குடன்பட்டுப் புறப்பட்டுச்சென்று 'இன்று இவனுடைய விரதத்தை விக்கினஞ்செய்வோம்' என்று ஒரு வாவியில் முழுகி ஒருவரும் அறியாவண்ணம் மறைந்திருந்தனர். பாரணைப்போது அணுகியதைக்கண்ட அம்பரீஷன், 'இன்னும் முனிவரைக்காணேமே; என் செய்வது' என்று பணியாளரை

---

§ ஆதித்யம்—அதிதி விஷயத்திற்செய்யும் பூஜை.

அழைத்து முனிவர் இருக்குமிடமறிந்து அவரை விரைவில் அழைத்து வம்மின்' என்று கட்டளையிட்டனன். அவர்களும் பல விடங்களிலுஞ்சென்று முனிவரைத் தருவித்தேடினார்கள். பின்னர் அப்பணியாளர் 'முனிவரை எங்கும் கண்டிலோம்' என்று அரசனிடம் தெரிவித்தார்கள். அரசன் மிகவும் மனக்கவலையுற்று, 'துவாதசிப்பொழுது செல்கின்றது; இனிப்பாரணை செய்திடாதிருந்தால் ஹரிதினமாகிய ஏகாதசியில் உபவாசமிருந்தபலன் வீணாம்; அதிதியைவிட்டு உண்பதும் முறையன்று; என்செய்வதென்று ஆராய்ந்து திருத்துழாய் தீர்த்தத்தை மாத்திரம் முன்னர் அந்தணர் அருந்தும்படிசெய்து தானும் அருந்தினான்.

இதனையறிந்த முனிவர் வெகுளியுற்று அரசனை அணுகி, 'அரச! நீ அதிதியாகிய என்னைவிட்டு அடிசிலுண்டனை; இதுமுறையோ?' என்றனர். அரசன் முனிவரை நோக்கி, 'ஸ்வாமீ! அடிசிலுண்டிலேன்; சிறந்ததுவாதசியின்பொழுது தவறுவண்ணம்திருத்துழாய் தீர்த்தத்தைப் பாரணை செய்தேன், என்று பணிவுடன் பகர்ந்தனன். அதன்பிறகு முனிவர், 'அரச! அதிதியாகிய என்னை அங்கீகரிப்பதைக் காட்டிலும் இப்பூமியில் அற்புதமாகிய மஹாவிரத முண்டென்று கருதினாய்; இக்காரணத்தான் உனக்குச்சாபமிட்டேன்' என்றனர். அப்பொழுது அரசன், அடியர்க்கருள் செயும் அச்சுதன் அடிகளைத் தன் மனத்துள்வைத்துத் தியானஞ் செய்தான்.

உடனே ஸ்ரீமந்நாராயணனுடைய வலது கையிலுறையும் அருளினையுடைய திருவாழியாழ்வான் எழுந்து எரிபரப்பிச் சாம்பலாக்கி விடுவதற்கு முனிவரைத் தொடர்ந்தனர். இதனைக்கண்ட முனிவர் அஞ்சி எட்டுத்திக்குகளிலும் ஏழுபுவனங்களிலும் திரிந்துழன்று பின்னர் நான்முகன் ஐமுகன் இந்திரன் என்ற இவர்களிடத்தில் அபயம் புகுந்தனர். அப்பொழுது அவர்கள் 'இந்தத் திருவாழியாழ்வானை விலக்குவதற்கு எங்கட்கு ஆற்றலில்லை' என்று கைவிட்டனர். முனிவர் இனி என் செய்வதென்று அலமந்து சர்வலோக சரண்யனாகிய எம்பெருமானை யடைந்து 'அடியேனுக்கு வந்துற்ற இடரினைக்களைந்தருள்க' என்று அபயம் புகுந்தனர்.

அவ்வமயம் பரந்தாமனுகிய ஸர்வேசுவரன், முனிவரை நோக்கிப் 'பரமபாகவதராய் விளங்குகின்ற அம்பரீஷ மன்னரே அருள் செய்து இச்சக்கரப் படையை அகற்றினுல் அகலும்' என்றனன். இதனைக்கேள்வியுற்ற முனிவர் உடனே அம்பரீஷர் மன்னரை யடைந்து அபயம் புகுந்தனர். அப்பொழுது அம்பரீஷர் திருவாழியாழ்வான் முனிவரைத்துன்புறுத்தாவண்ணம் எப்பெருமான் திருவடியைத் தியானஞ்செய்தனர். உடனே திருவாழியாழ்வான் முனிவரை யாதொரு இடையூறுஞ்செய்யாது மறைந்தருளினுர். ஆகமமடந்தாய்! பாகவதத்தில் அரசருடைய பரம்பரையைக் கூறி வருகின்றவிடத்தில் இப்பொழுதுரைத்த வரலாற்றைப்போன்ற இன்னுமொரு விருத்தாந்தமும் சொல்லப்பட்டுள்ளது. அதனையும் இயம்புவேன் கேட்பாயாக:—

---

சு-வது, விகுட்சிசாப நிவாரணப்பரிச்சேதம்.

பூதலத்தார்களால் புகழப்பெற்ற இக்ஷுவாகு என்னும் பெயரினையுடைய அரசனுவன் ஒருநாள் தனனருமைப் புதல்வனுகிய விகுக்ஷி என்பவனையழைத்து, 'மைந்த! யான் சிராத்தஞ் செய்யக் கருதினேன்; அதற்காக நீ வனத்திற்சென்று வேட்டையாடி மிருக முதலியவற்றைக் கொணர்வாய்' என்று கட்டளையிட்டனன். மைந்தனுகிய விகுக்ஷியும் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு வனத்திற் சென்று வேட்டையாடி, அவ்விடத்திற்கிடைத்த மிருகங்களையெல்லாம் ஒரு சுமையாகக் கட்டிவைத்தனன். அதன்மேல் கொடிய பசியினுல் வாட்டமுற்று அங்கோர் முயலைப்பிடித்துப் பாகஞ்செய்து பசியாற்றினன். அதன்மேல் முன் சிரார்த்தத்தினிமித்தமாகச் சுமடாகக்கட்டிவைத்த மிருகங்களைத் தன் தந்தையாகிய அரசன்முன்பு வைத்தனன்.

அரசன்மகிழ்வுற்று அவற்றை இனியபாகஞ்செய்வித்துப் பெருமையிற் சிறந்த வசிஷ்ட முனிவரைச் சிராத்தத்தில் வரித்தனன், அப்பொழுது வசிஷ்டர் கோபங்கொண்டு, 'அரச! நீ சற்றுமஞ்சாமல் சிராத்தம் செய்பவர்போல உன்மனையில் ‡ உச்சிட்டத்தையோ

‡ உச்சிட்டம்—உண்ணப்பட்ட உணவில் எஞ்சியது.

எனக்களிக்கவிருப்பனாய்; உனது செயல் நன்றாயிருக்கிறது' என்றனர். அரசன் அச்சமுற்றுத் தன் மைந்தனையழைத்து, 'நீ கொண்டுவந்த மிருகங்கனினிணத்தை முனிவர் விரும்பாதொழிதற்கு நீ என் செய்தாய்? சொல்லுதி' என்றனன். மைந்தனாகிய விகுக்ஷி தன் தந்தையை நோக்கி, 'தந்தாய்! நான் சிராத்தத்தின் பொருட்டாகச் சேகரிக்கப்பட்ட தசைகளையெல்லாம் ஒரு சுமடு செய்துவைத்தேன்; அதில் ஒன்றுந்தொட்டிலேன்; பின்பு பசிப்பிணியால் வாட்டமுற்று அங்கோர் முயலைக்கொன்று தின்றேன்' என்றான்.

இதனைக்கேட்ட வசிஷ்ட முனிவர் அரசனை நோக்கி, 'இங்ஙனம் தீங்கிழைத்த நின் மைந்தனை நீயே சாபமிடுகின்றனையே? அல்லது யான் சபிக்கவோ? உரைப்பாய்' என்று கேட்டனர். அப்பொழுது அந்த சூரியகுலத்தரசன், முனிவரை அடிவணங்கிநின்று 'எனக்குத் தாயும் தந்தையும் தெய்வமும் குருவும் மற்றும் எல்லா உறவு முறையுமாகவன்றோ தேவரீர் விளங்குகின்றீர்; அங்ஙனமிருக்க மைந்தனென்ற ஸ்வதந்தரம் எனக்கு எங்ஙனமுண்டு? தேவரீர் திருவுள்ளத்திற்கிசைந்தபடி இவனைச் சபித்துவிடுவீர்' என்றனன். அதன்மேல் முனிவர் விகுக்ஷியை நோக்கி 'நீ முயலுடலைப் பெறுக' என்று சபித்தனர். அப்பொழுது * சசாதனாகிய விகுக்ஷியென்பவன் மனவருத்தமுற்று 'யான் உடலைவிடில் இந்தச்சாபம் என்னை யாது செய்யும்? என்று ஓர் மலைச்சார்பினையுடைய புண்ணிய ஸ்தலத்தைச் சார்ந்து தீனதயாபரனாகிய ஸர்வேசுவரனைத் தியானஞ் செய்துகொண்டிருந்தனன்.

இங்ஙனம் விகுக்ஷி தவஞ்செய்துகொண்டிருக்கிற வனத்தில் துருவாசமுனிவர் பசியுடன்வந்து, 'எனக்கு ஆதித்யம்தருக' என்றனர். விகுக்ஷி யோகத்திலிருந்தனனாதலால், அவன் முனிவர் கிட்டியதும் அவர் ஆதித்யங்கேட்டதும் அறிந்திலன். அதற்கு முனிவர் 'நம சாபத்தால் இவனைச் சாம்பலாக்கிவிடுவோம்' என்று கருத்துட்கொண்டனர். அப்பொழுது விகுக்ஷிசசாதன் யோகத்தினின்று முணர்வுற்றுத் தன் பக்கத்திலிருக்கின்ற முனிவரரை யடிவணங்கித்

---

* சசம்-முயலை; அத-உண்டவன்.

துதித்து, 'தேவரீர் இவண் எழுந்தருள்வதற்குக் காரணமும், மிக்க வெகுளிகொள்வதற்கு விஷயமும் என்னே?' என்று வினவினன். அதற்கு முனிவர் இவனை நோக்கி, 'உன்னையோர் பொருளாக மதித்து ஆதித்யம் தருதி' என்று கேட்டேன் ; நீ என்னை அவமதித் தனை ; ஆதலால் உன்னைச் சபித்துவிடுவேன் என்றனர். இதனைக் கேட்ட விகுக்ஷிசசாதன் முனிவரை நோக்கி, 'ஸ்வாமீ! தேவரீ ருடைய வரவையறிந்தேனில்லை; பிழைபொறுத்தருள்க' என்று வேண்டினன். இந்த வேண்டுகோளையும் முனிவர் பொருட்படுத்தா மல் விகுக்ஷிசசாதன் மாண்டொழியும்படி சபித்தனர்.

இந்த முனிவரது கொடுஞ் செயலைக் கண்ணுற்ற பக்தவத்ஸல னாகிய பரம்பரன் தன்னுடைய சக்கரப் படையை முனிவர்மீது ப்ரயோகித்தனன். அந்தக் கூராழிப்படை வடவாமுகாக்கினி போலக் கனலுமிழ்ந்துகொண்டு வந்தது. முனிவர் கண்டு நடு நடுங்கிப் புவனமெங்கணும்புக்குழன்று ஸர்வலோகசரண்யனையே சரண்புகுந்தனர். அவ்வெம்பெருமான் முனிவருக்குற்ற ஆபத் தைப் பரிகரித்தனன். இவ்விஷயத்தை விஷ்ணுபுராணத்திலும், பாகவதத்திலும், ஆதித்பத்திலும் நன்கு காணலாம்.

---

## எ வது, கிருத்திமப்பரிச்சேதம்.

ஆடகன் என்பவன் மைந்தனைக் குறித்து அந்தணர்கள் ஓர் வேள்வி செய்ய அதனின்றுந் தோன்றிய கிருத்தியென்னும் சத்தி யானவள் அவ்வாடகன் மைந்தனை ஏதேனும் இடையூறு செய்த னளோ ? ஆகம மடந்தாய்! இவ்விஷயமெல்லாம் நாரசிங்கபுராணத் தில் மிகவும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. இஃதன்றியும் மேலுஞ்சொல்வேன் கேட்பாயாக:—

கங்கை நாட்டையுடைய சுதக்ஷணன் என்ற காசிராஜனான வன் தன்னுடைய தகப்பனாகிய பௌண்டாகனைத் திருமால் சக்க ராயுதத்தால் போர்க்களத்திற் கொன்றனன் என்பதை நினைத்துச் சினங்கொண்டு 'இனி எவ்வாறுவது அந்தத் திருமாலைக் கொல் வேன்' என்று நாரியோர் பாகனாகிய சிவனை நோக்கிப் பன்னாள் தவங்கிடந்தனன். இவனது தவத்திற்கிரங்கிய நளிர்மதிச் செஞ்

சடையனாகிய தேவன் இவன் முன்தோன்றி 'நீ யாது கருதித் தவங் கிடக்கின்றாய்? உன் விருப்பம் யாது? இயம்புவையேல் வரந்தரு கிறேன்' என்றனன். அப்பொழுது அவன், 'தேவ தேவ! இப் பொழுதே கண்ணனையும், யாதவ குலத்தினரையும் கொல்வதற்கு வரந்தந்தருளவேண்டும்' என்று வேண்டினன்.

அதற்கு நீலகண்டனாகிய சிவன் 'அங்ஙனமே தருகிறோம்' என்று கருதிய காலத்தில் ஓர் கிருத்தி என்ற சத்தியானவள் முன் தோன்றிச் சிவனைத் தொழுது நின்றனள். இவளைக் கண்ட தான வர்களும் வானவர்களும் 'இவள் ஆலகால விஷமோ? இடியோ? எல்லா வுலகத்தையும் நாசஞ்செய்தற்கு அக்கினி தேவன் கொண்ட கோலமோ? என்று ஐயுற்று வருந்துதற்கேற்ற வடிவுபடைத்த வள்; இரத்தத் திலதத்தையுடைய நெற்றியாள்; அருள் சிறிது மற்றுத் தீப்பொறியை விடுகின்ற முக்கண்ணையுடையவள்; வச் சிரத்தைக் கடித்துத் துகள் துகளாக்கும் கூரிய பற்களையுடைய வள்; இரத்தம் சோரும் பக்ஷித் தலைகளை மாலை யாபரணமாக வுடையவள்; திரிசூலத்தைக் கைக்கொள்வாளாகில் யமனும் முனைந்து செய்கின்ற போர்க்களத்தில் நின்று வென்று உத்ஸாகத் துடன் நர்த்தனஞ்செய்வாள்; யானைத் தோலையே யுடையாக வுடையாள்; கண்டபேரண்ட பட்சியின் சிறகுகளாற் செய்யப் பட்ட கொய்சகத்தையுடையவள்; ஒலிக்கின்ற வீரக் கழலை யணிந்து பூமி நடுங்கும்படி நடந்து செல்வாள்;

"படர்செகத்துயிரெல்லாந்தின்னினுந்தன்பெரும்பசியாறுதாள்
கடல்களைத்திடர்படப்பருகினுஞ்சிறிதுதாகங்கெடாதாள்
முடியினைக்கொடுசுராதியர்கள்வாழ்ககனமாமுகடளப்பாள்
கொடுமையம்புயலைவிட்டிடிகளின்குலமுகக்கொக்கரிப்பாள்."

பரந்த உலகத்திலுள்ள எல்லா வுயிர்களையும் வாரித்தின்ற விடத்தும் பசியாறப் பெறுதாள்; மணல் மேடாம்படி கடனீரெல் லாம் பருகினாலும் சிறிதும் விடாய் தீரப்பெறுதாள்; முடியினால் தேவர்கள் வாழ்கின்ற ஆகாயமுகட்டையளவிடும் பெற்றியாள்; இடிக்குழாம் மேகத்தைவிட்டு விழும்படி கெர்ச்சிக்கும் நீர்மையாள்; இத்தன்மையுடையவளாகிய கிருத்தியைச் சிவன் நோக்கி 'நீ இக்

காசிராஜன் இட்ட கட்டளையைக் கடவாமற் செய்தி' என்று ஆணையிட்டனன். கிருத்தியும் அதற்குடன்பட்டுக் காசி ராஜனை நோக்கி 'உனக்கி யான் செய்யவேண்டியதென்?' என்று வினவினள். காசிராஜன் அவளை நோக்கி 'எனக்கு விரோதியாகிய கிருஷ்ணனையும், அவன் வாழ்கின்ற துவாரகாபுரியையும் சாம்பலாம்படி சுட்டுப்போதி' என்றான்.

இவ்வுரையினைக் கேட்டவுடன் கிருத்தியானவள் ஓட்டமுற்றாள்; பன்னிரண்டு யோஜனையளவிலுள்ள உயிரனைத்தையும் புடைத்தனள். மலைகளையும் புவியையும் தன் கோபாக்கினியினால் மூடினாள்; பின் கேடில்லா துவாரகாபுரியை நாடி யடைந்தனள். அப்பொழுது ஆங்குள்ளாரெல்லாம், பாற்கடலில் ஹாலகால விஷமெழுந்ததைக் கண்ட தேவர்கள் அச்சமுற்று நடுநடுங்கி ஓடியது போல ஓடிச்சென்று கண்ணபிரானை யடைந்து, 'தேவ தேவ! ஆபத்ரக்ஷக!! தேவரீருடைய நகர்ப்புறமெலாம் நெருப்புப்பற்றி வேகின்றது; அந்தோ! என்செய்வோம்' என்று சரண்புகுந்தார்கள்.

அப்பொழுது, சத்தியபாமையோடு உல்லாசமாக விளையாடிக் கொண்டிருந்த கண்ணபிரான் நகர் தீப்பற்றிக்கொண்டிருக்கின்றதென்பதையும் ஒரு பொருட்படுத்தாமல் தன் அழகிய கைவிரலிலுள்ள சிறிய நகத்தைக் கிள்ளி யெறிந்தனன். அந்த நகத்திவலை சக்ராகாரமாய், கோடி சூரியாக்கினியை ஒத்து இருபத்துநான்கு யோஜனை யளவு வளர்ந்து எரிபரப்பிச் சங்கரனுடைய கட்டளையால் வந்த கிருத்தியை வந்தடைந்தது. அந்தக் கிருத்தியானவள் சூரியனைக்கண்ட மின்மினிபோலத் தன்னொளி யழியப்பெற்று ஏக்கமுற்று ஓடினள். இங்ஙனமோடிய கிருத்தியையும், இந்தக் கிருத்தியை ஏவிய சுதக்ஷணனையும், அவன் வாழ்கின்ற காசி நகரத்தையும் அதல விதலங்களிலும் புகை யெழும்படி எரித்து அந்த ஆழிப்படை ஆகாயத்தை யடைந்தது.

அதுசமயம் ஐந்து முகத்தையுடைய அரன் அம்பிகையுடனும், கணேசன் கந்தன் பூதகணங்கள் என்பவரோடும் அந்தக் காசி நகரைவிட்டு நகர்ப்புறத்திலுள்ள பனங்காட்டை யடைந்து,

தீயவிந்தபின் மீண்டு வந்தனன். இவ்வரலாறு, அரிவம்சத்திலும், பத்மபுராணத்திலும் ஓதப்பட்டுளது. ஆகம மடந்தாய்! அக்கினியை ஈரம்பற்றாத பெற்றிபோலத் திருமாலின் மெய்யடியார்களைச் சாபமும் சத்தியும் பற்றாதென்பதை நன்கறிவாயாக.

---

அ-வது, அச்சுவத்தாமா சாப நிவாரணப் பரிச்சேதம்.

அச்சுவத்தாமா வென்பவன், அபிமன்யுவின் மனைவியாகிய உத்தரையின் கர்ப்பத்திலிருக்கின்ற குழந்தையை அழிப்பதற்காக, அபாண்டவாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அப்பொழுது கண்ணபிரான் திருவாழியாழ்வானைக் கொண்டு, கர்ப்பத்திலிருந்த பரீக்ஷித்தை ரக்ஷித்தான். பின் உத்தரை பிரசவிக்கிற காலத்தில் கண்ணபிரான் தன் மகிமையை வெளியிடுவதற்காகத் திருவாழியாழ்வானை விலக்குவித்தபோது அந்த அபாண்டவாஸ்திரமானது அந்தக் குழந்தையைத் தகித்தது. அது *கரிக்கட்டையாய் விழுந்தது. அதன்மேல் பதினாறாயிரம் கோபிகைகளோடு இன்பம் நுகர்ந்தவனென்று பெயர்பெற்ற கண்ணபிரான் 'யானே நித்ய ப்ரம்மசாரியாவேன்' என்று அந்தக் கட்டையைத் தீண்டினன். உடனே அது உயிர்பெற்றெழுந்தது.

மேலும் கண்ணபிரானுடைய அநுக்ரகத்தினால் அந்த அபாண்டவாஸ்திரமானது பாண்டவர்களை ஒன்றுஞ்செய்யவில்லை. ஆகமமடந்தாய்! பாரதத்தைக் கேட்பாயாக. கண்ணபிரான் அர்ச்சுனனுக்குச் சாரதியாய் அமர்ந்து சிறந்த இரதத்தில் அர்ச்சு

---

* "மைத்துனன்மார்காதலியைமயிர்முடிப்பித்தவர்களையேமன்னராக்கி
உத்தரைதன்சிறுவனையுமுய்யக்கொண்டவுயிராளனுறையுங்கோயில்

என்பதும்' இதற்கு 'பிதாவான அபிமன்யு யுத்தத்திலே பட்டுப்போகையாலே 'இவனை யிழந்தோம்' என்னும் க்லேசம் அவனுக்கில்லையிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறது. உய்யக்கொண்ட - கரிக்கட்டையாய்ப் போனவனையும், ஸத்யவசனத்தாலும் திருவடிகளினுடைய பரிசத்தாலும் போனவுயிரை மீட்டு எழுந்திருக்கப்பண்ணின உயிராளன் - ஸர்வாத்ம ஸாதாரண நாதனானவன்." என்று பெரிய ஜீயாருளிய வியாக்யானமும் ஈண்டறியத்தக்கன.

னனை யேற்றிக்கொண்டு துரியோதனுதியரோடு போர் செய்த காலத்தில் மஹாவீரர்கள் செய்த மந்திரமும் அம்பு முதலியவைக ளெல்லாம் கண்ணபிரான் சாரத்தியஞ்செய்த தேரடியில் விழுந்து சாம்பலா யொழிந்தனவன்றே!

முனிவர்களிட்ட சாபங்களெல்லாம் முதனடுவிறுதியில்லா முழுமுதற் பொருளாகிய முகுந்தன் தன்னிச்சையாலே பாலனஞ் செய்தாலும் செய்வான்; அன்றி அவற்றை அகற்றினும் அகற்று வான். இங்ஙனம் அவன் தடுக்கப்படாத ஸ்வாதந்தர்யத்தை யுடையவனுதலால் 'இது செய்யத்தக்கது; தகாதது' என்று அவனைத் தடுப்பார் யாருளர்? வேதத்தாலறியப்படும் பெற்றியின னுகிய மாதவனுக்குச் சாப சம்பந்தமில்லை என்பதை நீ சம்மதிக்கு மாறு ஈண்டெடுத்தியம்பினேன். இனி, நீரணி செஞ்சடையனுகிய சிவன் சாப சம்பந்தமுடையவன் என்பதை எடுத்தியம்புவேன். குறிப்புடன் கேட்பாயாக.—

---

கூ-வது, பிருகுவிடுசாபசம்பந்தப் பரிச்சேதம்.

சிறந்த தவத்தினர் விரும்பிவாழ்கின்ற தாருகாவனத்தில் சிவன் சென்று அம்முனிவரின் பத்தினிப்பெண்டிரை மயக்கமுறச்செய்து கற்பழித்ததினுல் முனிவர்கள் முனிவுகொண்டு, 'முக்கண்ணனது லிங்கம் இன்றே துணிந்திடுக' என்று சாபமிட்டனர் என்பதை முன்னரே முற்றவும் ஓதினேன். மற்றும் வேறு சொல்வேன் கேட் பாயாக.— மாமேருவின் பக்கத்தில் விளங்குகின்ற மாதவத்தினர் சபை கூடி பரதத்வ நிரூபணஞ்செய்தகாலத்தில் அங்குள்ள சிலர் தாமதபுராணங்கள் பல்வேறுபடியாக மொழிகின்றவற்றைக்கருதி ஒருவருக்கொருவர் சங்கிக்கலாயினர். அவர்கள் தம்மிலும் சிலர் கூறத்தொடங்கினுர்.— 'ஜகத்காரணவஸ்துவாய் விளங்குகின்றவன் பிர்ம்மா விஷ்ணு சிவன் என்ற மூவர்க்குள் ஒருவனுகவன்றேயிருத் தல் வேண்டும்; அவன் எவன் என்பதை ஆராய்வோமாகில், தாமத ராஜஸ குணப்பற்றில்லாது சுத்தசாத்விக இலக்கணமுடையவனே பரனென்று தெளியலாம்' என்றனர்.

வேறு சிலர் 'போமின்! இங்ஙனமுரைத்த சுத்த ஸாத்விக இலக்கணமுடையவன் இன்னவன் என்று ஆராய்ந்து தெளிவோ மென்றாலோ அந்த மூவர்க்குள் எந்த மூர்த்தியேனும் சிறிது கோபங்கொள்வனேல் நம்மைக் கொல்வன். அதன்பின் எவன் மேன்மையாயிருக்கிலென்? தாழ்மையாயிருக்கிலென்? இங்ஙனம் நாம் கருதியது அழகான செயலன்று' என்று அச்சமுற்றனர். அப்பொழுது அங்கிருந்த பிருகுமுனிவர் வேதக்குன்றுபோனின்று ஒன்று சொல்லத்தொடங்கினர்.—

நவையில்சுத்தசாத்விகவிலக்கணநண்ணுகின்றதோர்ஞானநாயகன்
குவலயத்திலாரேதுசெய்யினும்குற்றமாய்மனங்கொள்வதில்லையால்
கவலைமிக்கதாமதவிராசதக்கடவுளானபேர்கண்சிவந்தபோ்து
அவர்களுக்குநாமெளியமோசொலீரரியமாதவத்தந்தணாளரே.

மாதவத்தினையுடைய அந்தணாளரே! குற்றமற்ற சுத்த சாத்விக இலக்கணமுடைய ஞானநாயகனாகிய ஸர்வேசுவரன், பூமியில் எவ ரேனும் யாது செய்யினும் அதனை குற்றமாகத் திருவுள்ளத்திற் கொள்வதில்லை. துன்பத்தைத் தருகின்ற தாமதராஜஸகுணக்கடவு ளர் கோபித்தபோது அவர்களுக்கு நாம் எளியமோ? அவர்களோ டெதிர்த்துச் சபித்தற்கு நமக்கு வலியில்லையோ சொல்லீர்? அந்தச் சுத்த ஸாத்விக இலக்கணமுடைய பரதேவதை இன்னானென்று பரிசோதிப்பதற்கு உங்களுடைய பேரருளைக்கொண்ட யான் ஒரு வனே சாலும்; என்று பகர்ந்து, 'முப்புரங்களைத் தீயெழும்படி வென்றவனாகிய சிவனுடைய குணத்தை முன்னர் ஆராய்வோம்' என்று பூதகணங்களும் வேதாளங்களும் முடியுடைய அமரரும் கைதொழவிருக்கும் கைலயங்கிரியை அணுகி, மகரதோரணங்களை யும் பல சிகரங்களையுமுடைய கோயிலையடைந்தனர். அப்பொழுது நந்திதேவன், 'எங்கள் அகிலநாயகருக்கு இப்பொழுது உங்களது வருகையை அறிவிப்பதற்குச் சந்தர்ப்பமில்லை' என்று தடுத்தனன். பிருகுமுனிவர் முதலானோர் ஆங்கு ஏழுநாள்வரை தங்கியிருந்தனர். இதனை யறியாது சிவன் உமையுடன் கூடி, கலவிசெய்துகொண் டிருந்தனன்.

அஞ்ஞான்று பிருகுமுனிவர் கோபமுற்று, 'யான் ஏழுநாள் வரை ஈண்டுக் காத்துக்கொண்டிருக்க, தாமதகுணத்தினால் என்னை

ஸத்கரியாமல் காமவலையிற் கட்டுண்டிருக்கிற உமேசுவரரது குறிகள் அற்றுவிழக்கடவன' என்று சபித்துச் சென்றார்.

பின்னர் உமையுடன் கலவியின் பெருங்கடலைக் கடந்துவந்து சிவன் வாயிலையடைய, அங்கிருக்கின்ற நந்திதேவன் பிருகுமுனிவர் தங்கியிருந்த செய்தியைச் செப்பினன். அதனைக்கேட்ட சிவன் கணநாதனை யழைத்து, 'நீ ஈண்டுப் பிருகுமுனிவரை யழைத்துவருவாய்' என்று கட்டளையிட்டனன். கணநாதனும் விரைவிற்சென்றழைக்க, முனிவரர் அதற்குடன்பட்டு மீண்டுவர, அதனைக்கண்ட சங்கரன், 'முனிவர்க்குற்ற முனிவுமாற அன்புலனுதற்குரிய ஓர் சீரிய செயலைச் செய்வோம்' என்று அவரை ஆலிங்கனஞ்செய்யத் தொடங்கினன். அப்பொழுது முனிவர்,

சுடலைமேவியும்பேய்களானதுர்ச்சங்கமெய்தியுந்தோலெலும்பணிந்
தடலைபூசியுங்காமமோகனத்தவசமுற்றுமிங்கசுசியானநீ
மடலைமேவுதாமரையயன்றருமைந்தனுமெனுமமதைகொண்டெனைத்
தொடலைநில்லெனப்புவியும்வானமுஞ்சுழல்சுழன்றிடச்சூலபாணியும்

என்று என்னைத் தொடவேண்டா என்று சொல்லியவுடன் சிவன் கோபமுற்றுப் புவியினுள்ளாரும் வானத்திலுள்ளாரும் அலமரும்படி வாய்துடிப்ப மயிர்கூச்செறியக் கொக்கரித்து நெற்றிக்கண்ணை விழித்து முனிவரரைத் தகிக்கத் தொடங்கினன். இதனைக்கண்ட முனிவரர் தம் பாதத்தின் பெருவிரலிலுள்ள சண்டாக்கினியால் முக்கண்ணினின்றுந் தோன்றிய அக்கினியைச் சங்கரித்து முன்னிட்ட சாபமன்றி, 'இனி நீ ப்ராமாண்யதெய்வமாகாதொழிவதோடு நீ அநுபவித்துக் கழித்தவையெல்லாம் எவர்க்கும் அருகமாகாதொழிந்திடுக' என்றுஞ் சபித்து நான் முகப்புத்தேளுறையுமிடத்தை அணுகியபோது நான்முகன் மதிப்பாளனுகவிருப்பதைக் கண்டு, புற்றிலுறையும் பாம்புபோலக் கோபமுற்று இவன் தமக்குத் தந்தையாயிருப்பதையும் நோக்காது, 'இன்றுமுதல் பூமியிலுள்ளவர்கள் உன்னை ஆலயங்களிற் பிரதிஷ்டித்துத் தொழாதிருக்கக்கடவர்கள்' என்று சபித்தனர்.

அதன்பிறகு முனிவர் வைகுந்தத்தை யடைந்து சிறந்த இரத்தினங்களால் அமைக்கப்பெற்ற பொற்கோயிலைச் சார்தலும், அங்

குள்ள வாயிற்காப்பாளர் வெருவிநின்றனர். பின்னர் முனிவர் தடையறச்சென்று நீலமலைபோலத் திருவநந்தாழ்வான்மீது பிராட்டிமார்களும் பெரியதிருவடி முதலான நித்யஸூரிகளும் கோடி சூரியப்பிரகாசப்போலப் புடைசூழ அறிதுயிலமரும் அச்சுதனைக் கண்டு தம் காலால் உதைத்தனர். இங்ஙனஞ்செய்த இக்கொடுஞ் செயலை, பக்தவத்ஸலன் தன் திருவுள்ளத்திற் சிறிதுங்கருதாது, மக்கள்மெய்தீண்டத் தாயுகப்பதுபோல மகிழ்ந்து கடிதெழுந்து, 'முனிவரரே! இன்று என் பொருட்டாக உமது சிறந்த பாதங்கள் என்னையுதைத்து நொந்தனவே' என்று அருள்ததும்ப வினவினன். அப்பொழுது முனிவரர்,

சுத்தசாத்திகச்சொரூபநற்பரஞ்சோதியென்றுதாடொழுதுசென்னியில்
கைத்தலங்குவித்தாழியாய்செகற்காரணன்றனைக்காணவென்றுநான்
புத்தியின்மையாலிங்கிழைத்திடும்புன்மைநீபொறுத்தருள்கவென்றுபோய்
மெய்த்தவத்துமாமுனிவருக்கெலாம்விண்டுவேத்துவென்பதுவிளம்பினன்.

சுத்த ஸாத்விக ஸ்வரூபனைப் பரஞ்சோதியாய் விளங்குகின்றவன் இவனே என்று திருவடியைத்தொழுது, தலையிற் கைகுவித்து, 'ஆழிப்படையையுடையாய்! ஜகத்காரண வஸ்து எது? என்று ஆராய்ந்து காணுவதற்காக யான் புத்தியில்லாமல் ஈண்டுச்செய்த பெரும்பிழையைப் பொறுத்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்துச்சென்று, தத்வதரிசியராகிய முனிவரனைவருக்கும் விஷ்ணுவே பரதேவதையாவானென் றுரைத்தனர்.

ஆகம மடந்தாய்! இவ்வாலாறு, பாகவதம் பத்தாவது ஸ்கந்தம் எண்பத்துநான்காம் அத்தியாயத்தில் கையிலங்கு நெல்லிக் கனிபோல மிகவும் தெளிவாக உரைக்கப்பட்டுளது. சிவ நிர்மாலியம் புஜிக்கலாகாதென்று திருமாலின் திருவாராதன முறையைத் தெரிவிக்கின்ற வைகானசம் என்ற சிறந்த நூலில் ஓதப்பட்டுளது.

---

௯-வது, கௌதமர் விடு சிவ சாப சம்பந்தப் பரிச்சேதம்.

மின்னிடை நல்லாய்! பிருகுமுனிவர் கைலயங்கிரியையணுகி உமையோர்பாகனைச் சாபமிட்ட காலத்தில் கௌதமமுனிவர் நீராடி அநுஷ்டான முடிப்பதற்காக வைகறைப்பொழுதிற் சென்றனர்.

அங்கு இந்திரிய வெள்ளருவி யோடக்கண்டு 'இஃதோர் கான்யாறு' என்று மதித்து அதிலிறங்கித்தம் கையால் தீண்டி யெடுக்க அது இந்திரியமாகவிருக்கக் கண்டு, 'இங்ஙனம் ஓய்வொழிவின்றிச் சம்போக மெய்துகின்றவர்களின் குறிகள் இப்பொழுதே புவியில் துணிந்து விழக்கடவன' என்று சபித்தனர். இப்பொழுது கௌதமரிட்ட சாபமும் முன் பிருகுமுனிவரிட்ட சாபமும் ஒரே காலமாகும். இந்தச் சாபமானது தன்னின் மிக்க வோர் இறைவனில்லை என்று மதித்துக்கொண்டிருக்கிற சடாதரனிடத்தில் வந்து சார்ந்தது. இந்தச் சாப காரணந்தனை விலக்குவதற்காக ஆங்குள்ள முனிவர்கள் கூடி, 'இங்கிருக்கின்ற கௌதமனை நாம் முனிவது முறையன்று' என்று அவர் ஏகாந்தமாயிருக்கின்ற சூழலையடைந்து, 'கோதமா! புத்தியற்றனை கொல்; புகுகின்ற வீட்டில் நெருப்பை வைப்பதுபோல நமக்குப் புகலிடமாயிருக்கின்ற பிறையேறு செஞ்சடையானையோ சபிப்பது; நீ அந்தணர்க்குளாகாது போதி' என்று நின்னையாம் இப்பொழுது சபிப்போமென்ன, அதற்குக் கௌதமர் அச்சமுற்று அத்தபோதனர்கள் மகிழ்வுற்றுச் சம்மதிக்குமாறு ஒரு மொழி சொல்லத் தொடங்கினர்:— 'முனிவரர்களே! அற்றொழிந்த உமேசுவரரது குறிகள் அர்ச்சனைக் கருகமாமாறு யான் இப்பொழுதே அளவற்ற நூல்களைச் செய்கிறேன்' என்றனர். தபோதனர்களும் அதற்குடன்பட்டார்கள். இவ்வரலாறு, கந்தபுராணத்திற் குறிப்பிட்டுளது. ஆகமமடந்தாய்! இஃதன்றி, மங்கைபாகனாகிய சிவனுக்கு இன்னுமோர் பெருஞ் சாபம் வந்துற்ற வரலாற்றைக் கேட்பாயாக:—

---

### ௰க-வது, பிரமாவிடு சிவ சாப சம்பந்தப் பரிச்சேதம்.

ஐமுகனாகிய சிவன் தன்னகத்தினால் பிரம்மாவின் சிரசைக் கிள்ளிய காலத்தில் பிரம்மதேவன் கோபமுற்று, 'தவறிலாத வென்னை இங்ஙனம் செய்த நீ பிரம்மகத்தியால் பரிதபித்துத் திரிவாய்; புண்ணிய நதிகளில் தீர்த்தாடனஞ் செய்வையேல் இந்தப் பிர்ம்மகத்தி நீங்கும்' என்றனன். உடனே சிவன், பற்றிக்கொண்ட அந்தப் பிர்ம்மகபாலத்தை ஏந்திக்கொண்டு புண்ணிய நதிகளாடி,

ஆகாய கங்கை நீர் பாயப்பெற்ற சிறந்த இரத்தின சிகரங்களை யுடைய இமயமலையை யடைந்தனன்.

அந்த க்ஷேத்திரத்தில் சிறந்த தபசைச் செய்துகொண்டிருந்த நாராயணமுனிவரைக் கண்டு, 'இவரே நமது பெருங்குறையைத் தீர்க்கவல்லவர்' என்று மதித்து 'ஸ்வாமி! அடியேற்குப் பலியிட வேண்டும்' என்றிரந்தனன். அவரும் ஆரன்பா லன்புகொண்டு தமது நகத்தால் பார்சுவத்தைக்கீற, அதினின்றும் இரத்தம் மொகு மொகென்றெழுந்து தாரைகொண்டது. அதனைக்கண்ட சிவன் தன் கபாலத்திலேற்றனன். அப்பொழுது அக்கபாலம் அந்த இரத்தத்தாரையானிறைந்து நூறுயிரம் பிளவாய்ச் சிதறி, கனவிற்கண்ட பொன் கண்விழித்தபின் காணுதவாறுபோல ஒழிந்தது. இவ்வரலாறு, சிவன் பார்வதிக்குச் சொன்னதாக மச்சிய புராணங்கூறுநிற்கும். 'சிவன் தேவர்கட்குப் பின்னரே யாகபாகம் பெறத்தக்கவன்' என்று தக்ஷன் சபித்தான் என்பதை பாகவதம் புகலாநிற்கும்.

---

## ௰உ-வது, விச்சுவ சிருட்டியர்கள் யாகத்தில் தக்கன்விடு சிவ சாப சம்பந்தப் பரிச்சேதம்.

இதனைக்கேட்ட ஆகமமடந்தை சொல்லத்தொடங்கினுள்:— ஆரணமடந்தாய்! எங்கள் சிவபெருமானுக்கு அவிர்ப்பாகத்தில் விலக்குளதென்று பகர்ந்தாய்; இவ்வாறு அந்த யாகம் அக்கிரமமாக நடத்தப்பட்டதனுலன்றோ! தக்ஷன் திருமால் முதலானுர்கள் சிதறடிக்கப் பட்டார்கள்; என்றனள். இதனைக்கேட்ட ஆரணவல்லியானவள் புன்முறுவல்கொண்டு சிறந்த வறிவினையுடைய தக்ஷன் யாகந்தொடங்கி நிறைவேற்றிய செய்தியை விரித்துரைப்பேன்; கேட்பாயாக என்றுரைக்கத் தொடங்கினுள்.—

முற்காலத்தில், முனிவர்குழாமும் தேவர்களும், நான்முகனும் ஐமுகனும் தாம் சித்தி பெறுதற்கு விச்சுவசிருஷ்டியர் செய்த சத்திர யாகத்திற்குழுமியிருந்தனர். அப்பொழுது மிகுந்த புகழுடைய தக்ஷன் ஆங்கு வந்தனன். இவன் வருதலைக்கண்ட பிர்ம்மதேவன் சிவன் நீங்கலாக ஏனையோரனைவரும் எதிர்சென்று துதி

செய்து பணிந்தனர். இவர்கள் இங்ஙனம் வெகுமதி செய்ததற்குத் தக்ஷன் மனமகிழ்வுற்று, அங்கு முக்கண்ணனொடு நான்முகன் இருந்தமைகண்டு, நான்முகனது நாண்மலரடியைப் பணிந்தனன். அப்பொழுது நான்முகன் தக்ஷனை நோக்கி, 'ஈண்டிருப்பாய்' என்று இன்னுரைபகர ஆண்டிருந்தனன். பின்னர் தக்ஷன் கங்கை யணிசெஞ்சடையனைத் தன்னிருகண்களில் இரத்தம் சொரியுமாறு நோக்கி, ஆண்டிருந்த முனிவர்களையும் தேவர்களையும் குறித்து கீழ்வருமாறு சொல்லத்தொடங்கினன்:—

முந்துபுகழ்வானவர்களேமுனிவரேநான்
எந்தமொழிசொல்லினுமியைந்தமொழியல்லால்
நிந்தைமொழிமாச்சரியநீடுமொழிமற்றும்
புந்திமறைவாகமொழிபொய்மொழிவிளம்பேன்.

சிறந்த புகழுடைய தேவர்களே! முனிவரரே! யான் யாதியம்பினும் இயைந்த சொற்சொல்வேனேயன்றி நிந்தைதரும் சொல்லையும் குரோதமுற்ற உரையையும் சிந்தையை ஒளித்துச்சொல்லும் பொய் மொழியையும் என்றும் செப்பேன்; இந்த இடபவாகனனாகிய சிவன் என்னுடைய வருகையைக்கண்டால் எதிர்கொண்டு என்னைப் பணிதற்கு அருகனன்றோ! அகங்கரிப்பாரில் இவனின்மிக்காருண் டோ? மேலும், 'இவன் தோலையுடுத்து என்புமாலையணிந்து மசான முழுதும் தனதாலயமாகக்கொண்டு, பைசாசங்களோடு உறவாடி ஆடல்செய்து அசுபமான சவப்பொடியைத் தரிப்பான்; நியமநிஷ் டைகளை மறந்தவன்; வேதநெறிப்படி ஒழுகான்; துஷ்டர்களிடத் திற் பரிந்துபேசுவான்; முழுத் தமகுணத்தன்; வெட்டெனவன்றி இன்சொற்பகரான்' என்று முன்பே இவனது இயல்பை பூமியி லுள்ளார் நன்கறியும்படி நான்முகனும் எடுத்தியம்பியுள்ளான். இங்ஙனம் பாத்திரமல்லாத இவனுக்கு வேல்போன்ற விழியினை யுடைய என்னருமைப் புதல்வியை வேதத்தைப் பயில்வதற்குரிமை யல்லாதவர்க்கு அதனை அவருக்குப் பயிற்றுவிப்பாரைப்போல உதக பூர்வகமாகக் கன்னிகாதானஞ்செய்து கொடுத்தேன். என்னுடைய புத்திரியை அந்தச்சிவன் மணந்துள்ளானதலால் அவன் மாப்பிள்ளை முறையுமாகின்றான். இவ்வியல்பினனாகிய இவன் என்னை வணங்கா னேனும் என்னுடன் இன்னுரையாவது பகரலாமே? என்று

மொழிந்து, ருத்திரனைநோக்கி 'நீ இன்றுமுதலாக வேள்வி தொடங்குகிறவிடமெங்கும் தேவர்களோடு கூடி அவியுண்ணுதொழிக' என்று சபித்துவிட்டுத் தன்னாச்சிரமத்தை யடைந்தான்.

அப்பொழுது நந்திதேவன் கண்கள் சிவப்ப மயிர் சிலிர்ப்ப கோபமுற்றெழுந்து, 'எந்தையாகிய சிவபெருமான் ஓர் தவறுஞ் செய்யாதிருக்க அப்பெருமானை நிந்தித்தவன் தலையானது சிதரப் பெற்று ஒரு ஆட்டின் தலையைப்பெறுக' என்று சபித்தான். மேலும் நீலமணிமிடற்றனைக் குற்றமுடைய தக்ஷன் கூறிய வசவுரையெல்லாம் கேட்டுக்கொண்டு ஆண்டிருந்த அந்தணாளரை நோக்கி, 'நீங்கள் பூமியிற்பிறந்து மிக்க வாசையுடைய யாசகராகி வேத நீதியையும் உடம்பினையும் வளர்க்கக்கடவீர்கள்' என்றுஞ் சபித்தான்.

இவ்வாறு சபித்த நந்திதேவனுக்கெதிரே அந்தச்சபையிடத்து பிருகுமுனிவர் கோபமுற்று ஒருவருக்கொருவர் பூசல் நேர்ந்தால், அவ்வொவ்வருவரும் சினந்துகொள்ளவேண்டுமேயன்றி எல்லோரையுங் கோபிப்பது முறையோ? பிராம்மணரை இவன் இப்படிச் சபிக்கப்பார்த்திருந்த அந்த நந்திக்குத் தலைவனாகிய சிவனையன்றோ கோபிக்கவேண்டும்; இவனைச் சினந்துகொள்வதால் யாதொரு பிரயோஜனமில்லையன்றோ; 'இனி இந்தச் சங்கரனை வழிபட்டொழுகுவாரும், இவனுடன் கூடி வசிப்பவரும் குரூரமான தாமதகுணத்தினராகவும் அற்பமான எலும்பு, சடை, நீறு அணியப்பெற்றவராகவும் கண்டகர்களாகவும் காமுகர்களாகவும் பாஷண்டர்களாகவும் விஷ்ணு பக்தியற்றவர்களாகவும் வேதநெறியொழுக்கமற்றவர்களாகவும் வக்கர இருதயமுடையவராகவும்,

நன்னெறிசொன்னூல்வழிநடக்குமதொழிந்தே
புன்னெறிசொன்னூல்வழிபுணர்ப்பவருமாகி
மன்னுமதுவுண்டுமெதமத்தகர்களுமாய்நீ
டிந்நிலமதிற்றிரிகவென்றுழிசபித்தான்.

நல்வழியை அறிவிக்கின்ற நூலின் வழியிற் செல்லாது அற்பவழியைத்தெரிவிக்கின்ற நான்முறையைச் சார்ந்தொழுகி கள்ளுண்டு வெறியுற்று இவ்வுலகில் திரிவார்களாக' என்று சபித்தார். அவ்வள

வில் சிவன் தன் கணங்களோடெழுந்து கைலையையடைந்தான். பின்னர் விச்சுவசிருஷ்டியர்கள் திருமாலுக்கு அவிவழங்கி யாகத்தைச் செவ்வையாக முடித்தனர்.

---

## ச-வது, தக்கன்யாகப்படலம்.

### க-வது, உமையவளுயிர்விடும் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! முன்னர் ஒரு வேள்வி முடிந்த வரலாற்றைச் சொன்னேன். மேலுஞ்சொல்வேன்.— உலகைக்காக்கவல்ல தக்ஷன் பிரசித்தமுடைய சிறந்த வேள்வியை முடிப்பதற்கு மனமகிழ்ச்சியுற்று யாகசாலையை யடைந்தான். இதனையறிந்த தக்ஷன் புதல்வியாகிய சசிதேவி யென்பவள் தன் தந்தை இயற்றும் வேள்வியைக் காணவேண்டுமென்ற கருத்துடன் தன் கணவனாகிய சிவனை நோக்கி, 'நாத! எனக்கு விடையளித்தருள்க' என்று வேண்டினள்.

அப்பொழுது இடபவாகனனாகிய சிவன் உமையை நோக்கி, ஆயிழைமடந்தாய்! உன் தந்தை செய்த செயலைக்கேட்பாயாக.— விச்சுவசிருட்டியர்கள் செய்த ஒப்பற்ற சத்திரயாகத்தில் தேவர் முனிவர் முதலானோர் கூடிய ஸபையில் என்னை அவமானப்படுத்தினான். உன்னிடத்தில் அவன் பரிவுடையவனாயிருப்பானேல் என்னை அவன் அங்ஙனம் தூஷிப்பானோ? மடந்தாய்! உன் தந்தை என்னை அவமானப்படுத்தியது மாத்திரமன்றி, அவன்றன்னை எதிர்சென்று யான் பணியவில்லை என்று பற்பல கொடிய சொற்களையுஞ் சொன்னான்.

இனிய சொற்களையுடையவளே! இங்கு உனக்கோர் உபதேசமொழி சொல்லுகிறேன் கேட்பாயாக.— உலகிலுள்ள உயிர்கட்குயிராய் விளங்குகின்ற வெற்றிமாலையணிந்த திருமாலை யான் வணங்குவேனேயன்றித் தேகாபிமானமுள்ள சிலரை வணங்கும்பெற்றியனோ? அறிவற்றவனாகிய தக்ஷன் உன்னைப்பெற்றவன் என்று மதித்து அவன் செய்கின்ற வேள்வியிடத்தில் நீ செல்வையேல் அங்கு உனக்கு வெகுமானம் சற்றுங் கிடைக்கமாட்டாது; இது நிச்சயமென்பதை நன்கறிவாய்; என்று பகர்ந்தனன்,

இந்த நல்லுரையைப் பொருட்படுத்தாமல் உமை சிவனிடத்தில் விடைபெற்றுச் சிவகணங்கள்சூழ பொற்சிவிகையிலேறி விரைவிற்சென்று தன் தந்தை செய்யும் யாகசாலையை யடைந்து தண்டிகையினின்றிழிந்து தன் தந்தையின் பாதத்தை வணங்கிநின்ருள். அப்பொழுது தக்ஷன் உமையை ஆதரிக்காமல் பராமுகமாகவிருந்தான். இதனையறிந்த உமை மிகுந்த துக்கமுற்று, 'ஈங்கிருக்கின்ற அந்தணரும், வேள்வியும் விரைவில் அழிந்திடுக' என்று வாய் வந்தபடியெல்லாம் பகர்ந்து அக்கினியிற் குதித்து உயிர் துறந்தாள்.

---

## ௬-வது, பிர்ம்மகண, சிவகண போர்பொரும் பரிச்சேதம்.

இங்ஙனம், உமாதேவியார் உயிர்நீத்ததுகண்ட சிவகணநாதர் கோபமுற்றெழுந்து தக்ஷனை வதைக்க யாகசாலையை அடைந்தனர். அவ்வளவில் பிருகுமுனிவர் கண்டு சிறந்த யாகத்தைச் சிதைப்பதற்கெழுந்த சிவகணங்களொழிதற்குத் தெக்ஷிணுக்கினியை மந்திர விதிப்படி வகுத்துநின்றனர். அப்பொழுது அவ்வக்கினியினின்றும் அநேக தேவர்கள் தோன்றினர்கள். அவர்கள் வெள்ளிய பற்களையுடையவர்; நெருப்பைக் கால்கின்ற கண்ணினர்; இருளைப்போக்கி ஒளிவீசப்பெற்ற மகுடத்தினர்; கொள்ளியைப் படையாகக்கொண்டெழுந்தகையினர்; இடியொலியினும் எண்மடங்கு கொர்ச்சிக்கும் பெற்றியர். இங்ஙனமுள்ள தேவகணங்கள் சிவகணங்களோடு கலந்து யானையிடைப்புக்க சிங்கத்தைப்போல் விளங்கினர். மேகத்தில் மின்வரிசைகள் விளங்குவனபோல் சூரியநகங்களையுடைய கையிற் கொள்ளியைக்கொண்டு சிவகணங்களைத் தாக்கினர். அதற்காற்ருத சிவகணங்கள்ஓடி ஒளிந்துகொள்வதற்கு மலைக்குகைகளைத் தேடிப் பின் கைலயங்கிரியை அடைந்தன.

பின்னர் தம் நாதனுக விளங்கும் நாரியோர்பாகனை அடிவணங்கிநின்று எந்தாய்! தக்ஷன் வெகுமதி செய்யாமையின் சசிதேவி உயிர் துறந்தனள். தேவர்கள் செய்த போருக்காற்ருது பூதகணங்கள் ஓடி ஒளித்தன என்று தெரிவித்தன.

---

## ௩-வது, வீரபத்திரன் சிவன்சடையிலுற்பத்திப் பரிச்சேதம்.

இங்ஙனம் கணநாதருரைத்ததைக்கேட்ட ருத்திரன் பெருமூச்சுவிட்டனன்; வெயர்த்தனன்; புருவங்களை நெரித்தனன்; நெருப்பெழச்சிரித்தனன்; தீயெழவிழித்தனன். மேலும் வலிமையால் தன் பெரிய சடையொன்றைப் பறித்தெறிந்தான். அப்பொழுது ஓராயிரம்புயமும் முக்கண்ணும் வளைந்தபற்களும் கரியமேனியும் இடிபோன்ற குரலுமுடைய வீரபத்திரன் மிகுந்த தேஜஸுடன் தோன்றினன்.

இவ்வாறு தோன்றியவன் சிவனுடைய பாதங்களை வணங்கி, 'ஸ்வாமி! தமியேன் செய்யத்தக்க பணியாது? கட்டளையிட்டருள வேண்டும்' என்று வேண்டினன். அப்பொழுது சங்கரன் 'வீர! உழுந்துருளும்பொழுதிற்குட் சென்று தக்ஷனுடைய தலையைத் துணித்து, அவனியற்றும் யாகத்தையும் அழிப்பாய்' என்றனன். உடனே வீரபத்திரன் சிவனை வணங்கி விடைபெற்றெழுந்து பூதகணங்களுடன் கலந்தான். மாறுபட்டு வேகத்துடன் எழுந்த பெருங்கடல்களோடே இயைந்து ஒரு மேருபர்வதம் செல்வது போல் விளங்கினன். பூதகணங்களும் வீரபத்திரனும் பல இடிக் கூட்டங்களைப்போல் ஆரவாரம் செய்தனர்; வாட்படையை வீசினார்கள். ஆகாயத்திலிருக்கின்ற நக்ஷத்திரங்களையெல்லாம் உதிர்த்தனர். குலபர்வதங்களை ஒருகரத்தால் பிடிங்கினர்; இவர்கள் பூமி பிளந்திடும்படி நடந்தார்கள்.

---

## மாதவன் வீரனமர் மருவாத பரிச்சேதம்.

சிவனுடைய ஆணையின்படி மிகவும் வலிமையுடைய பூதகணமெல்லாம் தக்ஷனுடைய சிறந்த யாகசாலையை வளைத்துக்கொண்டு ஆங்குள்ள பல தேவர்களை வதை செய்தன. மேலும் மிக்க வொளியினையுடைய சூரியனைச் சண்டேசுவரன் கண்களிற் கனல் சிந்தக் கரத்தால் இறுகப்பிடித்துப் பற்கள் உதிரும்படி புடைத்தனன். நந்திதேவன் மகதேவனைச் சிக்ஷிக்க அணுகியபோது அவன் அச்சமுற்று, 'ஐய! என்னை ஒன்றுஞ் செய்யற்க' என்று நயந்துகொண்

டதையும் நோக்காது அந்த நந்திதேவன் அவனது கரங்களை இறுகக்கட்டிக் கண்ணைப்பிடுங்கினன்.

போரில்வல்ல மணிமான் என்ற கணநாதன் பிருகுமுனிவர் மனம் திகைக்க அவரது முகத்திலுள்ள கேசங்களை (உரோமங்களை)ப் பறித்தனன். இங்ஙனம் இவர்கள் போர்விளைத்துக்கொண்டிருக்கிறகாலத்தில் வீரபத்திரன் வெகுளியுற்றெழுந்து தக்ஷனுடைய தலையைச் சடக்கென வறுத்து, அக்கினியிலிட்டு யாகத்தைச் சிதைத்தனன்.

இந்தப் போர்க்களத்தில் தோல்வியுற்ற தேவரெல்லாம் பிர்ம்ம தேவனையடைந்து பாதங்களை வணங்கிநின்று மிக்கக் கவலையுடன் தக்ஷன் யாகத்தில் நிகழ்ந்தவையெல்லாம் எடுத்தியம்பினர். இதனைக் கேட்ட பிர்ம்மதேவன், முனிவர்களையும் தேவர்களையும் நோக்கி, 'நீங்கள் முன்னாள் விச்சுவ சிருட்டியர்கள் செய்த யாகத்தில் புகழுடன் வாழ்கின்ற சிவனை நிந்தித்தது முறையோ? இஃதன்றிச் சிவனுடைய ஆருயிர்போன்றவளாகிய உமையானவள் அக்கினியில் உயிர்துறந்த காலத்தில் நீங்களவளை விலக்காதொழிந்தீர்கள்; இவ்வாறு முறையற்ற செயல் செய்தன்றோ சிவகணங்களின் கையிற்பட்டு படாதபாட்டை யடைந்து சிறந்த வேள்வியையும் அழித்திட்டீர்கள்.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க; பிறைசூடிய சிவனிடத்தில் நீங்கள் செய்த குற்றம் இவையேயன்றி இன்னும் ஒருகோடி செய்யினும் அவற்றையும் பொறுக்கும் பெற்றியன். ஆதலால் அந்த நளிர்மதிச் சடையனை யடைந்து 'ஐய! நீயே எங்கட்குற்றதுணையாவாய்; உன்னைச் சரண்புகுந்தோம்' என்று சொல்வீரேல் அவன் நுங்கள்பால் அருள்சுரந்து ரக்ஷிப்பான்; வம்மின்! என்று அவர்களை அழைத்துக்கொண்டு கைலையங்கிரியை யடைந்தான். அம்மலையருகில் ஓராலமரநீழலில் முனிவர்களோடு தேவர்கள் சூழ வலதுகரத்தில் ஜபமாலை விளங்க புருவங்குனிய நாசிமுனையில் கண்களின் லக்ஷியஞ் செல்ல ஓரே மனத்துடன் யோகத்திலிருந்து பரப்பிர்ம்மத்தை அநுபவித்து ஆநந்தித்துக்கொண்டிருந்த சிவன், தேவர்களுடன் நான்முகப்புத்தேள் வந்தமையறிந்து, சிறந்த தவசிரேஷ்டரோடும்

கணநாதரோடும் எதிர்சென்றழைத்து அவனுடைய பாதத்தில் விழுந்து வணங்கினன். அவ்வளவில் இந்திரன் முதலான தேவர்களெல்லாம் சிவனுடைய பாதங்களை வணங்கி நின்ருர்கள். அஞ்ஞான்று பிர்ம்மதேவன் சிவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினுன்:—

நிலத்தினில்விசும்பினினினக்குநினக்கொருவர்நேரோ
அலைக்கடல்கொதிக்குமெனிலாற்றவுளதோநீள்
சலத்தினிலனைத்துலகுசாடவலநீயின்று
இலக்கியமிலாதவரை யீடுசெயலாமோ.

பூமியிலும் ஆகாயத்திலுமுள்ளவர்களுள் நினக்கொப்பாவார் எவரேனுமுளரோ? அலைகளையுடைய கடல் கொதிக்குமேல், அதனையாற்றுதற்கு நீருளதோ? மிக்க வெகுளியினுல் எல்லாவுலகங்களையும் அழிக்கவல்ல உனது கோபத்திற்கு இலக்கியமில்லாதவரை ஈடாக்கலாமோ? இனிக்கோபத்தை யகற்றுவாய்; முன்போலத் தேவர்களையும் அநுக்ரஹிப்பாய்; என்றனன். அப்பொழுது கைலயங்கிரிக் கிறைவன் வெண்ணிலவரும்ப நகைத்து விளம்பத் தொடங்கினுன்:—

'முன்னிகழ்ந்த போர்க்களத்தில் எஞ்சி நின்ற தேவர்கள் என்னை இகழ்ந்தமையெல்லாம் இனி மனத்திற்கொள்ளேன்; போர்க்களத்தில் இறந்துபட்டவரும், உடலின் எழில் குறைந்தவர்களும் முன்போல உடல்களையும் அழகினையும் பெற்றிடுக' என்றனன். இதனைக்கேட்ட தேவர்கள் ஆநந்தத்தால் ஆடினுர்கள்; அந்தணர்கள் வேதம் பாடினுர்கள்; இவர்களது செயலை அயனும் அரனும் நாடி மகிழ்ந்தனர். பின்னர் எல்லோரும் கூடிச் சிதைவுற்ற தக்ஷன் வேள்விக்களத்தை யடைந்தார்கள்.

---

## ரு-வது, பரப்பிர்ம்ம தரிசனப் பரிச்சேதம்.

ஆங்குள்ள ஒரு ஆட்டின் தலையொன்றை யெடுத்து தக்ஷன் வடிவத்திலிசைத்தனர். அவ்வளவில் தக்ஷன் தூங்கியெழுந்தவன் போல எழுந்தனன். அதன்மேல் அவன் சிவனுடைய பாதத்தில் விழுந்து வணங்கித்துதித்துப் புளகாங்கிதமுற்று வியப்புற்று

ஆநந்தக்கண்ணீர் சொரியப்பெற்றனன். அதனால் இன்னலொழியப்பெற்றுயர்வுற்றான். பின்னர் தக்ஷன் அங்குப் பிர்ம்மதேவனும் சிவனுமிருக்க, முன்பு விக்கினமடைந்த யாகம் நிறைவேறும் பொருட்டு அக்கினியில் திருமாலைக்குறித்து ஆகுதி வழங்கினன்.

அந்த ஆகுதியை விரும்பிய அருட்பெருங்கடவுளாகிய அச்சுதன் ஏந்தப்பெற்ற சங்கு சக்கரமும், பீதகவாடையும், உடைவாளும், அலர்மேல்மங்கையுறை மார்பும், நான்கு தோள்களும், நீலமேனியுமுடையவனாய்த் தோன்றினன்.

பலகோடி சூரியர்கள்போல ஒளியுடன் மங்கலம் நிறைந்த திருமாலின் வரவினைக்கண்ட பங்கஜன், சங்கரன், பாகசாதனன் (இந்திரன்) முதலானோர் சடக்கென எழுந்து எதிர் சென்று திருவடிகளிற் பணிந்து, சென்னியிற் கரங்குவித்து நின்று, ஆனந்தக் கண்ணீர் சொரியப்பெற்றனர். இங்ஙனம் வணங்கித் துதித்தவர்களுள், சிவன் திருமாலை நோக்கி அமலனே! உனது துயரறு திருவடியைச் சிந்தனைசெய்த அடியேற்கு என்ன குறையுண்டு? என்றனன். அதன்மேல் பிர்ம்மாவும், தேவர்களும், தக்ஷனும் வியப்புடன் தனித்தனித் துதித்தார்கள். இங்ஙனம் அந்த யாகத்தில் திருமாற்கு அவி வழங்கியதனால் அது இனிதுடன் முற்றுப் பெற்றது. இவ்வரலாறு பாகவதம் பத்தாம் ஸ்கந்தம் இரண்டாம் அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது.

---

## ௬-வது, மருத்துவயாகபங்கப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! இந்தத் தக்ஷனுடைய பெரிய வேள்வியையழித்த செயலினால் சிவன் வெற்றியிற் சிறந்தவனானான். இதனை விளங்க இங்குரைப்பேன் கேட்பாயாக:—

மருத்துவன் என்ற ஓர் அரசன், சிறந்த யாகம் செய்யத் தொடங்கினான். அந்த யாகத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் கூடியிருந்தார்கள். அப்பொழுது அந்த வேள்வியை அழிப்பதற்காக இராவணன் வந்தபொழுது இந்திரன் ஓடினான். யமன் காக்கை வடிவங்கொண்டு கண் சிதறப் பறந்தான். குபேரன்

ஒந்தி வடிவங்கொண்டு ஒடினன், இவ்வரலாறு ஸ்ரீவால்மீகிபகவானுரைத்த இராமகாதையிற் சொல்லப்பட்டுளது. இங்ஙனம் இந்த மருத்துவ யாகத்தை இராவணன் அழித்ததனால் அவனுக்கோர் பழியுண்டாயதேயன்றிப் புகழுண்டாயிற்றோ? இது நிற்க,

தேவர்கள் மடிய வீரபத்திரன் பூதகணங்களோடு போர் செய்த காலத்தில் மாதவனாகிய இறைவன் அந்த யாக களத்தில் விரும்பிவந்தடையவில்லை யென்பதுரைத்தேன். திருமால் அந்த தக்ஷயாகத்தில் வந்துளானென்று ஏறிட்டுச் சொன்னாலும் அதற்கு முன்னாளிற் கண்ணபிரான் ஜராசந்தனோடு போர்செய்து அவனுக்கு ஆற்றாததுபோல் பாவித்துத் தோல்வி யடைந்ததுபோல் இங்குத் தோல்வியுற்றானென்று விடையளிப்பேன்.

---

## ரு-வது, சர்வசங்காரவத்து நிருணயப்படலம்.

### க-வது, சிவனபசயப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! முன்பு சிலபேரிடத்திற் றோல்வியுற்ற சிவனோடு திருமால் போர் செய்வானேல் அவன் வெற்றி பெறுவானேயன்றித் தோல்வியுறுமாறில்லை என்றனள். அப்பொழுது ஆகம வல்லி யுரைக்கத் தொடங்கினாள் :—

புலித்தோல் தரித்த நீலமணி மிடற்றினனாகிய எங்கள் சிவ பெருமான் எதிரில் நின்று திருமால் வெற்றிகொண்டனன் என் பதை எனக்கெடுத்துரைப்பா யென்றபோது ஆரணவல்லி இயம்ப லுற்றாள்.—

---

* உபேந்திரன் ‡ உரகாபரணனை வென்ற கதை.

முன்னொரு காலத்தில் தேவர்கள், சிவன் விஷ்ணு என்ற இவ் விருவரிற் சிறந்தவன் யாவன்? என்பதை ஆராய்வதற்காகப்

---

* உபேந்திரன்—இந்திரன் தம்பி. இந்திரன் வேண்டுகோளிற்காகத் திருமாலே இங்ஙனம் அவதரித்தனன்.

‡ உரகாபரணன்—பாம்பை ஆபரணமாகவுடைய சிவன்.

பிநாகம் என்ற வில்லைச் சங்கரனிடத்திலும், சார்ங்கம் என்ற வில்லை விஷ்ணு விடத்திலும் கொடுத்து அவ்விருவருக்கும் போரை மூட்டினார்கள். இவ்விருவரும் நகைத்துக்கொண்டு மலை யிரண்டும் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்செய்வதுபோல அவ்விற்களை வளைத்துப் போர் செய்யத் தொடங்குகையில் முகில்வண்ணனாகிய விஷ்ணு வில்லை வளைத்து நாணொலிசெய்த மாத்திரத்தில் சிவன் தன் வலிமை யெல்லாமிழந்து ஓர் பதுமைபோல நின்றனன். இவ்வாறு நின்ற நிலையைத் தேவர்கள் நன்குணர்ந்தனர்.

---

சிவன் மோகனம் அடைந்த கதை.

அப்பொழுது திருமாலையே இறைவனென்று துதிசெய்தார்கள். இவ்வரலாறு வால்மீகிமுனிவனுரைத்த இராமகாதை புகலாநிற்கும். மேலும் சிவன் போருக்காற்றாது ஓடிய செய்தி வேறு பலவிடங்களிலும் சொல்லப்பட்டுளது. கண்ணபிரான் வாணாசுரனோடு போர் செய்த காலத்தில் அவ்வாணனுடைய கோட்டை வாயிலைக் காவல் புரிந்துகொண்டிருந்த கஜமுகன், ஆறுமுகன், பூதகணங்களெல்லாம் போருக் காற்றாது புறங்காட்டி ஓடினார்களன்றே, அப்பொழுது சிவனும் மயக்கமுற்றிருந்தனனென்பதை நீ உணர்ந்திலைபோலும். இதுவிஷயம் பாகவதம் முதலிய பல புராணம் பகராநிற்கும்.

---

நாராயண முனி நக்கன் கழுத்தை நெரித்த கதை.

வேல் போன்ற கண்களையுடைய ஆகமமடந்தாய்! இன்னும் உரைப்பேன் கேட்பாயாக:—

யமனுக்குத் திருமாலின் அம்சமாக நான்கு புதல்வர்கள் தோன்றினார்கள். அவர்களாவார்—ஹரி, விஷ்ணு, நரன், நாரணன் என்பவர். இவர்களுள் நாரணனென்ற முனிவனுக்கும், பிறைசூடியாகிய சிவனுக்கும் போர் நேர்ந்தவிடத்து, சிவன் அம்முனிவனுடைய சடை யொன்றைப் பறித்தனன். அப்பொழுது நாரணமுனி வெகுண்டு சிவனுடைய பரசுப் படையைப் பல கூறுபட ஒடித்தெறிந்து தன்னிரு கரங்களாற் சங்கரன்றலையை நெரிக்கின்ற

போது பிரம்மதேவன் அவ்விடத்திற்றோன்றிச் சிவனை யணுகி நின்று, நீ இந்த நாரண முனியைத் திருமாலின் அம்சமென்று அறிந்ததிலைபோலும்; என்றனன். இந்த நல்லுரையினைக்கேட்ட சிவன் உடனே நாரண முனியை அடைக்கலம் புகுந்து ஆபத்தினின்றும் நீங்கினன். இவ்வரலாறு பாரதத்திலுள்ள மோக்ஷதர்மத்தில் நூற்றிருபத்தொன்பதாம் அத்தியாயத்தில் நன்கு சொல்லப்பட்டுளது.

இதுவரையிலும் சிவனுடைய அபஜயங்கள் சில குறிப்பிட்டேன். இனி அந்தச் சங்கரன் இடுக்கணில் அழுந்திய காலத்திலும் திருமாலின் துணைகொண்டே அவ்விடுக்கணினின்றும் நீங்கினன்; என்ற விவரத்தையும் இயம்புவன் இனிது கேட்பாயாக:—

## உ-வது, சிவனது இடுக்கண் தீர்த்தப் பரிச்சேதம்.

விருகாசுரன் என்னும் பெயரினையுடைய ஓரசுரன் முன்னொரு காலத்தில் பூமியில் முக்கணீசன் பெரிதும் உவக்குமாறு பல சிறந்த தவமியற்றினன். கறைமிடற்றன்னனும் மகிழ்வுற்றுப் பிரசன்னமாகி அவ்வசுரனை நோக்கி 'அப்பா! இப்புவியில் நீ செய்த அருந்தவத்தை மெச்சினேன். நீ விரும்பிக் கேட்ட வரத்தைக் கொடுக்கிறேன் கேட்பாயாக' என்றனன். அப்பொழுது, அவ்வசுரன் அண்ணலே! 'யான் எவர் தலையில் கையை வைக்கினும் அவர் தலை துகளாகுமாறு வரந்தந்தருள்க' என்று கேட்டனன். சிவனும் பின் விளைவதோராது அங்ஙனமே தந்தோமென்றுரைத்தனன். விருகாசுரன் மிகவும் களிப்புற்று இந்த வரத்தினைப் பரிசோதிப்பதற்கு வரமீந்தான் தலையில் கைவைத்துப் பார்ப்போம் என்று முயறலுற்றான். அவ்வளவில் சிவன் 'நம்மால் இக்கொடிய துன்பம் விளைந்தது' என்று அச்சமுற்று அவ்வசுரன் தன்பால் விரைந்து வருவதற்கு முன் எல்லாவுலகிலும் எத்திசையிலுமோடி இளைத்தனன். புகலிடம் பிறிதொன்றும் காணாது பைந்துளவணிந்த பரந்தாமனுறையும் வைகுந்தமாநகரை யடைந்தனன். திருமறு மார்பனும் நிகழ்ந்த செய்தியை யறிந்தனன்.

## பரப்பிர்ம்மம் பிர்மசரிய வடிவாகிப் பஸ்மாசுரனை வென்ற கதை.

அங்ஙனமே பரந்தாமன் தவப்பிரமசரிய வடிவங்கொண்டு மலைபோன்ற வடிவினனாகிய விருகாசுரன் முன் தோன்றினான். அவ்வசுரன் ஆங்கு வந்துள்ளவன் இன்னான் என்பதறியாது அவனை நோக்கி இன்னுரை சொல்லத் தொடங்கினான்:—

'நீர் யார்? எந்த ஊரிலிருந்து எவ்வழியாக வருகின்றீர்? உம்முடைய அழகிய முகமும் சரீரமும் மனமும் வியர்க்கும்படி அயர்ச்சி யுடையவரா யிருக்கின்றீர்? தினந்தோறும் உயிர் தபித் தற்குரிய செயலைச் செய்யலாமோ? இந்த நிழலிடத்தில் ஒருகணப் பொழுதேனும் தங்கிச் செல்லலாகாதோ?' என்றனன். இதனைக் கேட்ட பிர்ம்மசாரி அவ்வசுரனை நோக்கி, 'ஐய! நும்முடைய முயற்சி இன்னதென்று சொல்லத்தக்கதாயிருக்குமாகில் சிறி தெனக்கு முரை செய்வீர்; கடலாற் சூழப்பெற்ற உலகில் வாழ் பவர்கட்கெல்லாம் மெய்மையினையுடைய முயற்சி செய்யவேண்டி யது இன்றியமையாததொன்றுமன்றோ?' என்றனன். இந்த மதுர மான மொழியைக் கேட்ட விருகாசுரன், 'இவன் சிறந்த அறி வுடையவனாகவிருக்கிறான்' என்று தான் சிவனை நோக்கித் தவஞ் செய்ததும், அவன் பிரசன்னமானதும், வரந்தந்தது மெல்லாம் ஒன்றுமொழியாதபடி சொன்னான்.

பிர்ம்மசாரி இவ்வுரையினைக் கேட்டவுடன் புன்முறுவல் செய்து, 'அவுணர்தலைவரே! சிவனுடைய சொற்களில் ஏதேனும் உண்மையுளதென்று கருதியோ அவ்வுரையை அன்புடன் விசுவ சிக்கின்றீர்; அந்தச் சிவன் கபட முடையவனென்று கருதி யன்றோ முன்னாளில் தக்ஷன் தேவர்கள் முன்னிலையில் அவனைச் சபித்தான்; அதனால் அவன் பிசாசுகளோடு கூடி உழன்று திரி கின்றான்; உலகத்தில் அவனை எவரும் அங்கீகரிப்பதில்லை; அந்தச் சிவனுடைய கதி இங்ஙனமானால் அவன் தந்த வரம் எங்ஙனம் பலிக்கும்? அவன் உமக்குத்தந்த வரம் பலமுடையதாம் என்று கருத்துட்கொள்வீரேல் நும் கரத்தால் நும் சிரசைத்தொட்டு இங்ஙனமே பரிசோதிக்கக் கடவீர்; பின் யான் கூறியபடி அவன்

தந்தவரம் பிழைக்குமேல் அந்தச் சிவன் சென்றவழி விரைந்து சென்று அவனைக் கொல்வீர்' என்று துணிவு கூறினன்.

இங்ஙனம் பிர்ம்மசாரி சூழ்ச்சியுடன் கூறிய வுரையினைக் கேட்ட அவ்வசுரன் மனமருட்கொண்டு சிறந்த தன் கரத்தைச் சிர மீது வைத்தனன். அப்பொழுது இடி விழ உடைந்து சிதறிய மலைச் சிகரம்போல அவன் தலை துகளாய் விழுந்தது. அவ்வசுர னும் இறந்துபட்டனன். அப்பொழுது தேவர்கள் பூமழை பொழிந்தனர். பிறைசூடிய சிவனும் 'நம் துன்பம் இன்றோ டொழிந்தது' என்று மறைகொண்ட மந்திரத்தால் மாயனை வாயாரவாழ்த்தினன். இவ்வரலாறு பாகவதம் பத்தாம் ஸ்கந் தத்தில் தொன்னூற்றிரண்டாம் அத்தியாயத்தில் இனிதுரைக்கப் பட்டுளது.

---

அந்தகாசுரன் கதை.

ஆகமமடந்தாய்! இது நிற்க, மிக்க வலிமையடைந்த அந்தகா சுரன் என்பான் உலகினில் தன்னை யொப்பார் எவருமில்லை யென்று அஹங்கரித்துச் சங்கரனை யடைந்து போர் செய்தான். அவன் செய்த போருக்காற்றாது சங்கரன் மிக்க அச்சமுற்றுச் செங்கண்மாலையடைந்து சரண்புக்கனன். திருமாலும் 'இனி நீ அஞ்சற்க' என்று அபயமீந்தனன். அதன்மேல் ரேவதி என்ப வளை அழைத்து அந்தகனை வென்று வருமாறு கட்டளையிட்ட னன். அவளும் அந்தகனோடு போர்புரிந்து வெற்றிகொண்டாள். இவ்வரலாற்றைப் பாரதத்திலும் மச்சியத்திலுங் காணலாம். பின் னர் மாண்டொழிந்த அந்தகன் உடலிற்றோன்றிய குருதியினின் றும் பல அந்தகர்கள் தோன்றி உமையிடத்திற் காதலுற்றுச் சென்றனர். அப்பொழுது வயிரவன் அவர்களோடு பொருது ஆற்றாது திருமாலை வந்தடைந்து அவனுடைய அநுக்ரஹம்பெற்று அவ்வந்தகர்களை வென்றனன். இவ்விவரம், கூர்மபுராணம் பதி னாறும் அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது.

---

## ரு-வது, மகா பிரளயத்தில் விதி சிவாதிகளைச் சங்கரித்த பரிச்சேதம்.

இங்ஙனம் ஆரணவல்லியுரைக்க, ஆகமவல்லி கூறத்தொடங்கினள்.— மின்னிடை மடந்தாய்! நீ ஈண்டெடுத் துரைத்தபடி எங்கள் சங்கரனைக்காட்டிலும் திருமாலே மிக்க வலிமையுடையவனா யிருப்பானேல் சிவன் சரபப்பக்ஷியாகித் திருமாலாகிய நரசிங்கத்தின் உடலைப்பிளக்கின்ற காலத்தில் அவன் எதிர்த்துப் போர் செய்யாதிருப்பனோ? என்றனள். இதனைக்கேட்ட ஆரணவல்லி புன்முறுவல் கொண்டு மடந்தாய்! அன்று அரன் அமர்க்களத்தில் சரரூபியாய் நரமடங்கலை (நரசிங்கத்தை) வென்றனன் என்று கூறினை. இங்ஙனம் நீ கூறியது பொருந்தாக்கூற்றென்பது உன் புந்தியிற் பதியுமாறு புகல்கின்றேன் :—

இத்தலத்தவர்களாற் புகழப்பெற்ற எஜுர்வேதத்தில் வேதமெனத்தகும் தைத்திரியோபநிடதத்தில் முதற் பருச்சத்தின் பதினைந்தாம் அநுபவத்தில் பிரளயாபத்தில் அரனுடன் பிர்ம்மாதியர்களை யழிப்பவனுமாய்ப் புவன ஈசானனும் அரியெனப் பெயர் படைத்தருளும் அச்சுதனைத் தேவர்கள் துதிசெய்தார்கள் என்று தெளிவாகச் சொல்லியுள்ளதால் அந்தத் திருமாலிடத்திலே ஸர்வ சங்காரத்வதர்மம் பொருந்தியுளதென்பது தெளிவன்றோ! அங்ஙனமிருக்க, செங்கண்மாலைச் செஞ்சடையினன் செருவில் வென்றனன் என்று செப்புமோ? என்றனள். இதனை அமையுறக்கேட்ட ஆகம மடந்தை சொல்லத் தொடங்கினள் :—

ஆரணமடந்தாய்! நீ முன் குறிப்பிட்டுரைத்த உபநிடத மந்திரத்தில் ஈசானன் என்ற சொல்லிருத்தலால் அந்த ஈசானனாகிய சிவனே அரியை அழித்தனெனக்கொள்வது தக்கதன்றோ! என்றனள். அதற்குத்தரம் ஆரணவல்லியும் இயம்பலுற்றாள்.— பூங்குழலாய்! யான் முன்னுரைத்த உபநிடத மந்திரத்தில் ஈசான சப்தம் உபபதத்துடன் கூடியிருப்பதறிவாய். அந்த உபபதத்துடன் கூடியிருக்கிற புவன ஈசானன் என்ற சொல் ஹரியையுங் குறிப்பிடும். தனித்த ஈசானன் என்ற சொல்லே பிறையணிசடையனாகிய சிவனைக்குறிப்பிடும்.

இது நிற்க, ஈசானன் என்ற சொல் உபபதத்தோடு தொக்க போழ்திலும் தொகாதொழியினும் அதற்கு முக்கியப் பொருளாய் விளங்குகின்றவன் முகில்வண்ணனே யாவான். இதனைப் பின்னர் விரிவாக எடுத்தியம்புவேன். அன்றியும் ஈசானன் என்று * அடைச் சொல்லோடமர்ந்த சொல் செஞ்சடையினனையே குறிப்பிடுமென்று நீ குறிக்கொண்டுரை செயினும், இடபவாகனனைத் திருமால் வென்றுளானென்ற ஓர் பெருவழக்குப் பொய்க்குமோ? இவையெலா மொருபுறமிருக்க, மஹா பிரளயத்தில் பிர்ம்மதேவனையும், சங்கரனை யும், தேவர்களையும், மற்றுமுள்ளோர்களையும் காரணப்பொருளாகிய திருமாலே சங்கரித்தருள்வன் என்று மஹோபநிடதம் உரையா நிற்குமன்றோ! மடந்தாய்! மேலும் யான் உரைப்பதை இனிதாய்க் கேட்பாயாக. செங்கண்மால் யாவராலும் வெல்லுதற் கெளியவனன் றாதலால் இவனே எல்லோரையும் வெற்றிகொள்ளும் வலிமையுடை யவனென்றும், தேவதேவனென்றும் பரமாத்துமிய உபநிடதம் பகராநிற்கும். நான்முகன் சிவன் முதலோரனைவரும் பிரளயத் தழியுமாறு திருமாலே போர்புரிவான் என்று வேதம் இசைத்தற் கேற்ப, புராணங்களிலும் சொல்லப்பட்டுளது. அதனையும் இயம்பு வேன் :—

அயன், செஞ்சடையன், இந்திரன், வருணன் முதலியோரனை வரையும் திருமாலே சங்கரித்திடுவனாதலால் அரியெனப் பெயர் பெற்றனன்; என்று பதுமபுராணத்திலும், நான்முகனோடு சிவன் முதலான தேவர்களையும் சிரீதரனே மாவூழிக்காலத்தில் சங்கரிப் பான் என்று பாஞ்சராத்திரம் சாத்விகசங்கிதையிலும், திருமாலின் சக்தியால் ஊழிக்காலத்தில் அயன், அரன், இந்திரன், சூரியசந்திரர் முதலியோரெல்லாம் தத்தம் பதவிகளையும் சக்திகளையும் இழந்து மாய்வார்களென்று விஷ்ணு தர்மோத்தரத்திலும் கூறுநின்றன.

ஆகமமடந்தாய்! செங்கண்மாலே சகலசங்காரி என்பதனை இன்னும் வேதசாஸ்திர புராணங்களால் எடுத்தியம்புவேன். இங்ஙனம் ஸர்வ சங்காரத்வதர்மமுடையவனாகிய திருமால் அபஜயமுற்று

* அடைச்சொல்லோடு கூடிய சொல்—புவன ஈசானன்.

னென்று நீ உரை செய்வது வேத வழக்கோடு முரணுமென் றுணர்வாய்.

---

சஉ-வது, பிரமருத்திரேந்திராதி சரபாவதாரப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! நீ உரைத்தவையெல்லாம் ஒருபுறமிருக்க, போர்க்களத்தில் சரபமும், நரசிங்கமும் போர்புரிந்ததும், வென்றதும் வேதவழக்கொடு மாறுபாடின்றி ஈண்டெடுத் தியம்புவேன். நாராயணன், தானே ஜகத்காரணனுயும் அதற்கேற்ற செயலையுடையவனுயுமிருக்கின்முன் என்பதை அவன்றனே யாவர்க்குந் தெள்ளிதிற் புலப்படுத்தக்கருதி சிறந்த இரத்தினமயமான இரணியந் தூணில் நரமடங்கலாய்த்தோன்றி அவனைக்கொன்று வேதநெறி யொழுக்கத்தை வளர்த்த காலத்தில், அந்த நரசிங்கரூபியைக்கண்ட உலகினரும் வானத்தவரும் நடுநடுங்கினர். இந்நிலையைக்கண்ட இந்திரன் தேவர்களுடன் பிர்ம்மதேவனை யணுகி, அவன் சரண கமலத்தைச் சிரமீதணிந்து 'இறைவ! உன்னுடைய அநுக்ரஹத்தால் உலகினை வருத்திய இரணியனை என்னிமித்தமாகத் திருமால் சென்று அவனுடைக் குடரைப்பிடுங்கிக் கொன்று கோபந்தணியாது நிற்கின்முன். அவனது நிலைகண்ட உலகெலாம் அச்சமடைகின்றன. அவை என்னுலியம்பத்தாத்தனவோ? உலகீன்ற அண்ணலே! இவ்விடரினைக்களைதல் உன்பரமன்றே'! என்றனன்.

அப்பொழுது பிரம்மதேவன், 'கண்டகனுகிய இரணியனைக் கொன்ற பின்பும் செங்கண்மாலிற்குக் கோபந்தணியாதிருத்தற்கு ஏதேனும் காரணமிருத்தல் வேண்டும்' என்று தனக்குட்கருதி, இந்திரனை நோக்கி, 'இனி நீ அஞ்சற்க, மாமேருவை வில்லாகக் கொண்டு முப்புரத்தை நெருப்பிட்டவனுகிய காலகாலற்கலால், வெற்றிமாலின் வெஞ்சினம் வெல்லுதற்கெளிதாமோ? இனி நாம் கைலயங்கிரி செல்வோம்' என்றனன். இந்திரனும் அதற்குடன் பட்டனன். பின்னர் இவர்கள் தத்தம் ஊர்திகளில்ஆரோகணித்துப் பதினான்குலகத்தையும் ஈன்ற உமைபங்காளன் உறையுங்கோயிலை யடைந்தனர். ஆங்குள்ளார் மலரவன் வருகையை மாதொரு பாகனுக்கறிவிக்க, அவன் எதிர் சென்று பிர்ம்மதேவனைச் சத்கரித்தனன். அதன்பிறகு இந்திரன் முதலான தேவர்கள் இருள்செறி

கண்டனாகிய இறைவன்தாளை வணங்கினார்கள். இங்ஙனம் பணிந்து நின்றவரை தன் கடாக்ஷத்தால் உபசரித்த சங்கரன் பிரம்மதேவனை நோக்கி, 'தேவரீர் இங்கெழுந்தருள்வதற்குக் காரணமென்னை? இத் தேவர்கட்குற்ற குறையாது'? என்று வினவினன். அதற்கு நான் முகன்,

காலனைச்சாடினாய்காளகூடத்தையன்
றேலவுண்டிமையவர்க்கிடர்கெடுத்துதவினாய்
கோலமாமேருவிற்கோலினாயுலகெலாம்
சாலநின்வெகுளியாற்சங்கரித்திடவலாய்

யமனைக் காலாலேசாடியுதைத்தாய்; பாற்கடலிலெழுந்த காளகூடம் என்ற விஷத்தையுண்டு தேவர்களின் துன்பத்தைத் துடைத்துபகரித்தாய்; அழகிய மாமேருவை வில்லாக வளைத்தாய்; உலகனைத்தையும் உனது கோபத்தால் சங்கரிக்கவல்லாய்; உன்னுடைய அருளின் பெருமையால் இந்தப் பேருலகினுக்குத் துன்பம் வந்தடைவதில்லையாயினும் யான் இங்கு வந்த காரணம் இன்னதென்றறைவேன்:—

அலர்மேல்மங்கையுறையும் புயத்தினனாகிய எம்பிரான் நாமெல்லாம் உய்யும்வண்ணம் நரசிங்கரூபியாய் உலகினையடைந்து லோககண்டகனாகிய இரணியனதுடலை யிருபிளவாகப் பிளந்தனன்; மேலும் அந்த இரணியனுடைய பலகோடி அவுணசேனைகளையும் போர்க்களத்திற் பொடியாக்கினன்; பின்னரும் சிங்கப்பிரானுக்கு முன்னினும் மும்மடங்கதிகமாகவே வெகுளியுண்டாயிற்று.

"வடவையைத்தின்றிடும்வளைகுலக்கிரிகளைப்
பொடிபடப்பிசையுமம்புதிகளைப்பருகும்வான்
வெடிபடக்குரல்விடும்விழிநெருப்பெரியுமக
கடையுகத்திடியெனக்கடியபற்கதுவுமால்"

ஆசறுங்கோலநீடகிலசங்காரமேல்
நீசெயுஞ்செயல்களந்நியமமும்பழுதறப்
பூசல்செய்கின்றவப்புருடகண்டீரவத்
தேசுறுஞ்சினமொழித்தெம்மையாளென்றலும்

'வடவாமுகாக்கினியைத் தின்கின்றனன்; அஷ்டகுலபர்வதம்பொடியாம்படி கையிற்பிடித்துப் பிசைகின்றனன்; கடனீரைப் பருகுகின்

றனன் ; அண்டம்வெடிபடும்படி கெர்ச்சிக்கின்றனன் ; கண்களில் நெருப்பெழ விழிக்கின்றனன் ; ஊழிக்காலத்திடிபோலப் பற்களை நெறுநெறுவென்று கடிக்கின்றனன். குற்றமற்ற அழகுடன்விளங்கி ஸர்வசங்காரம் இனிமேல் நீ செய்யப்போகிற நியமமும் பழுதடையப்போர்செய்கின்ற நரசிங்கத்தின் மிக்க சினத்தையடக்கி எங்களையாள்வாயாக' என்றனன். இதனைக்கேட்ட நாரியோர்பாகன் பிரம்மதேவனை நோக்கிச் சொல்லத்தொடங்கினன் :—

எல்லையற்றவரத்தினையுடைய இரணியாசுரனையும் வெல்லவல்ல நரசிங்கத்தை நாம் வெல்லலாமென்பது புல்லிமையன்றோ ! என்னைப்பெற்ற வுன்னையும் படைத்த மூதாதையாகிய அவ்வரியின் சிறந்த ஆணையினாலன்றோ உலகெலாம் நிலைபெற்று விளங்குகின்றன. ஆதலால் அவன் நம்மால் வெலற்கரியனுகுமென்றுரைத்துப் பின் மனத்திலொன்றெண்ணி யுரைக்கலுற்றான் :—

கருடப்பறவை, பாம்பினைக்கொல்லும் ; பகற்பொழுதில் வலிமைகுன்றிய கூகையைக் காக்கை வெல்வதுபோல யானையைச் சிங்கம் வெல்லும். ஆட்டுக்கடாவைக்கண்டு குரங்கு அச்சமுறும் ; இத்தன்மையினைப்போலச் சரபபக்ஷியைக் காணுமேல் நீர் கூறிய அந்த நரசிங்கமும் பயந்தோடும் ; என்று சங்கரன் சரபபக்ஷியாய்த் தோன்றினன்.

---

ரு-வது, சரபசங்காரப் பரிச்சேதம்.

அப்பொழுது பிர்ம்மதேவன் இந்திராதியரைநோக்கி, 'நாமெல்லாம் இப்பொழுது சரபபக்ஷியாய்த்தோன்றிப் புகழினையடைவோம்' நான்முகன், அஷ்டகுலபர்வதங்களைக் கால்களாகவும், சூரிய சந்திரர்களைக் கண்களாகவும், வாயுவைச் சிறகுகளாகவுங் கொண்டு சரபரூபமெடுத்தனன். அவ்வளவில் சிவமயச்சரபம் போர் செய்தற்கெழுந்தது ; விரைவிற் சென்ற சரபத்தின் சிறகுகளிற் றோன்றிய சண்டமாருதக்காற்றினல் மலைகளும் கடல்களும் மண்ணும் விண்ணும் நிலைகுலைந்தோட அஷ்டமாநாகங்களும், திக்குக் கஜங்களும் நடுங்க, சென்று கூடிய சரபமும், கோபாக்னியால் தகிக்கின்ற நரசிங்கமும், மலையும் மலையும் போர் செய்வதுபோல

உங்கரித்தன. இந்த வொலியானது அண்டகோளத்தைக் கிழித்து ஆரவாரத்தை யுண்டாக்கியது. இங்ஙனம் நரசிங்கமும் சரபமும் நெருங்கிப் போர்செய்தலால் ஆகாயத்தில் வாழ்பவருக்கும் முன்னினும் பயமிரட்டித்தது.

அந்தச் செருக்களத்தில் கனல்விழிச் சரபம் எய்த்தோலமிட எற்றியெற்றி யெறிந்து தன் வச்சிரநகங்களால் அங்கங்களெல்லாவற்றிலும் குருதிகாணும்படி பரிபவம்பண்ணி, இரணியனதுடலைப் பிளந்தவாறு பிளத்தற்கு ஆயிரங்கரங்களாற் சரபத்தைச்சுற்றிப் பிடித்து அதன் எலும்புதோல்களை வெவ்வேறாக்கி மாமேருபர்வதத்தின் புறத்துப்போய்விழுமாறு எறியத்தொடங்கினன். அவ்வளவில் சரபத்தின் கரங்களும், கால்களும், சிரமும், சிறகுகளும், வலிமையும், உடலுமுறிந்தன. இங்ஙனம் மாமேருபருவதத்திடைப் போய்விழுஞ் சரபம் சின்னபின்னப்படுஞ் செய்கையைக்கண்ட அவுணரும், முனிவரும், கின்னராதியரும், கருடரும், கந்தர்ப்பரும் அஞ்சி நடுங்கினர்கள். இனிமேலும் இந்த நரசிங்கத்தினால் உலகினுக்கு இடையூறுநேருமோ என்று இலக்குமி தேவியைச் சரண் புகுந்தனர். அப்பொழுது தேவியார் நரசிங்கப்பிரான் முன்னிலையில் தோன்றினர். உடனே சிங்கப்பிரானுக்குச் சினம் நீங்கப்பெற்று, பிரகலாதனை அநுக்ரஹித்து அவனுக்கு முடிசூட்டுவித்துத் தேவர்கட்கு அபயமீந்து மறைந்தருளினன்.

இங்ஙன முரைத்தவை யெல்லாம் வாமனீயத்திலும், ஆதித்யத்திலும், காரூடத்தில் இருநூறுமத்தியாயத்திலும், ஆக்கினீயத்தில் நாற்பதாம்அத்தியாயத்திலும், நாரசிங்கபுராணத்திலும், பாகவதத்திலும் பரக்கக்காணலாம்.

---

## ௬-வது இரணியசமூக சங்காரப்பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! நரசிங்கப்பிரான் இரணியனைச் சங்கரித்தபின்னரும் இவ்வுலகினில் தங்கியிருத்தற்கு இன்னுமோர் உத்தரமுனக்கோதுவன், கேட்பாயாக.—நரசிங்கத்தினால் மாண்ட இரண்யனதுடலினின்று முண்டாகிய குருதி வெள்ளமானது பூமியிற்பரவி

நாகலோகத்திலுஞ் சென்று சிந்தியது. அத்துளித்திரள்களெல்லாம் வலியினையுடைய இரணியகணங்களா யெழுந்தன. அப்பொழுது விண்ணிலுறைகின்ற தேவர்கள் அச்சமுற்று, 'இனியாது தீங்கு விளையுமோ' என்று வைகுந்தத்தையடைந்து அங்கிருக்கின்ற நர சிங்கப்பிரானை வணங்கி நிகழ்ந்தசெய்தியைக் குறிப்பிட்டார்கள். அப்பொழுது சிங்கப்பிரான் அவர்கட்கு அபயந்தந்து, மேகமானது மாமேருகிரியின்மீது வருவதுபோல கருடன்மீது ஆரோகணித்துப் பாதாளலோகத்தையடைந்து அங்குள்ள அவுணர்களையெல்லாம் வதைத்தனன். இவ்விவரம் பிர்ம்மாண்ட புராணத்தில் ஓதப்பட்டுளது. இன்னும் சொல்வேன் கேட்பாயாக.

---

## எ-வது தேளிசிங்கர் வயிரவற்கருள்செய்த பரிச்சேதம்.

இவ்வுலகிலுள்ள எல்லாவுயிர்களையும் சத்தியின்கணம் அழித்தலைக்கண்ட பைரவன் அச்சமுற்றுச் சங்கரனையடைந்து உற்ற செய்தியை யுரைத்தனன். அப்பொழுது சங்கரன் பைரவனை நோக்கி, 'ஐய! அந்தச் சத்திகணத்தினர் அரிமயத்தவர்களேயாவர்; அந்த நரசிங்கப்பிரானும் நாகலோகத்திலிருக்கின்றனன்; நீ அவன் பாலுற்று இச்செய்தியை இசைத்திடுவாய்' என்றனன். அவனும் அங்ஙனமே உரகலோகமடைந்து தனியேயிருந்து ஒருமைமனத்துடன் அந்தச் சிங்கப்பிரானைத் தியானஞ் செய்தனன். அந்தச் சிங்கப்பிரானும் அவ்விடம் வந்தருளினன். பைரவன் அன்புற்ற மனத்தினனாய்த் தொழுதுநின்று, 'தானவர்காலனே! சத்திகணங்கள்செய்யும் இம்சையால் மாநிலத்திலுள்ள உயிர்களெல்லாம் பயங்குகின்றன' என்றனன். அப்பொழுது நரசிங்கப்பிரான் அந்தச் சத்திகணமெல்லாவற்றையும் ஆங்கழைத்து அவர்களின் உக்கிரங்களெல்லாம் பைரவனுக்குரைத்தனன். பைரவன் துதி செய்து நரசிங்கத் தினிடைதோன்றிய பேரொளியினூடே மறைந்தனன். இவ்வாச்சர்யத்தைக் கண்ணுற்ற தேவரும் முனிவரும் நரசிங்கப்பிரான் திருவடியைப்பணிந்து, 'இறைவ! பைரவன் நின்பேரொளியினிடையே மறைந்த இப்புதுமையை அருளிச்செய்யவேண்டும்' என்று வேண்டினர். அதற்குச் சிங்கப்பிரான்,

அன்னவாளரியுநீடகிலகாரணனும்யான்
முன்னுசத்துவரசதத்தமமெனுமுக்குணம்
தன்னையான்மன்னியேசகலலோகத்தையும்
பன்னுகாவற்படைப்பழிப்பினைப்பண்ணுவேன்.

மற்றெனைத்தவிரவோர்வத்துவந்தரமிலைப்
பற்றெனும்பாசசம்பந்தமற்றார்க்குமேல்
முற்றுபாசனையலான்முத்தியின்மார்க்கமும்
நற்றவேறிலையெனுநம்புமாறுரைசெய்தான்.

சகல ஜகத்காரணனும் யானே யாவேன். சத்வம், ராஜசம், தாமதம் என்ற மூன்று குணங்களையுமடைந்து முறையே காத்தல், படைத்தல், அழித்தல் என்ற முத்தொழிலைச் செய்கிறேன்; என்னைத்தவிர பரவஸ்து வேறு புறம்பொன்றில்லை. புறப்புண்டான பாசமற்று உபாசனையை மேற்கொண்டார்க்கன்றி முக்திமார்க்கத்தைப் பற்றுதற்கு வேறு வழியில்லை' யென்று நம்புமாறுரைத்தருளினன்.

இவ்வரலாறு, கூர்மபுராணம் பதினாறும் அத்யாயத்தில் உரைக்கப்பெற்றுளது.

---

அ-வது, திரிபுரசங்காரப் பரிச்சேதம்.

இங்ஙனம் ஆரணவல்லி சிறிதுங்குறையாமல் வியப்புடன் உரைத்தவுடன், ஆகமவல்லி புன்முறுவல்கொண்டு சொல்லத் தொடங்கினாள்:—

மறைவல்லி! நீ மாதவனே பராபரன் என்றிசைத்தாய்; அங்ஙனமாயின் அவன் சிவனை இடபமாய் நின்று தாங்குதற்குக் காரணம் யாது? என்றனள். அதற்கு மறைவல்லி தக்கவாறுத்தரம் இயம்பலுற்றாள்.— சிவன் முப்புரத்தைத் தீக்கிரையாக்கியகாலத்தில் மாமறையொழுக்கத்தையும், விரதத்தையும் மேற்கொண்டாரோடும் பூமியும் பாதாளமுற, தேவர்கள் தமக்காதாரமின்றி நிலைகுலைந்து அபயம் என்றலறினார்கள். அப்பொழுது திருமாலின் அம்சமாகிய கபிலமுனிவர் அஞ்சாமையுடைய விடையாய் (இடபமாய்) சோர்வுற்ற பூமியை வருத்தமின்றிச் சுமத்தலாகிய சிறந்த லீலையை இயற்றுதொழிவனேல் பிறைசேர்சடையன் திரிபுராந்தன் என்ற

பெயரையுடையவனுவனே? என்றனள். இதனைக்கேட்ட ஆகம வல்லி, ஆரணவல்லியை நோக்கி, 'நல்லாய்! புவிமீது சுமப்பதுவோ பரவஸ்துவுக்கடையாளம்; என்னே! இது நன்று நன்றென்றனள். அதற்கு மறைவல்லி அழகினையுடையாய்! பலவகையான உலகிற்குத் திருமாலே பதியாயிருக்கின்றனனுதலால், அவனே ஆமையாயும், ஆதிசேடனுயுமிருந்து இப்புவியைத் தாங்குகின்றான். மேருமலையை வில்லாக வளைத்த உங்கள் சிவன், எம்மிறைவனுல் தாங்கப்பட்ட இப்புவிக்குள்ளிருக்கின்றனனே? அன்றிப் புறத்துளானே? இஃ தன்றி உங்கள் சிவனே உலகிற்குத் தனிநாயகனுயிருப்பானேல் முன் நிலைகுலைந்து சோர்வுற்ற புவியை மனப்பரிவுற்றுத் தாங்காதொழி வனே? என்றனள். அதற்கு ஆகமமடந்தை, எல்லாவுலகிற்கும் எங்கள் சிவபெருமானே இறைவனிலனேல் உங்கள் திருமால் திரிபுர சங்காரகாலத்தில் அம்பாக வருவனே? என்றனள்.

---

கூ-வது, திரிபுரதகன முயற்சிப்பரிச்சேதம்.

இதனை அமைவுறக்கேட்ட ஆரணவல்லி, 'நீறு செறி மேனி யினனுகிய சிவன் துஷ்டர்கள் வாழ்திரிபுரத்தைத் தீக்கிரையாக்கு தற்குச் செய்தமுயற்சியை ஈண்டெடுத்தியம்புவேன் கேட்பாயாக' என்றியம்பலுற்றாள்:—

வரத்தினுல்மிக்க வஞ்சகர் வாழ்முப்புரத்தினுல் உலகிற்கிடுக் கண் விளையக்கண்ட வச்சிரக்கரத்தினனுகிய இந்திரன் முதலா னோர் சிவனைப் பணிந்து நின்றனர். இங்ஙனம் பணிந்தவர்களின் மனத்துயர்கெட அவர்கட்கு அபயமளித்து ஒரு பெரு வேள்வி யொன்று தொடங்கினன்.

அவ்வளவில் தானவமந்திரியாகிய சுக்கிரன் சிவனுடைய சடையை யெடுத்துச் சமித்தாக வேள்வித்தீயிலிட்டனன். அந்த அக்கினியினின்றும் பாம்புகள்தோன்றின. அவற்றை உமையோர் பங்கன் இறுகப் பிடித்துக்கொண்டு தேவர்களைநோக்கி, முப்புரத் திலுள்ள பகைவர்களை வெல்வதற்கு நுங்கள் வலிமையிற் பாதியைத் தருவதோடு, யான் பசுபதியாம் வரமும் தருவீராக' என்று பிரார்த்

தனை செய்தான். அவர்களும் அங்ஙனமே வரந்தந்தனர். அதன் மேல் சிவன் தேவர்களைநோக்கி, நீங்கள் என்னை 'பகைவர் மேற் சென்று போர்புரிதி' என்பீரேல், பெரியானொரு சாரதியைப் பெறுமாறு செய்வீராக; அந்தச் சாரதியைப் பெறுவனேல் இன்றே பகைவர் முப்புரத்தை அழித்திடுவேன் என்றனன்.

தேவர்கள் நான்முகப்புத்தேளிடம் சென்று சிவனுக்குச் சாரதியாமாறு வேண்டினர். அதற்கு நான்முகனிசைந்து பிஞ்ஞகன்றன் பீடுடைத்தேருக்குச் சாரதியாயமைந்து தேர்கடாவினன். சிவன் பன்னாளாக மிகப் பெரியபோர்விளைத்தும் முப்புரத்தில் வாழ்வார்கள் சிறிதும் இளையாதிருந்தனர். இந்நிலைமை கண்ட சிவன் மனவருத்தமுற்று நின்றதைக்கண்ட தேவர்கள், அநந்தன்மீது அறிதுயிலமரும் அமலன்றன் அடியிணை வணங்கி 'எந்தாய்! முக்கணன் முப்புரத்தில் வாழ்வாரோடு நாட்பல போராடியும்பயனெய்தாமைகண்டு அன்னவன்மனம்வருந்துகின்றனன்; இனி அவர்களை வெல்லுமாறு அநுக்கிரஹிக்கவேண்டும்' என்று வேண்டினர். அப்பரமனும் இவரது வேண்டுகோளிற் கிரங்கி * பௌத்தாவதாரங்கொண்டு முப்புரம்சென்று ஆங்குள்ளார்க்கு மோகனுகமத்தை யுபதேசித்து அவரது தவவொழுக்கத்தை ஒழித்து மனமாசுறும்படி செய்து மயக்கினன். மேலும் ஓர் நல்ல பசுவாகவுமானான். இதனைக்கண்ட நான்முகன் அப்பசுவினைத் தொடர்ந்து செல்லும் கன்றாயினன். அந்தப்பசுவும் கன்றும் பகைவர்களின் புரத்தையடைந்து கொடியபாபமே ஜீவனுக்கொப்பாகிய அமிர்தமாயிற்றோ வென்று சொல்லத்தக்க அவ்வமிருதம் தங்கப்பெற்ற கிணற்றைக்கிட்டி அவ்வமிருதத்திற் சிறிதும் எஞ்சாதுபருகி, கன்றோடு கூடியபசுவானது அகன்றது. அதன்மேல் சிவன் பிர்ம்மாவிடத்து அரிபஞ்சர மந்திரோபதேசம் பெற்று

* "கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப்புரம்புக்கவாறும்
கலந்தசுரரைஉள்ளம்பேதம்செய்திட்டுயிருண்டவுபாயங்களும்"

என்று ஸர்வேசுவரன் பௌத்தாவதாரங்கொண்டு திரிபுரத்திற்புக்கு ஆங்குள்ளாருக்கு மோகனநூலை உபதேசித்து அவர்களுடைய சத்தையைப் போக்கினனென்று ஆழ்வாரருளிச்செய்ததும் ஈண்டறியத்தக்கது.

மாமேருபருவதத்தை வில்லாகக்கொண்டு அரியாகிய பாணத்தை அம்மந்திரத்தை ஜபித்துவிட்டான். உடனே முப்புரம் தழலிற் கிரையாயின.

---

## ௰-வது, விஷ்ணு சிவன் முன்னிலையில் திரிபுரத்தை எரித்த பரிச்சேதம்.

சிவன் இங்ஙனம் முப்புரத்தைத் தழலிற்கிரையாக்கிய காலத்தில் திருமால் பாணமாகியும், அரிபஞ்சரமென்ற மந்திரரூபமாயும், உலகினைத்தாங்கும் இடபமாயும், அமிருதத்தைப் பருகும் பசுவாகவும், சிவனுக் கந்தராத்மாவாகவும், பௌத்தமுனியாகவுமாயின னென்று நிச்சயித்துப் பல நூல்கள் உரையாநிற்கும். ஆகமமடந்தாய்! அவற்றையெல்லாம் ஈண்டெடுத்தியம்புவேன்; கருத்துடன் கேட்பாயாக:—

சிவன் மிக்கபுகழினையுடைய தேவர்களிடத்திலுள்ள பாதி வலிமையையும், அவர்கள்பால் பசுபதியாமென்ற வரத்தையும் பெற்றனனென்பதை எஜுர்வேதத்தில் ஆறும் காண்டம் இரண்டாம் பருச்சத்தில் தெளிவாகக் காணலாம்.

அயன் அருளுடன் அரனுக்கு அரிபஞ்சரம் என்ற மந்திரத்தை உபதேசித்தனன் என்ற விவரம், நாரதீயம் மந்திரசாலம் என்ற நூல்களில் ஓதப்பட்டுளது.

சிவன் திரிபுரசங்காரஞ் செய்யும் பொருட்டுத் தன் சடையே சமித்தாகக்கொண்டு வேள்வி செய்த வரலாறும், திருமால் பசுவாகித் திரிபுரத்திலுள்ள அமிருதகூபத்தின் அமிருதத்தைப்பருகிய விவரமும் பாகவதத்திற் சொல்லப்பட்டுள்ளன.

திருமால் சிவனிடத்தில் அந்தராத்மாவாயிருந்து மாமேரு மலையை வில்லாகவளைக்கும் வலிமையை அவனுக்களித்தனன் என்ற வரலாறு வால்மீகத்திற்கண்டது.

சிவன் தேவர்களை நோக்கி, 'என்னினும் பெரியானை யெனக்கோர் சாரதியாய்த்தருமின்' என்றபோது அவர்கள் நான்முகனைப்

பிரார்த்தித்து அவனைச்சிவனுக்குச் சாரதியாயமர்த்திய விவரத்தைப் பாரதத்திற் பார்க்கக் காணலாம்.

திருமால் பௌத்தாவதாரங்கொண்டு திரிபுரத்திலுள்ளவர்களின் விரதத்தையழித்தனன் என்ற வரலாற்றைப் பத்மத்திலும் அரிவம்சத்திலுங் காணலாம்.

---

## ௰க-வது. விருத்திரன் கதையைத் திரிபுரதகனத்திற்குதாரணப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! திருமாலே திரிபுரத்தை வென்றனனென்றால் எங்கள் சிவபிரான் முன்னிலையிலிருந்து போர் செய்தற்குக் காரணமென்னை? என்றனள். அப்பொழுது ஆரணமடந்தை ஆகம மடந்தையை நோக்கி 'நீ கூறியதற்குத்தரமாக ஓர் கதை சொல்கிறேன்' கேட்பாயாக என்று சொல்லத்தொடங்கினாள்:—

மிக்கவலிமையும் புகழும் மூன்று சிரமுமுடைய விச்சுவரூபன் என்ற ஒரு அவுணனிருந்தான். இவனுக்கு விருத்திரன் என்ற ஒரு புதல்வன் தோன்றினன். இவன் தன் தந்தையின் வரத்தால் நாள்தோறும் தன் பாதங்கள் பெருத்துயர்ந்து மூன்றுலகங்களும் அண்டமுகடுமெட்டுமாறு வளர்ந்தனன். இந்திரன் இவனது நிலைமை கண்டு மனந்திகைத்துத் திருமாலைத் தியானஞ் செய்தனன். அப்பொழுது அவ்வெம்பெருமான் அவனெதிரில் தோன்றினன். இந்திரன் வணங்கி நின்று 'புயனிற வண்ணா! எனக்குப் பகைவனாகிய விருத்திரனென்ற கொடியோன் நாள்தோறும் தன்கால்கள் பெருக்கப்பெற்று வளரா நின்றான்; அவனை இப்பொழுதே வதை செய்யா தொழிந்தால் உலகமிடம் போதாது என்றனன். திருமால் 'இந்த விருத்திரனுடைய வளர்ச்சியானது உலகமனைத்திற்கும், எல்லாவுயிர்கட்கும், தேவர்கட்கும் துன்பத்தை விளைவிக்கும்' என்று கருதி இந்திரனை நோக்கி அந்தக்கொடிய விருத்திரனது வாழ்நாளை உன்பொருட்டாகப் போக்கிவிடுகிறேன்; அதற்கோருபாயமுரைக்கின்றேன், கேட்பாயாக என்று சொல்லலுற்றான் :—

---

### இந்திரன் முன்னிலையில் ஸ்ரீய:பதியான ஈசுவரன் விருந்திரனை வென்ற கதை.

இந்திர! வெட்டுதற்குக் கருவியாகிய உன்னுடைய வச்சிராயுதத்திலும், அதனைக் கருவியாகக்கொண்டு வெட்டுகிற உன் கையிலும், வெட்டுண்ட பின்னர் விருத்திரனுடைய உடலைத்தாங்குவதற்குப்புவியிலும் என்னுடைய சத்தியம்சத்தைச் செலுத்துகிறேன்; இனித்தலையறச்சென்று விருத்திரனைக் கொல்வாய்' என்று அநுமதியளித்தான். உடனே இந்திரன் மனமகிழ்ச்சியுற்றுத் திருமாலிடத்தில் விடைபெற்றுச்சென்று மானைக்கண்ட வேங்கைப்புலிபோலக் கண்களில்தீப்பொறி சிதறத்தன் வச்சிரப்படையால் விருத்திரனை வெட்டிமாய்த்தான். இதுபோல மாமேருமலையை வில்லாக வளைத்துத் திரிபுரம் தீக்கிரையாமாறு போர்செய்த சிவனுக்குத் திருமால் பலவடிவாய் நின்றருள் செய்தான். இவ்வரலாற்றை உத்தரவால்மீகத்திற் காணலாம்.

---

### ௰உ-வது உருத்திரனுன பாத்திரத்தில் பெருமாள் காளகூடவிஷபாரணப் பரிச்சேதம்.

இதனைக்கேட்ட ஆகமவல்லி ஆரணவல்லியை நோக்கி மடந்தாய்! நீ உரைத்தபடி திருமால் அத்தனை சக்திமானுனல் திருப்பாற்கடலை மந்திரமலையால் கடைந்திடுகின்ற காலத்தில், தேவர்களெல்லாம் கையைப்பிசைந்து கொண்டு திசைதொறும்மோடப் பொங்கி வந்த காளகூட விஷத்தை எங்கள் சிவபிரான் கழுத்திலடக்கினனன்றோ! அப்பொழுது திருமால் எங்கிருந்தனன். இதனைத் தெளிவாய் இயம்புவாயென்றனள். அதற்கு ஆரணவல்லி சொல்லத் தொடங்கினுள் :—

சிவன் ஆலகாலத்தை நுகர்ந்ததையெல்லாம், ஆகமபடந்தாய்! நீ உறுதியாகக் கேட்பாயாக:— இருக்குவேதத்தில் எட்டாமத்தியாயத்தில் இருபத்து மூன்றும் வர்க்கத்தில் கீர்த்தியுடைய உருத்திரனுன பாத்திரத்தால் ஒப்புயர்வற்ற நாராயணனே விஷத்தை நுகர்ந்தனன் என்றோதும். இங்ஙன முரைத்த வேதப்பொருளுக் கிசையப் புராணங்களும் புகலாநிற்கும். கேட்பாயாக ;—

பகவத்ஸ்வரூபா நுபவத்தில் அரனுக்குக்கிடைத்த விஷசமர்ப்பணமென்பது.

திருப்பாற்கடலில் நஞ்சுண்டானதைக்கண்ட தேவர்கள் மனக் கலக்கமுற்று, உத்தமாசலத்தில் முக்திப்பேற்றைக் கருதி யோகஞ் செய்துகொண்டிருந்த சிவனைப்பக்தியாலடிபணிந்து தம் குறையை அறிவித்தனர். அப்பொழுது சிவன் உமாதேவியை நோக்கி, 'இப்பொழுது கலக்கமுற்று நம்மை வந்தடைந்த தேவர்கட்கு அன்புடன் உபகாரஞ் செய்யவேண்டியது இன்றியமையாத தொன்றும்; உலகத்தில் ஒருவருக்கொருவர் அன்பினுல் உபகாரங் கள் செய்வனவெல்லாம் சொல்லலுற்றுல் அவ்வுபகாரங்கள் அவ ரவர்க்கல்ல. அவற்றை ஸர்வாந்தர்யாமியாய் விளங்குகிற திருமா லே உகந்தருள்கிறுன்; ஆதலால் அவ்வறவாழியானுகிய திருமாலிற் குகப்பாகத் தேவர்களின் துன்பத்தைத்தீர்த்து வருதற்குப் புகை பரந்து அக்கினி போலப் பொங்கிவருகின்ற ஆலகாலத்தை ஒரு கணத்தில் உண்பேன்' என்றுன். இவ்வாலாற்றைப் பாகவதத்தில் எட்டாம் ஸ்கந்தத்தில் ஏழாமத்தியாயத்திற் காணலாம்.

முக்கண்ணன் கருடவாகனத்தியானத்தினுல் திருப்பாற்கட லில் எழுந்த நஞ்சையுண்டனனென்று காருடகவசம் கூறுநிற்கும்.

உமையோர்பாகனுகிய சிவன் 'ஒப்பற்ற* மூன்று நாமத்தை உச்சரித்துக் கருடவாகனத்தியானத்தினுல் காளகூட விஷத்தை யுண்டேன்' என்றனன். இவ்விவரத்தைப் பதுமபுராணத்துத்தர காண்டத்தில் முப்பத்தேழாம் அத்தியாயத்தில் தெளிவாகக் காணலாம்.

ஆகமமடந்தாய்! இவ்வனமிருப்பதால் நெற்றிக்கண்ணுல் காமனைக்காய்ந்த இடபவாகனனுகிய சிவனுக்கந்தர்யாமியாயிருந்து விஷத்தை நுகர்ந்தருளும் பரம்பரன் விஷ்ணுவேயாவனென்றறிவா யாக; என்றுள்.

---

* மூன்று நாமங்கள் - நாராயணன், வாசுதேவன், விஷ்ணு என்பன. இவை விஷ்ணு காயத்திரியில் வியாபக நாமமாக ஓதப்பட்டன.

## கூ-வது, வரபாலனப்படலம்.

### க-வது, கைலாய யாத்திரைப் பரிச்சேதம்.

இத்துணையுங்கேட்ட ஆகமவல்லி, ஆரணவல்லியை நோக்கிச் சொல்லத்தொடங்கினாள்.—ஆரணமடந்தாய்! நீயுரைத்தபடி ஆதிசேஷனிற்றுயிலும் அச்சுதனே பரதேவதையாவானாகில் அவன் வசுதேவற்கு மகனாகவந்தவரித்த காலத்தில் அருளினையுடைய அரனிடஞ் சென்று மகப்பேற்றை விரும்பினானென்பது பொருந்துமோ? இதுவிஷயம் அரிவம்சத்தில் ஓதப்பட்டுளதென்பது உலகறியுமே என்றனள்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி புன்முறுவல்கொண்டு, ஆகமமடந்தாய்! நீ இங்குரைத்தபடி எங்கள் மாயன் கைலயங்கிரிசென்று உங்கள் சிவனிடத்திற் மகப்பேற்றை விரும்பியது உண்மையே. அவன் அங்குச்சென்ற காலத்தில் சிவன் எம்பிரானை நோக்கி அண்ணலே! நான்முகனும், யானும் உன்னிடத்திற் பிறந்த காரணத்தால் கேசவனென்னும் பெயரை உடையவனாய் விளங்குகின்றாய், வேதநூல் சாசுவதமாக வழங்கிவருவதற்காக நீ விரும்பி அவதரித்த இந்த அவதாரத்திலும் உனக்குப் புதல்வர்களாக அநேக நாரணகுமரர்களையும் அளித்திட்டாய்; இங்ஙனமிருக்கவும் இப்பொழுது புதல்வரற்றவர்கள்போல நாடகம் நடிக்கின்றாய்; உன் செயல் மிகவும் அழகிதாகவிரா நின்றது; என்று தூபதீபமுமளித்து உபசரித்தனன்; என்றாள்.

இதனைக்கேட்ட ஆகமவல்லி, ஆரணவல்லியை நோக்கி மடந்தாய்! நாகணையானாகிய நாராயணன் எங்கள்சிவபிரானுக்கதிபனையும், தந்தையாயுமிருப்பானேல், அவன் சிவாம்சமுடைய ஜமதக்னிக்குப் பரசுராமன் என்ற பெயரையுடைய புதல்வனாய்ப் பிறந்து பின்னர் எங்கள் உமைபங்கனிடத்திலே வில்வித்தை முதலியவற்றையும் பயின்றனன் என்பது எங்ஙனம் பொருந்தும்? என வினவினாள்.

இதற்கு ஆரணவல்லி, விடையளிக்கத் தொடங்கினாள்.—ஆகமமடந்தாய்! எங்கள் மாயன் தசாதசக்ரவர்த்திக்கு இராமன் என்னும் யரினையுடைய புதல்வனாக அவதரித்து, விசுவாமித்திரரிடத்தில்

எல்லா வித்தைகளையும் பயன்றனன் என்பது உலகறியுமே. இங்ஙனம் இவன் அவதரித்துப் பயின்றதனல் எங்கள் திருமாலைக்காட்டிலும் தசரதனும், தவமுனியாகிய விசுவாமித்திரனும் உயர்ந்தவராவரென்று சொல்லிவிடலாமோ? என்றனள்.

இதனைக்கேட்ட ஆகமவல்லி, உரைப்பாளாயினள்.—ஆரண மடந்தாய்! உங்கள் திருமாலிற்குள்ள மகத்துவமெல்லாம் அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறும்படி கைலைசென்று எங்கள் பிரானை இரந்து நின்றனன் என்பதனல் நன்கு விளங்குகிறதே என்று நகைத்தனள். அவ்வளவில் ஆரணமடந்தை, உலோக நாயகனகிய அசோதை பெற்ற எங்கள் பெருமான் பூமியை இழந்திருந்த தர்ம புத்திரருக்கு அரசளிப்பது அருமைபோலத் துரியோதனன்பாற் சென்று அவனுக்கு வேண்டிய இதமுரைத்து, 'பாண்டவர்கட்கு ஐந்து ஊராவது அளித்திடலாகாதா?' என்று வேண்டினன். இங்ஙனம் வேண்டிய இவனது கபடநாடக முரைக்க எளிதாமோ? என்றனள்.

---

உ-வது, அரன் அறவாழியை ஆராதித்த பரிச்சேதம்.

இதன்மேல் ஆகமவல்லி, ஆரணவல்லியை நோக்கி நங்காய்! உங்கள் திருமால் இத்தனை மதிப்பாளன் என்றுரைத்தாய், அந்தப் புண்டரீகாக்ஷனகிய திருமால் எங்கள் சிவபிரானைப் பத்து நூறுயிரம் உருஜபித்துப்பின் தன் கண்மலரை இடந்து அர்ச்சனை செய்து சக்கராயுதத்தைப் பெற்றனன். இந்த வரலாற்றைக் கூர்மபுராணத்தில் எட்டாமத்தியாயத்திற் காணலாம்.

பரதன் உலகினையாள, வனஞ்சென்ற இராமபிரான், இராவணனை வென்ற பின்னர் கடற்கரையில் சிவபிரானைப் பிரதிஷ்டை செய்தனனென்பதும், அந்தக் கூர்மபுராணத்திற் கண்டதொன்றும்.

இவையன்றி, நந்தன் குமாரனகிய கண்ணன், நல்ல தவவிசேடமுடைய உபமன்யு முனிவரரை யடைந்து உபதேசம் பெற்று

எங்கள் ஈசனை உபாசனை செய்தனனென்பது உலகறிந்ததே! என்றனள்.

இவற்றை நன்கு கேட்ட ஆரணவல்லி விடையளிக்கத் தொடங்கினள்.—ஆகமமடந்தாய்! நாராயணன், உமாபதியை அர்ச்சனை செய்து, அவனருள் பெற்றுச் சக்கரப்படையைப் பெற்றனனென்றிசைத்தாய். இனி, அந்தத் திருவாழியாழ்வானியல் பெடுத்துரைப்பேன் கேட்பாயாக:—

திருமால் ஒரு காலத்தில் தோன்றினனென்பதின்றி அநாதியாயிருக்கின்றானே, அங்ஙனமே திருவாழியாழ்வானும் ஒரு காலத்தில் தோன்றினனென்பதின்றி அநாதிஸித்தமாகவே யிருக்கின்றான். திருமாலிற்குடைமையாயிருந்து, அவன் குறிப்பறிந்து ஏவல்செய்யுமியல்பினன்; தீயவழியிற் செல்லும் துஷ்டர்களைச் சங்கரிக்கும் நிமித்தமாக அன்னவனது கைத்தலத்தை விட்டகலாதிருக்கின்றனன்; அப்ராக்ருத ஒளியுடன் விளங்கும் இந்தத் திருவாழியாழ்வான முதலான ஆயுதங்களைத் திருமால் மஹாப்ரளயகாலத்திலும் விடாது தரித்துக்கொண்டிருக்கிறான். இவ்வரலாறு இருக்கு வேதம் ஏழாமட்டகம் நான்காமத்தியாயத்திலும், எஜுர் வேதம் முதற்பரிச்சம் பதினொன்றாம் அநுவாகத்திலும், சாமவேதம் உத்தர இருக்கில் ஒன்பதாமத்தியாயத்திலும், பிருகுதாரணியத்திலும், கடவல்லியிலும் குறிப்பிடப்பட்டுளது. இங்ஙனம் இவ்வரலாற்றை வேதங்கள் உணர்த்தியதற்கேற்ப விஷ்ணுபுராணம் முதலங்கிசம், இருப்பத்திரண்டாம் அத்தியாயத்திலும், பாகவதத்திலும் காணலாம். மேலும் மிக்க வொளியினையுடைய திருவாழியாழ்வான், ஸர்வேசுவரனுடைய ஆணையில் ஊழிக்காலத்தில் எல்லாவுலகங்களையும் அழிப்பானென்றும் நூல் புகலாநிற்கும்.

இத்தகைய பெருமைவாய்ந்த இந்த அறவாழியை உபாஸித்தே திரிசூலப்படையைப் பெற்றேனென்று சிவன் உரைத்தனன். இவ்விவரம், பாரதம் கன்னபருவத்திற் சொல்லப்பட்டுளது. ஆகமமடந்தாய்! உண்மை இங்ஙனமிருப்பதால் அரனுக்கு அதிதெய்வமாய் விளங்குகிற திருவாழியைத் திருமாலுக்கு அவன் வழங்கினன் என்பது எங்ஙனம் பொருந்தும்?

## ௱-வது, மோகனநூலுற்பத்திப் பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணவல்லியுரைத்தவுடன் ஆகமவல்லி அவளை நோக்கி, நங்காய்! நீ நன்ருகக் கூறினுய்; எங்கள் சிவபெருமானிடத்தில் திருமால் சக்கராயுதத்தைப் பெற்றிலனுகில் பூமியில் அவன் சிவபூஜை செய்தற்குக்காரணமென்னே? என்றனள். அதற்கு ஆரணவல்லி மடந்தாய்! நீ இங்ஙனம் இஃதோர் பொருளாக வகுத்தோதினுய். அசைவின்மைக்கு மாமேருமு ஒப்பாகாதென்றுரைக்கத் தக்க குணமுடைய இராமன் தன் தாய்தந்தையரின் வாக்கிய பரிபாலனஞ் செய்துறைகின்றகாலத்தில் சிறந்த முனிவர்கள் வாழ்கின்ற ஆச்ரமங்கடோறும்புக்கு அவர்களை அர்ச்சித்தும், சேதுவில் வருணனை உபாசித்தும் போந்தான். ஆகமமடந்தாய்! இராமபிரானுல் அர்ச்சித்துபாசிக்கப்பட்ட இவர்களும் பரதேவதைகளாகிவிடுவர்களோ? சொல்லாய்.

இது நிற்க, வராகபுராணத்தில் எழுபத்தைந்தாம் அத்தியாயத்தில் ருத்ரகீதையொன்றுளது. அதில் சடாதரனுகிய சிவன் அகஸ்தியமாமுனிவரை நோக்கி உரைத்த கதையொன்றுளது. அதனைக் கருத்துடன் கேட்பாயாக. சிவன் 'முனிவரரே! பிர்ம்மதேவன் என்னைப்பெற்று மகிழ்வடைகிறகாலத்தில் ஒரு பொருளுமின்றிப் பெருவெள்ளமாய்த்தோற்றியது. அப்பொழுது நீலமேகம் போன்ற திருமேனியையுடைய ஒரு வஸ்துவைக்கண்டு வியப்புற்றேன். அந்த வஸ்துவின் பெயரின்னதென்று அறிந்துகொள்ள வேண்டுமென்ற பேராசைகொண்டு 'நீ யார்?' என்று வினவினேன். அதற்கவன் 'எல்லா உலகங்கட்கும் யானே சோதியாய் விளங்குகின்றேன்; என்னுடைய பெயர் நாராயணன்' என்றுரைத்தான்.

---

## ஆதி வராகபுராணத்தில் ஆதிநாராயணர் அம்பிகாபதிக்கு விசுவரூபதரிசனங்கொடுத்துத் தனது ஈசுவரத்துவமும் சங்காரத்துவமும் வரமும் அநுக்கிரகித்த கதை.

பின்னர் யான் அந்த நாராயணன் என்ற நாமதேயத்தை நெடுநாள் உகந்தோதி அறிவுற்றனன். அதன்மேல் யான் அநந்தன் மேல் அறிதுயிலமரும் அருட்பெருங்கடலே! தேவரீருடைய திவ்விய திருமேனி எனக்கு நன்கு புலப்படுகிறதில்லை' என்றபோது திருமால் ஞானக்கண்ணைத் தந்தருளினன். அந்தக் குற்றமற்ற ஞானக்கண்களால் திருமாலின் திருமேனியில் வெகுகோடி அண்டங்கள் விளங்குகின்றவற்றையும், குற்றமற்ற திருவுந்தியில் நான்முகன் அவதாரமும், அந்த நான்முகனிடத்தில் நானிருக்கின்றதையும் கண்டுகளித்தேன்; பின் செங்கண்மால் என்மீது அருள் கொண்டு 'நீ விரும்பிய வரங்களைப்பெற்றுக்கொள்வாய்' என்றனன்.

அப்பொழுது யான் எம்பெருமானை நோக்கி, அடியேற்கு *ஈசத்துவமும், ‡ ஸர்வஜ்ஞத்துவமும், † சீலத்துவமும், மூவர்க்குள் ஒரு மூர்த்தியாமாறும் ஈந்தருளவேண்டும் என்று வேண்டினேன். அந்தப் பரந்தாமனும் அங்ஙனமே அருள் செய்தனன்.

மேலும் தாமதகுணத்தோடு கூடிய என்னுடைய வடிவத்தைக் கண்ட எல்லோரும் ஒரு பொருட்படுத்தி என்னைத் துதிசெய்ய மாட்டார்களே; இதற்கென் செய்வேன் என்றபோது தெள்ளியார் சிந்தையிலுறையும் அச்செங்கண்மால் என்னைக்குறித்து, 'உன்னைத் தேவர் முதலானவர்கள் புகழ்ந்து, 'நீயே தெய்வமாவாய்' என்றும் என்னைப் பரந்தாமன் அன்றென்றும் மதிக்குமாறு முனிவர்க்குபதேசித்து, உன்னுடைய நுட்பமதியால் பொய்யை மெய்யாக மதிக்கும்படி பல மோகன நூல்களையும் இயற்றுவாய்' என்று கட்டளையிட்டான். அப்பொழுது யான் மிக்க மகிழ்ச்சியுடன் அவ்விறைவனைநோக்கி யான் தேவரீர் கட்டளையின்படி வெகு மோகன நூல்

---

* ஈசத்துவம் - ஐசுவர்யமுடைமை.

‡ ஸர்வஜ்ஞத்துவம் - எல்லாமறியுந்தன்மை.

† சீலத்துவம் - நற்குணமுடைமை.

களை விரித்துரைப்பேன் ; அந்தக் கற்பித தாமத சிற்பநூல்தன்னில் அமரும் பொருட்கேற்பப் பூமியில் தேவரீர் என்னை வெகுமானம் செய்யவேண்டும்' என்று வேண்டினேன் ; முனிவரரே ! அப்பரம் பரன், 'யாம் துஷ்டர்களைச் சங்கரிக்கும் நிமித்தமாகப் பூமியில் அவதரிக்கப்போகிறேம் ; அக்காலத்தில் உன்னை அர்ச்சித்து உன் பால் வரமுங்கொள்வோம் ; என்று வரமீந்தனன்' என்று ரஹஸ்ய மாகக் கூறினன் ; என்றுரைத்தனன்.

ஆகமமடந்தாய் ! கொன்றையணி செஞ்சடையனைத் திருமால் தான் கொடுத்த வரபாலனஞ் செய்தற்காகப் பூஜைபுரிந்தனனே யன்றி வேறில்லை.

---

## வரபாலனத்துக்கு உதாரணப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய் ! இங்ஙனம் உரைத்தற்கியைய மகாபாரதத் திலும் நாராயணீயத்திலும் சொல்லப்பட்ட உண்மையுரையைக் கேட்பாயாக:—ஒரு காலத்தில் தர்மபுத்திரர் கண்ணபிரானுடைய திருவடியை வணங்கி நின்று,

உலகைப்படைத்தற்களித்தற்கழித்தற்குகப்பாகியே
அலகற்றவிளையாடல்புரிகின்றவொருமூர்த்தியாய்நின்றநீ
சலிலச்சடைத்தேவர்முதலோரை*யபிவாதனம்பண்ணியே
பலவர்க்கமகபூசையுஞ்செய்ததற்கேதுபணியென்னவே.

எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பதற்குகப்புற்று அளவற்ற திருவிளையாடலைச்செய்ய ஒப்பற்ற மூர்த்தியாய் விளங்கு கின்ற நீ நீர்மலிசடையன் முதலான தேவர்களை வந்தனை பூர்வக மாகப் பூஜை செய்தற்குக் காரணமென்னையென்று வினவினர். அதற்கு ஆயர்களும் ஆவினங்களும் வாழக் கோவர்த்தன மலை யெடுத்து மழைகாத்த கொண்டல்வண்ணனாகிய கண்ணபிரான்

---

* அபிவாதனமாவது - ஆசார்யன் முதலான பெரியோர் முன்னிலையில் தன்னுடைய பெயரைச் சொல்லி நமஸ்கரித்தலாம். ஸம்ப்ரதாயத்தினர் 'அடியேன் ராமாநுஜ தாஸன்' என்றும், 'அடியேன் ஸ்ரீவைஷ்ணவ தாஸன்' என்றும் தத்தம் தாஸ்யநாமங்களைச் சொல்லி வணங்குவதும் அபிவாதன மாகும்.

'எல்லா ஜீவர்களிடத்திலும் யானே அந்தராத்மாவாயிருப்பதுபோல முக்கணீசன் இதயத்திலும் யானே விளங்குகின்றேனென்பது திண்ணம்; அதனால் யானே என்னைப்போற்றி வணங்கினேன்; யான் இங்ஙனஞ் செய்யாதிருந்தால் என்னுடைய சரீரபூதனாய் விளங்குகிற செஞ்சடையனை மற்றோர்கள் அர்ச்சிப்பதற்குக் கருதுவரோ? யான் செய்த செய்கையைக்கண்டல்லவோ உலகத்தினர் நடக்கின்றனர்; இவையல்லாமலும் என்னின் மிக்கவோர் தெய்வமுமில்லை; என்னிடத்திலில்லாத வைபவமுமில்லை. * பிறதெய்வங்களை வணங்கி வரம் வேண்டினார்கட்கும் அந்தராத்மாவாயிருக்கின்ற யானே அவர்கள் விரும்பிய பயனைக் கொடுக்கின்றேன்; தர்மபுத்திரரே! உம்மிடத்திலுள்ள அன்பினால் இவ்வுண்மையை எடுத்தியம்பினேன்; தெரிந்துகொள்வீர்' என்றான். இஃதன்றோ அவன் செய்யும் மாயை யென்றனள்.

இதனைக்கேட்ட ஆகமவல்லி, 'நீ இங்ஙனம் கூறியது உண்மையானால் உங்கள் திருமால் இராமனாக வந்து அவதரித்தபோது இராவணாதியரை வதை செய்ததனாலுண்டாகிய பிர்ம்மகத்தியை எங்கள் சிவபிரானுடைய சந்நிதியை யடைந்து அகற்றிக்கொண்டனன் என்பது பொருந்துமோ? என்றனள்.

---

* "அவரவர் தமதமதறிவறிவகைவகை
அவரவரிறையவரெனவடியடைவர்கள்
அவரவரிறையவர்குறைவிலரிறையவர்
அவரவர்விதிவழியடையநின்றனரே"

என்று ஆழ்வாரருளியதும் இங்கறியத்தக்கது. இதன் பொருளாவது:— அவ்வவ்வதிகாரிகள் தத்தம் அறிவுக்கேற்ற வகையான் அவர் தம் தேவதைகளைப் பலத்தைக்கொடுக்கும் பரதேவதை என்று மதித்து வணங்குகிறார்கள். இவர்கள் இவ்வாறு கருதி வணங்கியதற்கேற்றவாறு அந்தத் தேவதைகளும் பலத்தைக்கொடுக்கும் சக்தியுடையராயிருப்பதிற் குறைபாடிலராகின்றனர். ஏனெனின்,—அந்தத் தேவதைகளை வணங்குகின்றவர்கள் ஆகமத்தில் விதிக்கப்பட்ட முறைப்படி வணங்கவும், வணங்கப்பட்ட தேவதைகள் அவர்கட்குப் பலத்தைக்கொடுக்கும் வலிமையுடையராகவும் ஸர்வஸ்வாமியாய் விளங்குகிற இறைவன் அந்தத் தெய்வங்கட்கு அந்தராத்மாவாய் நின்றானாதலால் என்க; எ - று.

ஆகமப்பர்வாய்! எங்கள் இராமபிரானுக்குப் பிர்ம்மகத்திபீடித்தது என்ற பிரசங்கம், கூர்மபுராணத்திலும் வால்மீகத்துள்ளும் கண்டதில்லை. அங்ஙனமிருக்க, நீ வலியற்ற தாமதபுராணங்களிற் சொல்வதை மேற்கொண்டுரைத்தால் அது ஒப்புக்கொள்ளத்தக்கதாமோ? தாமதபுராணத்தி லுரைப்பவையெல்லாம் உண்மையன்ருதலால் அவையெல்லாம் வேதவழக்கொடு மாறுப்பட்டனவாம். சுத்தசாத்விக புராணப்பொருட்கும் தாமதபுராணச் சொற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. இன்னும் இதற்கியைய சில விவரங்களெடுத்தியம்புவேன்.—

வடவாமுகாக்கினியைப் பனிமூடிவலி செய்ததென்ருலும் சுடர்த்திகிரி (சக்கரம்) ஏந்திய செங்கண்மாலைப் பிர்ம்மகத்தியென்ற தோஷம் தொடவல்லதோ? இதற்கு முறையாகப் பிரமாணம் கூறுவன்; அன்புடன் கேட்பாய்:—

---

ரு-வது, கண்டாகர்ணப் பரிச்சேதம்.

கொன்றைநறுமாலையணிந்த சங்கரனிடத்தில் மிக்க அன்புடைய கண்டாகர்ணனென்ற ஒருவனிருந்தான். இந்திரியங்களை வென்ற பெரியோர்களாற் புகழப்பெற்ற நாராயணன் என்ற திருநாமம் எவ்வகையானும் தன்னுடைய காதிற் புகுந்துவிடலாகாது என்ற வைராக்யங்கொண்டு தன் காதுகளில் மணியைக் கட்டிக்கொண்டு, தன் வாழ்நாளைக் கழித்துவந்தனன்.

பின்னர் இவன், மான்மழுவேந்திய சிவன் மனமிரங்கும்வண்ணம் அநேகநாள் தன் சரீரம் வருந்தத்திருந்திய தவத்தைச் சிறப்பொடு செய்தனன். இவனது தவத்திற்குகந்த சிவன் இவன்முன் தோன்றி 'நீ விரும்பிய வரத்தைக் கேட்பாய்' என்றனன். அப்பொழுது இயக்கர் தலைவனுகிய கண்டாகர்ணன் 'அழிவற்ற முக்திப்பேற்றை அருளுதி' என்று வேண்டினன். சிவன் 'உனக்கு விருப்பம் இங்ஙனமிருக்குமேல் திருமாலைப் பக்தி செய்வாய்; முக்திப்பேறு சித்திக்கும்' என்று மொழிந்தனன். கண்டாகர்ணன் 'நீயே இப்பொழுது முத்திப்பேற்றைத்தரில் குறையென்?' என்று

வாதாடினன். அப்பொழுது சிவன் 'அப்பா! குற்றமற்ற முத்திப் பேற்றைக் கொடுக்கும் ஆற்றலுள்ளவன் திருமாலே; நாம் அஃதொழிந்த மற்றப்பதவிகளைக் கொடுக்கும் சக்தியுடையோம்' என்றுரைத்தனன்.

இதனைக்கேட்ட கண்டாகர்ணன், 'அந்தோ! இதுவரை நான் திருமாலை நிந்தித்துத் தீயநெறியில் ஒழுகினேன்; இனி யென்செய்வேன்' என்று புலம்பித் தன் செவியிற் கட்டிய மணியை அறுத்தெறிந்தான். அதன்மேல் இவன், 'இனி எப்பொழுது முக்தியளிக்கும் முகுந்தன் நம் கண்ணெதிர்ப்படுவானோ?' என்று காட்டில் வசித்துக்கொண்டிருந்தகாலத்தில் கைலாயயாத்திரை செய்தற்காகக் கண்ணபிரான் அங்குவந்து தங்கினன்.

---

பொருளாளன் கண்டாகர்ணனுக்கு லிங்கபக்தி விட்டபிறகு அவனது பிர்ம்மகத்தி தீர்த்ததுக்காக உதகரித்த கதை.

அப்பொழுது கண்டாகர்ணன், 'நமது அதிருஷ்டவசத்தால் எம்பெருமான் இங்கு வந்துற்றனன்; இனி இவனை ஆராதித்து இவனருள்பெறுதற்குக் காணிக்கையாகவைக்கும் பொருளில்லையே' என்று கவலைகொண்டனன். அதன்மேல்,

மெய்த்தவர்தம்மொடுவேள்விசெயுஞ்சீர்
உத்தமவேதனொருத்தனையன்னான்
குத்திவதைத்தகொடும்பிணமுன்னே
வைத்திருபாதம்வணங்கினன்மாதோ.

உண்மையான தவவொழுக்கத்தைமேற்கொண்டாரோடு வேள்வி செய்துகொண்டிருந்த சிறந்த உத்தம பிராமணனைக் கொன்று அந்தப் பிணத்தைக் கையுறையாகக் கண்ணபிரான் முன்னிலையில் வைத்து அவன் திருவடியை வணங்கினன். அவ்வளவில் கண்ணபிரான் கண்டாகர்ணனை நோக்கி, 'நீ இப்பொழுது இவ்வாறு செய்தற்குக் காரணம் என்னை?' என்று வினவினன். கண்டாகர்ணன் 'இறைவனே! தேவரீர் திருவுள்ளத்திற்குப்பாங்காயிருக்க வேண்டும் என்பதுபற்றி வேதநன்னூல் விதிப்படி அநேக வேள்விகளை மதிப்பொடு செய்த மகானை வதைத்துக் கொணர்ந்தேன்;

இது, நல்ல புதுப்பிணமாகும்; அங்கீகரிக்க வேண்டும்' என்று வேண்டினன்.

கண்ணனவன்செயல்கண்டுநகைத்திங்கு
எண்ணமுனக்கினியேதெனவோடும்
புண்ணியமிக்கபுராதனருக்கும்
நண்ணருமுத்திநல்குதியென்றான்.

கண்ணபிரான் இவனுடைய செயலைக்கண்டு * சிரித்து 'உன்னுடைய விருப்பம் யாது?' என்று வினவினன். அதற்கவன் பழமையான புண்ணியசீலருக்கும் கிட்டுதற்கரிய முக்திப்பேற்றைத் தந்தருளவேண்டும் என்றனன். கண்ணன், 'இவனுக்கு உள்ளத்தில் நம்முடைய நாமம் கேட்கலாகாதென்ற நினைவு இடைவிடாதிருந்தாலன்றோ செவியில் நம் நாமம் கேட்கலாகாதென்று மணிகட்டித் திரியும் காரியம் நிகழும்; ஆதலால் இன்றளவும் இவன் உள்ளத்தில் நம் நாமத்தியானம் நிலைபெற்றுள்ளதென்பதிற் சந்தேகமில்லை. இஃதன்றியும் இப்பொழுதும் நம்மிடத்தில் மிக்க பக்தியுடையவனாகவும் விளங்குகிறான்.' என்று கண்டாகர்ணனுக்கு முக்திகொடுத்தேன்; என்றான்.

---

## ௬-வது, நிர்ஹேதுகவைபவப் பரிச்சேதம்.

இங்ஙனம் கண்ணபிரான் உகந்து, 'முக்தி கொடுத்தேன்' என்றுரைத்ததைக்கேட்ட கண்டாகர்ணன் பின்னரும் கண்ணபிரானை நோக்கி, 'ஆழியங்கை அண்ணலே! உன்னால் செய்யத்தக்க உபகாரம் ஒன்றுளது; அதையும் செய்தருளவேண்டும்' என்று வேண்டினன். கண்ணபிரான் என்ன உபகாரம் என்று கேட்டனன். கண்டாகர்ணன், 'என்னோடு பின்பிறந்தான ஒருவனிருக்கின்றான்; அவனுக்கும் என்னுடன் முக்திப்பேற்றை யளித்தருளவேண்டும்'

---

* பிராம்மணனைக் கொல்வது கொடிய பாபமென்பதிற் கண்டாகர்ணனுடைய கருத்துச்செல்லாமல், 'இந்த உத்தமப் பிராம்மணனுடைய சரீரம் எம்பெருமான் அங்கீகரிப்பதற்குரியதாகும்' என்ற எண்ணத்தோடு அந்தப் பிராம்மணனை வதைத்தனனாதலால், இவனது செயலைக்கண்ட கண்ணபிரான் நகைத்து இவன் விரும்பியதைக் கொடுத்தனன். இதனால், பாவசுத்தியுடன் எதனைச்செய்தாலும், அதனை எம்பெருமான் தன் அநுக்ரஹத்திற்கு விஷயமாக்குவான் என்பது பெறப்படும்.

என்று இறைஞ்சி வேண்டினன். கண்ணபிரான் அவனை நோக்கி, 'அப்பா! உன்பின் தோன்றியவன் முக்தி பெறுதற்கு உன்னைப் போல் பக்தியுடையவனாகவிருக்கின்றானோ? என்று வினவினன்.

அவ்வளவில் அவன், 'ஸ்வாமீ! என்பின்னோன் என்னைப் போல் உன்னிடத்தில் அன்பில்லாதவன்; ஆனாலும் நீ என்மேற் கொண்டுள்ள அருளினால் அவனுக்கும் அளித்தருளவேண்டும் என்றனன். அப்படியானால் என்னருள் பெற்றவனாகிய உன்னிடத்திலாவது அவனுக்கன்புண்டோ?' என்று பின்னரும் கண்ணபிரான் கேட்டனன். என்னிடத்திலும் அவனுக்கன்பில்லை என்று அவன் விடையளித்தான். அப்பொழுது கண்ணபிரான் பகவத் பக்தியும் பாகவதபக்தியுமில்லாத ஒருவனுக்கு முக்தி கொடுப்பதெங்ஙனம்? என்றான்.

அதன்மேல் கண்டாகர்ணன், 'அச்சுத! என்பின்றோன்றியவன், நான் வெறுக்கத்தக்க செயல்களை எனக்கவன் பல செய்திருந்தானேனும், எனக்கவன்பால் நீங்கா அன்புளது; ஆதலால் அவன் விஷயத்தில் நீ அருள்செய்தற்கு ஒருதடையுமில்லையே என்றனன். கண்ணபிரான் என்னருள் பெற்றாரின் * இன்னருள் பெற்றவன்

---

* இன்னருள் பெற்றவன்-பாகவதாபிமானம் பெற்றவன். ஸர்வேசுவரனுடைய அருள்பெற்ற மெய்யடியார்களின் ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களெல்லாம் உய்வடையும். எம்பெருமான் ஒருகாலத்தில் லோகதேசிகனை நோக்கி, 'உமது ஸம்பந்தம் பெற்ற பொருள்களெல்லாம் உய்வடையக் கடவன' என்று அநுக்ரஹித்த பின்னர், லோகதேசிகன் பல வஸ்துக்களைப் பார்த்தும், தொட்டும் தமது ஸம்பந்தத்தை உண்டாக்கி அவையெல்லாம் உய்வடையும்படி செய்தனர். என்ற ஐதிகமும், சிறந்த மெய்யடியாராயிருப்பவர் எதையெதைத் தொடுகின்றனரோ? எதைபெதைப் பார்க்கின்றனரோ? அவை ஸ்தாவரப்பொருள்களாயிருந்தாலும் மோக்ஷமடைகின்றன. இங்ஙனமிருக்கப் பந்துஜனங்கள் விஷயத்திற் சொல்லவேண்டியதென்ன? என்ற பொருளைக் கொண்டுள்ள "யம்யம்ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம்யம்பச்யதி சக்ஷுஷா, ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம்புநர் பாந்தவாஜநா:" என்ற பிரமாணமும் இந்தக் கண்டாகர்ண கண்ணர்களின்ஸம்வாதத்திற்கு உதாரணமாகக்கொள்க. கண்டாகர்ணனுடைய தம்பியரிருவருக்கும், அவன் கொணர்ந்த பிராம்மணப்பிணத்தை முன்பு அதிஷ்டித்துள்ள ஜீவனுக்கும் முக்தி கொடுத்தது கண்டாகர்ணனுடைய அபிமானம்பற்றி யென்க.

எவனுகிலுமாகுக; அவனுக்கும் முக்தி கொடுத்தோம்; என்முன். அதன்மேலும், கண்டாகர்ணனுடைய மற்றோர் தம்பிக்கும், அவன் கொணர்ந்த பிராம்மணப்பிணத்தின் சரீரத்தை முன்னதிஷ்டித்து நின்ற ஜீவனுக்கும் முக்தி கொடுத்தனன்.

இவ்வரலாற்றை அரிவமிசத்திற் காணலாம். ஆதலால் ஆகம மடந்தாய்! திருமாலின் அடியார்கட்குப் பாதகமென்பது பற்றுத லுண்டோ? ஓதுவாயாக என்றனள். அதற்கவள் கூறுவாள்:—

ஆரணமடந்தாய்! நீ புகழுடைய திருமாலிடத்திற் பழிசார மாட்டா என்பதைச் சொல்லத்தொடங்குபவள்போலச் சாமர்த்திய மாக எங்கள் சிவபெருமான் தன்னையடைந்த அன்பர்கட்கு முக்தி யளிக்கும் சக்திபற்றவன் என்றுப். கணக்கற்ற ஜீவர்கட்குக் காசி யில் முக்தியைக் கொடுப்பவன் எங்கள் சிவபெருமானே என்பதை உலகறியுமே. அதனை நீ அறியாய்போலும்; என்றனள்.

---

எ-வது, கைலையாளிக்குப் பிரமகத்தி தீர்த்த பரிச்சேதம்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி ஆகமவல்லியை நோக்கி மடந் தாய்! காசியின் சிறப்பையும், அப்பதியினுறையும் திருமாலின் அநுக்ரஹம்பெற்றுச் சிவன் அங்கு வசிப்பதையும், அந்தக் காசியில் மரணமாகிறவர்கட்குப் * பாசுபத முக்தியருள்கின்ற தன்மையும் நன்கெடுத்துரைப்பேன்; கேட்பாயாக:—

முன்னொருகாலத்தில் உங்கள் சிவன் பிர்ம்மாவின்சிரமொன்றை யறுத்ததனுல்அவ்வரனை மாபாதகமானது தொடர்ந்து வருத்தியது. பின்னர் இலக்குமிநாதன் உகந்துறைகின்ற சிறந்த காசிக்ஷேத் திரத்தை அவ்வரன் அணுகியபோது தன்னைப்பற்றிய மாபாதகம் சூரியனைக்கண்ட இருள்போல் அகன்றது. இந்த வியப்பினைக்கண்ட சிவன் திருமறுமார்பணுகிய திருமாலை வணங்கி, 'இறைவ! நீ உகந் துறைகின்ற இப்பதியை யான் அணுகியவுடன் என்னைப்பற்றிய மாபாதகம் அகன்றது. இஃதல்லாமலும் இந்தப் பிர்ம்மகத்தியை

---

* பாசுபதமுக்தி—பசுபதியின் சம்பந்தமான மோக்ஷம். [பசுபதி-சிவன்.]

அகற்றிக்கொள்ளப் பூமியெல்லாம் சுற்றித்திரிந்ததனுல் தேய்ந்த கால்களும் வளர்ந்து வளமுற்றன' என்றான்.

அப்பொழுது காசிநகர் மாதவனாகிய திருமால் சிவனிடத்தில் ‡ சுவாகதமுரைத்து வெகுமானஞ்செய்தருளி, 'இனி உன்னிருக்கையாகிய வெள்ளியங்கிரியிலிருந்து சுகமாக வாழ்வதற்குச் செல்வாய்' என்று அனுமதியளித்தனன். சிவன் விடைபெற்றுத் தன் விடையின்மீதேறிக் காசிமாநகரைவிட்டகன்றவுடன் முன்புள்ள பிர்ம்மகத்தி வந்து சூழ்ந்துகொண்டது. அவ்வளவில் சிவன் மறுபடியும் காசியம்பதியினுறையும் கமலக்கண்ணனாகிய மாயனை யடிபணிந்து நிகழ்ந்த செய்தியை உரைக்கத்தொடங்கினன் :—

---

## ௮-வது, காசியைக் கபாலிக்கு ப்ரசாதித்த பரிச்சேதம்.

'நீண்டுலகளந்த நேமியங்கை அண்ணலே! யான் மூன்றுலகங்களிலும் திரிந்துமுன்றகாலத்திலும் என்னைவிட்டகலாத மாபாதகம், நீ உகந்து வசிக்கின்ற இப்புண்ணிய க்ஷேத்திரத்தின் எல்லையை அணுகியவுடன் தன்னடையே விட்டகன்றது; பின் இவ்வெல்லையைக்கடந்தமாத்திரத்தில் அந்த மாபாதகம் என்னைப் பீடித்துக்கொண்டது; இனிமேலும் இப்பதியைவிட்டகல்வனேல் மாபாதகத்தால் மிகவும் துன்புறுவேன்; ஆதலால் இந்தச் சிறந்த பதியை விட்டகலாதிருக்க வரந்தந்தருளவேண்டும்' என்று வேண்டினன். அருட்பெருங்கடலாகிய அச்சுதனும் அவ்வேண்டுகோளிற்கிரங்கி, 'இக்காசியம்பதியை நீ உறைவிடமாகக்கோள்வாய்' என்று கொடுத்தருளித் தான் பிரயாகையை யடைந்தனன்.

இங்ஙனம் திருமால் உகந்த காசியம்பதியைக் கங்கைவார் செஞ்சடையனுக்களித்த நாள்முதல் இன்றளவும் அவன் அப்புண்ணியப்பெருப்பதியைத் தன்னதென்றுகொள்ளும் பெருஞ்சிறப்பை யடைந்தனன். இவ்வரலாற்றை நாரதீயம் என்ற நூல் நவிலாநிற்கும்.

---

‡ சுவாகதம்–க்ஷேமம் விசாரித்தல்.

## கூ-வது, ஸ்ரீராம தாரகப் பிரமமந்திர உபதேசப் பரிச்சேதம்.

கண்ணுதற்கடவுளாகிய சிவன் உமாதேவி சுப்ரமண்யன் முதலானவர்களோடு மிகச்சிறந்த புண்ணிய க்ஷேத்திரமாகிய காசியம்பதியிலிருந்து எல்லோருக்கும் வரங்கொடுக்கின்றனன்; என்பது கேட்டு, கணக்கற்ற யோகியரும், ஞானியருர், உண்மையான தபசைச்செய்து வளர்கின்ற புண்ணியசீலரும் அப்பதியில் வழியினுமிடமில்லையென்று சொல்லும்படி புகுந்து நிறைந்தனர். மேலும், விபூதியணிந்தவரும், ஜபமாலையைக்கொண்டவரும், ஜடாதாரியரும், ஆசையற்ற சிந்தையரும், * ஐவகை ஒழுக்கத்தையுடையோரும், மரவுரியுடையினரும், நாசிமுனையில் வைத்த கண்ணினரும் இந்தக் காசியம்பதியை யடைந்து முக்திப்பேற்றை விரும்பித் தவங்கிடந்தனர்.

இங்ஙனம் இவர்களது நிலைமைகண்ட சிவன், 'யாம் இவர்கள் விரும்பிய முக்திப்பேற்றை எவ்வாறு கொடுக்கவல்லோம்' என்று பிர்ம்மதேவனைத் தியானஞ் செய்தனன். அப்பொழுது அந்த நான்முகக்கடவுளும் ஆங்கு வந்துற்றனன். சிவன் நான்முகனைத் தரிசித்து வந்தனை வழிபாடுகள் செய்து, 'என் மனக்குறை இன்றே அகன்றது' என அகமிகமகிழ்ந்து புகழ்ந்தனன். இங்ஙனம் இவன் புகழ்தலைக்கண்ட நான்முகன், 'இங்கு நீ சிந்தையில் நினைத்தவிஷயம் யாது?' என்று வினவினன். அதற்கு அவ்வரன், 'உன்னருள் பெற்ற எனக்கு அடைதற்கரிதாகிய பொருளுமுளதோ? இதுநிற்க, ஈண்டிருக்கிற யோகியர்கள் என்னை முக்திதரும் தெய்வமாகமதித்து மாதவஞ்செய்கின்றனர்; இவர்களுக்கு உன்னருளினால் கருதிய பேற்றை நான் உதவுதற்கு உபாயம் உரைத்தருள்வாய்' என்று வேண்டினன்.

அப்பொழுது பிர்ம்மதேவன் ஸ்ரீராமதாரக மஹாமந்திரத்தைச் சிவனுக்குபதேசித்து, 'இனி இந்த ஒப்புயர்வற்ற மந்திரத்தைக் கங்கைக்கரையில் சரீரத்தை விடுவார் செவித்தலத்தில் உபதேசித்

---

* ஐவகை ஒழுக்கத்தினர் — பிர்ம்மயாகம், தேவயாகம், மானிடயாகம், பிதிரர்யாகம், பூதயாகம் என்ற ஐவகை வேள்வியைச் செய்பவர்.

திடுவாய்; அவர்களும் முக்திப்பேற்றைப் பெறுவார்கள்' என்றுரைத்து நொடிப்பொழுதில் மறைந்தருளினன்.

இங்ஙனம் நான்முகக்கடவுள் உபதேசித்த தாரகமந்திரத்தைச் சிவன் பொன்னேபோற்போற்றி அம்மந்திரபலத்தாற் காசியில் மரணமடைகின்றவர்கட்கு முக்திப்பேற்றைக்கொடுத்து மகிழ்கின்றனன். இவ்வரலாறு, அகத்தியவிராமசங்கிதையிற் சொல்லப்பட்டுளது. இன்னும் இவ்விஷயத்தை விரித்துரைசெய்யப்புக்கால், நவகண்டத்திலுள்ளார்க்கெல்லாம் இஃதோர் மனப்பாடமாகவுள்ள தொன்றாமென்பது புலனாகுமன்றோ!

வரபாலனப்படலமுற்றும்.

---

## எ-வது, சைவாகமவிதிப்படலம்.

### க-வது, திருநீற்றுப் பஞ்சாட்சரப் பரிச்சேதம்.

இவ்வுரையினைக் கேட்ட ஆகமமடந்தையானவள் சொல்லத் தொடங்கினாள்:—ஆரணமடந்தாய்! எங்கள் சிவபெருமான் ஸ்ரீராமதாரக மந்திரத்தினால் பூமியிலுள்ளவர்கட்கு முக்தியைக் கொடுக்கின்றனன் என்றுரைத்தாய். சிவகாம விதிப்படி சிவ தீக்ஷை பெற்றுயர்ந்தோர், ஒப்பற்ற முக்தி பெறுவர் என்பதிற் சந்தேகம் சிறிதேனுமுளதோ?

தெய்வ வெண்ணீற்றின் மகிமையும், பஞ்சாக்ஷரச் சிறப்பும், சிவ பூஜையின் விதியும், சரியை கிரியை யோகாம் ஞானங்களின் இயல்புகளும், சைவ சித்தாந்தம் தத்துவபேதம் தொண்ணூற்றாறும், அன்புடன் * பஞ்சப் பிர்ம்மத்தை முன்னுணர்ந்து

---

* பஞ்சப்பிர்மம் - மந்திரப் பிர்மம், கிரியாப் பிர்மம், தத்துவப் பிர்மம், பீஜப்பிர்மம், முகப்பிர்மம் என்பன. இவற்றுள் சத்தியோ ஜாதம், வாமனம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்ற ஐந்தும் மந்திரப் பிரமமும் முகப் பிரமமுமாம். ஆவாகனம், ஸ்தாபனம், ஸ்தானித்யம், ஸங்கிரோதனம், அவகுண்டன என்பன கிரியாப் பிரமமாம். பிரமன், விஷ்ணு, ருத்திரன், மகேச்வரன், சதாசிவன் என்பவர் தத்துவப் பிரமமாவர். ல, வ, ர, ய, ஹ என்ற இவை பீஜப்பிரமமாம்.

† பரமசிவன் தன்னையடையும் மாண்பும், நிர்மாலிய விசேஷணமும், வீரமகேச்வரசமய தர்மமாகிய லிங்கதாரணத்தியல்பும், சிவபுராண மேன்மையும், வேதத்திற் கொப்பமாகிய ஆகமத்திற் சொல்லும் பரமார்த்த நிச்சயமும் நன்கறிந்தாலன்றிச் சிவபிரானது மகிமை தெளியலாகுமோ ?

ஆரணமடந்தாய்! ஆராய்ந்துணராதபோது எவர்க்குந் தான் கண்டதே காட்சியாயிருக்கும். இங்ஙனம் யான் குறிப்பிடப் பெற்ற திருநீற்றின் மகிமை முதலியவையெல்லாம், ஆகமங்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவற்றைச் சுருக்கி ஒன்றொன் ருய்த் தெளிவாக எடுத்துரைத்து உன் மனத்தை இசைவிக்கின் றேன் ; கேட்பாய் என்று சொல்லத்தொடங்கினள் :—

பழமையாக விளங்கும் தெய்வலோகத்திலிருந்து இப்பூமண்ட லத்தைப் புனிதஞ் செய்தற்குப் பசுக்களின் இனங்கள் வந்திழிந் தன. இத்தகைய மேன்மையுள்ள பசுக்களுக்கு அன்பால் புல் லிட்டு, அஃதுண்டபின் நீரினல் விடாய் தணித்தல் வேண்டும். அதன்மேல் கோமயத்தைச் (சாணத்தை) *சத்தியோசாத மந்தி ரத்தைச் சொல்லித் தரையில் விழாமல் ஏற்று, வாமதேவ மந்திரத் தால் அதனைத் திரளைசெய்து, அகோர மந்திரத்தா லுலர்த்தித் தற்புருட மந்திரத்தால் அத்திரளையைக் கனலிலிட்டுத் தபதஞ் செய்து, பின்னர் ஈசான மந்திரத்தைச் சொல்லி அந்தத்திருநீற்றை யெடுத்து, மல்லிகை முல்லை பாதிரி சண்பகம் முதலிய சுகந்தங்கள் அதிற் பற்றும்படி செய்தல்வேண்டும்.

இத்தகைய பவித்திரமான (தூய்மையான) திருநீற்றைப் புன லில் முழுகி நீராடிய பின்னர் § உத்தூளனஞ் செய்துகொள்ள

---

† "அனாதியமலன் சச்சிதானந்தன் சுத்தன், எனாதிசிவன் ஏகனுளன்" என்று மறைஞானசம்பந்தர் உரைத்தபடி இயல்பாகவே பாசத்தொடர்பற்ற வனும், உண்மை யறிவின்ப வடிவினனும், பரிசுத்தனும், எனக்குக் கார ணனுமாகிய சிவன் ஒருவனுளன் ; என்பவனே பரசிவனுவான்.

* சத்தியோஜாதம், வாமனம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்ற இவ்வைந்தும் சிவனுடைய ஐந்து முகங்களின் பெயர்களாம்.

§ உத்தூளனம் - உடம்பு முழுவதும் விபூதி யணிதல்.

வேண்டும். நீரில் முழுகுவதற்கு அரிதாயிருந்த விடத்தில் உத்தூளனஞ் செய்துகொள்ளுதல் மாந்தர்க்கு அசுத்தமாம்.

மேலும் இந்தத் திருநீற்றை உத்தூளனஞ் செய்யுமிடத்து ஈசான மந்திரத்தினால் சிரசிலும், தற்புருட மந்திரத்தாலும் அகோர மந்திரத்தாலும் மார்பிலும், சத்தியோசாத மந்திரத்தினால் அவயவ முழுதிலும் முறை பிறழாமல் தரித்தல் வேண்டும். இவ்வாறு உத்தூளனஞ்செய்தற் கியலாதொழியின் அறிவுடன் திரிபுண்ட்ரம் தரிப்பதே யமையும். ‡ தற்சனி § மத்திமை ¶ அநாமிகை என்ற விரல்களால் திரிபுண்ட்ரம் தரித்தல் விதியாம். இந்தத் திரிபுண்ட்ரக் குறிகள் திரிமூர்த்திகளின் மயமாம். சிரசிலும், நெற்றியிலும், கழுத்திலும், இரண்டு தோள்களிலும், மார்பிலும், உந்தியிலும், இரண்டு தொடைகளிலும், இரண்டு பாதங்களிலும் இப்புண்ட்ரம் அணியத்தக்கது.

சிரத்தினில் பிர்ம்மதேவனும், நெற்றியில் கந்தனும், கழுத்திற் கணபதியும், தோளில் கேசவனும், மார்பில் ஈசுவரனும், உந்தியிற் பிரசாபதியும், தொடைகளில் அசுவினி தேவதைகளும், பாதங்களில் நாகரும் அதிதெய்வங்களாக விளங்குவதற்குரியவராவார்கள்.

இவ்வளவு பெருஞ் சிறப்பினையுடைய திருநீற்றை நியமந் தவறாது அணிபவர், எல்லாப் புண்ணிய தீர்த்தங்களில் முழுகிய பலனும், வேள்வி ஆயிரம் செய்த புண்ணியமும் ஒருங்கெய்தப் பெறுவர்.

இந்தத் திருநீற்றின் மகிமை, சுப்பிர பேதம் என்னும் ஆகமத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டுளது. இங்ஙனம் இவ்வாகமங் கூறியதற்கேற்ப, அதர்வசிரத்தில் ஐந்தாவது காண்டத்தில் பாசுபத தீக்ஷையை உரைத்ததற்கு அங்கமாகத் திருநீற்று உத்தூளன விதியும், அதற்கு மந்திரங்களுமமைத்து, இந்தத் திருநீற்றின் உத்

‡ தற்சனி - ஆட்காட்டி விரல்.

§ மத்திமை - நடு விரல்.

¶ அநாமிகை - மோதிர விரல்.

னுளனமே முத்திப்பெரும்பேற்றை யளிக்கவல்லதென்றும் சொல்லப்பட்டுளது.

இந்தத் திருநீற்றின் மிக்கதொரு பொருளுமில்லை. ஆரணமடந்தாய்! இனி, பஞ்சாக்ஷரத்தின் சிறப்பினையும் எடுத்தியம்புவேன்:— பஞ்சாக்ஷரம் * சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமென்றும், † ஸ்தூல பஞ்சாக்ஷரமென்றும் வேத வேதாந்தகட்கு மூலமான பிரணவத்தொடு சார்ந்த பஞ்சாக்ஷரமென்றும் மூன்று வகைப்படும்.

புகழினையுடைய இந்தத் திருவெழுத்தைந்தும், எங்கள் சிவபெருமானுடைய திருமுகமைந்திலும் தோன்றின. மேலும், இந்த ஐந்து முகங்கள் ‡ பல ஆகமங்களை யுண்டாக்கி வளம்பெற்ற சிறப்பினையுடையன. இந்த நமசிவாயமென்ற எழுத்தைந்திற்கும் முறையே காசிபன், கௌசிகன், பரத்துவாசன், கௌதமன், அத்திரி என்பவர் ரிஷிகளாவார்.

---

* ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் - சிவன், சத்தி, நாதம், விந்து சதாசிவன்.

† ஸ்தூல பஞ்சாக்ஷரம் - நமசிவாய.

‡ "சத்தியோசாதத்திற்காமிகமாதியைந்தும்
உற்பவித்துநீடுமெனவோர்"

(இ - ள்.) சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களுள் சத்தியோசாத முகத்தினின்றும் காமிகம், யோகஜம், சித்தியம், காரணம், அசிதம் என்னும் ஐந்தாகமங்களும் தோன்றி வழங்குமென்று அறிந்து கொள்வாயாக எ - று. இவை, காசிப ரிஷியின் பொருட்டுத் தோன்றின.

"தீத்தமுதலைந்துந்திகழ்வாமவத்திரத்தில்
வாய்த்தனவென்றேமதி."

(இ - ள்.) விளங்குகின்ற வாமதேவ முகத்தினின்றும் தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்ரபேதம். என்னும் ஐந்தாகமங்களும் தோன்றின; என்றறிவாயாக எ - று. இவை, பாரத்துவாச ரிஷியின் பொருட்டுத் தோன்றின.

"தற்புருடத்தேரௌரவாதியைந்துஞ்சாதமாய்
அற்புதமாய்நீடுமெறி."

(இ - ள்.) தற்புருட முகத்தினின்றும் - ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம் என்னும் ஐந்தாகமங்களும் தோன்றி மிகவும்

இந்தப் பஞ்சாக்ஷரத்துள் நகாரத்திற்கு அநுட்டுப்பும், மகாரத்திற்குத் திருட்டுப்பும், சிகரத்திற்குப் பிருகதியும், வாவிற்குச் செகதியும், யகரத்திற்கு மாசெகதியும் சந்த விகற்பங்களாம்.

இந்த ஐந்தெழுத்துக்களுக்கும் முறையே கருமை, செம்மை, பசுமை, பொன்மை, வெண்மை நிறங்களாம். இவற்றிற்குமுறையே மண், நீர், தீ, வாயு; ஆகாயமென்ற ஐந்தும் பூதங்களாம்.

சத்தியோசாதன், வாமனன், அகோரன், தற்புருடன், ஈசானன் என்ற ஐவரும் இந்த ஐந்தெழுத்திற்கும் அதிதெய்வங்களாம்.

இத்தகைய பஞ்சாக்ஷர மந்திரத்தை வேதியர்கள் ஓங்காரத்துடன் கூட்டி உச்சரிக்கவேண்டுமென்றும், ஏனையோர்கள் அவ்வோங்காரமின்றி வெறும் பஞ்சாக்ஷரத்தை மாத்திரம் ஜெபிக்கலாகுமென்றும் பழமையான ஆகமத்தில் விதிக்கப்பட்டுள்ளன. இந்த பஞ்சாக்ஷர மந்திர செபத்தால் இகபர ஸித்தியுண்டாகுமென்று சுப்பிரபேதமென்னும் ஆகமத்தில் ஆறுவது படலத்தில் ஓதப்பட்டுளது. இந்த ஐந்தெழுத்தை உச்சரித்து ஒப்பற்ற சிவபதமடைந்த உலகினர் எண்ணிறந்தோரென்ற உலக வழக்கே அவ்வாகமங்கூறியதற்குப் போதிய சான்றும்.

---

அற்புதமாய் வழங்குமென்றறிவாயாக எ - று. இவை, கௌதம ரிஷியின் பொருட்டுத் தோன்றின.

"ஈசானந்தன்னிற்புரோற்கீதமாதியெட்டுந்
தேசாரவேயுதிக்குந்தேறு."

(இ - ள்.) ஈசான முகத்தினின்றும் - புரோற்கீதம், இவளிதம், சித்தம், சந்தானம், சருவோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டாகமங்களும் பிரகாசமுறத் தோன்றின எ - று. இவை, அகஸ்திய மஹரிஷியினிமித்தம் உண்டாயின.

"இருபதுமெட்டுமேமூலமுபபேதம்
இருநூறுமேழுமெனவெண்."

(இ - ள்.) இந்த இருபத்தெட்டாகமங்களும் சிவபெருமானிடத்தினின்றும் ஆதியிற் றோன்றினமையால் மூலாகமமெனப்படும். இவற்றின் வழித் தோன்றிய உபாமங்கள் இருநூற்றேழா மென்றுணர்வாயாக எ - று.

## உ-வது, உருத்திராக்கப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! அந்தச் சுப்பிரபேதமென்ற ஆகமத்தில் முற்குறிப்பிடப்பெற்ற ஆறுவது படலத்தில் தன்னை யொப்பில்லாத உருத்திராக்கத்தின் தகுதியும் சொல்லப்பட்டுளது. இதனையும் இங்கு விளக்குவேன். கேட்பாயாக:—

கின்னரர், இயக்கர், சுராசுரர், முனிவர், கேசரர், கெருடர், கந்தரர்ப்பர் என்பவரெல்லாம் பொருந்தி நின்று பொற்பாத கமலங்களைப் போற்றக் கைலயங்கிரியில் வீற்றிருந்த சிவபெருமான் ஆயிரம் தேவவருஷம் கண்ணிமை கொட்டாபலிருந்ததினால் அக்கண்மலர்களினின்றும் உண்டாகிய நீர்த்துளிகள் பல மணிகளாய்ப் பரிணமித்தன. அந்த மணிகளே * உருத்திராக்கங்களாகும்.

---

* உருத்திராக்கம்—ருத்திரனுடைய கண்களினின்றும் தோன்றியது. தேவர்கள் கைலயங்கிரி சென்று திரிபுரத்திலுள்ளவர்களால் தாம் படுந்துன்பத்தை அறிவித்தனர். அப்பொழுது சிவபிரான் கண்களை மலர்த்திக்கொண்டிருப்ப அந்தக் கண்களினின்றும் நீர் சொரிந்தன. அந்த மூன்று கண்களுள் சூரியரூபமாகிய வலக்கண்ணினின்றுமுண்டாகிய நீரில் பன்னிரண்டு ருத்திராக்ஷ மரமும், சந்திரரூபமாகிய இடக்கண்ணினின்றுமுண்டாகிய நீரில் பதினெரு ருத்திராக்ஷ மரமும், அக்கினிரூபமாகிய நெற்றிக்கண்ணினின்றுமுண்டாகிய நீரில் பத்து ருத்திராக்ஷ மரமும் உண்டாயின. வலக்கண்ணீரிலிருந்து கபிலநிற ருத்திராக்ஷமும், அதினின்று செந்நிற ருத்திராக்ஷமும், அதினின்று பொன்னிற ருத்திராக்ஷமும் உண்டாயின. இடக்கண்ணினின்றும் வெண்ணிற ருத்திராக்ஷந் தோன்றியது. நெற்றிக்கண்ணினின்று கருநிற ருத்திராக்ஷமுண்டாயது.

மேலும், இங்குரைக்கப்பட்ட ஒன்பதுமுக ருத்திராக்ஷ மணிகளுக்கு மேல் பதினாறுமுகம் வரையுமுண்டு. ஒருமுக ருத்திராக்ஷத்தை யணிந்துகொண்டால் சிவனுக்கும், இரண்டுமுக மணிபூண்டால் சத்திக்கும், மூன்றுமுக மணிதரித்தால் திரிமூர்த்திகளுக்கும், நான்குமுக மணி யணிந்துகொண்டால் பிர்ம்மதேவனுக்கும், ஐந்துமுக மணிதரிக்கில் சதாசிவனுக்கும், ஆறுமுக மணிதரிக்கில் சுப்பிரமணியருக்கும், ஏழுமுக மணிதரித்தால் சப்தமாதருக்கும், எட்டுமுக மணிதரித்தால் அஷ்டவித்தியேசுரருக்கும், ஒன்பதுமுக மணிதரிக்கில் நவதீர்த்தங்கட்கும், பத்துமுக மணியணிந்தால் பத்து திக்கு பாலர்கட்கும், பதினொருமுக மணியணிந்தால் பதினொரு ருத்திரர்களுக்கும், பன்

இந்த உருத்திராக்கங்களுள் ஒரு முகமுடையதற்குச் சிவனும், இரண்டு முகமுடையதற்குச் சிவனும் சத்தியும், மூன்று முக முடையதற்குச் சிவனும் சத்தியும் நாதமும், நான்கு முகமுடைய தற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும், ஐந்து முகமுடைய தற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும் சதாசிவமும், ஆறு முகத்திற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும் சதாசிவமும் ஈசுவரனும், ஏழு முகமுடையதற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும் சதாசிவமும் ஈசுவரனும் ருத்திரனும், எட்டு முகமுடைய தற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும் சதாசிவமும் ஈசுவர னும் ருத்திரனும் விஷ்ணுவும், ஒன்பது முகத்திற்குச் சிவனும் சத்தியும் நாதமும் விந்தும் சதாசிவமும் ஈசுவரனும் ருத்திரனும் விஷ்ணுவும் பிரமனும் அதிதெய்வங்களாவர்.

இத்தகைய தெய்வ ருத்திராக்ஷமணியைச் சிரசிலும், காதி லும், கழுத்திலும், கையிலும் அன்புடன் தரித்தல் வேண்டும். சிரசிற்றரித்தல் கோடிபலம். காதினிற்றரிப்பரேல் நூறு கோடி பலத்தையடைவர். கண்டத்திலணிபவர் ஆயிரங்கோடி பலத்தைப் பெறுவர். கையிலணிபவர் அனந்தகோடி பலனையடைவர்.

---

### ௩-வது, சிவபூசைப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! இதுவரையும் ருத்திராக்ஷத்தின் மகிமை யெல்லாம் யானறிந்தவாறியம்பினேன். இனி, ஆகமத்தில் விதித் துள்ள சிவபூஜையின் இயல்பினைக் கேட்பாயாக :—

---

னிரண்டுமுக மணியணிந்தால் விஷ்ணுமூர்த்தியாகிய வாசுதேவர் முதலிய பன்னிருவருக்கும், பதின்மூன்றுமுக மணியணிந்தால் சதருத்திரர்களுக்கும், பதினான்குமுக மணிதரித்தால் அசுவினி தேவதைகளுக்கும், அஷ்டவசுக் களுக்கும், பதினைந்துமுக மணிதரிக்கில் சந்திரன், வருணன் முதலியவர் களுக்கும், பதினாறுமுக மணிபூண்டால் முப்பத்துமுக்கோடி தேவர்களோடு பிர்ம்மா விஷ்ணு சிவன் எல்லாருக்கும் அன்புண்டாகுமென்று சிவாகமத்திற் சொல்லப்பட்டுள்ளன.

சிவபெருமானை மிக்க அன்போடு *சரிதை கிரியை யோகம் ஞானங்களால் ஆராதிப்பார்கள். இந்தச் சரிதை முதலிய நான்கினில் ஒவ்வொன்றும் நான்கு விதங்களாம். அவை.— சரிதையிற் சரிதை, சரிதையிற் கிரியை, சரிதையில் யோகம், சரிதையில் ஞானம் என்றும், கிரியையிற் கிரியை, கிரியையிற் சரிதை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என்றும், யோகத்தில் யோகம், யோகத்திற் சரிதை, யோகத்திற் கிரியை, யோகத்தில் ஞானம் என்றும், ஞானத்தில் ஞானம், ஞானத்திற் சரிதை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம் என்றும் சொல்லப்படுவனவாம். இவற்றுள் சரிதையாவது.— கோயிலெடுத்தல், திருநந்தவனஞ் செய்தல், திருமாலை தொடுத்தல், ஆலயங்களில் தீபம்போடுதல், மெழுகுதல் முதலிய பணிவிடை செய்வதாம். கிரியையாவது:—சிவனை ஆராதனை புரிவதாம். அந்தப் பூஜையும் ‡ஆத்மார்த்த பூஜை †பரார்த்த பூஜை யென இரண்டு வகைப்படும். §குருவழிலிங்கம் தண்டுலம் (அரிசி) ¶க்ஷணிகலிங்கம், %சலலிங்கம், ‖மண்டில

---

* சரியாவான்–ருத்திரமூர்த்தியையும், கிரியாவான்–சதாசிவமூர்த்தியையும், யோகிநாதத்தையும் தியானஞ்செய்தற்குரியவர்கள். ஞானி சிவோகம்பாவனை செய்யத்தக்கவன். [சிவோகம்பாவனை-நானே சிவனென்று பாவித்தல்.]

‡ ஆத்மார்த்த பூஜை–தன்னிமித்தமாகச் செய்யும் பூஜை.

† பரார்த்த பூஜை–பிறர் பொருட்டுச் செய்யும் பூஜை.

§ குருவழிலிங்கமாவது–குருவானவன் தீக்ஷைசெய்து சிஷ்யனைநோக்கி 'நீ ஜீவிக்குங் காலம்வரை இந்த லிங்கத்தைக் கைவிடாது நாடோறும் பூஜிப்பாய்' என்று ஆணையிட்டு 'யான் சரீரமுள்ளவரை சிவபூஜை செய்தன்றி ஒன்று முட்கொள்ளேன்' என்று பிரதிஜ்ஞை செய்வித்துக்கொண்டு கொடுக்கப்பெற்று பூஜிக்கும் லிங்கமாம்.

¶ க்ஷணிகலிங்கமாவது–பூஜித்தபின்னர் விடப்படும் லிங்கமாம்.

% சலலிங்கமாவது–தனக்கு விரும்பியதொரு நிறத்திற் இருதயத்திற் கற்பித்துக்கொண்டு பூஜிக்கப்படும் லிங்கமாம். "கோபுரமாதியசலங்குறிப்பினுள்ளே, தாபிதலிங்கஞ்சலனந்தான்" என்பதுங் காண்க.

‖ மண்டிலலிங்கமாவது–வேதிகையிலிட்டுப் பூஜிக்கும் லிங்கமாம். இது அந்த விஜய முதலிய தொண்ணூற்றூறு வகைப்படுமென்பர்.

லிங்கம் என்ற ஐந்தும் ஆத்மார்த்த பூஜை செய்வோர்கட்குகந் தவைகளாம். இந்த ஆத்மார்த்த லிங்கங்களுள் க்ஷணிகலிங்கம் பன்னிரு வகைப்படும். அவை:—மண், புஷ்பம், சந்தனம், கோமயம், அன்னம், மா, சர்க்கரை, பழம், ஆற்றுமணல், வெண்ணெய், ருத்திராக்ஷம், கூர்ச்சம் என்பன. மணல் லிங்க பூஜைக்கு முக்தியும், சந்தனலிங்க பூஜைக்குச் செல்வமும், புஷ்பலிங்க பூஜைக்கும், கோமயலிங்க பூஜைக்கும் பிணி யின்மையும், மண் முதலிய லிங்க பூஜைகளுக்குக் காமங்களும், பழம் சர்க்கரை லிங்க பூஜைகளுக்குப் பிரியமும், கூர்ச்சலிங்க பூஜைக்கு மனோகரமும், ருத்திராக்ஷலிங்க பூஜைக்குப் பலப்பிரயோஜனங்களும், மா, வெண்ணெய் லிங்க பூஜைகளுக்கு இஷ்டார்த்தமும், ஆற்றுமணல் லிங்கபூஜைக்கு சிவ சாரூபமும் பலன்களாம்.

இது நிற்க, எல்லோரும் ஈடேறும்படி பழமையான க்ஷேத்திரங்களில் § தேவர் ரிஷி மனிதர் என்ற இவர்கள் சிவாகமவிதிப்படி பிரதிஷ்டை செய்தனவும் * சுயம்புவானவுமாகிய லிங்கம் யாவற்றையும் பூஜை செய்து இச்சித்த பலத்தைப் பெறுவது பரார்த்தமாம்.

இத்தகைய லிங்கங்களைப் பூஜை செய்ய அருகதை யுடையார்க்கு ‡ பஞ்சசுத்தி வேண்டுமென்று ஆகமங்களில் விதிக்கப்பட்டுளது. அந்தப் பஞ்ச சுத்திகளுள் பரிசுத்தமான நீரில் விதிமுறைப்படி நீராடல் தேகசுத்தியாம். இவ்வாறு நீராடியபின் அந்த நதிக்கரையில் வடதிசை நோக்கியிருந்து அஸ்திரமந்திரத்தால் திக்குப்பந்தனஞ்செய்து மோதிர விரலினால் இடது நாசியை

---

§ "சயம்புவுந்தைவிகமுமாரிடமுமாந்தர்,
நயந்தலிங்கந்தானுமெனநான்கு" என்பது காண்க.

* சுயம்புவாவது—ஒருவரால் பிரதிஷ்டிக்கப்பெறுதலின்றிக் குருக்ஷேத்திர முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் தானே தோன்றுவதாம்.

‡ "பஞ்சசுத்திசெய்துநின்னைப்பாவித்துப்பூசைசெய்தால்
விஞ்சியஞானம்விளங்கும்பராபரமே"

என்று தாயுமானவர் கூறியதாலும் பஞ்சசுத்தியின் பெருமை யறியலாம்.

நெருக்கிச் சரீரத்தில் சஞ்சரிக்கின்ற வாயுவை வலது நாசியினல் † இரேசகஞ்செய்து பின்னர் அந்த வலது நாசியையும் பெருவிரலால் நெருக்கி இடது நாசியினல் § பூரகஞ்செய்யவேண்டும். அதன்மேல் நாசி யிரண்டையும் வாயு சஞ்சரிக்காமல் விரல்களால் நெருக்கிக் * கும்பகஞ் செய்யவேண்டும். இத்தகைய பிராணயாமம் மூன்றனையும் முறையாகச் செய்து பஞ்சபூதமயமான சரீரத்தைத் தகனஞ் செய்யவேண்டும். சிவத்தைச் சார்கின்றவன் அதற்கு யோக்யமான நிலையைப் பெறவேண்டுமன்றே.

இத்தகைய பஞ்சபூதமயமான சரீரத்தைத் தகனஞ்செய்யும் முறை வருமாறு.— பிருதிவீ (மண்) பொன்மை நிறமும் சதுர வடிவுமுடையது. இதற்குப் பீஜாக்ஷரம் ல. அதிதேவதை பிர்ம்மா. அப்பு (நீர்) வெண்மை நிறமும் பிறைவடிவுமுடையது. இதற்குப் பீஜாக்ஷரம் வ. அதிதேவதை விஷ்ணு. தேயு (அக்கினி) செந்நிறமும் திரிகோணவடிவுமுடையது. இதற்குப் பீஜாக்ஷரம் ர. அதிதேவதை ருத்திரன். வாயு கருப்புநிறமும் அறுகோணவடிவுமுடையது. இதற்குப் பீஜாக்ஷரம் ய. அதிதேவதை மகேச்வரன். ஆகாயம் புகைநிறமும் வட்டவடிவுமுடையது. இதற்குப் பீஜாக்ஷரம் ஹ. அதிதேவதை சதாசிவன்.

இத்தகைய பஞ்சபூதமயமான சரீரத்தில் இருதயம் கண்டம் தாலு (மேல்வாய் கீழ்வாய்) புருவமத்தி பிர்ம்மரந்திரம் என்ற அவயவவிசேஷங்களில் குவிந்து அதோமுகமாய் (கீழ்நோக்கிய முகமாய்) இருக்கிற ஐந்து தாமரைமலர்களைக் கவசநேத்திர மந்திரங்களை ஜபித்து ஊர்த்துவமுகமாக்கி (மேல்நோக்கிய முகமாக்கி)ச் சிவமயமாகிய பாசுபதாஸ்திரத்தால் ‡ பஞ்சக்கிரந்தியைச் சேதனஞ் செய்யவேண்டும்.

---

† இரேசகம்—பிராணவாயுவை விடுதல்.

§ பூரகம்—மூச்சையுள்ளே வாங்குதல்.

* கும்பகம்—கும்பித்தல்.

‡ பஞ்சக்கிரந்தி—ஐந்து முடிச்சு. இங்குப் பஞ்சக்கிரந்தி என்பது இருதயம் கண்டம் தாலு புருவமத்திப் பிர்ம்மரந்திரம் என்ற விடங்களில் அதோமுகமாகக் குவிந்திருக்கின்ற தாமரைமலரை யுணர்த்தும். இங்ஙனம் குவிந்திருக்கின்ற தாமரைமலரைப் பாசுபதாஸ்திரத்தால் மலரும்படி செய்தலைப் பஞ்சக்கிரந்தி சேதனமென்பர்.

அதன்பிறகு அக்கினி பீஜத்தினல் சரீரத்தைத்தகனஞ்செய்து, அந்தச் சரீரத்தில் தங்கியிருக்கின்ற ஆவியைச் சங்காரமுத்திரை கொண்டு அறிவினல் கிரகித்து, பின்னர் இந்தச் சரீரத்தை வியோமனுதியாக விளங்குகிற சைவதத்துவங்களில் ஒன்ருக்கிப் பரிசுத்தமாயிருக்கும் இவ்வுடலில் பிர்ம்மரந்திரத்தில் பிரணவயோகபீடம் போலிருக்கிற தாமரைப் புஷ்பத்தை அதோமுகமாக்கி அதினின்றுஞ்சொரிகிற அமிருதத்தில் ஆத்மாவை நனைத்ததாகப் பாவித்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்யப்பெற்ற பின்னரே இந்தச் சரீரம் புகழினையுடைய சிவசரீரமாக விளங்கும்.

சிருஷ்டி சங்காரம் ஸ்திதி என்கிற நியாச வகைகளின் விகற்பங்கள் முப்பத்தெட்டையும் செய்து தன்னை அந்த நிலையில் சிவனுக மதித்து, நாபியை அக்கினி மண்டிலமாகவும் இருதயத்தைச் சந்திரமண்டிலமாகவும் புருவ மத்தியைச் சூரியமண்டலமாகவும் வகுத்தல் வேண்டும். பின்னர் † இருதயத்திற் பூஜை செய்து நாபியிடத்து ஓமத்தை வளர்த்துப் புருவமத்தியில் தியானஞ் செய்யவேண்டும். இவ்வாறு நுண்ணிய அறிவினல் இருதய புண்டரீகத்தில் வசிக்கிற பராபரவஸ்துவாகிய சிவனை ஆகமவிதி முறை வழுவாது ஆராதனை செய்தலே ஆத்மசுத்தியாம்.

ஆராதனை செய்யும் அர்ச்சகன் சிவ சந்நிதியிலிருந்து ஒரு கை நீளம் வட்டவடிவமாக வெழுதி அதிற்பூமியை ஆவாகனஞ் செய்து திக்குப்பந்தனமும், இருதய மந்திரத்தால் பூஜையுஞ் செய்வதுதான் ஸ்தானசுத்தியாம்.

சராவம் கெண்டிகை படிக்கம் வலம்புரிச்சங்கு திருமஞ்சன கும்பம் அருக்கியகலசம் புஷ்பத்தட்டு முதலிய பாத்திரங்களையெல்லாம் அஸ்திர மந்திரத்தினல் விளக்கி இருதய மந்திரத்தினல்

† இருதய பூஜையை அந்தர்யாகமென்பர். இதனை, “ துள்ளுமறியா மனது பலி கொடுத்தேன் கர்மதுட்ட தேவதைகளில்லை, துரியநிறைசாந்த தேவதையாமுனக்கே தொழும்பனன்னபிடேகநீர், உள்ளுறையி லென்னுவி நைவேத்தியம் பிராணனேங்குமதிதாபதீபம், ஒருகாலமன்றிது சதாகால பூசையாவொப்புவித்தேன்...” என்று தாயுமானவர் கூறியதானுமறியலாம்.

பார்த்து, கவசமந்திரத்தினுல் மூடித்திறந்து சங்கிலும் கெண்டிகையிலும் ஜலத்தைப் பூரித்து அவற்றில் பஞ்சப் பிர்ம்மத்தையும் சடங்கத்தையும் நியாசமாயமைத்து, வலதுகையால் பீஜாக்ஷர நியாசமும் செய்து லிங்கமுத்திரையோடு வனசமுத்திரையும் வகுத்து முன்னர்ச் சங்கத்திற் பூரித்துவைத்த மந்திர தீர்த்தத்தினுல் மற்றெல்லாப் பாத்திரங்களையும் புரோக்ஷணை செய்யவேண்டும். அதன் பிறகு அந்தப் பாத்திரங்கட்குச் சந்தன புஷ்பம் சாத்தித் தூபதீபங்களுங்கொடுத்து இவ்வாறு சாஸ்திர விதிப்படி செய்வதுதான் திரவியசுத்தியாம்.

பூஜிக்கின்ற அர்ச்சகன் சங்கரனுடைய ஆலயத்தை யடைந்து வந்தனைசெய்து கோயில் திருவாசலின் மேல்புறத்திலும், வலத்திலும் மத்திமத்திலும் முறையே கணேசனையும் கலைமகளையும் (சரஸ்வதியையும்) இலக்குமியையும் மானச பூஜையாக § சோடசோபசாரணை செய்தல் வேண்டும். அதன் பிறகு திருவாசலின் வலது பக்கத்திலும், இடது பக்கத்திலும் கங்கை நந்தீசன் யமுநன் மாகாளன் என்பவரை அர்ச்சித்து, விமலன் சுவாகு என்பவரைக் கதவிற் பூஜைசெய்து, இடபவாகனத்தையும் ஆராதனை செய்யவேண்டும். பின்னர் அஸ்திர மந்திரத்தினுல் கண்டாநாதஞ்செய்து இருதய மந்திரத்தினுல் திருத்திரையை நீக்கிக் கெர்ப்பகிரகத்திற் சென்று முதல் நாளிற் சாத்திய புஷ்பத்தைக்கழித்துப் புதுமலரைத் திருமுடியிற்சாத்தி முன்களைந்த நிர்மாலியமெல்லாம் சண்டேசுவரன் மேலணிந்து கைகளை லிங்கமந்திரத்தாற் கழுவி லிங்கபீடத்தைப் பாசுபத மந்திரத்தால் மனமகிழ்ச்சியுடன் அபிஷேகஞ்செய்வதுதான் லிங்கசுத்தியாம்.

விரும்பப்பட்ட பூஜாவேலையில் எல்லா மந்திரங்களையும் பிரணவ முதலாக நமப்பதமீருக உச்சரிப்பதே மந்திரசுத்தியாம்.

---

§ சோடசோபசாரம் - பதினுறு வகை வழிபாடு. அவை: அடைக்காய் தரல், அமுதமேந்தல், ஆசமனநீர்தரல், ஆடைசாத்தல், கர்ப்பூரதீபமேந்தல், பாதங்கழுவநீர்தரல், கைகழுவநீர்தரல், ஆசனமளித்தல், சாந்தளித்தல், நறும்புகைகாட்டல், நீராட்டல், மஞ்சளரிசிதூவல், மந்திரமலரானருச்சித்தல், மலர்சாத்தல், முப்புரிநூல்தரல், விளக்கிடல் என்பன.

* இத்தகைய பஞ்சசுத்தியை நன்கறிந்தவனே சிவபூஜை செய்வதற்கு அருகனுகிறுன்.

இரண்டு நாசிகளில் வாயு சமமாக நடைபெறுகிற காலத்தில் சங்கரனைப் பூஜனை செய்வதுதான் பலத்துடன் கூடியதாகும். இங்ஙனம் பூஜிக்கின்ற விடத்தில் சத்தி சிவமென்ற இரண்டும் லிங்கமும் பீடமுமாகித் தேஜஸுடன் பூவும் மணமும் உயிருமுடலும் போல விளங்கும். பரிசுத்தமாய் ஒன்றுக்கொன்று உயர்வாயிருக்கிற அநந்தாசனம் சிங்காசனம் யோகாசனம் பதுமாசனம் விமலாசனம் என்று ஐந்து ஆசனங்களுள. இவ்வாசனங்களின்மேல் சிவபெருமானை ஆவாகனஞ்செய்து தினமும் தவருது ஆகம முறைப்படி அர்ச்சிப்பார் சிவசாமீப்யத்தை யடைவார்கள். இங்ஙனம் கூறியவையெல்லாம் காரணுகமத்தில் இருபத்துநான்காமத்தியாயத்தில் அர்ச்சனைப்படலத்தில் நன்குரைக்கப்பட்டுள்ளன.

---

## ச-வது, சிவதீட்சைப்பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! சரிதை கிரியை யோகம் ஞானம் என்கிற இந்நான்கும் சித்திப்பதற்கு யோக்யதையை யுண்டுபண்ணித்தருகிற சிவதீக்ஷையின் மகிமையைக் கேட்பாயாக:—

ஆசிரியன் அக்கினியை சிவாக்கினியாக்கி மாணுக்கனை வடக்கு முகமாக வைத்து கெண்டிகையிலுள்ள மந்திரதீர்த்தத்தைத் தர்ப்பையினுல் புரோக்ஷித்து அஸ்திர மந்திரத்தினுல் திருநீற்றைச் சரீரத்தில் உத்தூளனஞ்செய்வித்துத் தர்ப்பையால் துடைத்துக் காலாக்கினி மந்திரத்தினுல் முக்கிய சரீரத்தைத்தகித்து, சிலமுத்திரைகளாலும் ஜீவனில் பீஜாக்ஷரத்தாலும் தகனமாகிய உடலைப் பரிசித்து இருதய மந்திரத்தினுல் இருதய முதலியவிடங்களைத் தொடுவித்து ஜீவபதத்தையுங்கொடுத்து ஆசிரியன் தனது வலது கையை யோகபீடமாகச் செய்வித்து மனேன்மணி சத்தியுடன்

---

* தேகசுத்தியையும் ஆத்மசுத்தியிலடக்கியதினுல் இங்கு, தேகசுத்தி ஆத்மசுத்தி ஸ்தானசுத்தி திரவியசுத்தி லிங்கசுத்தி மந்திரசுத்தி என்ற அறுவகைசுத்தியையும் பஞ்சசுத்தி என்று சொல்லப்பட்டது.

வாழ்கின்ற சதாசிவனை ஆவாகனஞ்செய்து கையை மூன்று முறை மாணுக்கன் சிரசில் வைக்கக்கடவன்.

சிவனுடைய சந்நிதானத்தில் சதுரமண்டலத்தைப்பண்ணி, அதில் தர்ப்பையை வைத்து ஈசானமந்திர நியாசம் எட்டுத்திக்கிலும் செய்து, அந்தணர் முதலிய நான்கு வருணத்தார்க்கும் தீக்ஷா நாமம் சாத்தக்கடவன். மேலும், குருவினுடைய நிழலையும், தனக்கு மூத்தவர்களினிழலையும், லிங்கநிழலையு மிதியாதிருத்தல், சிவதீக்ஷையில்லாத பெண்மகளுடன் கூடி இன்புறுதற்கு மனத்தினாலும் எண்ணுதிருத்தல், சிவாகமத்தைப் பழியாதிருத்தல், ஆசிரியனுக்குப் பணிவிடை செய்தல், அடியவர்களை நிந்தனை செய்யாமை, ஈசுவர நிருமாலியந்தொடாமை என்ற எட்டு முறைகளையும் நன்குபதேசிக்கக்கடவன்.

இவ்விஷயமனைத்தும் சுப்பிரபேதமென்ற ஆகமத்தில் பன்னிரண்டாம் படலத்தில் நன்குரைக்கப்பட்டுள்ளன. இது நிற்க, பசுபதிதீக்ஷை பெற்றவர்க்கே சரிதை கிரியை யோகம் ஞானம் என்ற இந்நான்கும் ஸித்திக்கும். ஏனையோர்க்கு ஸித்திக்கமாட்டா. கண்ணில்லாக் குருடர்கள் எங்ஙனம் வழிநடப்பார்கள்?

---

ரு-வது, பசுபதிபாச சிவயோகப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! பசுபதிபாசங்களின் இயல்பினைக் கேட்பாயாக.— பராபரமயமாம் வித்யாதத்துவத்தினிடை ஆத்மாதோன்றும். அவ்வாத்மா பரிசுத்தமாய், ஒளியாய், அநாதியாய் விளங்கும். அது வஞ்சமாயையினால் சூழ்ந்திடப்படலால் பசுவென வழங்கலாகும். அந்த மாயாசம்பந்தத்தினால் ஆத்மாவுக்கு ஆசையும் மோகமும் சுகமும் சோகமும் துயரமும் கோபமும் சந்தோஷமும் என்ற இவை இயல்பாகத் தொடரும். இவ்வான்மாக்கள் எண்பத்து நான்கு லக்ஷம் பாகுபாடான யோனிகளில் வந்து பிறப்பதும் மரிப்பதுமாகித் திரிந்துழலும்.

இவ்வாறு திரிந்துழல்கிற ஜீவன் சிவதரிசனத்தாலும், தீக்ஷையாலும், சிறந்த பூஜையாலும் ஒப்பற்ற யோகத்தாலும் பெற்ற ஞானவொளி விளக்கைக்கொண்டு அஞ்ஞான இருளைப்போக்கி, சூரியன் விளங்குவதுபோலவும், குடத்திலுள்ள விளக்கு, குடமுடைந்தவுடன் அது ஒளிர்வதுபோலவும் பரமேசுவரனுடைய

அருளால் பாசம்விட்டுச்சென்று, இச்சீவனுடைய சகல கர்மத்தின் வாசனையுடலைப்பற்றியிருந்து அந்த உடல் மாண்டகாலத்தில்,பெருங் காயம் வைத்திருந்த பரணி (செப்பு) அந்தப் பெருங்காயம் இல்லா திருந்தும் அதன் வாசனையொழியாது பின் அந்தப்பரணியொழிந்த பின் வாசனையும் நீங்குவதுபோலக் கர்மங்களும் மகன்றுவிடும்.

இவ்வகையினால் சிவமயமெல்லாம் நன்றாக அறிந்துள்ள ஜீவன் ஞானவிளைவினால் முக்தனாய் அந்தப் பரமசிவனை யடைந்திடும் முறையினைக் கேட்பாயாக:—

மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு பாதம் பாணி (கை) பாயுரு உபஸ்தம் என்ற கருமேந்திரியம் ஐந்தும், மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்ற அந்தக் கரணம் நான்கும், பிரகிருதி ஒன்றும், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விக்ஞானமயம் ஆநந்தமயம் என்ற ஐந்து கோசங் களும், உடல் தோல் இரத்தம் சதை நரம்பு மூளை சுக்கிலம் என்ற ஏழு தாதுக்களும், இடகலை பிங்கலை, சுழுமுனை அத்தி சுகுவை காந்தாரி குகு அலம்புருடை புருடன் சங்கினி என்ற பத்து நாடி களும், சந்திரன், சூரியன், அக்கினி என்ற மூன்று மண்டலங் களும், பிராணன் அபானன் வியாநன் உதானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் அந்தரியாமி முக்கி யன் பிரபஞ்சன் வயிரவன் என்ற பதினான்கு வாயுக்களும், (1) மூலாதாரம் (2) சுவாதிட்டானம் (3) மணிபூரகம் (4) அநா கதம் (5) விசுத்தி (6) ஆக்கினை என்ற ஆறு ஆதாரங்களும், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்ற அவஸ்தைகளைந்தும், சாத்விக இராஜச தாமசம் என்ற மூன்று குணங்களும், ஆணவம் மாயை காமியம் என்ற மூன்று மலங் களும், வாதம் பித்தம் சிலேஷ்பம் என்ற மூன்று வியாதிகளும், மண் பொன் புதல்வரென்ற ஈஷணை மூன்றும், காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் இராகம் துவேஷம் என்ற இராகங்கள் எட்டும், ஸ்தூலம் சூக்ஷ்மம் என்ற சரீரங்கள் இரண்டும், கண் நா செவி நாசி குதம் குறி என்ற ஒன்பது துவாரங்களும்,

(1) மூலாதாரம்-குதத்தானம்.
(2) சுவாதிட்டானம்-குய்யத்தானம்.
(3) மணிபூரம்-நாபித்தானம்.
(4) அநாகதம்-இருதயத்தானம்.
(5) விசுத்தி-அடிநாத்தானம்.
(6) ஆக்கினை-நெற்றித்தானம்.

| | 2 | 3 | 4 | 1 |
|---|---|---|---|---|
| | சித்தம் | புத்தி | அஹங்காரம் | ப்ரகி |

இவை நான்கும் அந்தக்கரணங்கள்.

| | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| ம் | பிராணமயம் | மனோமயம் | விக்ஞானமயம் | ஆநந்தம |

இவை ஐந்துங் கோசங்கள்.

| | 2 | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|---|
| | தோல் | இரத்தம் | சதை | நரம்பு | மூளை | சு |

இவை ஏழும் தாதுக்கள்

| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|
| ங்கலை | சுழுமுனை | அக்கி | சுகுவை | காந்தாரி | குகு | அலம்புருடை | புருடன் |

இவை பத்தும் நாடிகள்.

| | 2 | 3 |
|---|---|---|
| ம் | சூரியமண்டலம் | அக்கினிமண்டலம் |

இவை மூன்றும் மண்டலம்.

| 1 | 2 | 3 |
|---|---|---|
| சத்துவம் | இராஜசம் | தாம |

இவை மூன்றுங் குணங்கள்.

| | 2 | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|---|
| | அபானன் | வியானன் | உதானன் | சமானன் | நாகன் | கூ |
| | 9 | 10 | 11 | 12 | 13 | |
| | தேவதத்தன் | தனஞ்சயன் | அந்தரியாமி | முக்கியன் | பிரபஞ்சன் | வயி |

இவை பதினாலும் வாயுக்கள்.

| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | |
|---|---|---|---|---|---|---|
| குரோதம் | உலோபம் | மோகம் | மதம் | மாற்சரியம் | இராகம் | த |

இவை எட்டும் இராகங்கள்.

| 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|
| நா 1 | செவி 2 | நாசி 2 | குதம் 1 | குறி 1 |

இவை ஒன்பதும் துவாரங்கள்.

| 1 | |
|---|---|
| ஸ்தூலம் | ஸ |

இவை இரண்டும் ச

| | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| | சுவாதிட்டானம் | மணிபூரகம் | அனாகதம் | விசுத்தி | ஆக்கி |

இவை ஆறும் ஆதாரங்களாம்.

| | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|

சூ-வது, சகளநிட்களப் பரிச்சேதம்.

இவ்வகையில் எண்ணப்பட்ட தொண்ணூற்றாறென்ற இச்சரீர தத்துவத்தில் சித்தியை நன்கறிந்து சிவஸ்வரூபத்தைத் தெளிந்திட வேண்டும். இங்ஙனம் தெளியுமிடத்தில் சத்திதான் சிவன். அந்தச் சிவஸ்வரூபமும் * நிஷ்களமும் ‡ சகளமும் † சகளநிஷ்களமென மூன்று வகையாக எண்ணப்பெறும். அவற்றுள் சாந்தி சக்தி நாதம் விந்து என்ற இந்த நான்கும் நிஷ்களமாம். சகளம், ஈசன் ருத்திரன் விஷ்ணு பிர்ம்மா என்ற நான்குவிதமாம் § சகளநிஷ்களம் சதாசிவமாம். இந்தச் சதாசிவனுக்குத் திருமுடி ஐந்து. ¶ நான்கு முகம். கண் பன்னிரண்டு. வாய் நான்கு. செவி எட்டு. திருமேனி ஒன்று. பாதம் இரண்டு. நிறம் வெண்மை. இதுநிற்க, சிவதத்துவங்களை முறையாக எண்ணினால் முப்பத்தாறும். அவை.—சிவன் சத்தி சதாசிவன் ஈசன் வித்தியேச்சுரர் என்ற சுத்தசத்துவங்கள் ஐந்தும், மாயை கலை அவ்வியக்தம் இராகம் வித்தை காலம் நியதி என்ற மாயாபுஞ்ச தத்துவம் ஏழும், பூதம் ஐந்தும், தன் மாத்திரை ஐந்தும், கருமேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் பிரகிருதி மஹாந் அஹங்காரம் மனம் என்ற நான்குமாம்.

இங்ஙனம் சொல்லப்பட்ட தத்துவங்களையெல்லாம் ஆராய்ந்து யோகசாதனையால் முன்னர் பஞ்சப்பிர்ம்மத்தை உணர்ந்தோர்க்கு ஆநந்தமாம் முக்தியுண்டாகும். இவ்விஷயமெல்லாம் சுப்பிரபேதாகமத்தில் முதல் அத்தியாயத்தில் சிவபிரானிடத்தில் கணேசன் உபதேசம் பெற்றதாகச் சொல்லப்பட்டுளது.

---

* நிஷ்களம்-வடிவில்லாதது. ‡ சகளம்-வடிவுடையது.

† சகளநிஷ்களம்-இவ்விருதன்மையும் கூடியது.

§ "நிட்களன்றானன்பானினைந்தருச்சிக்கச்சகள, நிட்களனானமலன்" என்பதும் இங்கறியத்தக்கது. இதன்பொருள்—நிஷ்களனாகிய சிவபெருமான் தன்னை ஆத்மாக்கள் அன்பினால் தியானித்துப் பூஜிக்கச் சகளநிஷ்களனானான் என்பதாம். சதாசிவமூர்த்தி, பரசிவனுக்குச் சரீரமாகவிருப்பதால் சதாசிவமூர்த்தத்தில் பரசிவனது அரூபமும், ரூபமும் கலந்திருக்கும். ஆதலால் சதாசிவமூர்த்தி சகளநிஷ்களமாயினர்.

சிவபிரான் பசுக்களின் பாசங்களைக் கழிப்பதற்காகத் தன் கருணையினால் சகளம், நிஷ்களம், சகளநிஷ்களம் என்ற வடிவினைக் கொண்டுள்ளான் என்று சிவஞானசித்தியாரிலும் சொல்லப்பட்டுளது. அது வருமாறு:—

"உருமேனிதரித்துக்கொண்டதென்றலுமுருவிறந்த
அருமேனியதுவுங்கண்டோம்அருவுருவானபோது
திருமேனியுபயம்பெற்றோஞ்செப்பிமூன்றும்நந்தங்
கருமேனிகழிக்கவந்தகருணையின்வடிவுகாணே" என்பதாம்.

¶ சதாசிவமூர்த்தியின் தலை ஐந்தனுள் ஒன்று ஊர்த்துவ முகமாயுள்ளது. அதனை அவ்வியக்தமுகமென்பர். [அவ்வியக்தம்-விளங்கக் காணப்படாதது.] ஆதலால் இங்குத் திருமுடி ஐந்து நான்குமுகமென்று சொல்லப்பட்டது.

ஸ்ரீ:

# சிவ தத்துவம் 36.

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| சிவன் | சத்தி | சதாசிவன் | ஈசன் | வித்தியேச் சுரர் |
| இவ்வைந்தும் சுத்த தத்துவங்களாம். | | | | |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| மாயை | கலை | அவித்தை | இராகம் | மித்தை | காலம் | நியதி |
| இவ்வேழும் மாயாபுஞ்ச தத்துவங்களாம். | | | | | | |

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| பிருதிவீ | அப்பு | தேயு | வாயு | ஆகாசம் |
| இவ்வைந்தும் பூதங்களாம். | | | | |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| கந்ததன் மாத்திரை | ரசதன் மாத்திரை | ரூபதன் மாத்திரை | பரிசதன் மாத்திரை | சப்ததன் மாத்திரை |
| இவ்வைந்தும் பூதங்களின் ஸூக்ஷ்மாவஸ்தைகளாம். | | | | |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| வாக்கு | பாணி | பாதம் | பாயுரு | உபஸ்தம் |
| இவ்வைந்தும் கருமேந்திரியங்களாம். | | | | |
| 1 | 2 | 3 | 4 | 5 |
| மெய் | வாய் | கண் | மூக்கு | செவி |
| இவ்வைந்தும் ஞானேந்திரியங்களாம். | | | | |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| பிரகிருதி | மஹாந் | அஹங்காரம் | மனம் |

எ-வது, சிவநின்மாலிய விசேடப்பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! இதுவரை யானுரைத்தவற்றை நன்கு கேட்டாய். இவையொருபுறமிருக்க; இனி * சிவநிர்மாலிய விசேட முரைப்பேன் கேட்பாயாக.— சங்கரனுடைய நிர்மாலியமெல்லாம் சண்டேசன்றனக்கே உரியனவாம். ஏனையோர் பரிசுத்தரில்லாமையாலே அந்த நிர்மாலியத்தைக் கைக்கொள்வதற்கு அருகராகார். உலகினர், 'சிவநிர்மாலியம் பழுதுளதாம்' என்று சோதனைசெய்து துறந்தார்களில்லை. ஆராயலுறின் அதற்கோர் பழுதுமுளதோ? இல்லையன்றே. அறிஞர்களாற் புகழ்ந்துரைக்கப்பெற்ற ‡ கஞ்சனூராழ்வான், இந்தச் சிவநிர்மாலியப் பிரசங்கம் வந்த பிரகரணத்தில், 'திங்கள்சேர் செஞ்சடைச் சிவபிரான் உகந்த அன்னபானாதிகளெல்லாம் அவன்றன் இராஜபுத்திரர்கட்குக் கொள்ளத்தகும்' என்று சைவாகமங்களினுள்ள நுண்பொருளுணர்ந்தோர் நம்புமாறு நாட்டினர். இதனையும் நீ நன்கறிந்துகொள்வாய்.

---

அ-வது, வீரமகேச்சுரப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! வீரமகேச்சுர சித்தாந்தத்தில் பரமரகசியத்தில் சங்கரன் உமாதேவியாருக்குச்சொன்ன வாசகத்தைக் கேட்பாயாக.— உத்தமலிங்க தாரணத்தால் உயிரும் லிங்கத்தின் உருவாம். எவ்வாறெனின்; பானையிலுள்ள நீருக்கு அக்கினியின் பரிசத்தால் உஷ்ணமுண்டாவதுபோலென்க. லிங்கஸ்வரூபத்தின் சிறப்பெல்லாம் உண்மையாக நன்கறிந்து லிங்கத்தை அணிந்துகொள்பவன், தேகத்தைவிட்டு ஆவி போகின்ற மரணகாலத்தில் ஆவியானது

---

* சிவநிர்மாலியம்—சிவனுக்குச் சாத்திக்களைந்த மாலை முதலியன.

‡ கஞ்சனூராழ்வான்—அரதத்த சிவாசாரியர். இவர் கஞ்சனூரில் பிறந்தவராதலால் இப்பெயர் பெற்றனர். ஸ்ரீவைஷ்ணவராகிய வாசுதேவாசார்யருடைய அருமைப் புதல்வர். வைஷ்ணவ மதத்தைவிட்டு, சைவசமயப் பற்றுடையவராய் விளங்கினர். இவர் செய்த நூல்கள்: சதுர்வேதசாரம், தத்வநிரூபணம், அரியரதாரதம்யம், ஸ்ரீகண்டபாஷ்யசமர்த்தனம், உஜ்வலம், ஞானரத்னாகரம், சிவாதிக்யசிகாமணி, பக்தாதிக்யசிகாமணி, சைவாகமபூஷணம், விபூதிருத்ராக்ஷ பஞ்சகம் முதலியன.

லிங்கமூர்த்தியை அதிஷ்டித்திருந்த திவ்வியசொரூபத்தோடு ஐக்கிய மாகையினுல் லிங்கத்தின் திவ்விய சொரூபமும் செல்லும். பின்னர் அந்த லிங்கம் பிரேதலிங்கமென்று பெயர்பெறும். அதன்மேல் ஆவியிழந்த தேகத்தையும், திவ்விய சொரூபமிழந்த லிங்கத்தையும் பூமியை அகழ்ந்து விதிமுறைப்படி சமாதிவைப்பது தக்கதாம்.

இன்னும் வச்சிரசூசியிலும் இந்த வீரமகேச்சுர சித்தாந்தத்தின் இயல்பை எடுத்தியம்பிய முறையினைக் கேட்பாயாக.— பயனுடைய சிவதத்துவங்களை யறியப்பெற்றவனே பிராம்மணனுவான். வருணுச்சிரம தருமங்களைக் கையாண்டு கொண்டிருப்பதால் யாதொரு பிரயோஜனமுமில்லை. சிவபிரானுல் சொல்லப்பட்ட ஆகமங்களை வைதிகருக்குரைப்பது அக்கிரமமாம். தெளிவுடைய * சோகம்பாவனையே சிறந்த முக்தியாம். பரப்பிர்ம்மம் பிரகிருதியோடு சேர்ந்ததினுல் ஜீவபாவனை யடைந்தது. நன்ருய்த் தெளிந்து தானே பிர்ம்மம் என்றறிந்தால் அதுவே மோக்ஷமாம். இவ்விவரம் அநுபோக சூத்திரமுரையாநிற்கும்.

இதுநிற்க, சாலோக சாமீப சாரூப சாயுஜ்யம் என்ற நான்கு பதங்களையும் ‡ அஷ்டமாசித்தியையும் முக்தியென்று சிலர் சொல்வர். வேதாந்தங்கடந்தபின் சோகம்பாவனை செய்வதுதானே ஒப்புயர்வற்ற முக்தியாம் என்று அந்த அநுபோகசூத்திரம் செப்பாநிற்கும். ஆதலால் இந்தச் சிவமயமெல்லாம் ஆகமத்தாலறியாதார் சிவபிரானிலும் மிக்கவோர் தெய்வமுண்டெனவுரைப்பர். அதுபோல நீயும் பிறைசூடியாகிய எங்கள் சிவபெருமானைத் தவிர்த்து அரியையே பரனெனவுரைத்தாய் என்றனள். இதனைக் கேட்ட ஆரணவல்லி சிரித்துக்கொண்டு விரித்துரைக்கத் தொடங்கினுள்.

சைவாகமவிதிப்படலம் முற்றும்.

---

* சோகம்பாவனை—அந்தச் சிவன் யானே என்று பாவித்தல்.

‡ அஷ்டமாசித்தியாவன — அணிமா மகிமா கரிமா லகிமா பிராப்தி பிராகாமியம் ஈசத்துவம் வசித்துவம் என்பன. அவற்றுள் அணிமா-அணுவைப்போலாதல். மகிமா-மகத்தாதல். கரிமா-கனமுடையதாதல். லகிமா-இலகுத்வமாதல். பிராப்தி-விரும்பியவற்றையடைதல். பிராகாமியம்-இச்சித்தபடி தடையின்றிச் சஞ்சரித்தல். ஈசத்துவம்-ஆட்சியுளனுதல். வசித்துவம்-இந்திரியங்களைத் தன் வசப்படுத்தல்.

ஸ்ரீ:

# ௩-வது, உத்தரகாண்டம்.

## க-வது, வேதவேதாந்த விதிப்படலம்.

——*——

### வெண்ணீற்றை மறுத்த பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! இதுவரை சந்திரமௌளியாகிய சிவனுடைய மகிமையை இவ்வாறுரைத்து, ஆகமநூலே முக்கிய நூலென மொழிந்தாய். விரிந்த வேதநூலினிச்சயமும், விஷ்ணுவின் பெருமையும் சிறிதும் கருதினையில்லை. கனவிற்கண்ட செம்பொன் கைப்புகுவதில்லையோ அதுபோல நீ கருதியதும் ஸித்திக்கத்தக்கதில்லை. சைவசித்தாந்தத்தின் பழமையெல்லாம் குறைவறச் சொன்னாய். ஆகமஞ்சொன்ன இதற்கெலாம் நீ சம்மதிக்குமாறு வேதபுராண சாஸ்திரங்களால் சொல்லப்பட்ட விடையினைப் பகர்கின்றேன். நன்கு கேட்பாயாக.—

நீ திருநீற்றின் மகிமையையும், அதனை யணிந்துகொள்வதாலுண்டாகும் பலன்களையும் உரைத்தாய். திருநீற்றின் விசேஷமெல்லாம் ஆகமத்தில் இயம்பியது ஒருபுறமிருக்க, சிறந்த அதர்வசிரசில் திருநீற்றைப்பற்றி யுரைத்ததனைக் கேட்பாய். அந்த அதர்வசிரசில் முதற்கண்டத்தில் சிவன், 'தேவர்களோடு எனக்கும் அந்தர்யாமியாய் விளங்குகின்றவன் திருமாலேயாமென்றுரைத்தனன்.' என்று சொல்லப்பட்டுளது. இஃதல்லாமலும் சிவனுக்குபாசனமூர்த்தியாயிருப்பவனும் செங்கண்மாலே என்று அதிற் சொல்லப்பட்டுளது. இன்னும் அந்த அதர்வசிரசில் ஐந்தாம் கண்டத்தில் பசுபதி தீக்ஷைக்கிலக்கணம் வெண்ணீறணிந்துகொள்வதாமென்றுரைத்து, வேதியர்கள் வெண்ணீறணிந்துகொள்ளலாகாதென்றும் விதித்துளது. ஆதலால் திருநீறணிந்துகொள்வது பிராம்மணர்கட்குச் சர்வசாதாரணமாகாதென்பது தெளிவாம். மேலும் வெகுவிடங்களில் திருநீறு அநருகமாகுமென்றும் சொல்லப்பட்டுளது. பின்னை வேதத்தில் திருநீற்றைவிதித்ததற்குக் காரணம் யாதெனின்?

சொல்கிறேன்.—* பௌண்ட்ரயாகத்தில் நெறிதவறாத பிர்ம்மசாரி கைம்பெண்ணிற்கு மகப்பேற்றை யுண்டுபண்ணிவைப்பதும், சவித்திராமணி யாகத்தில் மதுவை யருந்துதல், நீதிநெறி யந்தணர்க்குரியதாமென்பதும் போலப் பாசுபதவிரதத்தின் தீக்ஷாகால மாத்திரத்திற்கே திருநீறணிந்துகொள்ளுதல் முக்கியமாம். அதுவும் சிவவேதியருக்கே உரியதாம். இதனால் நீறணிந்துகொள்வதென்பது ஒரு சிலர்க்கேவுரிய சிறப்புவிதியாமேயன்றி அதை எல்லோருமணிந்துகொள்ள வேண்டுமென்ற பொது விதி யாகாதென்பது பெறப்பட்டது. அன்பினால்செய்கின்ற ஓமகாலத்தில் நித்தியாக்கினி கோத்திரநீற்றைத் தரிப்பது எல்லா அந்தணர்கட்கு ஏற்றதன்றோவெனின்? அன்று. சதாக்ஷஸ்மிருதியில் வீரசைவர்கள் மாத்திரமே வெண்ணீற்றைச் சிரத்தில் தரிக்கத்தக்கவராவாரென்று தெளிவாகச் சொல்லப்பட்டுளது. மற்றுமுள்ள எல்லா ஸ்மிருதியும் வெண்ணீறு பிராம்மணர்க்கநருகமென்று வகுத்துரைக்கின்றன. ஆனால் சில நூல்கள் வெண்ணீறணிந்துகொள்ள வேண்டுமென்றுரைக்கின்றனவே அவற்றிற்குக் கதியாதெனின்? கூறுவேன். நீறணிந்துகொள்ளவேண்டுமென்ற ஆசாரவிதி முக்கட்சிவனை ஆதரிப்பார் சிலரையும், சூத்திரரையும் நோக்கி எழுந்ததாமென்று கொள்ளத்தக்கது.

---

* தன்னோடு சந்தான மற்ற பாக்யஹீனையாகிய ஒரு கைம்பெண் ஒரு ஸத்பிர்ம்மசாரியால் சந்தானவிர்த்தி செய்துகொள்ளலாமென்றும், அந்த பிர்ம்மசாரியும் காம இச்சையின்றித் தர்ம புத்தியால் சந்தானவிர்த்தி செய்து வைக்கலாமென்றும் ஆபத்தர்மமாகச் சாஸ்திரம் விதித்துளது. இதனைப் பௌண்ட்ரயாகமென்பர். நைடதத்தில் கலிதோன்றுபடலத்திலும் இவ்விஷயத்தைக் குறித்து,

"செம்மையிற்றிறம்பல்செல்லாமறைபயில்சிறுவனுங்கோர்
கைம்மையைக்கலத்தனேக்கிக்களிமகிழ்சிறந்துசெல்வான்
வம்மினென்றமரர்தம்மைமறையினற்கூறக்கேளா
அம்மவோமகமென்றஞ்சியலக்கணுற்றகன்றுபோனன்"

என்று சொல்லப்பட்டுளது.

உ-வது, திருமண்காப்பு என்கிற ஊர்த்துவபுண்ட்ரப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! ஊர்த்துவபுண்ட்ரமே வேதியர்க்குரியது. இந்தப் புண்ட்ரத்தைத்தான் அவ்வேதியர்களணிந்துகொள்வதற்கு விதியுண்டென்பதற்கும், நீறணிந்துகொள்வது அவர்கட்குப் பொருந்தாத செயலென்பதற்கும், இது சூத்திரர் முதலானவர் கட்கே இயைந்த ஆசாரமென்பதற்கும் வேதசாஸ்திர பிரமாணங் களை ஈண்டு விரித்துரைப்பேன். கேட்பாயாக.— விளங்குகின்ற ஊர்த்துவபுண்ட்ரந்தன்னைப் போற்றி, 'உன்னை இனிதாக அணிகின் றேன்; நீ எனக்குப் பாதுகாவலாகவிருந்து அநுக்ரஹிக்கவேண்டும்' என்று அணிகின்றவர்கட்கு அது பாதுகாவலாகவிருக்குமென்று இந்த ஊர்த்துவபுண்ட்ரத்தின் பெருமையை எசுர்வேதத்தில் ஆறும் பருச்சத்தில் முதலநுவாகம் எடுத்தோதும்.

உலகத்தில் ஊர்த்துவபுண்ட்ரத்தை ஆதரவுடன் தரிப்பவரை ஸர்வகாரணனான நாரணனே எவ்வகைத் துன்பமும் வந்தணுகாத படி பாதுகாப்பானென்று ருக்குவேதம் உரையாநிற்கும்.

ஸ்ரீய:பதியின் இணையடிபோல மிகவும் திருத்தமாக இடை வெளியிட்டு ஊர்த்துவபுண்ட்ரமணிபவரைத் திருமால் திருவுள்ள முவந்தாதரித்து அவரிடத்திலுள்ள பாதகமெல்லாம் தொலைத்து வீடுபேற்றைத் தந்து பரமாநந்தமுறும்படி செய்வானென்று வேதாந்தம் முப்பத்திரண்டினுள் கடவல்லி கூறுநிற்கும்.

சிறந்த ஊர்த்துவபுண்ட்ரத்தை விதிப்படி அணிந்துகொண்டு வேள்விவடிவாகிய நாராயணனை அன்புடன் ஆராதனை செய்வார் எவரோ? அவர் தம் குலத்துளோரை ஏழுதலைமுறையளவும் மனத் தாலும் வாக்காலும் சூழ்கின்ற கொடிய பாவவினையைப் பற்றறுத் துப் பரகதியை அடைவிப்பார். அந்தணர்கள் அன்னிய தேவதை களிடத்திற் பக்தியுடையவர்களாயிருந்தாலும், அவரனைவர்க்கும் மகிமையுடைய ஊர்த்துவபுண்ட்ரத்தை அணிந்து கொள்வதுதான் விதியாமென்று எசுச்சாகை யுரைத்தது. இஃதன்றி மஹோப நிடதமும் ஊர்த்துவபுண்ட்ரச் சிறப்பை இனிதெடுத்தியம்பியது.

பிராம்மணருக்கும் க்ஷத்திரியருக்கும் புண்ட்ரமும், வணிக குலத்தவருக்குச் சந்திரரேகையும், பிர்ம்மசாரிக்குச் சந்தனமும், சந்யாஸிக்கு வெண்ணீறும் தரித்துக்கொள்வது எக்காலத்தும் பாதுகாவலாகாதென்று தாபனியோபநிடதம் கூறுநிற்கும்.

இதுவரை ஊர்த்துவபுண்ட்ரத்திற்கு வேதவேதாந்தங்களி லிருந்து பிரமாணங்கள் எடுத்தியம்பினேன். அந்தப் பிரமாணங் கட்கேற்ப புராணம் சங்கிதை முதலிய நூல்களிலும் பலபிரமாணங் களுள்ளன. அவற்றையும் எடுத்துரைப்பேன் கேட்பாயாக:—

பரந்த புகழினையுடைய நாரதபகவானை வேதவியாசர் நோக்கி, 'அண்ணலே! சிறந்த ஊர்த்துவபுண்ட்ரத்தின் விதியும், அதனை யணிந்துகொள்ளுமிடங்களுப், பந்திரங்களும், அதிதேவதையும், ஆசரிக்கு முறையும், தியானமும் என்ற இவையெல்லாம் விவர மாக அருளிச்செய்யவேண்டும்' என்று வேண்டினர். அப்பொழுது நாரதபகவான் வேதங்களைக் கரைகண்ட வேதவியாசரை நோக்கி யுரைக்கத் தொடங்கினர் :—

மறைமுனிவரே! * பத்மாகாரம் ‡ கூர்மாகாரம் சங்காகாரம் † அச்வத்தபத்திராகாரம் § வேணுபத்திராகாரம் தீபாகாரம் ¶ திருமால் சரணாகாரம் % திந்திருணிபுஷ்பாகாரம் முதலிய வடிவினை யுடையதாய் ஊர்த்துவபுண்ட்ரம் அணிந்துகொள்ளத் தக்கது. இந்தப் புண்ட்ரமும் அந்தணர்க்கே உரியதாப். ஏனைய நான்காம் வருணத்தவருக்கும் o பதிதருக்கும் குறுக்கிடும் புண்ட்ரமாகிய திரியக்குப்புண்ட்ரமே உரியதாகும். எக்குலத்திற் பிறந்தாரேனும்

---

* பத்மாகாரம்-தாமரை போன்ற வடிவு.

‡ கூர்மாகாரம்-ஆமைபோன்ற வடிவு.

† அச்வத்தபத்திராகாரம்-அரசிலை போன்ற வடிவு.

§ வேணுபத்திராகாரம்-மூங்கிலை போன்ற வடிவு.

¶ திருமால் சரணாகாரம்-செங்கண்மாலின் திருவடி போன்ற வடிவு.

% திந்திருணி புஷ்பாகாரம்-புளியம் பூ போன்ற வடிவு.

o பதிதர்-கீழ்க்குலத்தினர்.

திருமாலிடத்தில் அன்புடையராயிருப்பார்க்கெல்லாம் ஊர்த்துவ புண்ட்ரமணிந்துகொள்வதே விதியாம்.

இஃதல்லாமலும், பிராம்மணர்கட்குத் திருமண்ணும், க்ஷத்திரியர்கட்குச் சந்தனமும், வைசியருக்கு வில்வவேரும், சூத்திரருக்கு வெண்ணீறும் தரித்துக்கொள்வது முறையாம். திருமண்ணையும் சந்தனத்தையுங்கொண்டு திலகமிடலாகாது. வில்வவேரும் வெண்ணீறும் வைசியருக்கும் சூத்திருருக்கு மொழிய, இவற்றைப் பிராம்மணரும் க்ஷத்திரியருமணிந்து கொள்ளலாகாது. திருமண்ணிற்கு நிறபேதங்கள் ஐந்துள. அவை: பொன்மை வெண்மை கருமை செம்மை பசுமை என்பன. இந்த நிறங்களுள் வெண்மை நிறமுடையதே சிறந்ததாகும். இந்தத் திருமண்ணை எம்பெருமான் உகந்தருளிய திவ்ய தேசங்களிலும், கங்கை முதலிய புண்ணிய நதிக்கரைகளிலும், திருத்துழாய் முளைத்திருக்குமிடங்களிலும் எடுப்பது விசேஷமாகும்.

* * * * * * * *

இந்தத் திருமண்ணைப் பதின்மூன்று இடத்திலாவது பன்னிரண்டிடத்திலாவது, எட்டிடத்திலாவது, ஆறிடத்திலாவது, நான்கிடத்திலாவது, ஒரிடத்திலாவது தரித்துக்கொள்ள வேண்டும். நெற்றி, வயிறு, மார்பு, கழுத்து, வலதுபக்கம் உந்தி, வலதுதோள், வலதுபக்கங் கழுத்து, இடப்பாலுந்தி, இடதுதோள், இடப்பாற் கழுத்து, முதுகின் கீழிடம், பிடரி, சிரசு என்ற பதின்மூன்றும் திருநாமங்களைத் தரித்துக்கொள்வதற்குரிய விடங்களாம். இவற்றுள் சிரம் நீங்கிய பன்னிரண்டிடங்களிலும் பன்னிரு திருநாமங்களை யணிந்துகொள்ளவேண்டும். இந்தப் பன்னிரண்டிடங்களில் பிடரியும், கழுத்தும், தோள்களிரண்டும் நீக்கி ஏனைய எட்டும், எட்டுத் திருநாமங்களைத் தரித்துக்கொள்வதற்குரிய விடங்களாம். ஆறு திருநாமங்களை நெற்றியிலும், கழுத்தினிருபுறத்திலும், மார்பிலும், தோள்களிரண்டிலு மணிந்துகொள்ளலாகும். நெற்றியும், தோள்களிரண்டும், மார்பும் என்ற நான்கிடங்களும், நான்கு திருநாமங்களை யணிந்துகொள்ளுதற்குரியன. நெற்றி ஒன்றே ஒரு திருநாமம் தரித்தற்குரிய ஸ்தானமாம்.

பதின்மூன்று புண்ட்ரங்களிடுமிடத்து அவற்றுக்குக் *கேச வன் முதல் வாசுதேவனீருகவுள்ள பதின்மூன்றும் மந்திரங்களாம். பன்னிருநாமத்திற்குக் கேசவன் முதல் தாமோதரனீருகவுள்ள பன்னிரண்டும் மந்திரங்களாம். எட்டுப் புண்ட்ரங்களணிந்து கொள்ளுமிடத்துத் திருவஷ்டாக்ஷரமே மந்திரமாம். கேசவன் முதல் மதுசூதனிறுதியாகவுள்ள ஆறு மந்திரங்களும் ஆறு திரு நாமத்திற்குரியனவாம். நான்கு புண்ட்ரத்திற்குக் கேசவன், அச் சுதன், அனந்தன், கோவிந்தன் என்ற நான்கும் மந்திரங்களாம். ஒரு திருநாமத்திற்குக் கேசவ மந்திரம் ஒன்றேயாம்.

பெருவிரலால் திருமணிட்டால் பொருளுண்டாகும். அநாமி கையால் (ஆழிவிரலால்) இட்டால் புத்திரப்பேறுண்டாகும். கனிட்டிகையால் (சுண்டுவிரலால்) இட்டால் ஆயுளுண்டாகும் தர்ச்சினியினுல் (ஆட்க்காட்டி விரலினுல்) இட்டால் முத்தி சித்திக் கும். நடு விரலினுல் புண்ட்ரமணியலாகாது.

எந்த நாமத்தால் புண்ட்ரமணிய விதித்துளதோ? அந்த நாமத்திற்குரிய பொருளே தியானிக்கப்படும் மூர்த்தியாம். இந்த ஊர்த்துவபுண்ட்ரத்தைத் தரித்து ஸ்ரீமந் நாராயணனை மனக்களிப் புடன் ஆராதனை செய்வார், அறிவிற் சிறந்த பாகவதராவார். இவர்கள் தவருது பரமபதமடைந் தின்புறுவார்கள்.

முனிவரரே! இந்த ரஹஸ்யப் பொருளெல்லாம் உமக்கிப் பொழுது விரித்துரைத்தேன். இவ்விவரம் நாரதீய புராணத்தில் அறுபத்தொன்பதாம் அத்யாயத்திற் சொல்லப்பட்டுளது.

ஆகமமடந்தாய்! மேலும், ஸ்ரீமந் நாராயணன் நான்முகனை நோக்கி, "யான் மகிழுமாறு எவர்கள் ஊர்த்துவ புண்ட்ரந்தரிப் பார்களோ? அவர்கள் முத்தராவார்கள்" என்று கூறினன்.

---

* கேசவாய நம:, நாராயணுய நம:, மாதவாய நம:, கோவிந்தாய நம:, விஷ்ணவே நம:, மதுசூதனுய நம:, திரிவிக்ரமாய நம:, வாமநாய நம:, ஸ்ரீதராய நம:, ருஷீகேசாய நம:, பத்மநாபாய நம:, தாமோதராய நம:, வாசுதேவாய நம: என்ற இவை பதின்மூன்று மந்திரங்களாம்.

நான்முகன் முனிவர்களை நோக்கி, 'ஊர்த்துவபுண்ட்ரமணியாமற் செய்யுஞ் சிறந்த அனுஷ்டானங்களெல்லாம் பயனற்றனவா யொழியும்' என்று கூறினன். சிவன், பார்வதியை நோக்கி, 'பரமபாவன (பரிசுத்த)மாக ஊர்த்துவபுண்ட்ரந் தரிப்பவர்கள் பரமபதமடைவார்கள்' என்றிசைத்தான். இந்திரன் ஊர்த்துவ புண்ட்ரத்தின் மகிமையைத் தேவர்கட்குபதேசித்தான். அக்கினி தேவன், ஊர்த்துவபுண்ட்ரத்தின் பெருமையைப் பிதுர்தேவதை கட்கெடுத்தியம்பினன். தேவர்கள், முனிவர்கள், தென்புலத் தார்கள் என்ற இவர்களெல்லாரும் தம்மைச் சார்ந்தார் அனை வருக்கும் ஊர்த்துவபுண்ட்ரத்தின் சிறப்பை விளங்கக்கூறினர்கள். சொர்க்க மத்திய பாதாள முதலான உலகின்கண் வாழ்பவரனை வரும் ஊர்த்துவ புண்ட்ரதாரிகளாய் விளங்கினர்கள்; என்று அந்த நாரதீய புராணத்திலுள்ள எழுபத்தைந்தா மத்தியாயம் இனிதெடுத்தியம்பியது.

ஊர்த்துவ புண்ட்ரத்தை நெற்றியில் இடைவெளியிட்டு அணியாதவனும், திரிபுண்ட்ரத்தைத் தரிப்பவனும் சூத்திரனுக் கொப்பாவானென்றும், தலையில் ஓடும், எலும்பும், சங்குமணியும், சடையும் தரித்து நெற்றியில் நீறணிந்திடுவோர் அதமராவரென் றும், பிராம்மணர்களாய்ப் பிறந்தும் சரீரத்தில் லிங்கத்தைத் தரித்து, விபூதியை ருத்திராக்ஷத்தையணிபவரை நீதி அரசன் தேசத்திலிருக்கவொட்டாமல் துரத்திவிடுவது நீதியாமென்றும், "ஜபித்தல், வேள்வி செய்தல், வேதமோதுதல், பிதுர்பூஜை செய் தல், சந்தியாவந்தனஞ் செய்தல், பல தானஞ்செய்தல் முதலிய சத்கர்மானுஷ்டானகாலங்களில் ஊர்த்துவபுண்ட்ரமணிந்து செய்வ ரேல் அது அந்தப் பலனைத்தருமென்றும், ஊர்த்துவபுண்ட்ரம் தரிக் காமற்செய்த அநுஷ்டானங்கள் பலனற்றனவாயொழியுமென்றும், சாஸ்திர விதிப்படி சிராத்தஞ்செய்த காலத்தில் சிராத்தான்னத்தை உண்பார்க்கும், உண்பிப்பார்க்கும் ஊர்த்துவபுண்ட்ரம் தரித்துக் கொள்வது விதியாகுமென்றும், இடையில் இரண்டு விரல் அகலம் வெளியிட்டுப் பக்கங்களில் ஒவ்வோரகலங்கூட்டி நான்கு விரல் விசாலமுற நாசி முதல் கேசாந்தமாக ஊர்த்துவபுண்ட்ர மணிய

வேண்டுமென்றும், இந்த இலக்கணமில்லாமல் அணிவது விதியன்றென்றும், இடையில் வெளியின்றித் தரிப்பது உத்தமர்க்கழகாகாதென்றும் பராசரசங்கிதை பகுத்துரையாநிற்கும்.

இரண்டு விரல் அகலம் இடைவெளியிட்டுப் பக்கங்களிரண்டும் ஓரோர்விரல் அகலமாகத் தரித்துக்கொள்வதுதான் விதியாகுமென்றும், இடைவெளியின்றி ஊர்த்துவ புண்ட்ரம் அணிபவன் பரமபதமடையமாட்டானென்றும், திரிபுண்ட்ரத்தை வேடிக்கைக்காகவாவது அணிந்துகொள்வது வேதியர்க்குத் தகாதென்றும், அப்படித் தரித்துவிடுவானாகில் அப்பொழுதே பதிதனுவானென்றும், மரீசி கூறிய ஸ்மிருதி செப்பாநிற்கும்.

தக்க அந்தணர் குலத்திற் பிறந்து திரிபுண்ட்ரம் தரித்துச் சங்கரனை அர்ச்சிப்போர் அப்பொழுதே அதமர்களாய் விடுவார்கள்; இந்தத் திரிபுண்ட்ரம் தரித்தல் முதலிய ஆசாரங்கள் சூத்திரரையும் பதிதரையும் நோக்கி விதிக்கப்பட்டன என்று வாசிட்ட சங்கிதை வகுத்துரைக்கும்.

தானம் தவம் தென்புலத்தாரைக்குறித்து ஆகுதி செய்தல் முதலிய காலங்களில் ஊர்த்துவபுண்ட்ரம் தரித்துக்கொண்டால் மாத்திரந்தான் அவை பலனைத்தரும். அதனைத்தரிக்காமல் செய்வார் நீசரைக்காட்டிலும் கடையராவார்; அவர் தம்முகம் மசானத்திற்கு ஒப்பாகும்; என்று பார்க்கவஸ்மிருதி பகரும்.

பூணூலும் சிகையும் ஊர்த்துவபுண்ட்ரமில்லாதவனும் பவித்திர மணிந்துகொள்ளாத கையையுடையவனும் செய்யும் நற்றருமங்களெல்லாம் பயனின்றி யொழியுமென்று வேதத்தின் நுண்பொருளாய் விளங்குகின்ற விஷ்ணுஸ்மிருதி விரித்துரைக்கும்.

வேதபாராயணஞ் செய்கிற காலத்திலும், யாகஞ் செய்கிறபோதும், போஜனம் செய்கிற காலத்திலும், சுபகாரியங்கள் செய்கிற காலங்களிலும் பூத பிசாசுகள் அணுகாதிருக்க வேதியர்கள் ஊர்த்துவபுண்ட்ரம் தரிக்கத்தக்கது; என்று மனுதர்ம சாஸ்திரம் விரித்துரைத்தது.

வேதியருக்கு ஊர்த்துவபுண்ட்ரமும் க்ஷத்திரியருக்குப் பிறையின் கீற்றும், வணிகருக்கு வட்டமும், சூத்திரருக்குத் திரிபுண்ட்ரமும் உரியனவாம்; பிராம்மணர்கள் மறந்தும் அந்தத் திரிபுண்ட்ரம் தரிக்கப்பெறுர். உண்மையுடைய பெரியோர் அப்புண்ட்ரத்தை ஆசரித்தல் அவருக்கியல்பன்று; என்று ஆக்கினிய வேசிகிரி அறையா நின்றது.

சிறந்த வேதியர் குலத்திற் பிறந்து அஸ்திர சஸ்திரங்களையும் வில்லையும் தரித்துக்கொண்டு யுத்தஞ் செய்தற்கு முன்வருகின்றவனும், பிறர் பொருளை யபகரித்து உண்பவனும், திரிபுண்ட்ரத்தைத் தரிப்பவனும் ஆகிய இவர்கள் அதமர்களாய் விடுவார்களென்று ஜிபாலஸ்மிருதி எடுத்தியம்பும்.

வேதியர்கள் எந்தக்காலத்திலும் ஊர்த்துவபுண்ட்ரம் தரித்துக்கொள்வதே அவருக்கியல்பாகும். இந்த ஊர்த்துவபுண்ட்ரம் தரித்தவர்களை யமகிங்கரர்கள் கண்டால் பாம்பைக்கண்ட தவளைபோல அடங்குவார்கள்; என்று பிரமவிராத்திரி என்ற நூல் கூறும்.

"ஒருவன் ஊர்த்துவபுண்ட்ரத்தை இடைவெளியிட்டணிந்திடில், அந்த இடைவெளி தானே நமக்குச் சிறந்த ஆலயமாகும்; அந்த ஆலயத்தில் நாம் இலக்குமிதேவியோடு மகிழ்ந்து வசிக்கின்றேம்; அங்ஙனம் இடைவெளியின்றித் தரிப்பானுகில், அவன் என்னையும் ஸ்ரீதேவியையும் நிந்தித்தவனுவான்" என்று திருமால் பிரம்மதேவனுக்குச் செப்பிய பிர்மாண்ட புராணம் புகலாநிற்கும்.

பூமியில் பாஷண்டர்களைப் பார்ப்பதாலும், தொடுவதாலும், அவர்களோடுரையாடுவதாலும் உண்டாகின்ற பாதகமெல்லாம் ஊர்த்துவபுண்ட்ரதாரணத்தாற் கழிந்துவிடுமென்று பாராசரஸ்மிருதியும், போதாயனமும், பிரமாண்டபுராணமும் சந்தேகமறத் தெளிவாக எடுத்தியம்பும்.

ஊர்த்துவபுண்ட்ரம் தரிப்பதற்கு வெண்மை நிறமுடைய மண்ணே உரியதாகும். அங்ஙனமிருக்க, கங்காதீரத்திலுள்ளாரும், மற்றுஞ் சிறந்த திவ்யதேசத்திலுள்ளவர்களும், தத்துவ வாதியரும்,

மாயாவாதியரும் எல்லாம் சிவந்த மிருத்திகை தரிப்பதற்குக்கார ணம் யாதென்று ஆராய்ந்தால், அந்த சிவந்த மிருத்திகை, உடனே காமியபலங்களை யெல்லாம் கொடுக்குமென்றும், காமியபலத்தில் இச்சையின்றியிருப்பவருக்கு அது முக்தியை யளிக்குமென்றும் பல நூல்களும் கூறுகின்றன. ஆதலால் அந்த மிருத்திகையும் ஊர்த் துவபுண்ட்ரத்திற்கு விசேடமாகும் என்று நன்கு விளங்கும்.

இங்ஙனம் பிரபலமான பல பிரமாணங்கள் ஆரணவல்லி இயம்பக்கேட்டு அதற்கு ஆகமவல்லி மறுமாற்றஞ் சொல்லத் தொடங்கினாள்.— ஆரணமடந்தாய்! பல பிரமாணங்களும் திரு நீற்றை நிந்தையாக விதித்துள்ளதனால் நீதிமறையவராகிய பிராம் மணர்கள் அதைத் தரிக்கலாகாதென்று விரித்துரைத்தாய்.

---

## ௯-வது, திருவிலச்சனைப் பரிச்சேதம்.

சிறந்த அந்தணர்கள்மேல் வடுப்படலாகாதென்று ஸ்மிருதி யானது மிகவும் தெளிவாகக் கூறியிருக்க, சங்கு சக்கரங்களைத் தழலில் வாட்டித் தோள்களிலிட்டுக்கொள்வதாகிய ஆசாரணைகளைப் பிராம்மணர்கள் கையாள்வதற்கு விஷயமென்ன? இதற்கு வேதத் தில் விதியுளதோ? என்று கேட்க ஆரணவல்லி சொல்லத்தொடங் கினாள் :—

ஆயுதத்தின் வடு சூலத்தின் வடு தீயினாற்பட்ட வடு என்ற இம்மூன்றும் பிராம்மணர்கட்குக் கூடா என்று யாச்சவற்கமிருதி யினிற் சொன்ன உண்மையறியா துரைக்கின்றாய். திருச்சக்கர தாரணத்தைப்பற்றிய விதிகள் நான்கு வேதங்களிலும் உள்ளன. இவற்றை விரித்துரைக்கின்றேன் ; கேட்பாயாக.—

இவ்வுலகத்தில் பிராம்மணர்களெல்லாம் வைகுந்தவான்போகந் தன்னைப் பெறுதற்கு வலது தோளில் சக்கரத்தையும், இடது தோளில் சங்கையுந் தரித்துக்கொள்ளத்தக்கவராவரென்று பிர்ம்ம சூத்திரத்தின் மகோபநிடதம் விவரித்துரைக்கும்.

இரண்டு புஜங்களில் சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொள்பவர் இம்மையிற் சிறந்த பரிசுத்தர்களாய்ப் பரமபதத்தைப் பெற்று

இன்புறுவார்கள் என்று இருக்குவேதத்து ஏழாம் அட்டகத்தில் நாலாம் அத்தியாயத்தில் எட்டாம் அநுவாகமங்கூறும்.

பிர்ம்மதேவனுக்குத் தந்தையாய், எல்லா வுயிர்கட்கும் அந்தரியாமியாய் விளங்கும் எம்பெருமானுடைய திருவாழித் திருச்சங்குகளை அனலிலிட்டுத் தோள்களில் தரித்துக்கொள்பவர் பரமபதமடைவார்கள்; என்று எசுர்வேதம் முதற்பரிச்சம் உரையாநிற்கும்.

தீவினையினுல் பிறந்திறந்துழல்கின்ற ஜீவர்களெல்லாம் ஸர்வேசுவரனுடைய சங்காழிகளைத் தோள்களில் தரிப்பர்களாலுல் அவர்கள் வைகுண்டமடைவார்களென்று சாமவேதத்து உத்தர இருக்கிலுள்ள ஒன்பதாமத்தியாயம் விரிவாக எடுத்துரைக்கும்.

லோகவியாபகனுகி விளங்கும் ஸ்ரீமந் நாராயணனுடைய ஆயுதங்களான சங்கு சக்கர இலச்சனையை இரண்டு தோள்களில் அணிந்துகொள்பவர் நீங்குதற்கரிய கொடிய பாபங்களினின்று நீங்கப்பெற்று, பரமபதமடைந்து இன்புற்றிருப்பார்களென்று அதருவம் அறையாநிற்கும்.

திருமாலின் திருவாழி சங்கங்களைத் தோள்களில் அணிந்து கொண்டு தேவர்கள் தேவலோகத்தை ஆண்டார்களென்றும், அங்ஙனமே வெற்றிமிக்க மனுக்களும் உலகத்தையாண்டு ஆநந்தித்தார்களென்றும் அந்த அதர்வமுரையாநிற்கும்.

முத்தியை விரும்பியவர்கள் மோகமாகிய பாபக்கடலைக் கடப்பதற்குத் திருமாலின் சங்காழிகளை அழகாக புஜங்களிலணிந்து கொள்வார்களென்றும், சிலர் எம்பெருமானுடைய பஞ்சாயுதங்களையுந்தரிப்பார்களென்றும் இருக்கிலுள்ள வற்கல சங்கிதை கூறும்.

பகைவர்களது வலிமை யெல்லாமழித்து வெற்றிகொண்டு திருமாலின் கரத்தை விட்டகலாது உறைகின்ற சக்கரக்குறியை இரண்டு தோள்களிலும் தரித்துக்கொள்பவர்கள், முத்தர்களாய் எல்லையில்லாத பரமாநந்தத்தை யநுபவிப்பார்களென்று பிருகதாரணி யோபநிடதம் விளக்குமுற இசைக்கும்.

இருதயகமலத்திலுறைகின்ற திருமாலைத் தியானிப்பாரனை வரும், ஊர்த்துவபுண்ட்ரத்தையும் திருவாழி திருச்சங்குகளையும் தஞ்சமாகத் தரித்துக் கொள்வதற்குக் கடமைப்பட்டவராவார்க ளென்றும், இங்ஙனம் தரித்துக்கொள்வதே முக்திக்குச் சாதனமா மென்றும் கடவல்லி கழறு நின்றது.

செங்கண்மால் தன் ஹஸ்தங்களிலேந்தியிருக்கும் சங்காழி களைத் தோள்களிலணிந்து கொள்பவர்; தருமார்த்த காம மோக்ஷ மென்ற நான்கு புருஷார்த்தங்களையு மடைவார்களென்று காடகம் கூறும். சிறந்த திருவாழி சங்கங்களின் இலச்சனையுடைய புயத் துடன் திருமாலைத்துதிப்பார் ஒப்புயர்வற்ற பரமபதத் திருப்பா ரென்று கைவல்ய சாகை மொழியும்.

ஆகமமடந்தாய்! இங்ஙனமுரைத்த வேதங்கட்கிணங்க மனுஸ் மிருதியிலும் சக்கரமும் வலம் புரியும் புயங்களில் தரித்து ஊர்த்துவ புண்ட்ரத்தையும் விதிப்படி யணிபவர், வினைகள் நீங்கப்பெற்றுத் தெளிவிசும்பாகிய ஸ்ரீ வைகுண்டத்தை யடைவார்களென்று சொல்லப்பட்டுளது.

ஆசனமும், படுக்கைக் கட்டிலும் நீங்க பசுபாத்திரங்கட் கெல்லாம் திருவாழி சங்குகளை வலமிடமாக அணிபவர்கள் மாதவன் மகிழ்ந்து வாழும் மாகவைகுந்தத்திருந்து மகிழ்வெய்து வார்களென்று வேதப்பொருளை அநுசரித்துரைக்கும் சாண்டில்ய ஸ்மிருதி சாற்றும்.

புயங்களிரண்டிலும் சங்குசக்கரங்களை விருப்பமுடனணியு மவர் பாபவினைகளினின்றும் நீங்கிச் செங்கண்மாலுக் கணுக்கத் தொண்டர்களாய் நித்தியமாய்ப் பரமாநந்த வெள்ளத்தில் மூழ்கு வார்களென்று பதுமபுராணம் பகராநிற்கும்.

சங்குசக்கரங்களை இரண்டு புயங்களிலும், உச்சியில் சார்ங்க வில்லும், நெற்றியில் தண்டாயுதமும், மார்பில் வாளும் தரித் துக்கொள்பவர், எவர்க்கும் அடைதற்கரிதாகிய பரமபதத்தை எளிதிலடைவார்களென்று ஆக்கினேய புராணமுரைக்கும்.

ஸ்ரீமந்நாராயணன் பூமிப்பிராட்டியை நோக்கி, "என்னுடைய சங்குசக்கரங்களைத் தரித்து என்னிடத்தில் மிக்க பக்தியுடையவர்களாய் வாழ்கின்றவர்கள் அரும் பொருள்போற் சிற்சிலரேயாவர். இத்தன்மையுடையாரிருந்த நகரைச் சூழ்ந்துள்ள மூன்று யோஜனை யளவுள்ள இடம் புனிதத்தலமாகும்; அவர்களுடைய வடிவைக் கண்டால் பூதபிரேத பைசாசங்களெல்லாம் அகன்றோடிப்போம்; இவர்கள் அசுவமேதயாக பலனையும் பெற்று விஷ்ணு லோகத்தை யடைந்தின்புற்றிருப்பார்கள்" என்று அருளிச்செய்ததாக வராகபுராணம் வகுத்துரைக்கும்.

தத்தம் இருபுயங்களில் சங்காழி தரிக்கின்றவர்கள் எவர்களோ அவர்களே அந்தணரும், தேவர்களும் முக்தியடைபவருமாவார்கள்; என்று கந்தபுராணம் கழறும். சங்காழிகளைப் புயங்களில் மனமகிழ்வுடன் தரிப்பவரெவரோ அவர் முக்தராவாரென்று லிங்க புராணம் இயம்பும்.

விளங்குகின்ற ஆழிசங்குகளை இரண்டு தோள்களில் இலச்சனையிட்டிருப்பார் தம்முடைய குலத்தினரெல்லாம் ஈடேற பரமபத மடைவாரென்று வாமனியம் வகுத்துரைக்கும். பசுபாத்திராதி கட்டும் திருவாழி சங்கக் குறியிடுவார் முக்தராவாரென்று மச்ச புராணமும் கூறும்.

யமதருமன் தன்னுடைய ஏவற்றொழில் செய்யும் கிங்கரரை நோக்கி, 'திருவாழி சங்கங்களைத் தரித்திருக்கும் திருமாலடியாரிருக்கும் வழியிற்சென்று என்னுடைய ஆக்ஞாபங்கம் வரச்செய்யாமலிருப்பீராக' என்று உபதேசித்தானென்று பராசரபுராணம் பகரும்.

திருவாழி சங்குகளைத் தோளில் தரித்துக்கொண்டிருப்பவர்க்கே அவ்வியகவ்வியங்கள் வழங்கவேண்டுமென்றும், அந்தணர்களே, எக்குலத்தோர்களும் முக்தியடையுமாறு திருச்சங்காழிக் குறிகளையிடுவதற்குரியவராவார்களென்றும் காருடம் கழறுநிற்கும்.

பத்தினிப் பெண்டிருக்குத் திருமாங்கல்யதாரணம் இன்றியமையாததுபோலத் திருமாலடியார்கட்குச் சங்கு சக்கர தாரணம்

இன்றியமையாதாமென்று கூர்மபுராணங்கூறும். பிராமணர்கட்குப் பூணூல்போற் சங்கு சக்கர தாரணம் சிறந்ததென்றாலும் பாகவதர் கட்கே சாலச்சிறந்ததாமென்று வாய்வியம் என்ற நூல் கூறும்.

துன்பத்தை விளைவிக்கின்ற வினைகளெல்லாம் தொலைய சங்காழி தரிப்பது தக்கதாமென்று ஆதித்யபுராணமுரைக்கும். இந்தச் சங்கு சக்கர தாரணமுடையவர்களை நிந்தித்தவர்கள் நரகில் விழுவார்களென்று பிர்ம்மகை வர்த்தம் விரித்துரைக்கும்.

இரண்டு புயங்களில் சங்காழி இலச்சனையுடையவரை இகழ்ந் தாரனைவரும் உலகில் பறவைகளும் மிருகங்களுமாய்ப் பலமுறை ஜனித்தும் பின் மலத்தில் கிருமிகளாய்ப் பிறந்துழல்வார்களென்று வேதப்பொருளை அநுசரிக்கின்ற பௌடிக புராணம் பகரும்.

கோகத்தி செய்தானாயினும், நாய் போன்ற புல்லியனாயினும் சங்காழி இலச்சனையுடையவனாயிருப்பானேல் அவன் பரமபத மடைவானென்று பிர்ம்மாண்டபுராணங்கூறும். மேலும், அந்தப் பிர்ம்மாண்டபுராணம், சங்கு சக்கரங்களை இருபுயங்களில் தரித்தவர் முன்செய்த தானம் தவம் யாக முதலியவைகளுள் ஒவ்வொன்று தானே அநந்தபலனைத் தரும்; அவர்கள் மனோவாக்குகளாற் செய்த பாபம் சற்றுமில்லாதொழியும். இதிற் சந்தேகமில்லை என்று சாற்றுகிறது.

இரண்டு தோள்களிலும் சங்காழி தரித்துக்கொண்டு தெளிவுற்ற சிந்தையோடு நாடோறும் நற்செய்கை புரிபவர் திருநெடுமால் பதத்தை விரும்பும் சிறந்த ஞானத்தூயவராவாரென்று இதிகாச சமுச்சயந்தன்னில் புண்டரீகக்கியானம் கூறும்.

ஸ்ரீதரனுக்கு அன்புடைய மெய்யடியார் திருவாழி சங்குகளை அணிந்துகொள்வார்களென்றும், இங்ஙனம் தரித்துக்கொண்டவரிடத்தில் ஸ்ரீதேவியும் ஸ்ரீதரனும் மகிழ்ந்துறைவார்களென்றும், இவரைக்கண்டபோது யமனும் கிங்கரரும் நடுங்கா நிற்பரென்றும், இவர்கள், தேவர்களுமடையாத புகழை யடைவார்களென்றும், குருக்ஷேத்திரத்தில் உவாவிலும் கிரணகாலத்திலும் உயர்ந்தோர்க்குக்கொடுத்த மகத்தான பலன்களைத் திருவாழி சங்க தாரணத்தால்

அடைவார்களென்றும், இந்திரன், தேவர்கள், சித்தர், இயக்கர், முனிவர் என்ற இவர்களனைவரும் திருவாழி சங்க தாரணத்தால் சதுர்வித புருஷார்த்தங்களையடைந்து விளங்கினார்களென்றும், ஆழி வலம்புரிதரித்த தோளினரைக்கண்ட அளவிலே அநாதியாகச்செய்த பாபக்குன்றமெல்லாம் அணுவுக்குமணுவாகித் துகளாகுமென்றும், சங்காழி தரித்தவருடைய உறவினரை அசுர ராக்ஷஸ கணங்களும் பீடிக்கமாட்டா என்றும், சங்காழியணிந்தோர்க்கிடுகின்ற அவ்விய கவ்வியமெல்லாம் பலனுடையனவாமென்றும் இவ்வாறு பிர்ம்ம தேவன் நாரதருக்குத் தெளிவாக எடுத்துக்கூறி 'நீயும் இந்தத் திருவாழி சங்க இலச்சனையுடன் ஒழுகுவாய்' என்றும் உப தேசித்ததாகப் பிர்ம்மாண்டபுராணத்திலுள்ள விஷ்ணுரகஸ்யம் விரித்துரையாநின்றது. மேலும், இந்தப் பிர்ம்மாண்டபுராணத்தில் முதலத்தியாய முதல் பலவிடங்களிலும் இந்தச் சங்கு சக்கர தாரணத்தின் பெருமை சொல்லப்பட்டுளது.

ஆகமமடந்தாய்! நீலகண்டனாகிய சிவனை நோக்கிப் பார்வதி தேவியானவள், 'வைஷ்ணவ மகிமையைச் சொல்லவேண்டும்' என்று கேட்டபோது அந்தப் புராந்தகனாகிய சிவபிரான் நங்காய்! கேட்பாயாக.—ஆழிவலம்புரிகளைத் தரிப்பவர்கள் சந்தேகமின்றிச் செங்கண்மால்வாழும் சிறந்த பரமபதத்தைப் பெறுவார்கள்; சங்காழி தரித்தவர்களைத் தண்டனிடுவார் கணக்கற்ற பலவாண்டுகள் பிர்ம்மதேவன் வாழும் சத்தியலோகஞ் சென்று சுகித்துப் பின்னர்ப் பரமபதத்தைச் சார்வார்கள்; சங்கு சக்கரதாரிகளை அஞ்சலி செய்வார் குலம் ஈடேறும்; தத்தம் வருணத்திற்குத் தக்கவாறொழுகித் தோள்களில் சங்கு சக்கரங்களை யணிந்துகொள்ளும் நான்கு வருணத்தாரனைவரும் அந்தத் திருமாலை அர்ச்சனை செய்வதற்கும், வணங்குவதற்கும் அருகராவார்களென்று விரித்துரைத்தனன். இவ்வரலாறு பிர்ம்மாண்டபுராணத்திலுள்ள மோக்ஷ தர்மமும், பாரதத்திலுள்ள பீஷ்மபருவமும் எடுத்தியம்பும்.

கண்ணபிரான் கைலாய யாத்திரை செய்தற்கு எழுந்தருளிய போது துவாரபாலகரை நோக்கி, 'நாம் இங்கு வருமளவும் சங்கு சக்கரதாரணமில்லாதவரை நகரில் புகுதவிடாமல் பாதுகாத்துக்

கொள்வீராக' என்றுரைத்ததாகப் பஞ்சமவேதப் பொருளான அரிவம்சம் அறையாநிற்கும்.

கண்ணபிரான் அர்ச்சுனனை நோக்கி, 'என்னுடைய பக்தருக்கு இரண்டு புயங்களிலும் சங்காழி தரித்தல்வேண்டும்; அன்னிய தெய்வங்களின் ஆலயத்திற் புகுவாரை அஞ்சலித்தலும், அவர்களைப் புகழ்தலும் தவிர்ந்திடவேண்டும்' என்று அருளிச்செய்ததாகப் பாரதம் பகரும்.

ஆதலால் முக்திதனையடையும் கருத்துடைய பிராம்மணர் முதலான வருணத்தார்க்குத் திருவாழி சங்கிலச்சனையே அதற்குச் சாதனமாகும் என்று எடுத்தியம்பி, மேலும் ஆகமவல்லியின் மனத்திற் பதியுமாறு சொல்லத் தொடங்கினள்.—

---

## ௪-வது, பஞ்சாட்சர மறுப்புப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! ஐந்தெழுத்தின் மேலான மந்திரங்களில்லையென்றும், அந்த ஐந்தெழுத்தும் சிவபிரானுடைய திருமேனிப் பிரிவாமென்றும், தினந்தோறும் இந்த மந்திரத்தை இடைவிடாது தியானஞ்செய்வார்க்கே சிறந்த வீடுபேறு (மோக்ஷமு)ண்டாமென்றும், எடுத்தியம்பினை. இனி, யான் ஐந்தெழுத்தின் பரமார்த்தத்தைச் சொல்வேன் கேட்பாயாக:—

பஞ்சாக்ஷரத்தை வேதவேதாந்தத்தில் சிறப்பினையுடைய ஈடேற்று மந்திரமாகச் சொல்லாமையாலும், சதஉருத்திரியத்தில் பஞ்சாக்ஷரமிருக்கின்ற பெற்றியாலும், அதில் இந்த அக்ஷரம் சிவனுடைய நாமங்களி லொன்ருகமாத்திரமே யுரைத்துள்ளதினுலும், பிரபஞ்சசார மென்ற மந்திர சாஸ்திரத்தில் இருபத்தாரும் படலத்திலும், பல ஆகமங்களிலும், சிவதருமோத்திரத்திலும் இந்தச் சங்கரனர் திருவெழுத்தைந்தையும் சடப்பொருளாகிய பஞ்சபூதசொரூபமாக உரைத்ததினுலும், இந்தப் பஞ்சாக்ஷரமும் பிரணவத்தை யொழித்தே ஐந்தெழுத்தாய்ப் பேசுகின்றதினுலும், சைவாகமவிதிப்படி பஞ்சசுத்தி செய்யும்போது மந்திரசுத்திக்குத் திருமால் பிரணவத்தைச் சேர்த்தே உச்சரிக்கவேண்டியதினுலும்,

சைவாகமங்களனைத்தையும், கையிலங்கு நெல்லிக்கனிபோற் கரை கண்ட ஆகமமடந்தாய்! நீ மிகவும் சிறப்பித்துக்கூறிய பஞ்சாக்ஷரம் முக்கிய மந்திரமாகச் சொல்லப்படாததன்றோ!

---

## ரு-வது, எண்ணெழுத்திஞென்றன பிரணவப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! பிரணவந்தான் சத்தகோடிமா மந்திரங்கட்கெல்லாம் மூலமாகி சிவமயமார்க்கத்திற்கும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமாயிருக்கவும், இதனை (பிரணவத்தை) ஐந்தெழுத்தின் புறம்பாக்கிச் சொல்வதற்குப் பொருள் யாதெனின்? கூறுவேன் :—

சிறந்த பஞ்சாக்ஷர முதலான கணக்கற்ற மந்திரங்கட்கெல்லாம் பிரணவம் நீங்கலாக அக்ஷரத்தின் பூர்த்தி பெறுகின்றமையாலும், திருமால் மந்திரங்களாகிய * துவாதசாக்ஷரம் † அஷ்டாக்ஷரங்கட்குப் பிரணவங்கூடியே அக்ஷரபூர்த்தியுறுகின்றதினாலும் இந்தப் பிரணவம் திருநெடுமால் மந்திரமேயாகும். இதைப் பல கோடி மந்திரங்கட்கெல்லாம் ஆதியாக உச்சரிப்பதற்குக் கருத்தேதென்னின்? உரைக்கின்றேன்.—அந்த மந்திரமனைத்தையும் பிரணவத்தை முதலாகக்கொண்டுச்சரிப்பதால் அவற்றுக்குச் சக்தியும் சுத்தியுமுண்டாகின்றன. இவற்றை விரிக்கின்றேன் :—

பிரணவத்தின் (அ உ ம என்ற) மூன்றெழுத்துகட்கும் முறையே விஷ்ணு, ருத்திரன், பிர்ம்மா என்ற மூவரும் வாச்யராவார்களென்றும், அரைமாத்திரை நாராயணனுவானென்றும், அந்த நாராயணன் சங்கர பிரமர்களாகிய காரியர்கட்குக் காரணமாவானென்றும் அதருவவேதாந்தம் உரையாநிற்கும்.

ஓங்காரம் திருமாலின் மந்திரமாமென்றும், சித்தியும் சுத்தியுமுண்டாவதற்காகவே இந்தப் பிரணவத்தை எல்லா மந்திரங்களிலுஞ்சேர்த்து உச்சரிக்கலாகுமென்றும் உமாதேவியை நோக்கி சிவபிரான் உரைத்ததாகப் பதுமபுராணம் உத்தரகாண்டம் எடுத்தியம்பியது.

---

* துவாதசாக்ஷரமாவது—"ஓம் பகவதே வாசுதேவாய நம:" என்பதாம்.
† அஷ்டாக்ஷரமாவது—"ஓம் நமோ நாராயணாய" என்பதாம்.

சிஷ்டர்களால் புகழப்பெற்ற பிரணவம் திருமாலின் மயமா மென்றும், திருவஷ்டாக்ஷர மந்திரமும் பிரணவத்துடன் கூடியே பூர்த்தியுறுகிறதென்றும், மற்றுள்ள தேவர்களையும் இந்தப் பிரண வத்திற்குப் பொருளாமென்பது உபசாரமாமென்றும், பிறதெய் வங்களின் மந்திரமெல்லாம் பிரணவத்துடன் கூடியே சக்தியும் மகிமையுமுடையனவாய் பலன்களை விளைவிக்குமென்றும் சாண் டில்யஸ்மிருதியிலுள்ள ஐந்தாமத்தியாயம் விரிவாக எடுத்தோதியது.

பிரணவத்தைச் சிவமயமாஞ் சூக்ஷ்மாக்ஷரம் ஐந்தாய்ப்பேசியது வேதத்திற் கண்டதில்லை. ஆகமத்திலுண்டெனின்;— அவை அவைதிகமாமென்று நீக்குக. வேதம் பிரணவத்தை ஓரெழுத்தென் றுரைத்தவிடங்களிலெல்லாம் அந்த வோரெழுத்தை விஷ்ணுவின் மயமென்றே செப்பாநிற்கும்.

அகார உகார மகாரம் அரைமாத்திரை விந்துநாதம் என்ற சூக்ஷ்மாக்ஷரங்களுள் அகாரம் இலக்குமணனாகவும், உகாரம் பரத னாகவும், மகாரம் சத்துருக்கனனாகவும், அரைமாத்திரை ஸ்ரீராம பிரானாகவும், விந்துநாதம் சீதாபிராட்டியாகவும் இவ்வாறு பிரண வத்தை ஐந்தெழுத்தாக வோதியபோதும் அந்தத் தாரகபிர்ம்மோப நிடதம் பிரணவத்தை அரிமயமாகவே யுரையாநிற்கும்.

ஆகமமடந்தாய்! வேதவேதாந்தத்திற்கு மூலமாகநின்ற பிரண வம் ஸ்ரீமந்நாராயணனுடைய சொரூபமாமென்பதை யான் இனி மேல் விரித்துரைப்பதாலும் அறிவாய். இதுநிற்க, முக்திக்குப் பஞ்சாக்ஷரத்தை உபாயமாக வேதவேதாந்தத்திற் சொல்லாமை யாலும், வேதவேதாந்தங்களைக்காட்டிலும் விசேஷமாக ஆதரித்துச் சொல்லுகிற சைவாகமம் அவைதிகமாகையாலும் அந்தப் பஞ்சா க்ஷரம் சாமாந்ய மந்திரமே யாம்.

---

சூ-வது, ஸ்ரீமத் அஷ்டாக்ஷரப் பெரிய திருமந்திரப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! பலகோடி மந்திரங்கட்கெல்லாம் திருவஷ்டா க்ஷரமே முக்ய மந்திரமாம். இதற்குப் பிரமாணம் உரைக்கின் றேன் கேட்பாயாக.— பிரணவம் ஓரெழுத்தாகவும், நமப்பதம் இரண்டெழுத்தாகவும், நாராயணயவென்பது ஐந்தெழுத்தாகவும்

ஆக எட்டெழுத்தாக இந்தப் பெரிய திருமந்திரம் உயர்ந்தோர்களால் பயிலப்படுமென்றும், ஞானமயமான இந்த மந்திரத்தை உச்சரித்தவர்கள் ஸ்ரீவைகுண்டம் அடைவார்களென்றும் அதருவ வேதாந்தம் இனிதெடுத்தியம்பும்.

பிரபஞ்சசாரமென்ற மந்திர சாஸ்திரம் அரன்மயமாகிய ஐந்தெழுத்தை ஐம்பூத சொரூபமென வகுத்துக்கூறியது. பின் அந்த மந்திரசாஸ்திரத்திலுள்ள இருபதாம் படலமானது திருமால் அஷ்டாக்ஷரத்தைப் பரப்பிர்ம்ம சொரூபமென சந்தேகமற நிச்சயித்துரைத்தது.

சிவபிரான் உமாதேவியை நோக்கி "வேதமனைத்தும் திருவெட்டெழுத்தின் மயமாகும்; அவ்வெழுத்துக்களுள் வெவ்வேறாக வோது சடங்கும், * உதாத்தம் ‡ அநுதாத்த முதலிய சந்தவேறுபாடும் என்ற இவை முதலியவெல்லாம் இந்த எட்டெழுத்துள்ளே எப்பொழுதும் பயிலப்படும்; இந்த மந்திரம் பிரணவத்தைக்கூட்டியே எட்டெழுத்தாகும்; இந்தப் பிரணவம் மந்திரங்கட்கெல்லாம் உயிராகும்; மற்ற மந்திரமனைத்தையும் உச்சரிக்கும்போது பிரணவத்தைச்சேர்த்தே உச்சரிக்கவேண்டும்; பிரணவத்தைச் சேர்க்காமல் உச்சரித்தால் அந்த மந்திரங்கள் பலனைத்தரமாட்டா. அகாரவாச்யனான அனந்தன்மேல் அறிதுயிலமரும் அச்சுதனுக்கு மகாரவாச்யரான ஜீவரெல்லாம் அடிமையாமென்ற உண்மை தோன்ற உகாரவாச்யப்பொருளை நிச்சயித்தால் ஓங்காரத்தான் விகாரசீலமில்லா முகுந்தன் மயமாய் விளங்கும்; பிரணவம் ஓரெழுத்தும் அதன்மேல் நமவென்ப திரண்டெழுத்தும் நாராயணாயவென்ப தைந்தெழுத்தும் கூட்டி எட்டெழுத்தாம்; சிறந்த இந்த மந்திரத்திற்கு ரிஷியும் தேவதையும் திருமாலாம்; தேவிகாயத்திரியே இதற்குச் சந்தமாம்.

பிரணவமென்ற முதற்பதமும், நம வென்ற இரண்டாம் பதமும், நாராயணாயவென்ற மூன்றாம் பதமும் முறையே இருக்கு எசுர் சாமம் என்ற மூன்று வேதங்கட்கும் உற்பத்தி ஸ்தானங்

* உதாத்தம்—எடுத்தலோசை.

‡ அநுதாத்தம்—படுத்தலோசை.

களாகும்; பூஜாகாலங்களில் இந்த திருவஷ்டாக்ஷர மந்திரங் கொண்டு சோடசோபசாரஞ்செய்தால் திருமாலிற் குகப்பாகும்; இந்த மந்திரோச்சாரணத்தால் வைகுந்தவான்போகம் ஸித்திக்கும்'' என்று உரைத்ததாகப் பதுமபுராணம் முப்பத்திரண்டா மத்தியாயம் விரித்துரைக்கும்.

வேதவியாசபகவான், பலரையும் நோக்கி "புத்திரர்களேவீரும், மாணுக்கர்களேவீரும், நண்பர்களேவீரும் கேட்பீராக. விஷ்ணுவாகிய பரதெய்வத்திற்கு ஒப்பாரும் மிக்காருமில்லை; அதுபோல திருவெட்டெழுத்தின் மிக்க மந்திரங்கள் உலகிலில்லை; இந்த உத்தமமாகிய மந்திரத்தை உச்சரிப்பார் முகத்தில் அரியாகிய பகவான் உகந்து வாழ்வான்; இந்தத் திருமந்திரமே இகலோகத்தின் இன்பமெல்லாங் கொடுப்பதற்கும் பரலோகப்பலனைத் தருவதற்கும், பராபர வஸ்துவை யறிவதற்கும், பிறவிக்கடலைக் கடப்பதற்கும், பல பிறப்புக்கள்தோறுஞ்செய்த பாபங்களைத் தொலைப்பதற்கும் சிறந்த உபாயமாம்; இந்த திருவெட்டெழுத்திருக்க, மற்ற மந்திரங்களால் என்ன பிரயோஜனமுண்டு? விரதத்தினுற் பயனென்ன? தீர்த்தத்தினுற் பயனென்ன? இந்த மந்திரத்தை அநுசந்திப்பார் மரண காலத்தில் யமனைக்கண்டஞ்சுவரோ? பூமியிற் பிறந்திறந்துழல்கின்ற துன்பம் இவரை அணுகாதன்றே! இருப்பு விலங்குபோல்வதும் பொன்விலங்குபோல்வதுமாகிய பாபபுண்ணியங்கள் இவர்களைப் பற்றுமோ? இவையொருபுறமிருக்க;

அந்திமகாலத்தில் இந்தத் திருவஷ்டாக்ஷரத்தை உச்சரித்தவர்கள், தெளிவிசும்பாகிய திருநாட்டை யடைவார்கள். சனகாதி முனிக்குலத்தினரனைவரும் இந்த மந்திரத்தைப் பாராயணஞ் செய்தே நாராயணன்றன் பொற்பதம் பெற்றனர்; இந்த மந்திரமே மற்ற மந்திரங்கட்கெல்லாம் மூலமாய் விளங்கும்; இந்த மந்திரமே ரகஸ்யங்கட்கெல்லாம் பரமரகஸ்யமாகும்; மாசற்றமனத்துடன் ஒருமுறை இந்த மந்திரத்தை உச்சரித்தால் இது எல்லாப் பலன்களையும் கொடுக்கும்; இதுவே சத்தியமான மந்திரமென்று கையை யுயர்த்தி சத்தியம் பண்ணலாம்'' என்று அருளிச்செய்ததாக வியாஸஸ்மிருதி கூறும்.

பசுந்துளபத்தாராகிய செங்கண்மாலுக்கு நிகரான வஸ்துவில்லை. திருவஷ்டாக்ஷரத்துக்கொப்பான வேறொரு மந்திரமுமில்லையென்று பஞ்சமவேதமாகிய மஹாபாரதம் வகுத்துரைத்தது. உண்மையிதுவாதலால் அச்சுதன்றன் அழிவில் முக்திபெற ஆசையுற்றோரனைவரும் இந்த மந்திரத்தையே ஜபிப்பார்கள். இந்தக் கலிகாலத்தில் சைவசந்நியாசியரும் தம்மடிபணிந்தாரது நமஸ்காரங்களைப் பாரளந்தபரனுக்கே சமர்ப்பிக்கின்றனர் ; இஃதல்லாமலும் அவர்கள் சிறந்த இத்திருவெட்டெழுத்தை பாராயணஞ் செய்கின்றார்கள். இன்னும் இயம்புகின்றேன் கேட்பாயாக.

---

## எ-வது, தேகநிலைவைதிக தத்துவப்பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! சரீர தத்துவங்கள் தொண்ணூற்றாறும், சிவ தத்துவங்கள் முப்பத்தாறும் நன்கறிந்தவனே பரமஞானியாவான் என்றுரைத்தாய். அந்த விரிவான தத்துவங்களின் வேறுபாடுகளை ஒவ்வொன்றாக விரித்துரைப்பேன் கேட்பாயாக :—

ஔஷதி காய் கிழங்கு தண்ணீர் முதலிய உணவினால் ஊறிய சாரம் சுக்கில சோணிதங்களாம். அவை மாந்தர் பெண்களோடு கூடிய கூட்டத்தில் உண்டாகி, பெண்களின் கர்ப்பகோளகையில் தரிக்கப்பெற்று முதல் தினத்தில் நீர்த்துளிபோல் தங்கி நிற்கும். ஏழாந்தினத்தில் அவை நீரிலுண்டாகிய குமுழிபோலப் பரிணமிக்கும். பதினைந்தாந்தினத்தில் நெகிழ்ச்சியுடைய பிண்டமாயிருக்கும். ஒருமாதத்தில் அப்பிண்டம் இறுகியநிலைமையாம். இரண்டாம் மாதத்தில் தலையாம். மூன்றாம் மாதத்தில் கைகால்களுண்டாகும். நான்காம் மாதத்தில் குறியுண்டாகும். ஐந்தாம் மாதத்தில் குதமுண்டாகும். ஆறாவது மாதத்தில் கண் மூக்குச் செவி பிறக்கும். ஏழாம் மாதத்தில் ஜீவன் பொருந்தும். எட்டாம் மாதத்தில் மற்ற அவயவங்களெல்லாம் பூர்ணமாகும். ஒன்பதாம் மாதத்தில் குழவியாய் முன்பு பிறந்திறந்த ஜன்மம் இன்னதென்று தெரிந்து துன்புற்று, கர்ப்போபநிடதத்திற் சொல்லியபடி 'இந்தப் பூமியிலினிப்பிறவாமல் முகுந்தனைப் போற்றுகின்றேன்' என்று அவனுடைய மூல மந்திரத்தைத் தியானஞ்செய்துகொண்டிருக்கும்.

அந்தக் குழவி அன்னையின் சோணிதம் அதிகமானால் பெண்ணும். தந்தையின் சுக்கிலம் அதிகமானால் ஆணும். இரண்டும் சமமானால் அலியாம். தாய் தந்தையின் மனம் ஒன்றுபடாமல் கூடுகிற கூட்டத்தால் கூன் குருடு செவிடு ஊமை நொண்டி சப்பாணிகளாய்ப் பரிணமிக்கும்.

சுக்கில சோணிதங்கள் அபானவாயுவால் கூறுபட்டால் இரட்டைப் பிள்ளையாகும். இங்ஙனம் பத்துமாதங்கடந்தவுடன் அருவமாகிய பிரசாபத்திய வாயு அதோமுகமாகச் செலுத்த ஓர் பெரிய பொற்கம்பியை இருப்புச்சட்டத்திலுள்ள சிறிய துவாரத்தில் பற்றியிழுப்பதுபோல அவயவமெல்லாம் நெறிந்திட ஜனனத் துவாரத்தின் வழியாகப் பூமியில் பிறக்கும்போது சடம் என்னும் வாயுவினால் அடிக்கப்பட்டுத் தெளிந்தஞானமும் இழந்து அறியாமையையடைந்து பசியினால் நலியுண்டு பின் தாய்ப்பாலால் தரித்து உய்ந்திருக்கும்.

தோல் எலும்பு இறைச்சி மயிர் நரம்பு என்ற இவை மண்ணின் அம்சங்களாம். மூளை சுக்கிலம் சிறுநீர் இரத்தம் என்ற இவை நீரின் சொரூபங்களாம். சோம்பல் சிலேஷ்பம் புணர்ச்சி பசி என்ற இவை அக்கினியின் விகற்பங்களாம். நடத்தல் இருத்தல் கிடத்தல் ஓடுதல் என்ற இவை வாயுவின் அம்சங்களாம். போகம் இன்பம் துன்பம் லோபம் மோகம் என்ற இவை ஆகாயத்தின் சொரூபங்களாம்.

மெய் வாய் கண் மூக்குச் செவி யென்ற ஐந்தும் ஞானேந்திரியங்கள். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தும் புலன்களாம். வாக்கு பர்ணி பாதம் பாயுரு உபஸ்தம் என்ற ஐந்தும் கர்மேந்திரியங்களாம். மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்ற நான்கும் அந்தக்கரணங்களாம்.

இவை நிற்க சப்தம் ஆகாயத்தின் குணம். பரிசம் காற்றிற்குரிய குணம். ரூபம் அக்கினிக்குரிய குணம். ரசம் நீரின் குணம். கந்தம் பூமியின் குணம். அந்த பூமியின் குணமாகிய கந்தத்தையறிவது ஆக்கிராணம் (மூக்கு) என்ற இந்திரியம். நீரின்குணமாகிய

ரசத்தையறிவது நாவிந்திரியம். அக்கினியின் குணமாகிய ரூபத்தை யறிவது கண். ஆகாயத்தின் குணமாகிய சப்தத்தை யறிவது சுரோத்ரேந்திரியம் (காது).

ஆகாயத்தின் குணமாய், காதினால் அறியப்பெற்ற சப்தத்தைச் சொல்லுவது வாக்கு. வாயுவின் குணமாய் உடம்பினால் அறியப் படும் பரிசத்தையறிவது கை. நீரின் குணமாய் வாயினால் அறியும் இரதவஸ்துவை விடுவது உபஸ்தம். பூமியின் குணமாய் மூக்கினால் அறியும் கந்தத்தை விடுவது பாயுர். இங்ஙனமுரைக்கப்பெற்ற எல்லா இந்திரியங்கட்கும் ஓர் அரசன்போலிருந்து அவைகளை ஏவி நடத்துவது மனம். நீரின் அம்சமாய் அஞ்ஞானத்தை யொழித்து ஞானத்தைத் தூண்டுவதற்குரியது புத்தி. அக்கினியின் அம்சமாய் 'எல்லாம் என்னுடைய செயலாலே நடைபெறுகிறது' என்று இறு மாந்திருப்பதற்குரியது அகங்காரம். மற்ற அந்தக் கரணங்களின் காரியங்களெல்லாம் தெளிவாயறியச் சக்தி பெற்றிருப்பது சித்தம்.

இந்த உடம்பில் பத்து வாயுக்கள் நிறைந்திருக்கின்றன. அவை:—பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயனன் என்பன வாம். இவற்றுள் பிராணன் என்றவாயு இருதயத்தில் நிற்கும் இயல் பினையுடையது. உதானன் என்ற வாயு சுழூத்தி நன்றாயியங்குமாறு செய்யும். சமானன் என்றவாயு தன்னிலையினின்ற அன்னத்தை வேறுபாடாக்கி வைச்சுவானராக்கினியில் ஆகுதி செய்யும். நாகன் என்ற வாயுவானது விக்கல் முதலிய துன்பத்தை விளைவிக்கும். கூர்மன் என்ற வாயுவானது கண்களை இமைப்பதும் விழிப்பது மாகச் செய்யும். கிருகரன் என்ற வாயுவானது தும்மல் இருமல் முதலிய துன்பத்தையுண்டுபண்ணும். தேவதத்தன் என்ற வாயு வானது சோம்பல கொட்டாவிகளை யுண்டுபண்ணும். தனஞ்சயன் என்ற வாயுவானது சரீரத்திலிருக்கின்ற எழுபத்தீராயிர நாடியில் அமர்ந்திருக்கும். இந்த எழுபத்தீராயிர நாடியும் பதினேழு வகையுள் அடங்கும்.

இந்தப் பதினேழு நாடிகளுள் இடகலை யென்பது நாசித்துளை யுள் சுவாசமாயிருக்கும். காந்தாரி அத்தி சிங்குவை என்ற இவை

விழியினிலிருந்து உருவங்களைக்காணும். குகு வென்பது சப்தத்தைக் கிரகிக்கும். அலம்புருடன் என்பது சுக்கிலத்திலிருந்து ஆசையையும் மதியீனத்தையுஞ் செய்யும். சரசொதி யென்பது நாவிலிருந்து எல்லாச்சுவைகளையும் நுகரும். விச்வோதாம் என்பது உணவையுட்கொள்ளும். பயச்சுவினி யென்பது நீர் முதலியபானத்தையுட்கொள்ளும். சங்கினி யென்பது உண்டியின் சாரமான அமுதைச் சிரக்கபாலம்வரை கலப்பிக்கும். ஆகுதி யென்பது வாயுவைத் துணையாகக்கொண்டு மலக்கழிவைச் செய்யும். தெச்சுனி யென்பது குறியில் தாது மோகனஞ் செய்யும். வருணை யென்பது குறியினின்றும் சிறு நீரைக்கழிக்கும். சீவனி யென்பது தெச்சுனி வருணை யென்பவற்றிற்குத் துணையாயிருக்கும். வீணுதண்டமென்பது, மற்றெல்லா நாடிகளையும் ஊர்த்துவ முகமாக உந்தியிற் சேர்த்து அறுவகை ஆதாரங்கட்கும் ஊன்றுகோல்போல் ஆதாரமாயிருக்கும்.

சாத்விக குணமானது ஆத்மாவை ஞானத்தால் மிகவும் தெளிவுறுத்தும். ராஜஸகுணம் துவேஷ முதலியவற்றை யுண்டாக்கி வருத்தும். தாமதகுணம் ஞானநாசத்தை யுண்டுபண்ணும். மண், பொன், புத்திரர் என்ற மூன்றும் ஈஷணைகளாகும். ஆணவம் மாயை, காமியம், என்ற மூன்றும் மலங்களாம். எலும்பு, நரம்பு, மூளை, என்ற இவை பிதாவினுலானவைகளாம். சோணிதம், தசை, தோல் என்ற இவை மாதாவால் தோன்றியவைகளாம்.

ஸ்தூல சரீரத்தின் வளப்பத்தைத்தருவது அன்னமயமாகும். பத்துவாயுக்களின் கூட்டத்தில் வளர்வது பிராணமயமாகும். அந்தக்கரணமாங்கூட்டம் மனோமயம். சங்கற்பம் விஜ்ஞானமயம். இந்த நான்கையுங் கடந்து சிறந்து விளங்கும் ஞானசொரூபத்தினுல் விளைவது ஆனந்தமயமாம்.

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, யென்ற மூன்றும் அவஸ்தைகளாம். தோல், எலும்பு, இரத்தம், தசை, கொழுப்பு, நரம்பு சுக்கிலம் என்பன சப்ததாதுக்களாம்.

இராகம் மாயையாம். துவேஷம் கோபமாம். சிக்கனம் லோபமாம். மெய்யறியாதிருத்தல் மோஹமாம். மகிழ்வது மத

மாம். பொருமைப்படுவது மாச்சரியமாம். எனக்கொப்பு ஒரு வருமில்லை யென்றிருப்பது அஹங்காரம். கர்வமும் இதுவாம். § அத்யாத்மிகம். ‡ ஆதிபௌதிகம். † ஆதிதெய்வீகம், என்பன தாபத்திரயங்களாம். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்பன சரீர வேறுபாடுகளாம். இவற்றுள் ஐம்பூதம், ஐம்பொறி. ஐம்புலம், ஐவகை வியாபகவாயு சப்ததாது நூராயிரங்கோடி ரோமம் என்ற இவைகளாலாயது ஸ்தூலசரீரம். அந்தக்கரணம் நான்கினலாயது சூக்ஷ்ம சரீரம். அக்கினி, சந்திரன், சூரியன், என்ற மூன்று மண்டலங்களும் ஆறு ஆதாரங்களும் அவற்றுக்கு அதிஷ்டமான தெய்வங்களும் அக்ஷரங்களும் விரித்துரைக்கிற் பெருகும். இவையெல்லாம் ஒருபுறமிருக்க ஜீவன், தான்செய்த வினைக்குரியதான கதியை யடையும்.

---

## அ-வது, அர்ச்சிராதிப் பரிச்சேதம்.

ஒப்புயர்வற்ற முகுந்தனுடைய திருவருளால் முக்தனும் ஜீவன், இவ்வுடலை விடுங்காலங் கிட்டினுல் வாக்கு முதலிய இந்திரியங்களெல்லாம் மனத்தினெடுங்கி, மனமும் பிராணனிலொடுங்கி, பிராணனும் ஒளியிற்சேர்ந்து சூக்ஷ்மசரீரத்தையடையும். பின்னர் சூரிய வெப்பத்தால் வருத்தமடைந்தவர்கள் சோலையிற்புகுந்து இளைப்பாறுதல்போல இருதயகமலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீமந்நாராயணனையடைந்து, எல்லாப்பற்றும் ஒழியத் தாபத்திரயங்களையும் விட்டு மூலமந்திரத் தியானமே ஜீவனமாகத்தெளிந்து, இருதயந் தன்னில் பொருந்தியிருக்கும் நூற்றொருநாடிகளுள் சுழுமுனைநாடியின் துவாரத்தை ஞானவிளக்கினுல் விளக்கிப் பிரமரந்திரத்தைப் பேதித்து, பிரணவரதத்தில் ஆரோகணித்துக்கொண்டு (ஏறி) *அர்ச்

---

§ அத்யாத்மிகம்—தன்னுல் வருந்துன்பம்.

‡ ஆதிபௌதிகம்—பிறிதொன்ருல் வருந்துன்பம்.

† ஆதிதெய்வீகம்—ஊழால் வருந்துன்பம்.

* அர்ச்சிராதி மார்க்கம்—அர்ச்சிஸ் முதலான தேவதைகள் இருக்கின்ற லோகத்தின் வழி.

சிராதி மார்க்கமாகச் செல்வான். அப்பொழுது ‡ ஆங்காங்குள்ள தேவர்களெல்லாம் கைகுவித்துச் சத்காரஞ்செய்வார்கள்.

அதன்மேல் பிரமலோகத்தையடைந்து ஆங்குப் பிரமதேவனுல் பூசிக்கப்பட்டுப் பின் இவ்வண்டத்தைச்சூழ்ந்துள்ள ஏழு ஆவரணங் களேயுங்கடந்து விரஜாவென்னு மகாநதியில் மூழ்கி, தன்னுடைய சூக்ஷ்மசரீரமும் வாசனுரேணுவும் கழியப்பெற்று அந்நதியின் அக் கரையில் வதியும் அமானவன் என்னுந் தெய்வத்தால் தீண்டப் பெற்று அதனுல் ஸர்வேசுவரன் வடிவுபோல் மிக்க வொளிபொருந் திய திவ்ய சரீரத்தைப்பெற்றுத் தெளிவிசும்பாகிய திருநாட்டில் எழுந்தருளியுள்ள ஸ்ரீவாசுதேவனேயடைந்து நித்தியமுக்தர்களோடு நித்யானந்தத்தை அநுபவிப்பான்.

இந்த விவரத்தைப் பிண்டோற்பத்தி யென்றநூலில் விரிவாகக் காணலாம். இதனே முடிவுற வுரைப்பதென்றுல் ஓரு சிற்றெறும் பானது 'நெய்க்கடலே வற்றப்பருகிவிடுவேன்' என்று கூறுவது போலாகும்.

இந்தக் கிரமங்களேப்பற்றிய பல பிரமாணங்கள் எவ்வெவ் விடத்திலுள்ளனவெனின் கூறுகிறேன் :— ஞானசரீர உபநிடதத்தி லும், பராசர புராணத்திலும், யாஞ்ஞவல்கியத்தில் பிராயச்சித்த காண்டத்திலும், சரீர அவயவதத்துவமெல்லாந் தெளிவாகக் கூறு கின்ற வாகடத்திலும், பிரபஞ்ச சாரத்திலும், இந்தப் பிண்டோற் பத்தியைப்பற்றிய விவரம் கூறப்பட்டுளது. அதில் தெளிவாகக் காணலாம்.

இதுநிற்க, இருதயத்திற் பொருந்திய நூற்றொரு நாடிகளுள் ஷுமுனேநாடியின் மார்க்கந்தான் முக்திமார்க்கமென்பதை சாம வதாந்தமாகிய சாந்தோக்யமும், உலகவகைகளே யெண்ணியுரைக் கின்ற ய[illegible]ச்சவர்க்கத்திலுள்ள ஆத்தப்பிரகாணமும், பாஞ்சராத்திர மும், பகவத்கீதையும் தெளிவுறக்கூறும்.

---

‡ ஆங்காங்குள்ள தேவர்கள்—வாயு சூரியன் சந்திரன் வருணன் இந்தி ரன் முதலிய தேவர்கள்.

கூ-வது, சித்துநிலை யபேதமாயாவாத கண்டனப் பரிச்சேதம்.

ஜீவன் கெர்ப்ப கோளகையில் ஞானேதயத்துடனிருக்கின்ற காலத்தில் ஸ்ரீமந்நாராயணனை தியானஞ் செய்துகொண்டிருக்குமென்றும், மோக்ஷதசையிலும் இந்த ஜீவன் பரப்பிர்ம்மத்துடனிருந்து நித்யானந்தத்தை அநுபவிக்குமென்றும் பாஞ்சராத்திரமும் கர்ப்போபநிடதமும் விரிவாயியம்பும். இதனால் ஜீவப்பிர்ம்ம பேதமுண்டென்பது தெளியலாம். ஆனால் அநாதியாய் வருகின்ற மாயாசம்பந்தத்தாலே பிர்ம்மம் பேதம்போலத் தோற்றுமென்றும், மோக்ஷத்தில் ஞானசித்தியானபின் ஜீவனும் பிர்ம்மமேயென்றும், பேதமென்பதே கிடையாது என்றும் கூறுகிற சாஸ்திரங்கட்கு வழியாதெனின்? கூறுகிறேன் கேட்பாயாக:—

எப்பொழுதும் ஜீவப்பிர்ம்ம பேதங்களுண்டு. இப்படிப் பேதமின்றி, பிர்ம்மம் அநாதி மாயாசம்பந்தத்தால் ஜீவபாவனையால் மயங்குகிறதென்று சொல்லவொண்ணாது. அங்ஙனஞ் சொன்னால், பிர்ம்மத்தை அமலனெனவும் (பரிசுத்தனெனவும்) சுயம்பிரகாசனெனவும் கூறுகின்ற வேதமொழியோடு இக்கூற்று மாறுபடுமாதலால் பிர்ம்மத்துக்கு மாயா சம்பந்தம் ஒப்புக்கொள்ளலாகாது.

இருளானது சூரியனிடத்தில் கூடியிராததுபோல் பரப்பிர்ம்மத்தை அவித்தையானது அடையமாட்டாது. அவித்தையினால் பிர்ம்மமானது பற்றப்பட்டுள்ளதெனின்; பிர்ம்மவிஷய ஞானத்தால் அவித்தை நீங்குகிறது என்று கூறுவது பொருந்தாது. பிர்ம்மமானது அவித்தையோடு கூடிநின்றபொழுது பிர்ம்ம விஷய ஜ்ஞாநம் அவித்யாநிவிருத்தியைச் செய்யாதன்றோ! இஃதல்லாமலும் அநாதியாயுள்ள பிர்ம்மத்தை அவித்தைபற்றியதென்றால் அந்த அவித்தைக்கும் அநாதித்வம் ஒப்புக்கொள்ளவேண்டும். அங்ஙனம் ஒப்புக்கொண்டால் மற்றொரு தோஷமுமுண்டாகிறது. அதாவது அபேத சாஸ்திரத்தால் பிரம்மத்தைத் தெளியும்போது அதற்கு விரோதமாக பேதமாகிய ஸவிசேஷணமே தோற்றுகிறது. மாயா சம்பந்தம் பிர்ம்மவிசேஷணமன்றோ! நூலறிவுக்கு அவித்தை நீங்கிய பிர்ம்மமாத்திரமே விஷயமென்பதற்கோ இடமில்லை. மாயா

சபளித பிர்ம்மஜ்ஞானத்தாலே அவித்யா நிவிர்த்தியுண்டாகாது. அவித்யா நிவர்த்தியில்லாதபோது மோக்ஷமில்லை. இதனுல் அத்வைத சித்தாந்தத்திற்கு முழுவதும் விரோதமாய் முடியும்.

இஃதொருபுறமிருக்க, பிர்ம்ம ஜீவர்களிடத்திலுண்டாகின்ற பேதம் மாயா கற்பிதம் என்று சொல்லில்; உலகத்தில் ஆசார்யன் உயர்ந்தவன் ; அவன் சொற்படிகேட்டு நடக்கிற சிஷ்யன் அவனிற்ருழ்ந்தவன் என்ற பேதமும் பொய்யாம். பின்னை அபேதசாஸ்திரத்திற்குத் தான் உத்தரமேதெனின் கூறுகிறேன்.—

பிர்ம்மம், ஜகத்தைச் சரீரமாகக் கொண்டுள்ளதினுல் சரீர சரீரிபாவத்தால் ஐக்கியஞ் சொல்லியதென்றே கொள்ளவேண்டும். அணுத்துவம் ஞானனந்தத்வ முதலிய லக்ஷணங்களில் எல்லா ஆத்மாக்களுக்கும் பேதமின்றியிருத்தலால் சாதியொருமையைப் பற்றி ஏகாத்மா என்று சாஸ்திரத்திலுரைத்ததேயன்றி ஆத்மா ஒன்று என்ற கருத்தின்றென்று கொள்க. இவ்விவரமெல்லாம் ஸ்ரீபாஷ்யத்திலும், சததூஷணியிலும் பரக்கக்காணலாம். இன்னும் பல நூல்களிலும் ஜீவபிர்ம்ம பேதத்தைத் தெளிவாக அறியலாம்.

இருக்கு வேதம் இரண்டாம் அட்டகம் மூன்ரு மத்தியாயம் பதினெட்டாம் வருக்கத்தில் உடம்பாகிய ஒரு மரத்தில் ஜீவாத்மா பரமாத்மாவென்ற இரண்டு பக்ஷிகளிருக்கின்றன; அந்தப் பக்ஷிகளுள் ஜீவாத்மாவாகிய பக்ஷி, கருமமாகிய பழத்தையுண்டு கொண்டிருக்க, பரமாத்மாவாகிய பக்ஷி அதற்குச்சாக்ஷியாயிருக்குமென்று ஜீவ பிர்ம்மர்களுடைய ஏற்றத்தாழ்வுகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

பாரமாத்மம் என்ற உபநிஷத்தில் நான்காம் அநுவாகத்திலும் ஜீவ பிர்ம்ம பேதம் சொல்லப்பட்டுளது. முக்தரானவர் பரமாத்மாவுடன் கூடி பரமானந்தத்தை அநுபவிக்கிருர் என்று எஜுர் வேதத்திற் சொல்லப்பட்டுளது.

பரமபதத்தில் நித்யஸூரிகளானவர் ஆங்கு எழுந்தருளியுள்ள விஷ்ணுவை எப்பொழுதும் பார்த்துப் பேரானந்த மடைகின்றனர் என்று ஜீவபேதத்தைக்குறித்து எஜுர் வேதம் மூன்ருங்

காண்டம் ஐந்தாம் அநுவாகம் கூறுகிறது. பத்தர் (சம்சாரி) முக்தர் நித்தியர் என்று ஜீவபேதத்தையும், இவர்கட்கெல்லாம் தலைவனுய் நின்ற பரமாத்மாவையும் பகவத்கீதை பகராநிற்கும். இங்ஙனம் பேதத்தைக் குறித்துக்கூறும் பிரமாணங்கள் பலவுள. ஆதலால் ஜீவனும் பிர்ம்மமும் ஒன்றென்று கூறுதல் பொருந்தாது.

ஜீவனுனவன் அர்ச்சிராதிமார்க்கத்தால் பரமபதத்தையடைந்து பரமாத்மாவோடு கூடி பரமானந்தத்தை அநுபவித்திருப்பான் என்று யான் முன்பு கூறியவையாவும் வேதாந்த சித்தமாகும்.

வேதாந்த விதிப்படலம் முற்றும்.

---

## ௬-வது, சைவமோகனுகம மறுப்புப் படலம்.

:o:

### க-வது, தேகநிலைச்சைவதத்துவ மறுப்புப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! முன், யான் தேகநிலைவைதிக தத்துவத்தைப் பற்றிக் கூறியதை நன்ருய்க் கேட்டனை. மற்றும் அவ்விஷயத்தைப் பற்றிக் கூறுகிற வைஷ்ணவ நூல்கள் கடலளவாகும். நீ, சைவ நூலியல்பாற் சொல்லிய தேகதத்துவமானது ஒரு சிறுகுழியளவு மாகாது. இது நிற்க, நீ சிவதத்துவத்தை முப்பத்தாருகக்கூறினை. அந்த முறையையுங் கேட்பாயாக.—

உலகில் சிற்சிலருடைய அறிவிற்குத்தோன்றுகின்ற பேதங் களெல்லாம் தத்துவங்களெனின்; அவை உண்மையாகுமா? வேதங் களில் தத்துவங்களைப்பற்றி எவ்வாறு கூறியிருக்கின்றனவோ அவ் வாறு கூறுவதுதான் உசிதமாகும். அதைப்பற்றிச் சொல்லுகிறேன் கேட்பாயாக.—

பிரகிருதி தத்துவமானது இருபத்து நான்கு. அதன்மேல் ஜீவதத்துவமும், காலதத்துவமும், ஈசுவர தத்துவமுஞ் சேர்த்து தத்துவம் இருப்பத்தேழாக அதருவவேதம் அறைகின்றது.

பகுதிதத்துவம் எட்டு விகுதிதத்துவம் பதினுறு என்ற இந்தக் கிரமத்தால் தத்துவங்கள் இருபத்துநாலாகுமென்று சுவேதாச்சு வதர உபநிடதம் உரையாநிற்கும்.

பூமி நீரிலொடுங்கும். நீர் தீயிலொடுங்கும். தீ வாயுவிலொடுங்கும். வாயு ஆகாயத்திலொடுங்கும். ஆகாயம் இந்திரியத்திலொடுங்கும். இந்திரியம் தன்மாத்திரையிலொடுங்கும். தன் மாத்திரை பூதாதியிலொடுங்கும். பூதாதி மஹானி லொடுங்கும். மஹாந் அவ்யக்தத்திலொடுங்கும். அவ்யக்தம் ஸ்ரீமந்நாராயணனுகிய பரப்பிர்ம்மத்தி லொடுங்கும்; என்று இங்ஙனம் இருபத்துநான்கு தத்துவங்களுள்ளனவென்று கெர்ப்போபநிடதம் கூறுநிற்கும்.

இங்ஙனம் உரைக்கப்பெற்ற வேதப்பொருளுக்கிசையப் பாரதம் மோக்ஷதர்மத்தில் 'கர்மேந்திரியம் ஐந்து ஞானேந்திரியம் ஐந்து புலன் ஐந்து மனமொன்று என்ற பதினுறும் * விகுதிகளாகவும், பிரகிருதி மஹாந் அஹங்காரம் பஞ்சபூதம் என்ற எட்டும் † பகுதிகளாகவும் கூறப்பட்டுள்ளன. விஷ்ணு புராணத்திலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. ஆகமமடந்தாய்! நீ, முப்பத்தாறு தத்துவங்களாகக் கூறியவை அவைதிகமாமென்பதைக் கூறுகிறேன்; கேட்பாயாக.—

பூதங்களைந்தும் தன்மாத்திரைகளைந்தும் ஞானேந்திரியங்களைந்தும் கர்மேந்திரியங்களைந்தும் அந்தக்கரண நான்கும் ஜீவனும் காலமும் பரமாத்மாவுமாகிய தத்துவங்கள் இருபத்தேழென்று நிச்சயித்து அருந்தவம்புரியுங் கபிலமாமுனிவர் தம்மன்னைமார்கட்குரைத்ததாகப் பாகவதம் மூன்றும் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டுளது.

ஆகமமடந்தாய்! வேதமானது, தத்துவங்களை இவ்வாறு நிச்சயித்திருக்க, நீ, இதற்குமாறுகப் பலபடியாலும் வழங்கினை. இத்தத்துவ சங்கையானது பண்டைக்காலத்திலுமுண்டாகி அதற்குப் பரிகாரமும் கூறப்பட்டுளது. அது வருமாறு.—

ஒருகாலத்தில் உத்தவரென்பவர் கண்ணபிரானை யடைந்து வந்தன வழிபாடுகள் செய்து, எம்பெருமானே! மூவுலகும் பூத்த

* இந்த பதினுறு தத்துவத்தினின்று பிறிதொன்றும் பிறக்காததினுல் இவை விகுதிகளாயின.

† இந்த எட்டு தத்துவத்தினின்றும் சில வுண்டாகின்றதினுல் இவை பகுதி களாயின.

உந்தியனே! தத்துவம் வல்லார் தத்துவங்களைப் பலபடியாகக் கூறு கிறூர்கள். அங்ஙனங் கூறுவதில் உண்மை விளங்கவில்லை; அதை அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டும் என்று வேண்டினர். அப்பொழுது கண்ணபிரான், உத்தவரே! என்னுடைய மாயை வசப்பட்டவர்கள் தத்தம் மனத்தில் தோன்றியவை யெல்லாம் தத்துவங்களாமென்று நம்பி ஆதரிப்பார்கள். அங்ஙனம் ஆதரிப்ப தற்கு அவர்கள் மயக்க உணர்வே காரணமாகும். அவ்வுணர்வு ஆத்மசாந்தி தோன்றியபொழுதன்றி யொழியமாட்டாது. இது நிற்க, இனி உண்மை உரைப்பேன் கேட்பீராக: —

பிரகிருதிதத்வம் இருபத்துநான்கும் அதன்மேல் ஜீவரத்துவ மும் காலதத்துவமும் சேர்ந்து என்னிடத்தில் தோற்றமும் ஒடுக்க மும் அடைகின்றன. ஆதலால் நீர் இதை உறுதியாகக்கொண்டு என்னை அடைவீராக'' என்று கூறி அவர் ஐயத்தை நீக்கினதாகப் பாகவதம் பதினொன்றும் ஸ்கந்தம் இருபத்திரண்டா மத்தியாயத் திற் கூறப்பட்டுள்ளது.

தேகேந்திரியம் விஷயம் பூதம் அந்தக்கரணம் என்ற பிரகிருதி தத்துவமும அதன்மேல் ஜீவதத்துவமும் விஷ்ணுரூபியாகிய இறை வனுக்கு அடிமையாகுமென்று பராசரஸ்மிருதி பகராநின்றது.

இருபத்தைந்தாம் தத்துவமாகிய ஜீவாத்மா ஸர்வஜகத்துக்குங் காரணனுகிய ஸ்ரீமந் நாராயணனுக்கே அடிமையானவன்; வேறொ ருவனுக்கு அடிமையாகமாட்டான் என்று விஷ்ணுபுராணங் கூறு கின்றது.

பிரகிருதிதத்துவம் இருபத்துநான்கினையுங்கடந்த இருபத்தைந் தாந் தத்துவமாகிய ஜீவாத்மாவானது பரமாத்மாவுக்குச் சேஷமா யிருந்தும் மாயையினுல் மயங்கி உண்மையறியாது உலகத்தில் பிறந் திறந்து உழல்கின்றது என்று பரத்துவாச சமமிதை பகருகின்றது.

வேதமெல்லாம் தெளிவாகச்சொல்லிய பிரகிருதிதத்துவங்கள் இருபத்துநான்கிற்கும் மேலாகிய ஜீவன், அனந்தன்மேல் அறிதுயி லமரும் அச்சுதனுக்கு அடிமையாமென்று பாரதத் திதிகாச சமுச் யந்தன்னில் ஓதப்பட்டுளது.

இதுவரையுங் கூறியதினுல் இருபத்துநான்கு பிரகிருதிதத்து வத்திற்கு மேலாக எண்ணப்படும் ஜீவன் நாரயணனுக்கன்றி ஏனை யோர்கட்கு அடிமையாகமாட்டான் என்று தெளியப்படும். இதற்கு விரோதமாகக் கூறிய தத்துவங்களெல்லாம் அவைதிகரானவர்கள் மோகன நூலே மயக்கவுணர்விஞல் உண்மையென நம்பி கூறப்பட்ட வைகளாகும்.

---

உ-வது, சிவபூசை மறுப்புப் பரிச்சேதம்

ஆகமமடந்தாய்! நீறணிமேனியனுகிய சிவனது பூசனை, புத்திக்கும், முக்திக்கும் சாதகமாகுமென்று கூறினை. அந்தச் சிவபூஜை வைதிகமுறையாகச் செய்தால் சிறந்த ஞானப்பேறுண்டாகும். அவைதிகமாகச்செய்தால் அது, அதோகதியிற்றள்ளும்.

திருமாலைச் சங்கரனுக்குப் பரமாத்மாவாகக் கருதிச்செய்யும் பூசையானது, அதருவசிரசில் சொல்லப்பட்டதால் அது வைதிகமாம். இதற்கேற்க, சிவபிரான் தன்வாக்காற் செப்பிய அந்தப் பாசுபதபூசையும் அங்ஙனமேயாகும். இஃதெவ்வாறெனின் கூறுகிறேன்:-

சிவபெருமான் கைலயங்கிரியில் சப்தரிஷிகளை நோக்கி, முனிவரே! என்விஷயமான உபாசனை மூவகைத்தாகும். அவையாவன:- சாத்விகோபாசனை ராஜஸோபாசனை தாமசோபாசனை என்பன. அவற்றுள் சாத்விகோபாசனையாவது:— திருமாலின் சரீரமாக என்னைப்பூசிப்பதாம். ராஜசமாவது:— என்னைச் சாமானியபுத்தியால் பூசனைசெய்வதாம். தாமசோபாசனையாவது:—என்னையே பரதெய்வமாக மதித்துப் பூஜிப்பதாம். சாத்விகபூசனை முக்திப்பேற்றையும், ராஜசபூசனை ஸ்வர்க்கபலனையும், தாமசபூசனை கணக்கற்ற பிறப்பினையுங்கொடுக்கும்.

ஆதலால் என்னுடைய சாத்விகார்ச்சனை வேதத்திற்கநுகுணம்போலக் கவுதமர், சிறிது சாபத்திற்கு விஷயமானவர்கள் ஈடேறும் பொருட்டுரைத்தனர். உண்மைப்பொருளை நீக்கி பாசுபத விரதத்தினையுங் கூறினர். இங்ஙனமிவர் உரைத்தாரேனும் அபராதக்குறைவுடையார் தம்மறிவினுல் வேத தாத்பர்யமின்னதென்று சாவதானமாக வறிந்தார்கள்.

இங்ஙனமறிந்தார் சிலரிருக்க; மிகுந்த அபராதமுடையார் பாசுபத விரதத்தை மேற்கொண்டு நானே பரதேவதை என்ற வசனத்தை மெய்யாகக்கருதி மயங்கினர் என்றுரைத்தனன். இந்த விவரம் வராக புராணம் எழுபத்திரண்டாம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுளது.

இவ்வாறு சிவனுடையவாக்காலும், வேதத்தாலுஞ் சொல்லப் பட்டுள்ளதினுல் வைதிகபூசையே சிறந்ததாம். தாமசகுணத்தினர் சைவாகம முறைபற்றி வாமமந்த்ர முதலாகக்கொண்டு உச்சரித் துச் செய்கிற பூசை அவைதிகமாகும். பகைவரது திரிபுரமெரிய மேருமலையை வளைத்தவனைப் பாசுபத விதிமுறையால் அர்ச்சனை செய்தவருக்கும் அளவிட்ட பலனேயன்றிச் சாசுவதமானபலனுண் டாக மாட்டா; என்றனர். இதனைக்கேட்ட ஆகமவல்லி நகைத் துக்கொண்டு சொல்லத் தொடங்கினள்:—

---

## ரு-வது, சிவமுக்தி மறுப்புப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! உலகத்தில் வாழ்கின்றவரது வலிமையை யழிக்கின்ற கொடியோர் ஒருபோழ்தும் நீங்காதுவாழ்ந்த முப்புரத் தையழிக்க மகாமேருவைச் சிலையாகவளைத்த சிவபெருமானைப் போல மகத்தான வரங்கொடுக்குந் தெய்வமுலகிலுண்டோ?

ஆகமமடந்தாய்! நன்கு மொழிந்தனை. உங்கள் பெருமான்கொடுத்த வரததை நம்பி நப்பி மிக்கவலிமையுடைய இரணியன் நன் ருய் வாழ்ந்தனனன்ருே! வாலியும் இம்மண்ணினையாண்டா னே? இவர்களல்லாமலும் வெற்றியையுடைய வாணசுர னும் போரில் வென்றிட்டானே? இராவணனும் பிழைத்து விடிந்திட்டானே? இவர்களெல்லாம் பட்டொழிந்தனர் என்பதை உலகமறியுமே. யானே உங்கள் சிவபெருமான் தந்த வரத்தை யெடுத்தியம்பவேண்டும்.

ஆகம:—ஆ! ஆ!! இவர்களைப்பற்றியோ விரித்துரைத்தாய். இவர் கள் குரங்கும் அவுணரும் இராக்கதருமன்ருே! இவர்கள் மாண்டொழிந்தனரென்பதினுல் வந்ததென்ன?

ஆரண:—மற்கட (குரங்கு) சாதியிற்பிறந்த வாலியின் தம்பியன்றோ சுக்கிரீவன். பிரகலாதன் அவுணனுடைய புதல்வனல்லவா? இராவணன் தம்பியன்றோ விபீஷணன். இவர்களனைவரும் திருமாலினிடத்தில் இடையூறில்லா வரம் பெற்றாரென்பது வெட்டவெளியன்றோ!

ஆகம:—மடந்தாய்! இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்லவேண்டியது இவ்வளவுமாத்திரந்தானோ இன்னும் ஏதேனுமுண்டோ.

ஆரண:—உண்டு.

ஆகம:—அதனையும் இயம்புவாய்!

ஆரண:—திருமாலின் திருவருளாலன்றோ துருவன் எல்லோருக்கும் உயர்ந்த பதவியைப் பெற்றான். அனுமானும் இனி, பிர்ம்ம லோகத்தையாளுவதற்கு வரம்வேண்டிப் பெற்றான்.

ஆகம:—நல்லறிவினையுடைய மார்க்கண்டன் எங்கள் பசுபதியினிடத்தில் பெற்றபேறு மறைக்கத்தக்க தொன்றன்றே. உலகறியுமே.

ஆரண:—மார்க்கண்டன் தனக்கு சிவன்தந்த தீர்க்காயுளினால் பயனொன்றுமில்லையென்று எங்கள் திருமாலிடத்திற் பிறவியொழிய வரம்பெற்றான். இவையெல்லாம் ஒருபுறமிருக்க, உங்கள் சிவபெருமான் உகந்துகொடுக்கிற பதவியும் ஆயுளும் நிலையற்றனவாகுமென்ற உண்மையையும் இங்குரைப்பேன்

---

பவுண்டரிகன் கதை.

துவாபரயுகத்தில் ஓர் அவுணன் இராஜகுலத்திற் பிறந்து பவுண்டரிகன் என்னும் பெயரையுடையவனாய், காசியம்பதியை அரசாண்டுவந்தான். இவன் கங்கைநதிக்கரையில் உமையோர் பாகனாகிய சிவனை, பஞ்சாக்ஷர மந்திரத்தினால் தியானஞ்செய்து பன்னீராண்டு ஊணுறக்கமற்றுத் தன் கண்ணைக்கொண்டு அர்ச்சனைசெய்தான்.

இங்ஙனம் இவன்செய்த அருந்தவத்திற்குகந்து பிரசந்நமாகிய சிவன், பவுண்டரிகனைநோக்கி 'அப்பா! நீ செய்த அரும்பெருந் தவத்தைக்கண்டு மகிழ்ந்தோம்; நீ விரும்பியதைக்கேட்பாய்; தடையின்றிக் கொடுக்கிறோம்' என்றனன். அப்பொழுது பவுண்டரிகன், எம்பெருமானே! அடியேற்குச் செந்தாமரை போன்றுள்ள கண்களும் பீதகவாடையும் விளங்குகிற நீண்ட கிரீடமும் நான்கு புஜங்களும் சக்கரம் சங்கு வில் வாள் கதையென்ற பஞ்சாயுதங்களும் கருடக்கொடியும் வாசுதேவனென்ற பெயரும் உண்டாகுமாறு அநுக்கிரகிக்கவேண்டும் என்று கேட்டான்.

அப்பொழுது சிவன், 'இவன் பன்னீராண்டு பகலிரவுமறந்து திடமான மனத்துடன் தன்னுடல் வருந்த நியமமான தவத்தைச் செய்தனன்; சிறந்த பதவிகளை யிச்சித்தானில்லை; இத்தகைய வரத்தைப் பிறரொருவரும் விரும்பினரில்லையேயென்று மதித்தானில்லை; ஆசையின் மிகுதியால் இங்ஙனம் கேட்டான்' என்று இரக்கமுற்று வரமளித்தனன். உடனே இவனுடைய சரீரம் மேக நிறம்போல் விளங்கியது; நான்கு புஜங்களுமுண்டாயின; கருடக் கொடியுந் தோன்றியது; நான்கு கரங்களில் திருவாழி சங்கு முதலிய ஆயுதங்களுமுண்டாயின; ஆடையும் பீதாம்பரமாயிற்று; இவன் இவற்றையெல்லாங்கண்டு மனமகிழ்ச்சியுற்றுத் தன்னிருப்பிடம்வந்து சேர்ந்தான்.

அதன்மேலிவன் அகங்காரமுடையவனாய் அரவணையிற்றுயிலும் ஏகநாராயணனும் யானே; வேதப்பொருளாய் விளங்குகின்றவனும் யானே; கஜேந்திரன் முன்சென்ற ஆதிமூலமும்யானே; அழிவற்ற தேவருக்கு நாயகனும் யானே; மகிமையுடைய பரவாசுதேவனும் யானே; என்று மதித்துரைத்து, உலகிலுள்ள ஞான யோகியர் முதலான யாவரும் மருளும்படி மயக்கினன்.

இவ்வாறு மயக்கிக்கொண்டிருந்த பவுண்டரிகனைக் காண்பதற்கு நாரதர் வந்துசேர்ந்தனர். அப்பொழுது இவனை நோக்கி அப்பா! உனது கீர்த்தியைக்கண்டு மெச்சினேன்; ஆகிலும் ஓர் குறையொன்றுளது; அஃதகற்றிக் கொண்டாலன்றி உனக்கிப்புகழ் நிலைபெறாது; ஆதலால் அதனை நீக்கிக்கொள்வதற்கும் கடமைப்

பட்டிருக்கின்ருய், என்றனர். இதனைக்கேட்ட பவுண்டரிகன் 'யாது குறை' என வினவினன். நாரதர் சொல்லத்தொடங்கினர்:- 'இனி நீ வாசுதேவனென்ற பெயருடன் வாழவேண்டும் என்ற கருத்து உனக்கிருக்கு மேல் துவாரகாபுரியில் வாழ்கின்ற வாசுதேவனை வெல்லவேண்டுமன்றே! அவனுமிருக்க உனக்கிப்பெயர் எவ்வாறு நிலைபெறும்? இதனை நீ இதுவரை அறியாதிருக்கின்றனையே; இஃதென்ன புல்லிமை; இனியொருகணமேனும் தங்காது போருக்குப்புறப்படு; புறப்படு' என ஏவினர்.

உடனே பவுண்டரிகன் இரதம் கஜம் துரகதம் (குதிரை) பதாதி யென்ற சதுரங்கசேனை புடைசூழப் புறப்பட்டுத் துவாரகாபுரியைக்கிட்டி ஓர் தூதனையழைத்து நீ கிருஷ்ணனிடத்திற்குச் சென்று 'இனிமேல் நீ வாசுதேவனென்ற பெயரையும் மார்பிலணிந்துள்ள கௌஸ்துபமணியையும், சங்குசக்கர முதலிய ஆயுதங்களையும் கருடக் கொடியையும், பீதகவாடையையும், விட்டொழிப்பாய்' என்று சொல்லிவிட்டு விரைவில் வருவாய் என்று அனுப்பினன்.

அந்தத் தூதனும் கண்ணபிரானிடத்தில் அங்ஙனமே தெரிவித்தான். இவ்வுரையினைக்கேட்ட பிரான் புன்முறுவல்கொண்டு அவனைநோக்கி 'நாமும் நால்வகைப் படையுடன் போருக்கெழுவோம்' என்று சொல்வாய் என்று அனுப்பினர். அதன்மேல் கண்ணபிரான் நொச்சி தரித்து காசியம்பதிக்கிறைவனாகிய பவுண்டர வாசுதேவனை நெருக்கி அவனேந்திய சங்கம் சக்கரம் தண்டு முதலிய ஆயுதங்களையும் நான்கு தோள்களையுந்துணித்துப் பின் சக்கரப்படையை யெறிய அது அவனது மகுடத்தலை பலகாதம் ஓடி அவன் மாளிகைபுக்கு பரிக்கும்படிசெய்தது.

---

சாதனையோகஞ் செய்த சங்கரசிவன் கதை.

இந்த வரலாற்றைப் பதுமபுராணம் உத்தரகாண்டத்தில் வேதப்பொருளைத் தழுவியுரைக்கின்ற ஐம்பத்தேழா மத்தியாயத்திலும் பாகவதத்திலும் பரக்கக்காணலாம். இவ்வளவுமாத்திரமோ இன்னும் கேட்பாயாக:—

ஆராய்ந்தறிந்த ஞானிகள் பிரமதேவனேயும், சிவனேயும், மற்றும் வெவ்வேறு பெயருடைய தேவர்களேயும் சேவிக்கமாட்டார்கள். இந்தத்தேவர்கள் தம்மைவழிபட்ட அன்பருக்கு உகந்துகொடுக்கும் பலன்களெல்லாம் நிலேயுடையனவாகா; என்று பாரதத்தினுள்ள மோக்ஷ தர்மம் நன்கியம்பாநிற்கும்.

நீலகண்டனுகிய சிவபெருமான் மனமகிழ்ந்தீயும் வரமெல்லாம் நிலேயற்றனவாமென் றுரைத்தேன். இனி, உங்கள் சிவன் அளிக்கின்ற பதமும் அநித்யமாம் என்பதற்குப் பிரமாணம் பலவுள. அவற்றையும் சொல்லுகிறேன் கேட்பாயாக :—

சங்கீதம் பாடுவோர், இரதவாதஞ்செய்வோர், நடிப்போர் என்ற இவர்களுடைய கருத்தெல்லாம் ஒருநிலேயே கருதுமாப் போலே ஐம்புலனும் ஒருவழிப்பட்டிருப்பதுவே யோகமாகும்.

இத்தகைய சித்தியடைந்தோர், பிர்ம்மலோகத்திற்கப்பாலுள்ள ஒப்பற்ற மோக்ஷபதத்தையடைந்து, சிறந்த ஆனந்தமுற்று வாழ்வார்கள். இந்த யோகம் சித்திப்பதற்குமுன் தேகமொழிந்துவிடுமாஞல் அவர்கள் சிவனுடைய பதவியையடைந்து அவனுகப்புக்குரியவர்களாய் வாழ்வார்கள்.

தெளிவிசும்பாகிய பரமபதத்தையாளும் பரப்பிர்ம்மத்தின் திருமுகத்திலும் தோளிலும் தொடையிலும் திருத்தாளிலும் முறையே பிர்ம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்ற நான்குவகுப்பினரும் தோன்றினர்; என்று யாச்வற்க மூலக்கிரந்தமும், அதற்கு வியாக்கியானமாகிய விக்யானேச்சுரமும் யாவருமறிய விரித்துரைத்தன.

இந்த ஸ்மிருதிப் பொருளுக்கேற்ப இன்னமொரு விருத்தாந்தஞ் சொல்லுகிறேன்: — சிறந்த முக்திப்பேற்றைவிரும்பி யோக சாதனேயிலிருந்தனன் ஒரு சன்னியாசி. அந்தயோகம் சிறிது தவறிவிடவே அதனுல் சிவலோகத்தை யடைந்தனன். அப்பொழுது அந்தச்சந்நியாசி தனக்குத்தற்பொழுது சங்கரசிவனென்னும் பெயரமைந்திருப்பதையும், முன்னளில் பல ஜன்மங்களடைந்ததையும் ஆராயத் தொடங்கினன் :—

பூமியில் தானெடுத்த பிராமணன்முதலிய சரீரபேதங்கள் நூறென்றறிந்தனன். அதன்மேல் அவன், 'யான் முன்புகொண்ட வடிவுகளெல்லாம் உருத்திரராகக்கடவன' என்றனன். உடனே அவைகளும் சத (நூறு) உருத்திரர்களாய் சிவலோகம் நண்ணி வாழ்ந்தனர்.

இவ்விவரம், யோகவாசிட்டமென்ற நூலில் உரைக்கப்பட்டுள்ளதை நன்கறியலாமன்றோ! குற்றமற்றசாதனமாகிய யோகமார்க்கக் கொள்கை நிறைவேறுமற் குறையுற்றவர்கள் சடையையும் முக்கண்ணையும் நீலகண்டத்தையும் கபாலத்தையும்இடபத்தையும்பெற்றுச் சிவலோகத்தையடைந்து உகந்து வாழ்வார்கள்.

ஆகமமடந்தாய்! அக்கினியேந்தும செங்கையினனுகிய உங்கள் சிவபிரானுர் கொடுக்கின்ற சாலோக சாமீப சாரூப சாயுஜ்யமென்ற நால்வகை பதவிகட்கும் அழிவுண்டு. இவ்விஷயத்தை நானெடுத்தியம்ப வேண்டுமென்பதொன்றுண்டோ? உங்கள் தம்பிரானுர் திருவாக்கினுல் ஓதப்பட்டுள்ள ஆகமங்களெல்லாம் விளம்பாநிற்கும்.

இந்திரன் சந்திரன் சூரியன் முதலான தேவர்கள் தம்மை வழிபட்டார் யாவருக்கும் சாயுஜ்ய பதவியைக் கொடுப்பார்கள்; என்ற வரலாறு கடவல்லி முதற்பரிச்சந்தன்னில் உரைக்கப் பெற்றுள்ளது. அந்த முறைமைபோல உங்கள் சிவபெருமான் தன்னை வந்தனைசெய்திடும் அன்பருக்கு உகந்துகொடுக்கும் பதவிக்கு அழிவுண்டு. திருமால் பதம்போல அழிவற்ற பதமாகாது.

எத்தன்மையுடைய தேவர்களும் தம்மை யுபாசித்தாருக்குச் சாயுஜ்யபதவியைக் கொடுப்பார்கள். ஆனுல் அவர்களால் கொடுக்கப்பெற்ற பதவிகள் அவர்கள் ஒடுங்குகின்ற காலத்தில் அழிந்துவிடும். தாமொடுங்கத் தம்மன்பரை அழியாதிருக்கும்படி செய்யுஞ் சக்தி அவர்கட்கெங்ஙனமுண்டாகும்?

உங்கள் சிவபெருமானுக்கு நித்யத்வமுண்டென நீ நினைப்பதுந் தவருகும். உங்களுடைய சிவாகமத்திலே சிவனுருக்குத் தோற்றமொடுக்கமுண்டென் றுரைக்கப்பட்டுளது. அதனையும் இங்கு விரித்துரைப்பேன் :—

பிரகிருதி தத்வம் இருபத்து நான்கும், மாயாபுஞ்ச தத்வம் ஏழும் தோன்றிய அடைவே ஒடுங்கலுமுண்டு. சுத்த தத்துவமாகிய பஞ்சப் பிர்ம்மம், சுத்திவித்யேச்வரனி லொடுங்கும். வித்யேச்சுவரன் சதாசிவனி லொடுங்கும். சதாசிவன் சத்தியிலொடுங்கும். சத்தியும் பரமனுடன் ஐக்கியமாகும்.

தத்துவங்களெல்லாம் ஒடுங்கித் தன்னைச்சேர்ந்தபிறகு தனியே நின்று விளங்குகின்ற சோதிசொரூபனுகிய வஸ்துவிற்கு நிறம் குணம் நாமமொன்றுமில்லை என்று சிவாகமங்களெல்லாம் விரித்துரையா நின்றன. பிரளயத்தில் தனித்திருந்த இறைவன் நாராயணனெனறே வேதம் விளங்க எடுத்தியம்பியது. அதனையும் பின்னர் உன் மனதிற்பதியுமாறு சொல்லுவேன்.

இதுவரையும் சிவபூசையின் இயல்பின்னதென்பதும், சிவன் கொடுக்கின்ற வரமனைத்தும் நிலையற்றனவாமென்பதும், அவனுறைகின்றபதம் அநித்யமென்பதும், மகிமையாலுயர்ந்திடும் அந்தச் சிவனுக்குத் தோற்றமொடுக்க முண்டென்பதும் உன் மனந்தெளியுமாறுரைத்தேன்.

---

ச-வது, சிவநின்மாலிய மறுப்புப் பரிச்சேதம்.

ஆகம மடந்தாய்! சிவநிருமாலியத்தைச் சண்டேசுவரனே கொள்வதற்குரியவனென்றும், ஏனையோர்கள் பரிசுத்தரில்லாததினுல் அதனைக்கொள்வதற்கு அருகராகாரென்றும், இதற்கோர் பழுதுண்டு என்று கருதி உலகினர் கைவிட்டார்களில்லையென்றும் உரைத்தனை.

மடந்தாய்! நீ இங்குரைத்த சொற்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயன்றோ காணப்படுகின்றன. எவ்வாறெனின் ; கூறுகிறேன் :—சிவனுடைய பிரசாதத்தைச் சண்டேசுவரன் அருந்துகின்றுன் என்ற காரணத்தால் உலகமாந்தர்கள் அதனை நுகரலாகாதென்றுல் சண்டேசுவரன் சுத்தனில்லையென்றன்றோ கொள்ள வேண்டும். அந்தச்சண்டேசன் தூய்மையனென்றுல் அவனுடைய பிரசாதமும் திருமாலின் சேனைகாவலன் (விஷ்வக்சேனர்) நிவேதனம்

போல எல்லோருக்கும் அருகமாயிருக்கவேண்டுமென்றே! உலகில் சிவநிருமாலியத்தைக் கொள்கிறவழக்கமோ இல்லை. இது நிற்க, சிவநிருமாலியத்தைக் கொள்வதற்கு நிர்மலர் இவ்வுலகிலில்லையென் பது நிலையற்ற சொல்லல்லவா.

எட்டுவகையான சிவதீக்ஷையையும் முறையாகப் பெற்றுக் குற்றமற்ற ஒழுக்கத்தால் மிக்க பெரியோர்களும் சிவநிருமாலியத் தைக்கொள்வதற்கு நிர்மலராகாரென்றால் சிறந்த சிவபூசைசெய் வதற்குத்தான் சுத்தராவார்களோ?

இவையன்றிக் கஞ்சனூராழ்வான் இந்தச் சிவநிருமாலியப் பிரசங்கம் வந்தவிடத்தில் சங்கரார்ப்பணமான அன்னபானுதிக ளெல்லாம் அவனுடைய ராஜபுத்திரர்கட்குக் கொள்ளத்தகுமென்ற தாத்பரியத்தாற் கூறியுள்ளாராதலால் சிவநிருமாலியம் அவன் அன் பருக்கெல்லாம் கொள்ளலாகுமென்று கூறுவையேல், உங்கள் தெளிவுடைய சுப்பிரபேத ஆகமத்தில் நாற்பதாம் படலத்தில் ஆசிரி யன் மாணுக்கனைநோக்கி அறுசமயத்தை உபதேசித்துவருகிற விடத்தில் சிவநிருமாலியத்தைத் தொடலாகாதென்று தெளிவாக உரைத்துள்ளதினால் அந்தக் கஞ்சனூராழ்வான் ஆகமத்தை முன் பின் நன்காராய்ந்து பார்த்துப் பரிகரித்தனரில்லை. இத்திறமொரு புறமிருக்க, சிவபிரானுகர்ந்த நிருமாலியம் எல்லோரும் புஜிப்பதற் குரிமையுடையதாகாது. அதனைப்புஜித்தால் அது அதோகதியில் வீழ்த்தும் என்பதனை வரலாற்றுமுகத்தாற் கூறுகிறேன் கேட்பா யாக:—

---

சிவாந்நம் புசித்த மண்டூகத்தின் கதை.

காசியம்பதியில் கங்கைக்கரையிலுள்ள குற்றமற்ற ஒரு ஞானி யானவன் சிவபிரானை மிக்க அன்புடன் ஆராதனைசெய்து நிவேத னந்நம்வைத்த பாத்திரங்களைக் கழுவிவிட்டனன். அங்கு நீரிலுள்ள ஒரு தவளை அந்த அந்நத்தையுண்டு கொண்டிருந்தது. சிலகாலஞ் சென்றபிறகு அந்தத் தவளைக்கு முடிவுகாலம் கிட்டியது. அப் பொழுது தேவர்கள் ஆராய்ந்து, 'சிவாந்நத்தையுண்ட பாதகத்தை யுடைய இந்தத்தவளை தன்னிடத்தில் இறந்தவர்கட்கு முக்தியைக்

கொடுக்கும் பெருமையையுடைய இந்தக்காசியம்பதியில் மரிப்பதற்குத் தகுதியுடையதில்லை' என்று தீர்மானித்து ஒரு காகத்தை வருவித்து அந்தத்தவளையைக் காசிநகருக்கப்பாற்கொண்டு வீசிப் போடும்படி செய்தார்கள். இதனால் அந்தத் தவளை நற்கதியை யடையவில்லை. இவ்விஷயத்தைப் புகழினையுடைய சடாதரபுராணத்திலுள்ள காசிகாண்டம் நன்கெடுத்தியம்பியது. இது யாவருக்கும் கண்ட பாடமன்றோ!

சிவனுடைய நிருமாலியத்தைப் பார்ப்பதாலும் தொடுவதாலும் உண்டாகின்ற பாபம் * சசேலஸ்நாநஞ்செய்தால் நீங்குமென்றும், அந்த அந்நத்தை எள்ளளவேனுமுண்டாலும் அதனாலுண்டாகின்ற பாபத்தைச் சிலவிரதங்களை விதிமுறைப்படி அநுஷ்டித்து ஒழிக்கவேண்டுமென்றும் பிர்ம்மாண்ட புராணம் விரித்துரைத்தது.

சங்கரனுடைய நிருமாலியத்தைப் பரமார்த்தமாக நினைத்துண்டவனுக்குத் தர்ப்பகூர்ச்சத்தின் ஜலத்தை ஒரு மாதம் வரை விதி முறைப்படி நுகர்ந்தால் பாபநாசமாகுமென்று எல்லோருக்கும் சம்மதமாகப் பாஞ்ச ராத்திரத்திலுள்ள சுரசங்கிதை தொகுத்துரைத்தது.

சிவதீக்ஷைவிதிமுறையினால் சங்கரனைப் பூஜைசெய்பவருக்கும் சிவனுக்குச் சாத்திக்களைந்த புஷ்பத்தையும் சந்தனத்தையும் அந்நபாநாதிகளையும் மற்றுமுள்ள நிருமாலியமனைத்தையும் நுகருதலாகாது. அந்த நிருமாலியங்களைப் பூமியிற் புதைத்துவிடவேண்டும். இன்றேல் மணற்றடங்களிற் போட்டுவிடவேண்டும் என்று கந்த புராணம் யாவருக்கும் புலப்படும்படி எடுத்தியம்பியது.

பிர்ம்ம விஷ்ணு ருத்திரர் என்ற மும்மூர்த்திகளையும் பரத்துவ சோதனைசெய்த பிருகுமுனிவர் சிவனைத் தாமதகுணமுடையதெய்வ மென்றறிந்து அவனைநோக்கி, 'நீ நுகர்ந்த அந்நபாநாதிகள் எவருக்கும் அருகமாகாதொழியக்கடவன' என்ற சாபமும் சிவநிருமாலியத்திற்குளது.

* சசேலஸ்நாநமாவது:—கட்டியவுடையுடன் நீரில் முழுகிச் செய்யும் ஸ்நாநம்.

ஆதலால் சிவனுக்கு நிவேதனமான அன்னபானாதிகளெல்லாம் எவருக்கும் அருகமாகாதென்பதனை உங்கள் சிவாகமமுழுவதும், முனிவர் அந்தணர்களாதரித்த வேத புராணசாஸ்திரங்களும் பற்பலவிதமாகப் பகர்ந்துரைக்கும்.

சைவமோகனுகம மறுப்புப் படலம் முற்றும்.

---

## ௩-வது, வைதிக திருவாராதனைப் படலம்.



### க-வது, விட்டுணுபூசை வைபவப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! இதுவரையும் சிவநிருமாலியம் எவருக்கும் அருகமன்றென்பதையுஞ் சொன்னேன். இனி, விஷ்ணுவின் பூஜையே உலகத்திற் சிறந்ததென்பதும், அந்த விஷ்ணுவே அறம் பொருள் இன்பம் வீடென்ற நான்கு புருஷார்த்தங்களையும் உதவுவானென்பதும், அவனுகர்ந்த நிவேதனன்னந்தானே தேவர் முதலிய எவர்க்கும் முக்திக்கேதுவாகப் போக்கியமாகக்கொள்ளத்தக்கதென்பதும் உன்மனத்திற்பதியுமாறு தொகுத்துரைப்பேன். அவற்றிற்கு வேதம் புராணம் தருமசாஸ்திரம் முதலியவற்றிலிருந்தும் பலபிரமாணங்களு மெடுத்தியம்புகிறேன் :—

ஒப்புயர்வற்ற புண்ணிய சொரூபனை நாராயணனை மிக்க ஆதரவுடன் செய்கிற ஆராதனையே சிறந்ததாகுமென்றுரைத்த ருக்வேதம் இரண்டாம் அட்டகம் இரண்டாம் அத்தியாயம் இருபத்தைந்தாம் வர்க்கத்தில் நன்கு காணலாம். இவ்வாறு சொல்லிய தற்கிசைய புராணங்களும் இனிதுரையாநிற்கும்.

நான்முகனைப்படைத்த நாராயணனது பூசனை வைதிகமென்றும், தாந்திரிகமென்றும் இரண்டு வகைப்படும். இவற்றுள் வைகானச ஆராதனை வைதிகமாம். பாஞ்சராத்திர ஆராதனை தாந்திரிகமாகும். வைகானச பூஜை விகனசகுலத்திற்பிறந்த பிராமணர்களுக்கே உரியதாம். மற்ற அந்தணர்கள் தீக்ஷைபெற்றபிறகு வைதிகார்ச்சனை செய்தற்குரியவராவர். பாஞ்சராத்திர பூஜை மோக்ஷசாதனமாகும். வைதிகார்ச்சனை மறுமைப்பலன்களைக் கொடுக்கும்.

ஆதலால் கிராம முதலியவிடங்களில் வைகானசபூசனை செய்வது தான் விசேஷமாகுமென்ற விவரமெல்லாம் மச்சபுராணம் வகுத்துரைத்தது.

கூர்மபுராணத்து உபரிபாகத்தில்வியாசகீதையில் பதினெட்டாமத்தியாயத்தில் ஆராதனைக்கிரமம் சொல்லப்பட்டுள்ளன. அவை வருமாறு :—

நாராயணனுடைய ஆராதனமே வைதிகமாம். இந்த ஆராதனைக்கு ஒப்பாயிருப்பது பிறிதொன்றுமில்லை. இதனை முறையாகச் செய்தால் பரமபதம் ஸித்திக்கும். இந்த ஆராதனைக்குத் திருவஷ்டாக்ஷரமும், புருஷசூக்தமும் மந்திரங்களாம். நான்கு வேதத்திலும் இந்த மந்திரங்கட்கொப்பானவை இல்லை. இந்த மந்திரங்களால் அகண்ட பரிபூரணனாகிய பரமாத்மாவுக்கு ஆத்ம சமர்ப்பணஞ் செய்பவர்கள் எவர்களோ அவர்கள் ஜனனமரணத் துன்பங்களினின்றும் நீங்கி ஆனந்தமடைவார்கள்.

இந்த நாராயணனுடைய திருவாராதனை செய்வதற்கு முடியாதொழிந்தால் சிவனை மந்திரமுறையால் ஆராதிக்கத்தக்கது. இந்தப் பூஜையும் செய்யமுடியாதொழிந்தால் சூரியனையாவது அன்பால் உபாசனை செய்யவேண்டும். திருமாலை நீக்கி ஏனையோர்களை ஆராதிக்கும் ஆராதனமெல்லாம் மத்திம அதமங்களாம்.

ஆதலால் செங்கண்மாலின் ஆராதனையே சிறந்ததென்றும், இது வைதிகமாகுமாதலால் இதனினும் விசேஷமுடையது வேறொன்றுமில்லையென்றும், திருநாராயணனை யொழிந்த மற்றத் தேவாராதனமெல்லாம் மத்திம அதமங்களாமென்றும் நன்கெடுத்தியம்பினேன். இனித் திருமாலின் அர்ச்சனையினையும் உரைப்பேன் கேட்பாயாக :—

ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்துவம் வியூகம் விபவம் அந்தர்யாமித்துவம் அர்ச்சாவதாரம் என்ற ஐந்து நிலைகளுள்ளன. இந்த ஐந்துநிலைகளிலும் அன்பர்கள்செய்யும் ஆராதனைகளை ஏற்றுக்கொள்கிறான். பரமபதத்தில் பரவாசுதேவன் என்ற பெயருடையனாய் விளங்குகிறான். அண்டகோடிகளுக் குள்ளும்புறம்புமாய்

அகண்ட பரிபூரணனாய் எங்கும் வசிக்கிறானென்ற காரணத்தால் வாசுதேவனென்ற பெயர் வழங்கலாயிற்று.

அகிலாண்டங்கட்கெல்லாம் அப்பாலுள்ள பரமபதத்தில் நித்தியஸூரிகள் தியானிக்கும் காட்சியாராதனையைப் பரவாசுதேவன் ஏற்றுக்கொண்டிருக்கிறான். வியூகத்தில் வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்தியும்னன் அநுருத்தன் என்ற பெயரினையுடைய மூர்த்திகளாகி, அஷ்டாங்கயோகியரும் சனக சனந்தன சனத்குமாரர்களும் நித்யமுக்தர்களும் செய்யும் உபாசனைகளை உகந்தருள்வான்.

திருமால் உலகினர்கட்கு அருள்செய்யும் நிமித்தமாக அவதரித்தருளும் இராமகிருஷ்ணாத்யவதாரங்களே விபவமாகும். இந்த அவதாரங்களில் பிரகலாதர் நாரதர் பராசரர் புண்டரீகர் வியாசர் அம்பரீஷர் சௌனகர் வசிஷ்டர் பீஷ்மர் சுகர் விபீஷணன் அருச்சுனன் முதலான பரம பாகவதர்கள்செய்யும் பூசனைகளையுகந்தருள்வான்.

திருநெடுமால் பிர்மா முதல் * பிபீலிகாந்தமாகக் கணக்கற்ற ஜீவகோடிகட்கெல்லாம் அந்தராத்மாகவிருந்து ஞானாதிகரான சுகர் வாமதேவர் முதலான பரமயோகியர்செய்யும் ஆராதனையை ஏற்றுக்கொண்டிருக்கிறான்.

திருமால் சேதனரெல்லாம் ஈடேற § சுயம்பு விக்ரஹத்தையும், தேவர் முனிவர் மனிதர்களால் பிரதிஷ்டிக்கப்பெற்ற விக்ரஹத்தையும் விரும்பி எவரும் அன்புடன்செய்கிற ஆராதனை ஒன்றினைப் பத்து நூறாகக்கொண்டு உகந்தருள்வான்.

செங்கண்மாலின் பரத்துவம் முதலிய ஐந்து நிலைகளையும் பாஞ்சராத்திரம் என்ற நூல் செவ்வனே உரைத்தது. நான்குவகையான வாசுதேவாதி மூர்த்திகளே, வியூக முதலான நான்கு உபாஸனைக்கும் காரணமாவர். ‡ வைகானசசாஸ்திரம், முன்னுரைக்கப்

* பிபீலிகா—எறும்பு.

§ சுயம்பு—ஒருவரால் பிரதிஷ்டிக்கப்பெறாது தானே யுண்டாயது.

‡ வைகானசம்—விகனசமுனிவரால் செய்யப்பெற்றது.

பெற்ற பஞ்சமூர்த்திகளையே பரியாயப் பெயரால் பஞ்சமூர்த்திகளாமென்றுரைத்தது.

எங்கும்நிறைந்து அகண்டபரிபூரணமாயிருக்கின்ற ஸர்வேசுவரன் பரத்துவ முதலாக ஐந்துவகையாக அளவிட்டுச் சொல்வதற்கெளிதாயிருப்பானோ? என்ற சந்தேகமுண்டாக்கலாம். இதனை ஒழிப்பதற்காகவே யாவராலுங்கொண்டாடப்படுகிற நாராயணோபநிஷத்தானது அன்பர்கள் கொண்டாடி வழிபடுவதற்காக ஸர்வேசுவரன் பஞ்சமூர்த்தியாயு மிருப்பானென்றுரைத்தது.

உலககாரணனாய் தோஜோமயனாய் விபுவாய் பரிபூரணனாயிருக்கின்ற நாராயணன் தன்னியற்கைவிளையாட்டினால் உலகத்திலுள்ளவர்களை அநுக்கிரகிக்க நெகிழ்ச்சியாயுள்ள நெய்யானது கடினமாய் உரைந்துவிடுவதுபோல வடிவையுடையவனாயு மிருப்பான். இத்தகைய ஸர்வேசுவரனை ஆராதனைசெய்யும் பாக்கியம் எவருக்குமுண்டாகமாட்டாது. இதற்குத் தக்க காரணமெடுத்துரைப்பேன் கேட்பாயாக:—

சூரியனை இருபத்தொரு ஜன்மம்வரை அர்ச்சித்தால் சிவன் விஷயமான பக்தியுண்டாகும். இந்தச் சிவபக்தியுடன் ஏழு ஜன்மம் கழிந்தவுடன் வேதசாஸ்திர ஸம்பந்நனாய் விளங்குவான். இங்ஙனம் மூன்று ஜன்மம் கழிந்தவுடன் திருவளர்மார்பனாகிய எம்பெருமானிடத்தில் பக்தியுண்டாகும் என்று ஆதித்யபுராணம் இனிதெடுத்தியம்பியது.

யதுகுலத்தில் வாழ்ந்த உத்தவாசார்யரென்பவர் கண்ணபிரானைப் பணிந்து, 'பரமனே! தேவரீருடைய ஆராதனைக்கிரமத்தை அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும்' என்று வினவினர். அப்பொழுது கண்ணபிரான் சொல்லத்தொடங்கினன்:—

உத்தவ முனிவரே! என்னுடைய உபாஸனாபேதமுரைக்கிறேன்:—வைதிகம் தாந்திரிகம் வைதிகதாந்திரிகம் என்று மூன்று வகையாகப் பிரதிஷ்டிக்கப்பெற்ற விக்கிரகத்திலும், பிராமணர்களால் எண்ணப்படுகிற சூரியமண்டலத்திலும், கல்லிலும், மரத்திலும், உலோகத்திலும், சுதையிலும், படத்திலும், மணலிலும், மனத்திலும் என்னைநாட்டி அன்புடன் ஆராதிக்கவேண்டும்.

என்னை அர்ச்சிக்கின்ற அர்ச்சகன் நீராடி ஈரவஸ்திரத்துடன் நித்யாநுஷ்டானங்களைமுடித்து, கையிற்றரித்த பவித்திரத்தையுடையவனாய் விக்கிரகத்திற்கெதிராகக் கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனுமிருந்து திருமஞ்சனகும்பம் படிக்கம் சங்கம் முதலிய திருவாராதன பாத்திரங்களை மந்திர தீர்த்தத்தால் சோதிக்க வேண்டும். அதன்மேல் புஷ்பம் சந்தன முதலிய பூஜைக்குரிய திரவியங்களையும் தன் தேகத்தையும் மந்திர தீர்த்தத்தால் புரோக்ஷிக்கவேண்டும்.

அதன்பின்னர் அர்ச்சாவிக்கிரகத்தில் விதிப்படி ஆவாஹனமும், உபசாரமுஞ்செய்து, திருத்துழாய் தாமரைபுஷ்பம் முதலியவற்றால் சங்கு சக்ரம் வில் வாள் தண்டு என்ற பஞ்சாயுதங்களையும் கௌஸ்துவம் ஸ்ரீவத்ஸங்களையும் அர்ச்சிக்கவேண்டும்.

அதன்மேல் அனந்த கருட விஷ்வக்சேனரையும் சண்டன் பிரசண்டன் பலன் மஹாபலன் குமுதன் குமுதாக்ஷன் என்ற வாயிற் காப்பாளரையும், துர்க்கை கணேசர்களையும், திக்குபாலர்களையும் அவரவர்கட்குரியவிடங்களில் அர்ச்சிக்கவேண்டும்.

பின்னர், கர்ப்பக்கிரஹத்திலிருக்கிற முக்கிய விக்கிரகத்தைப் புருஷவித்தையாலும் புருஷசூக்த மஹாமந்திரத்தாலும் விதிமுறை தவறாமல் அர்ச்சித்து, ஹோமாக்கினியில் ஆவாகனஞ்செய்து நாராயண மந்திரத்தினால் ஆகுதியுஞ் செய்யவேண்டும். இந்த ஆராதனை முடிந்தபிறகு ஆலயத்தைச் சூழ்ந்திருக்கிற தேவதைகட்குப் பலி கொடுத்து இங்ஙனம் பலவகையாக என்னை மகிழ்விக்கவேண்டும்.

மேலும், எனக்கு நிவேதனமானவையெல்லாம் சேனைகாவலனாகிய விஷ்வக்சேனனுக்கு ஸமர்ப்பிக்கவேண்டும். துயரறுசுடரடிகளாகிய எனது திருவடிகளைச் சிரஸிலும் கண்ணிலும் சேர்வித்து, 'பிறவிக்கடலில் அழுந்துகிற என்னை ஈடேற்றுவாய்' என்று பிரார்த்தித்து, யான் விரும்பியளித்த மாலையைச்சூடி விதிமுறைப்படி வழிபடுபவன் எவனோ அவன் பெறுதற்கரிய பரமபதத்தையடைந்து அளவிலாநந்தத்தை அநுபவிப்பான்.

உத்தவரே! நீவிரும் பக்தியுடன் யான் இங்குரைத்தபடி ஆராதனைசெய்து நித்தியாநந்தத்தையடைவீர் என்றுரைத்தனன்; என்ற விவரம் பாகவதப பதினொராம் ஸ்கந்தம் இருபத்தேழாம் அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது.

தேவர் முனிவர் மனிதர்களனைவரும் வேள்வி முதலியவைகளிற் செய்யுட ஆராதனமெல்லாம் ஸ்ரீமந் நாராயணனைச்சார்ந்தனவாம். இந்தச் சிறந்த ஆராதனை விதிகளை ஒன்றரைக்கோடி கிரந்தத்தினையுடைய பாஞ்சராததிரமும், அளவற்ற வைகானசமும் விரித்துரைத்தன. அம்முறைகளையுரைக்கப்புகின் மிகவும விரியும். இஃதொருபுறமிருக்க, இனி நான்குவகையான புருஷார்த்த சித்திகளையும் உகந்தளிப்பானும் ஸ்ரீமந்நாராயணன் என்பதை விரித்துரைப்பேன் கருத்துடன் கேட்பாயாக.—

---

## உ-வது, சதுர்வித புருடார்த்தப் பரிச்சேதம்.

எல்லா வேதங்களும் முத்திப்பேற்றையருளுமவன் செங்கண் மாலே என்றுரைக்கின்றனவென்று கடவல்லி கூறுநின்றது. நாராயணோபநிஷத்தின் உத்தரபாகமும, அழியாப்பேற்றைப் பெறுதற்கு ஆராதனை செய்தற்குரியவன் திருமாலே என்றுரையாநின்றது.

நிலையான முக்திப்பேற்றைப் பெறுதற்குத் திருமாலின் தியானத்தைத் தவிர வேறுவழியில்லையென்று புருஷசூக்தம் மொழிந்தது. இன்னும் பல வேதசாகைகளும் முக்தியையருளுமவன் முகுந்தனே என்று விளம்புகின்றன. இங்ஙனமுரைக்கின்றவையெல்லாம் எண்ணிச் சொல்வதற்கெளியனவாமோ?

வேதங்களை நன்கறிந்த மார்க்கண்டன் உங்கள் சிவனுடைய அநுக்ரஹத்தால் நித்தியமாகவிருக்கும் வரத்தைப்பெற்று மகிழ்ந்து அதன்மேல் அவன் சிவபிரானைநோக்கி, 'தேவதேவா! இனி அடியேற்கு முக்திப்பேற்றை யளித்தருளவேண்டும்' என்று வேண்டினன். அப்பொழுது சிவன், அன்ப! முக்தியை யுகந்தளிப்பவன் ஸ்ரீமந்நாராயணனே யாவன்' என்று மொழிந்தனன். அதன்மேல்

மார்க்கண்டன் சுவேதகிரியிலிருந்து பன்னெடுநாள் சீயப்பதியைக் குறித்துத் தவஞ்செய்தனன். அவ்வெம்பெருமானும் இவனது தவத்திற்கிரங்கி முத்தி நல்கினனென்று மார்க்கண்டனுரைத்த புராணம் நன்கெடுத்தியம்பியது.

அரியின் திருநாமம் செவியிற் படலாகாதென்று மணி கட்டிக்கொண்டு திரிந்த கண்டாகர்ணன் சிவனை நோக்கி 'முத்திப் பேற்றைத் தந்தருளவேண்டும்' என்று வேண்டிய காலத்தில், சிவன் 'முத்திப்பேற்றை யளிப்பவன் முகுந்தனே' என்றுரைத்தனன் என்ற விஷயம் முன்னரே விரித்துரைத்தேன்.

ஒப்புயர்வற்ற செங்கண்மாலை விட்டுப் பிறதெய்வங்களை யடைந்து முத்திப்பேற்றை விரும்புகின்றவர், மிக்க விடாய் கொண்டவன் பெருகிவருகிற கங்கையின் நீரருந்தாமல் அக்கரையிடத்துக் கிணறு தோண்டி நீரருந்த இச்சிப்பவனை ஒப்பர். அழிவற்ற முத்திப்பேற்றையடைய அரியை விட்டு அன்னிய தெய்வங்களை யடைபவர், குளிரால் வருந்தி அக்குளிர்நோயை அகற்றிக்கொள்ள விரும்பி மின்மினியைக்கண்டு அக்கினியென மயங்கியவர்போலாவர்.

* காணாத முதலிய பல நூல்களைக் கற்றுக் கரைகண்டபோதும் திருமாலின் தியானமில்லாதபோது சிறந்த முத்திப் பேற்றை யடையமாட்டார்களென்று சாங்கியம் சாருவாகம் என்ற நூல்கள் உள்ளவாறெடுத்தியம்பின.

மழுவாளிநாலுமறையாளிவானவரையாளியென்றுமிவரால்
அழியாதபேறுகிடையாதுநாகவணைமீதுமேவுமவனே
ஒழியாதவின்பமிகுமுத்திநல்குமொருதெய்வமென்னுமுறவால்
நழுவாதவாய்மைநெறிகிங்கரர்க்குநமனுர்மொழிந்தமொழியும்

சிவன் பிரமன் இந்திரன் என்ற இவர்களால் அழிவற்ற முத்திப்பேறு கிடையாது. திருவநந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் அச்சுதனுடைய அநுக்ரஹத்தால் அழிவற்ற முத்திப்பேறுண்டாகுமென்று யமதருமன் கிங்கரர்களை நோக்கி மொழிந்தனன்.

---

* காணாதம்—கணாதமுனிவராலியற்றிய தருக்க நூல்.

துரும்பு முதல் பிரமன் முடிவாகவுள்ள சராசரப் பொருள்களெல்லாம் தன் மாயையில் மயங்கும்படி செய்யவல்ல திருமாலை நன்கறிபவர் தேவர்களாலும் பெறுதற்கரிய பதவியைப்பெற்று நித்தியானந்தத்தை யநுபவிப்பார்களென்று நரசிங்க புராணம் ஒன்பதாம் அத்தியாயம் இனிதெடுத்தியம்பியது.

சிறையிலகப்பட்டிருப்பவர் மற்றொருவனைச் சிறையினின்றும் விடுவிக்கமாட்டார்கள். அதுபோல வேதங்களாற் சொல்லப்பட்ட திருமாலாகிய இறைவனைவிட்டு, அவ்விறைவனது மாயவலையிலகப்பட்டிருக்கிற அன்னிய தெய்வங்களை வணங்கினால் அத்தெய்வங்கள் தம்மை வழிபட்டவர்களைப் பந்தத்தினின்றும் விடுவிக்க மாட்டா; என்று இதிகாசம் இயம்பியது.

சிவன் பார்வதியை நோக்கி, 'அந்தணர் முதலிய நான்கு வருணத்தாரும், பெண்களும், மற்றவர்களும் அரியின் பக்தியால் அழிவற்ற முக்தியடைவார்கள். இந்தப் பக்தியில்லாதபோது இவர்கள் முக்தியடையமாட்டார்கள்' என்றுரைத்தனன். இந்த விவரத்தைப் பத்ம புராணத்திலும் விஷ்ணு புராணத்திலும் விரிவாகக் காணலாம்.

துறவிகட்கும் குற்றமற்றவர்கட்கும் முத்திபெற்றவர்கட்கும் ஒப்பற்ற இன்பத்தையளிக்க வல்லவன் அலர்மேல்மங்கை மார்பினனாகிய அரியேயாவானென்று கந்தபுராணம் விரித்துரைத்தது.

ஜனன மரணங்களாகிய கடலில் முழுகி மிகவும் வருந்துகின்றவர்களைக் கரையேற்றுவிக்க வல்லவன் 'என்னையன்றிப் பிறரொருவருமில்லை' என்று கண்ணபிரான் அர்ச்சுனனை நோக்கி அருளினானென்ற விவரத்தைக் கீதையிற் காணலாம்.

எல்லாவற்றையும் திருமாலுக்குச் சமர்ப்பணஞ் செய்கின்ற சிறந்த ஒழுக்கமுடைய மேதாவிகள் மூன்று லோகங்களிலும் ஜயமுடையவர்களாய் விளங்குவார்கள். இஃதல்லாமலும் இவர்கட்குக் கொடிய போர்க்களத்தில் தோல்வியுண்டாக மாட்டாது. முக்திப் பேற்றையுமடைவார்கள் என்று வராக புராணத்திற் சொல்லப்பட்டுளது.

தக்ஷன் செய்த வேள்வியிடத்துச் சிவனால் அவமானமடைந்த சந்திரன், அவ்வரனுடைய செஞ்சடைமேலிருக்குமாறு தவஞ் செய்ய, அத்தவத்திற்கிரங்கி வரமளித்தவன் மாதவனாகிய இறைவனேயென்று நாரதீய புராணம் நவிலாநின்றது.

ஆரோக்கியத்தை விரும்புகின்றவர்கள் சூரியனிடத்திலும், செல்வத்தை இச்சிக்கின்றவர்கள் அக்கினிதேவன்பாலும், ஞானத்தைக்கோருகின்றவர்கள் சிவனிடத்திலும், முத்திப்பேற்றை நாடுகின்றவர்கள் முகுந்தனிடத்திலும், பெறுகின்றார்களென்று பிரமபுராணம் புகலாநின்றது.

அரசன் உலகத்தைப் பரிபாலனஞ்செய்வான், பெற்ற தந்தை மைந்தனைப் பாதுகாப்பான். மாந்தரை அவர் செய்த தருமம் பரிபாலனஞ்செய்யும். அவைபோலச் சராசரப் பொருள்களையெல்லாம் பாதுகாத்து முத்திகொடுக்க வல்லவன் அரியேயாவானென்று விஷ்ணுதருமம் விரித்துரைத்தது.

தர்மா தர்மங்களாகிய நீர்ப்பெருக்கும் துன்பமாகிய சுழியும், ஆராய்ச்சி யின்மையாகிய துறையும், கோபமாகிய சேறும், லோபமாகிய குமிழும், குழந்தைகளாகிய முதலை வகைகளும், அறிவீனமாகிய அகலிடமும், ஸத்துவகுணமாகிய மரக்கலமும் ஆகிய இவற்றிற் பொருந்தி அளவற்ற § பவசாகரத்தில் மூழ்குகின்றவர்களைக் கரையேற்றி முத்திப்பேற்றைக் கொடுப்பான் முகுந்தனுவான். கிடைத்தற்கரிய இரத்தினமலை யேறினவர்கள் விரும்பிய இரத்தினங்களை விருப்புடன் வாரிக்கொண்டு செல்வதுபோல நாராயணனை அன்பர்கள் விரதோபவாசங்களால் மகிழும்படிசெய்து வேண்டிய புருடார்த்தங்களைப் பெறுகின்றனர். எரிகின்ற அக்கினி ஒன்றே குளிரையகற்றுதற்கும் இருளையோட்டுதற்கும் உணவுப்பொருளைப் பாகஞ்செய்தற்கும் உபகாரமாயிருப்பதுபோலப் பரவஸ்துவாகிய அரியொருவனே அன்பர்கள் அறம் பொருள் இன்பம் வீடென்ற நான்கு உறுதிப் பொருள்களையும் பெறுதற்கு உபகாரமாயிருப்பான்.

---

§ பவசாகரம்=பிறவிக்கடல்.

இலக்குமிநாதனை இடைவிடாது தியானித்து வாழ்கின்ற அன்பர்களைக் கண்டு லோபம் மோக முதலிய கெட்ட குணங்களாலும் கொடிய ஒழுக்கத்தாலும் விளைந்த மாமேருபோலடர்ந்த பாபம் சாம்பலாகும். * அபிசாரமும் விலகிப்போம். பூதபைசாசங்களும் அவர்களைப் பீடிக்கமாட்டா.

விஷ்ணுவின் அம்சமாகிய தத்தாதிரேயரைக் கார்த்தவீர்யார்ச்சுனன் அடைந்து விரும்பிய பயனனைத்தையும் பெற்றான். நகுஷன் முற்கலன் தர்மபரிபாலன் சுமதிஞ்சயன் முதலானவர்கள் அரியிடத்தில் அன்புகொண்டு சிறந்த பலனைப் பெற்றார்கள். இஃதல்லாமலும் நகுஷன் பல வேள்விசெய்து இந்திர பதவியையும் பெற்றான். இவ்விவரத்தை நாரதீயத்திலும் விஷ்ணு தருமம் அறுபதாம் அத்தியாயந் தொடங்கி எழுபத்தெட்டாம் அத்தியாயம் வரையிலும் காணலாம்.

இந்திரன் பிரமன் ருத்திரன் என்ற இவர்கள் தத்தம் பதவியைத் திருமாலிடத்திற் பெற்று வாழ்கின்றார்கள். அந்த அரியின் திருவடியைப் பேணுவார் ஒப்புயர்வற்ற முத்திப்பேற்றைப் பெறுவார்களென்று பாரதத்திலுள்ள ஆநுசாசனபருவம் எடுத்தியம்பியது.

பரம்பொருளாகிய பத்மநாபனே அழியாத முத்திப்பேற்றையளிக்குமாற்றலுடையவனாவான். ஏனைய பிரமன் முதலான தேவர்கள் சாமானிய புருஷார்த்தங்களைக் கொடுக்கும் பெற்றியராவர்; என்று மோக்ஷதருமம் நன்கெடுத்தோதியது. இவ்வாறே பல நூல்களும் ஓதுகின்றமையால் திருவாழியேந்திய திருமாலே நான்கு வகையான உறுதிப் பொருளை யளிப்பானென்பதில் ஐயமில்லையன்றே!

---

* அபிசாரம்—ஒருவனைக் கொல்வதற்காக அதர்வண வேதத்திற் சொல்லிய மந்திர தந்திரங்களாற் செய்யப்படுகிற சேனயாக முதலிய கர்மம். இது, மாரணம் மோஹனம் உச்சாடனம் வித்வேஷணம் ஸ்தம்பநம் வசீகரணம் என்று ஆறு வகைப்படும்.

## ரு-வது, பரமபத பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! இதுவரை நான்குவகையான புருஷார்த்தங்களை அன்பருக்கு உகந்தளிப்பவன் அச்சுதனே யாவன் என்பதற்கு வேதபுராண முதலிய சாஸ்திரங்களிலிருந்து பல பிரமாணங்கள் எடுத்தியம்பினேன். இவையெல்லாம் ஒருபுறமிருக்க, ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கின்ற உலகமே எல்லாவுலகங்கட்கும் சிறந்ததாகும். இது பரமபதம் அப்ராகிருதம் தெளிவிசும்பு முதலான பெயர்களால் வழங்கப்பெறும். இந்த உலகத்தில் நித்தியஸூரிகள் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்திப் பரமானந்தமடைகின்றூர்கள். இது, அளவற்ற மகிமையுடையது. இத்தகைய சிறப்புடையதென்பதற்குப் பல பிரமாணங்களுள. அவற்றையும் இங்கெடுத்தியம்புகிறேன்.—

அரவணையில் துயிலும் ஆதியம்பகவன் மகிழ்ந்துறையும் பரமபதமே உலகங்கட்கெல்லாம் சிறந்ததாகுமென்பதனை ருக்கு வேதம் முதல் அட்டகம் இரண்டாமத்தியாயத்திலுள்ள ஏழாம் வருக்கமினிதெடுத்தியம்பும்.

உலகமனைத்தையும் தன்னுடைய மாயையால் மயக்குமாதவன் மகிழ்வுற்றெழுந்தருளியிருக்கிற உலகமே பரமபதமென்ற பெயரான் வழங்கப்பெறுமென்று ருக்குவேதத்தில் ஏழாமட்டகத்தில் ஐந்தாமத்தியாயத்திலுள்ள இருபத்தெட்டாம் வருக்கத்திறுதி எடுத்தோதியது. நித்யஸூரிகள் ஸேவிக்க அருள்சுரந்து அவர்களோடு பரமாநந்தமுடன் எழுந்தருளியிருக்கின்ற பரந்தாமன் வாழும்பதமே பரமபதமாமென்று எசுர்வேதத்தில் முதற்காண்டத்தில் மூன்றும் பருச்சத்திலுள்ள ஆறுமநுவாகம் நன்கெடுத்திசைத்தது. இது அந்தணரனைவருக்கும் மனப்பாடமாயிருப்பதொன்றும்.

பரமஞானிகள் பாசமனைத்தையுமறுத்துப் பிரகிருதி மண்டலத்திற்கப்பாலுள்ள செங்கண்மால் உலகையடைந்து செழிப்புற்று நித்தியமாக வாழ்வார்களென்று எசுர் வேதத்தில் இரண்டாம் காண்டத்திலுள்ள இறுதி யநுவாகம் இனிதெடுத்தியம்பும். பீதகவாடைப்பிரான் எழுந்தருளியிருக்கிற உலகம் பரமவியோம

மென்ற பெயரான் அழைக்கப்பெறுமென்று எசுர் வேதசாகை இரண்டாம் அட்டகத்தின் தொடக்கப்பருச்சம் நன்கெடுத் திசைத்தது. திருமால் சிறப்புடன் உறையும் பதமே பரமபதமா மென்று உத்தரநாராயண புருடசூக்தம் உரையாநிற்கும்.

சிறந்த ஞானியர் பாபத்தொடரறுத்து முத்தராய்ச்செல் வார்க்கு வழியாயிருப்பதாகிய விஷ்ணுவின் பதமே பரமபதமா மென்று சாம வேதத்தில் உத்தர விருக்கில் இரண்டாம் காண்டத்தி லுள்ள பதினெட்டா மத்தியாயம் தெளிவா யெடுத்தியம்பியது. செங்கண்மால் எழுந்தருளியிருக்கிற உலகமாகிய பரம வியோகமே எக்காலத்திலும் அழியாதிருக்கின்ற சிறந்த உலகமாமென்று நாரா யணோபநிடதத்திலுள்ள முதலநுவாக மெடுத்தோதியது இங்ஙனங் கூறிய மறைப்பொருள்கட்கெல்லாம் பொருத்தமாகப் பாஞ்சராத் திரமென்ற பகவச்சாஸ்திரமும் திருமால் இனிது வாழும் பதமா னது பிரகிருதி மண்டலத்திற்கப்பாலுள்ளதா மென்றுரைத்தது.

அண்டகோளகைக்கப்பால் ஜலதத்துவமும் அதன்மேல் அக்னி தத்துவமும், அதற்கப்பால் வாயு தத்துவமும, அதன்மேல் ஆகாச தத்துவமும் அதன்மேல் அஹங்கார தத்துவமும், அதற்கப்பால் புத்தி ததததுவமும், அதற்கப்பால் அவ்யக்த தத்துவமும் அதற்கு மேல் உலக காரணனும் ஒப்புயர்வற்றவனுமிருக்கிற ஸ்ரீமந் நாரா யணன் எழுந்தருளியிருக்கின்ற பரமபதமுளதென்று பாஞ்சராத் திரத்திலுள்ள பரம சங்கிதை பகராநின்றது.

கருடவாகனனாகிய கருணையங் கடவுளிற்கு நிவாசமாயிருக் கின்ற உலகம் குற்றமொன்றுமில்லாததாய், புத்தி தத்துவத்திற்கு மேலாய், குறைவற நிறைந்த கொள்கையதாய், கிட்டுதற்கரியதாய், நித்தியமாய், பரமாநந்தமாயிருக்கும் தெளிவிசும்பாமென்று இராம காதையாகிய வால்மீகி ராமாயணத்திலுள்ள ஆரணிய காண்டம் அறையாநின்றது.

ஸ்ரீ வைகுண்டமென்ற சிறந்த பெயருடைய பரமபதத்தில் பெரியபிராட்டியாருடன் கூடி நித்திய முக்தர்கள் ஸேவிக்க அச்சு தனாகிய அமலன் முடிவற்ற பரமாநந்தத்துடன் எழுந்தருளியிருக் கிறானென்று சைவபுராணம் சாற்றியது.

கண்ணபிரான் அர்ச்சுனனை நோக்கி, 'என்னைப் பரம்பொருளென்றறிந்து என்னையுபாஸனை செய்து என்னருள்பெற்று என்னுடைய புனித லோகமாகிய பரமபதமடைந்தவர்கள் மறுபடியுமிவ்வுலகில் வந்து பிறவார்க' ளென்று அருளிச்செய்தான். இவ் விவரத்தைப் பகவத்கீதையிற் காணலாம்.

ஆகமமடந்தாய்! பற்பநாபன் வதியும் பதமே பரமபதமாம் என்பதற்கு வேத முதலிய பிரமாணங்களெடுத்தியம்பினேன். இனி அந்தத் திருமாலுக்கு நிவேதனமான அன்னபானாதிகளே முக்திக் கேதுவா மெனபதற்குப் பல பிரமாணங்களுள. அவற்றையுமெடுத்திசைப்பேன். கேட்பாயாக.—

---

ச-வது, தீர்த்தப் பிரசாத வைபவப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! ஸ்ரீமந் நாராயணனுக்கு நிவேதனம் செய்த பிரசாதத்தை அன்புடன் உட்கொள்வாரெல்லாம் அவ்வெம்பெருமானை யடைந்து நித்யாநந்தமுடன் நிலைபெறுவாரென்று ருக்கு வேதம் இரண்டாம் அட்டகம் இரண்டாம் அத்தியாயத்திலுள்ள இருபத்துநான்காம் வர்க்கம் இனிதெடுத்தியம்பியது.

திருமாலாகிய எம்பெருமானுக்குச் சாத்திக் களைந்த புஷ்பம் திருப்பரியட்டம் குங்குமம் சந்தனம் பிரசாதம் ஸ்ரீபாத தீர்த்தங்களை உகந்தவர்கள் அழிவற்ற பரமபதமடைந்து இன்புறுவார்களென்று எசுர் வேதம எடுத்துரைத்தது. எம்பெருமானுக்கு நிவேதனஞ்செய்த பிரசாதத்தை அன்புடன் நுகர்வார் அளவிலாநந்தமுடைய அன்னவனது பரமபதத்தினை யடைவார்களென்று இந்த எசுர்வேதம் இரண்டாமட்டகம் நான்காம் பருச்சத்திலுள்ள ஆறும் அநுவாகம் நன்குரைத்தது.

ஸ்ரீய:பதியாகிய இறைவன் உகந்த பிரசாதத்தையுண்டு உடுத்த உடையையணிந்து அன்புடன் வாழ்வார் முத்தியடைவார்களென்று அதர்வண வேதம் அறையாநின்றது. மாதவனுகந்தருளிய திருவமுதை எதிர்சென்று சிரசாகவேற்று வாங்கி * பஞ்சாகுதி சமர்ப்பணாதிகள்செய்வது தக்கதாமென்று பாரத்வாசமிருதி பகாாநின்றது

விதிப்படி செய்யுமாராதனையில் திருமால் உகந்தருளிய அன்னமே பரிசுத்தமானது. மேலும் இந்த அமுதமே சுகத்தையும் சத்துவ குணத்தையும் சிறந்த ஞானத்தையும் தவப்பேற்றையுந் தரும்.

திருமால் உகந்தருளாத பரிசுத்தமில்லாத அன்னத்தை உட்கொண்டால் அது, ஆசை லோபம் பரதாரமோகம் பரபொருள் விருப்பம் கொலை மறப்பு நித்திரை முதலியவற்றை விளைக்குமென்று சாண்டில்யமிருதி சாற்றியது.

மனத்தில் திருமாலின் திருவுருவத்தியானமும், வாயில் அவன் நாமோச்சாரணமும், அவன் திருத்துழாய்த் தீர்த்தப்ரசாதமும் அவன் திருமுடியிலணிந்த திருமாலையும் அன்புடன் தரிக்க வல்லவர்கள் பரமபாகவதராவார்கள்.

திருமாலுகந்தருளிய அன்ன பானாதிகளைக் கொள்ளாமல் ஏதேனுமொன்றைக் கொள்பவன் தெய்வத்தன்மையுள்ள சிறந்த மணியைக் கைவிட்டுப் பரிசுத்தமில்லாத ஓட்டை ஒரு பொருளாக மதிக்கும குணக்கேடனோடு ஒப்பாவான்.

செங்கண்மாலிடத்தில் நீங்கா அன்புடையவர் சூத்திரராயினும் சூத்திரராகார். அவர் அந்தணாளராக்வும் பாகவதராகவும் மதிக்கப்படுவார். திருமாலிடத்தில் அன்பிலார் வேதியராயினும் அவர் சூத்திரரோடொப்பாரென்று பிரமாண்டபுராணம் விரித்துரைத்தது.

ஸ்ரீய: பதியாகிய இறைவன் உகந்து கழித்த திருமாலை சந்தனம் திருப்பரியட்டம் ஆபரணம் ஸ்ரீபாத தீர்த்தம் போனகம் என்ற இவையெல்லாம் அன்புடன் அங்கீகரிக்கின்றவர்கள் அவனது மாய வலையிற் படாமல் மாகவைகுந்தத்தில் மகிழ்வெய்துவர்; என்று பாகவதம் பரிந்துரைத்தது.

நாராயணன்றன் திருவுருவை மனத்தினினைந்து, அவன் திருநாமத்தை வாக்கினால் உச்சரித்துப் பிரசாதத்தையுண்டு தீர்த்தத்தைப் பருகி, சிரசில் தெளித்திடுவார் முத்திப்பேற்றை யடைந்து இன்புறுவாரென்று மிருதிசங்கிதை விரித்துரைத்தது.

மற்றத் தேவர்கள் புசித்த அன்னத்தை உட்கொள்ளாத மாந்தர்களிடத்தில் மாதவன் விருப்புற்றிருப்பன். அவ்வெம்பெருமான் உகந்தருளிய அமுதைப் புசிப்போர்க்குச் சாந்திராயண விரத பலமும் ஆயிரம் அசுவமேத பலமும் கைகூடும்.

ஸ்ரீமந்நாராயணன், 'என்னடியவராய் என்னையே புகழ்ந்து என்பொருட்டாக நிவேதித்து ஆத்மஸமர்ப்பணஞ்செய்கிற பாகவதர்கட்குச் சேனைகாவலனாகிய விஷ்வக்ஸேனர் அருட்பிரசாதமும் உட்கொள்ளுதல் விதியாம் என்றுரைத்தனன்' என்று பௌடிக புராணம் பகராநின்றது.

மாயனாகிய எம்பிரானுடைய பிரசாதத்தை உட்கொள்ளுதல், அவன் ஸ்ரீபாதம் விளக்கிய தீர்த்தத்தைப்பருகுதல், அதனைச்சிரசில் தெளித்தல் என்ற இவைகளில் ஒவ்வொன்றே எவ்வகையான பாதகங்களையும் அகற்றிவிடும். திருமாலின் திருவடியினின்றிழிந்த புண்ணிய கங்கையில் முழுகியவரனைவருக்கும் அக் கங்கையானது. அவர்களது வினைகளையெல்லா மகற்றுகிறது. தேவாதி தேவனான நாராயணன் ஸ்ரீபாததீர்த்தத் திவலையானது, தாபத்திரயத்தையு மகற்றுகிறது. ஒருவன் எழுகடல்களிலுஞ்சென்று முழுகினும் அந்தத் தாபம் அகலமாட்டா. மேலும், அநந்தமான பலத்தைக் கொடுப்பதும் அந்த ஸ்ரீபாததீர்த்தமே யாம். பிறிதொன்றும் இத்தகைய பலத்தைத் தரமாட்டா என்று சுகோதய நூல் விரித்துரைத்தது.

நால்வகை வருணத்திலுமுள்ள அன்பரானோர் நாராயணன் உகந்த போனகத்தையும், மாலையையும், ஸ்ரீபாதம் விளக்கிய தீர்த்தத்தையும் அன்போடேற்றுக் கொள்வரேல் அவர்கள் கொடிய பாதகங்களை யகற்றிய தபோதனராவார்கள்; என்று பரமேச்சுர சங்கிதை விளம்பும்.

செங்கண்மால் உகந்த பிரசாதத்தை யுண்டவர்க்கு ஆயிரம் இஷ்டியோம பலனும், ஆயிரம் வாஜபேய பலனும், ஆயிரம் அசுவமேத பலனும் உண்டாகுமென்று நாரதீயத்தில் விஷ்ணுதத்துவம் உரையாநிற்கும்.

நாராயணன் உகந்த பிரசாதத்தை ஒருவன் உகந்துகொடுக்கும் போது கொள்பவன் அதனை உகந்தேற்றுக்கொள்ளாமல் 'இன்று உபவாசம்' என்று கைக்கொள்ளாமல் விடுவானாகில், அவன் உண்ணுகின்றவையெல்லாம் சுராபானத்தோடொப்பாகுமென்று ஆரித ஸ்மிருதி அறையாநின்றது.

நாராயண விக்ரஹமில்லாத மனை மசானமாம். அவன் திருநாமத்தை ஓதிடா வாய்மொழி நரியின் ஊளையோடொப்பாம். அவ்வெம்பெருமான் உகந்திடாத உணவு நஞ்சாம். அவன்றனக்கடிமையாகாதார் திரிகின்ற பிணமாவர்.

பத்மநாபன் உகந்த அமுதை அருந்தினால் பாபநாசமாகும். இதர தேவதைகள் உகந்த அன்னத்தையுண்டால் பாதகமுண்டாம். அந்தப் பாதகத்தையகற்றிக்கொள்ள வேண்டுமானால், விதிப்படி சாந்திராயண விரதத்தை அநுஷ்டிக்கவேண்டும். மேலும், விஷ்ணுவின் உச்சிஷ்டத்தை இகழ்வானேல் அவன் நாயாகப் பிறப்பானென்று வசிஷ்ட சங்கிதை வகுத்துரைத்தது.

ஆடையாபரணம் சந்தனம் மாலை அன்னபானாதிகளெல்லாம் நாராயணனுக்கு நிவேதனஞ்செய்து அதன்பிறகு அவற்றைக் கொள்வதுதான் நீதியாகுமென்று சாத்துவிகசங்கிதை சாற்றும்.

ஒருகாலத்தில் முருகவேள் தன் பிதாவாகிய சிவபிரானை வணங்கி, 'தந்தாய்! உமது நிருமாலியங்களைத் தொடவுங்கூடாதென்றீர்; அதன்மேல் திருமால் உகந்தொழித்தவையெல்லாம் பவித்திரங்களாகுமென்றீர்; இதற்குக் காரணமென்னை?' என்று வினவினான். அப்பொழுது சிவபிரான் மைந்த! எனது நிருமாலியமெல்லாம் கொள்வதற்கு அருகமாகாவென்பதை வகுத்துரைக்கின்றேன்.—சைவபாசுபத சம்பிரதாய நிருமாலியங்களை எவரெவர் கொடுத்தனரோ? எவரெவர் கொண்டனரோ? அவ்வவரெல்லாம் பிறப்பிறப்பென்கிற படுகுழியிற் கவிழ்வார்கள்; நாராயணன் உகந்தொழித்தவையெல்லாம் எவர் அங்கீகரிக்காது விட்டனரோ? அவர் பாதகராவார்கள்; அந்த மாதவனுடைய பிரசாதத்தையுண்டவர்க்கு மேன்மேலும் புண்ணியம் வளரும்; அவர்களது

பாபமெல்லாம் நாசமாகும்; தானதருமங்களும் பெருகும்; சிறந்த பல வேள்விகளின் பலன் ஸித்திக்கும்' என றுரைத்தனன். இவ் விவரத்தை ஈசுவரசங்கிதையிற் காணலாம்.

ஆகம மடந்தாய்! மேலும் ஒரு கதை சொல்லுகிறேன்; கேட்பாயாக.—உமையவள் தன் கணவனுகிய சிவபிரானை நோக்கி, 'நாதா! திருமாலின் பிரசாதத்தின் உண்மையுரைத்தருளவேண்டும்' என்று வேண்டினள். அப்பொழுது சிவன் உகப்புடன் உமையை நோக்கி, நங்காய! யானுரைப்பதைக் கருத்துறக் கேட்பாயாக.— பாரளந்த பரமனுக்கு நிவேதனஞ்செய்தவையெல்லாம் பவித்திரமே யாகும். அவை அங்கீகரிக்கத் தக்கனவாம்; அகற்றிவிடலாகாது; அந்தப் பிரசாதத்தை நுகர்ந்தவர்கட்குத் திருவருள் மேன்மேலும் தழைக்கும்; விரதோபவாசங்களாலுண்டாகும் பலன்களெல்லா முண்டாகும். மற்றத் தேவகாரியமும், பிதுரர் காரியமும் செங்கண் மால் நிவேதனங்கொண்டு உலகிற் செய்திடில் அந்தப் புண்ணிய பலம் தவறாது கிடைக்கும்; திருமால் நிவேதனத்தினுல் பிண்டவிதி முறை செய்த வைதிக கருமம், பிதுரரெல்லாம் எப்பொழுதும் ஆநந்தமுறும்படி செய்யும்; சாளக்கிராம தீர்த்தத்திற் சிறு துளி நுகர்ந்தால், அப்பயனுல் அவன் பின் அன்னை வயிற்றிற் பிறந்து துன்புறாமல் பரமபதமடைவான்; திருமால் ஸ்ரீபாததீர்த்தமானது, பாதகமாகிய பெரிய வாளால் சின்னபின்னமாகாதவண்ணம் தேகத் திற்பொருந்தியிருக்கும் வச்சிரகவசம் போல்வதாகும்; திருமாலின் ஸ்ரீபாததீர்த்தத்தை யருந்தியவர்க்கு அதனுலுண்டாகும் பலன் அளவிடலாகுமோ? அந்தப் பலனுக்குப் பஞ்சகவ்யபாந விரதபல னுயிரமும் ஒப்பாகமாட்டா. குருக்ஷேத்திரம், கேதாரம், கங்கா சாகரத்துறை, நீலகிரி, சிலாவருத்தம் முதலிய திவ்விய க்ஷேத்திரங் களிற்சென்று தீர்த்தமாடிய பலன்களெல்லாம் திருமாலின் ஸ்ரீபாத தீர்த்தபாநத்தாலுண்டாகும்.

இராயசூயம், அசுவமேதம், பௌண்டரீகம் முதலிய யாகங் களாலுண்டாகும் பலன்களனைத்தும் செங்கண்மாலின் ஸ்ரீபாத தீர்த்தபாநத்தால் தவறாது ஸித்திக்கும்; மரிக்கின்ற காலத்தில் ஸ்ரீமந்நாராயணனது ஸ்ரீபாததீர்த்தத்தை உட்கொள்வரேல், அவர்

புனிதராய் விளங்குவர் ; தீயவழியிற் சென்றவர்களும், உண்ணத் தகாதவைகளை யுட்கொண்டவர்களும், மதுபானத்தவரும் ஆகிய இவர்கள் நெடுநாட்செய்த பாபமெல்லாம், திருமால் திருவடி விளக்கிய தீர்த்தபானத்தால் ஒரு கணப்பொழுதில் நாசமாகும். பஞ்சகவ்வியபாந விரதத்தையும், பராக முதலான பிராயச்சித்த விதிகளையும் அநுஷ்டிப்பதைக் காட்டிலும், திருமாலது ஸ்ரீபாத தீர்த்தத்தை விரும்பி ஆதரிப்பது விசேடமாகுமென்று விரித்துரைத்தன. இவ்விவரத்தைப் பிரமகைவர்த்தத்தில் விரிவாய்க் காணலாம்.

செங்கண்மாலிற்கு நிவேதனமான அன்னத்தால் பிராணன் முதலான * ஐந்திற்கும் விதிப்படி ஆகுதி செய்வரேல், அவர் திடமான பலனைப் பெறுவரென்று பாண்டவர்காதை யோககாண்டத்திற் சொல்லப்பட்டுளது.

அந்தணர்கள் வேள்வியிடத்துச் சோமபாநஞ் செய்வதுபோல நாராயணனுக்கு நிவேதனமான அன்னத்தை நுகர்ந்தவர்கள் சுத்த ஆசமனஞ் செய்யவேண்டியதில்லை ; என்று வராக புராணம் வகுத்துரைத்தது.

திருமாலிற்கு நிவேதனமான போனகம் பவித்திரமாயிருப்பதாலன்றோ, திருமால் திருவாராதன முடிந்தபின் அர்ச்சகன் கொடுக்கின்ற பலியை, மஹாபலியும் அம்பரீஷனும் அக்குரூரனும் பீஷ்மனும் விபீஷணனும் ஜனகனும் சேனைகாவலனும் சிவனும் உகந்தாதரிப்பார்கள்.

இங்ஙனமுரைத்தற்குப் பிரமாணம் பாரத்வாச சங்கிதையிற் காணலாம். இந்தச் சங்கிதையிற் குறிப்பிட்ட பிரமாண சுலோகமும் பொருளும் உலககாரணனாகிய நாராயணனை அன்பினால் அர்ச்சனை செய்கின்ற மாயாவாதியர்க்கும் அந்தணர்க்கும் அநுஷ்டானமாகும்.

---

* ஐந்தாகுதியாவன.—பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து பிராணனுக்குச் செய்யும் ஆகுதியாம்.

ரு-வது, வேதவியாதர் சத்தியப் பரிச்சேதம்.

இவ்வாறு உரைக்கவேண்டியவை யனைத்தையும் முறைபிறழா மல் எடுத்திசைத்த ஆரணவல்லி மேலும் சொல்லத் தொடங் கினாள்.— ஆகமமடந்தாய்! திருமாலின் அடையாளமாக விளங்கு கின்ற புண்ட்ரமே வேதத்தால் விதிக்கப்பட்ட புண்ட்ரமாம். ஆதலால் அன்போடு எல்லோரும் தரித்தற்குரியது இப்புண்ட்ரமே யாகும். மேலும் திருமாலின் சக்கரக்குறி தரிப்பதும் யாவர்க்கும் உரியதே. இங்ஙனம் தரித்துக்கொள்ளவேண்டும் என்று விதிக்கப் பட்டுளது. திருவெட்டெழுத்தே வைதிக மந்திரமாம். திருமாலின் ஆராதனையே எல்லாப் பலன்களையும் அளித்திடும். ஸ்ரீமந்நாராய ணன் உகந்து வாழ்கின்ற பதமே பரமபதமாகும். அவன்றன் ஸ்ரீபாததீர்த்தமே பரமபவித்திரமாம்; என்ற இவ்விவரமனைத்தை யும் வேதபுராணாதி சாஸ்திரங்கள் நிச்சயித்திருப்பதாலன்றோ வேதவியாசமுனிவர், 'வேதாதி சாஸ்திரங்களை மீளவும் மீளவும் பரிசோதனை செய்தேன்; ஒரு பொருளே சிறந்த நற்பொருளாக விளங்குகிறது; அப்பொருளே ஸ்ரீமந்நாராயணனாகிய பரம்பொரு ளாம்; இப்பரம்பொருளாகிய இறைவனைத் தியானஞ்செய்வதே தக்கது' என்றுரைத்து, இவ்வுலகத்திலுள்ளார் யாவருங் கண்டு தெளிவடைய தமது வலது கையை உயர்த்தி ஸத்தியஞ் செய்யத் தொடங்கினர்.—

* 'வேதத்தின் மிக்கதொரு சாஸ்திரமில்லை; கேசவனின் மிக்க தொரு தெய்வமில்லை' என்று மும்முறை கூறினர். இவ்விவரத் தைப் பிரமாண்ட புராணத்திலும் மகாபாரதத்திலும் தெளிவாகக் காணலாம்.

இதனைக்கேட்ட ஆகமவல்லி, உத்தரஞ்சொல்லத் தொடங் கினாள்.— ஆரணமடந்தாய்! வேதவியாசர் இப்படி அசத்தியம் சொன்னதனாலன்றோ அவர் கைதம்பித்துவிட்டது; என்று உலக

---

* "ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்த்ருத்ய புஜமுச்யதே
வேதஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி நதைவம் கேஶவாத் பரம்"

முரைக்கின்றதே; இதனை நீ அறிந்திலைபோலும். இதற்குக் காரண மென்னை? இயம்புவாய்; என்று வினவினள்.

அதன்பிறகு ஆரணவல்லி சொல்லத் தொடங்கினள்.— மடந்தாய்! சைவசமயத்தினர் மாச்சர்யத்தால் சூதசங்கிதை என்று ஒரு கற்பனை கதையைச் சொல்லியதுபோல இதுவும் பொறாமையாற் சொன்னார்களேயன்றி வேறில்லை. இதனை உன் மனந்தெளிவுறுமாறு எடுத்தியம்புவேன்.—

இதுவரை யான் வேத முதலியவற்றைப் பிரமாணமாகக் கொண்டு அரியே பரதத்துவம் என்று சொல்லி வந்தேன். இப்பொருளையே வியாசர் முன்புரைத்தனர். இவரே வேதமனைத்தையும் வகுத்தாராய்ந்தனர். இத்தகைய வியாசருக்குக் கைதம்பித்ததென்பது பொய்யென்று விளங்கவில்லையா?

ஆகமமடந்தாய்! நீ கூறியபடி வேதவியாசருக்குக் கைதம்பித்ததென்பது உண்மையாகுமென்று ஒப்புக்கொள்வோமானல், அரியே பரனென்றிசைக்கும் வேத புருஷனுக்கும், பாரதாதி நூல்களில் 'திருமாலே பரனுவான்' என்றுரைத்த உங்கள் உமாபதிக்கும், அங்ஙனமே பிரமாண்ட புராண முதலிய நூல்களிற் கூறிய பிரமதேவனுக்கும், அவ்வாறே விஷ்ணு புராணத்திலுரைத்த பராசரமுனிவருக்கும், அப்படியே செப்பிய பாகவதமுரைத்திடும் சுகப்பிரமரிஷிக்கும், அங்ஙனமேயறைந்த நாரதீய புராணங்கண்ட நாரதருக்கும், மேலும் மாயனே பரனென்றிசைத்த மனு முதலானவர்கட்கும், ஸ்மிருதிகர்த்தாக்களாகிய பல முனிவர்கட்கும் வாக்குகள் தம்பிக்க வேண்டுமே. அங்ஙனங்கண்டோமில்லையாதலால், வேதவியாசர் விஷயத்திற்கூறிய பழிமொழி அப்பிரமாணமெனபது தெளிவன்றோ!

ஆகமமடந்தாய்! இன்னுமொன்றியம்புவேன்; கேட்பாயாக.— அந்த வேதவியாதரை எல்லாமறிந்தவரென்றும், அவர் நிச்சயித்துரைத்த பொருளே பரமார்த்தமென்றும், மகாநுபாவரென்றும், உண்மை யுரைப்பவரென்றும் உலகத்தினர் நன்குமதிக்குமாறு எஜுர் வேதத்தில் முதற் பருச்சத்தில் ஐந்தா மநுவாகத்தின்

மேலுள்ளதில் சொல்லப்பட்டன. ஆதலால் இவற்றிற்கு விரோத மாக வுரைத்தவையெல்லாம் அவைதிகங்களாம்.

---

## ச-வது, வேத விரோத நூல்வர்க்க கண்டனப்படலம்.

---

### க-வது, சைவசகள நிட்கள விசேடப் பரிச்சேதம்.

இங்ஙனமுரைக்கக்கேட்ட ஆகமமடந்தை சொல்லத்தொடங் கினள்.— ஆரணமடந்தாய்! யானுரைத்தவற்றிற்கெல்லாம் வேதத் தால் விடையளித்தனை. வேதங்கள் சிவபிரான் மகிமையை எடுத் தியம்பும் விஷயத்தை மேல் விளக்குவேன். அந்த வேதத்திற்கொப் பாகிய ஆகமங்கள் உரைத்தவற்றையும் முன்னர்க் கூறினேன். இன்னும் சிவனே பரதெய்வமென்பதை ஆகம பிரமாணத்தால் உன் மனத்திற் பதியுமாறு சாதிப்பேன்; கேட்பாயாக.—

படைத்தல் காத்தல் சங்கரித்தல் திரோதானம் அநுக்கிரகம் என்ற ஐந்து கிருத்தியங்கட்கும் முறையே அதிகாரிகளாகிய பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேச்சுவரன் சதாசிவன் என்ற பெய ரிணைப்படைத்து நீக்கும் பஞ்சப்பிரமமாகிய சிவனுக்கு இரண்டு வடிவுண்டு. அவை: சுத்த மாயாவடிவு, அசுத்த மாயாவடிவு என்பன. இவ்விரண்டினுள் பிரமன் விஷ்ணு என்ற வடிவங்கள் அசுத்த மாயாவுருவங்களாம். ஏனைய உருத்திரன் மகேச்சுவரன் சதாசிவன் என்ற வடிவங்கள் சுத்தமாயாவுருவங்களாம். பற்றற்ற இந்தச் சுத்தமாயாவுருவம் பரமசிவனுக்குச் சரீரமாய் வஸ்திரம் கூடாரமாவதுபோல விகாரமற்றதாய் நித்தியமாய் விளங்கும். பிரமன் விஷ்ணு என்ற அசுத்தமாயாவடிவம் அநித்தியமாகும். இங்ஙனமுரைத்தவையெல்லாம் சிவாகமசித்தாந்தங்களாம.

---

### ௨-வது, சகளநிட்கள கண்டனப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! இங்ஙனமுரைக்கப்பெற்றுள்ள சிவாகமப் பெருமையை நீயறியாமையால் இதுவரை எவ்வளவோ கூறினை; என்றனள். இதனைக்கேட்ட ஆரணமடந்தை சொல்லத் தொடங்கினாள்.—

ஆகமமடந்தாய்! ஆகமப்பிரமாணம் வேதவிரோதமென்றறியாமல் ஆகமம் ஆகமம் என்றே அடிக்கடி கூறுகின்றனை. அவ்வாகமத்தையே பிரமாணமாகக்கொள்வோமானால், வேதத்திற்குவிரோதமான சமயவாதியர் சொல்கின்றவையெல்லாம் அங்கீகரிக்கவேண்டுமன்றே. அவர்களுரைப்பனவற்றை அங்கீகரிக்கலாகா; என்பதை உன் மனத்திற் பதிவதற்காக முன்னர் அச்சமயவாதியர் கூற்றை விரித்துரைப்பேன்; கேட்பாய்.—

சத்தியானவள், * ஐந்து மூர்த்திகளின் சவத்தின்மேல் நடிக்கின்றனளென்றும், அவள் பிரமத்தைக் காட்டிலும் சிறந்தவளாக விளங்குகின்றாளென்றும், உலகத்தோற்றவொடுக்கங்களும் அவளிடத்திலே என்றும், உலகத்திற்கு உத்தாரகமும் தாயும் அவளே என்றும் சொல்லப்பட்டுள்ளன.

"உண்டதேயுறுதிமாதரார்க்கலவியுவகையேமுத்தியிவ்வுலகில்
கண்டதேகாட்சிபரத்தையாரறிவார்காயமுஞ்சீவனும்வேறோ
வெண்டியேமுயலுந்தவவிரதமெலாமேனியையொறுப்பதேயென்ன
எண்டகுமுலோகாயதமதத்தவர்கள்இகத்தையேகுறித்திசைப்பதும்"

வயிறார உண்பதுதான் உறுதியாகும். பெண்களிடத்திற் போகாநுபவஞ்செய்வதுதான் வீடுபேறு. உலகிற்கண்டதே காட்சி. பரதெய்வத்தை யறிவார் யாருளர்? சரீரமும் ஜீவனும் வேறாகுமோ? தவவிரத முதலியவை யெல்லாம் சரீரத்தை யொடுக்குதற்குரிய வீணான செயலாமேயன்றி வேறில்லை; என்று நாஸ்திகவாதியர் உரைக்கின்றனர்.

நான்முகனுக்குப் படைக்கின்ற தொழிலைக்கொடுத்து செங்கண்மாலிற்குக் காவல்புரிகின்ற தொழிலை வகுத்து, சிவனுக்கு

---

* ஐந்து மூர்த்தி—பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுவரன், சதாசிவன்.

அழிப்பதே பணியாக்கி மற்றெல்லாக் கருமபாசங்களையுங் கடந்தவன் எங்கள் தலைவனே யாவானென்று சாங்கிய சமயத்தினர் உரைக்கின்றனர்.

வேதங்களை முக்கிய பிரமாணமாகக்கொள்ளாதபோது இங்ஙனம் உலகத்தில் வேதபாகியர்கள் தாம் வல்லவாறுரைக்கின்றவை யெல்லாம் கைக்கொள்ளவேண்டி வருமன்றே. இவைநிற்க; உங்கள் உமாபதியாகிய சிவன் உரைத்த ஆகமத்தின் துணிபொருள்களெல்லாம் கூறுவேன். கேட்பாயாக.—

கற்பனைகளாகிய சிவாகமமெல்லாம் அநாதியான வேத நூலோடு விரோதமற்றிருந்திடலன்றோ நீ இங்குரைத்த சைவ சித்தாந்தப் பெருமைகளெல்லாம், பிரமாணங்களாக ஏற்றுக்கொள்ளப் படுவனவாகும்.

சிவாகமங்கள், வேதத்தாற் சொல்லப்பட்ட ஜகத்காரணனை நாராயணன் பரதேவதை யாகானென்றும், அந்த நாராயணனால் ஏவப்பட்டவர்களுள் ஒருவனாகிய உங்கள் சிவனைப் பராபரனென்றும் முறைபிறழ்ந்து உரைக்கின்றன.

சடையும் கபாலமும் மசானநீறும் உருத்திராக்க கங்கணமும் மகாரபஞ்சகமென்று சொல்கிற தீக்ஷைகளைந்தும் சங்ககுண்டலமும் கனகசிகாபணி உபவீதமும் (பூணூலும்) ஆறு முத்திரையும் என்ற இவைகளெல்லாம் வேதத்திற் சொல்லப்படாதவைகளாம். இவை சிவாகமங்களிற்சொல்லப்பட்டன. வாமம் வைரவம் களைம் வைகாளிகம் சைவம் காளாமுகம் ஆகுளம் முதலிய ஆகமங்கள் அப்பிரமாணங்களைச் சொல்லும். ஆதலால் இவற்றை அங்கீகரிக்கலாகாதென்று ஏனைய ஆகமங்கள் எடுத்துரைக்கின்றன. இங்ஙனம் ஆகமங்கள் ஒன்றற்கொன்று மறுத்துரைக்கின்றதினாலும், ஆறு முத்திரையையும் மகாரபஞ்சகத்தின் பரமார்த்தத்தின் தகுதியையும் உணர்ந்து பீடத்திற் சந்ததம் ஆநந்தமுற்றிருக்கும் மகிமையுடைய லிங்கமூர்த்தியை நினைந்து மகிழ்வதே மோக்ஷமாகுமென்றுரைத்ததினாலும், இதற்குக் காபாலவிரதமென்று பெயரிடலாலும், இந்த விரதியர்க்குச் சுராபானம் விதித்துள்ளதினாலும் சிவபிரானுரைத்த ஆகமம் அப்பிரமாணமாகும்.

இன்னும், இவ்வாகமங்கள் அப்பிரமாணங்களாமென்பதை நன்கெடுத்துரைப்பேன். கேட்பாயாக.— உங்கள் வைராக்கிய வீர மாகேச்சுர சமயத்திலும், தேவிசக்கர வேதவிதாளத்திலும், சிவ ரகசியத்திலும், பரமராசியத்திலும் லிங்கார்ச்சனை செய்யும் பொழுது மதுவினால் அபிஷேகஞ்செய்தால், அது நூறு யாகஞ் செய்ததின் பலனைத் தருமென்றும், இவ்வாறு மதுவினால் அபி ஷேகஞ் செய்பவனே மகேச்சுவரனுவானென்றும், அவனுக்கு ஐமுகனும் ஐம்புலங்களாமென்றும், வீரசைவனே லிங்கமாவா னென்றும், லிங்கமே வீரசைவனென்றும், அந்த வீரசங்கமன் லிங்கபூஜை செய்யும்பொழுது தனது ஆசாரகுருவின் பாதத்தை விளக்கும் நீரைக்கொண்டு லிங்கத்திற்கு மங்களாபிஷேகம் செய்வது தகுதியென்றும் இங்ஙனம் அநாசாரங்கள் வகுத்துரைக்கப்பட் டுள்ளன.

ஒருகாலத்தில் உமாதேவியை சிவபிரான் நோக்கி, இனிய சொற்களையுடையவளே! பாசுபதாதி சாஸ்திரங்களை அசுரர்கள் மோகிக்கும் நிமித்தமாகச் செய்தோம்; முத்தியடைய விரும்புகின்ற வர்கள் அவற்றிற்கூறிய நெறியைக்கடைபிடித்து ஒழுகமாட்டார் கள். அந்த மோகனசாஸ்திரம், சைவம் பாசுபதமென இருவகை யாக வகுக்கப்பெறும். அறிவிலாப்பாடண்டர்களே இவற்றிற்கூறும் நெறியைக் கைப்பற்றி ஒழுகுவார்கள். இவர்கள் வழிபடுதற்குரிய துறைகளே அந்த மோகன நூல்களில் கற்பிக்கப்பட்டுள்ளன. இந்தப் பாடண்டர்களும் இருவகையினராவர். இவர்களுள் கௌதமர்களால் சபிக்கப்பட்டவர்கள் ஒரு பகுதியினர். வாலகில்ய ரென்பார் மற்றோர் பகுதியினர். இவ்விருதிறத்தினரும் திருமாலை வழிபடுதற்கு மதியார். மேலும், இவர்கள் புண்ணியமார்க்க விரோதிகளாய், வேதவிரோத நூல்களைபோதிச் சிற்றறிவுடையவ ராகிய அற்பர்களோடு அளவளாவிக் களிப்பார்கள்.

இந்தச் சாந்தமற்ற துர்மார்க்கராகிய பாஷண்டர்களோடு அசுரர்கள் உலகில் பனிதராய்ப் பிறந்து வஞ்சகராய் மறைந்து அநு தினமும் மதுவும் இறைச்சியும் நுகர்ந்து, ஆகம மோகிதராகி, சிறந்த அந்தணாளர்க்குப் பகைவர்களாய், அகங்காரமுற்று உன்மத்

தர்களாய்த் திரிவார்கள். மலையரையன் மகளே! இவர்களிற் சிலர் மாதர்பால் இன்பம் நுகர்வதே முத்தியென மதித்து மயங்குவர். சிலர் லிங்கபூஜை செய்வதிலிச்சையால் இறுமாப்புற்று, அவ்வகங்கார புத்தியின்வழியே யொழுகுபவராய், வேதநூலுரைத்த முறையறிந்து எம்மை மேன்மையாம் பூஜைசெய்ய விரும்பார். மோகன நூல்களிற் சொன்ன விதிப்படி பூஜைசெய்து எம்மை மிகவும் மகிழ்வித்தவராகக்கருதி இறுமாப்புறுவார். இவர்கள் இவ்வாறு செய்த அமங்கள பூஜையை நாம் கொள்வதில்லை.

இவர்கள் ஆகமநூலை உண்மையாகக் கைப்பற்றுவதற்குச் சிறிது சித்தியைக்காட்டி, வேதஞ் சொல்லியபடி ஒழுகாத புத்தியையுங்கொடுத்து, அந்த மோகனநூனெறியினடக்குமாறு அதனைச் செய்தனம்; என்று மொழிந்தனன். இவ்வரலாற்றைப் பௌடிக புராணம் இருநூற்று நாற்பத்துநான்காம் அத்தியாயத்திற் காணலாம்.

ஆகமமடந்தாய்! இன்னமும் ஒரு வரலாற்றினைக் கேட்பாயாக.— சிவபிரான் அகஸ்தியமுனிவரை நோக்கி, 'முனிவரே! ஒரு கதை சொல்வேன் கேட்பீர்.— இந்தப் பூமியில் வாழ்பவர் திருமாலாகிய இறைவனை ஆராதித்து நித்தியாநந்த உலகத்தை யடைகிறார்கள். அந்தரவாசியர்களிற் சிலரும் அவ்விறைவனை ஆராதனை புரிந்தே சுவர்க்கபதவியை யடைந்தார்கள். ஏனைய வுலகில் வாழ்பவரும் ஏணியின் பழுவில் ஏறுபவர்போல முகுந்தனைப் பூஜித்து முக்தி லோகத்தை எய்தினர். நிற்க, ஒருகாலத்தில் தேவரெல்லாம் தேவாதிதேவனான திருமாலைத் தியானித்தனர். அப்பொழுது அவ்விறைவன் அவர்கட்குத் தரிசனம் அளித்தனன். அதன்மேல் அந்த அச்சுதன் தேவர்களை நோக்கி, 'இப்பொழுது நீங்கள் யாது காரணம்பற்றி என்னை நினைத்தீர்கள்?' என்று வினவினன். தேவர்கள், 'எம்பெருமானே! எல்லாவுலகத்தில் வாழ்பவரும் வரன்முறையாக முத்திலோகத்தை அடைந்துவிட்டால் தோற்றம் ஒடுக்கம் எப்படியாகும்? சுவர்க்கம் நரகம் எங்ஙனம்?' என்று கேட்டனர். அப்பொழுது அவ்வாழிப்படையேந்திய இறைவன் என் முகத்தை நோக்கி, கிரேதா திரேதா துவாபரயுகங்களில் என்னை முயன்று

பூஜிப்பவர் நிற்க; இறுதியாகிய கலியுகத்தில் யானே பரன் என்று யாவரும் அறிந்திடாவண்ணம் மோகன நூலைக் கற்பிப்பாய்' என்று பணித்து வானோர் வந்தனை செய்ய அருள்செய்து மறைந்தனன்.

அதன்மேல் யான் செங்கண்மாலின் திருவருளின்படி மோகன நூலைச் செய்தேன். இதனைக்கண்ட உலகத்தவர், வேத வரம்பை இகழ்ந்து அநாசாரராய் மயங்கித்திரிகின்றனர். இங்ஙனந் திரிபவர் ஜனனமரணமாந் துன்பத்துட்கிடந் துழல்வார்கள்; என்று புகன்றனன். இவ்விவரத்தை வராகபுராணம் எழுபத்தொன்றும் அத்தியாயத்தின் மேலுள்ள பாகத்திற் சுருக்கமின்றிக் காணலாம். ஆகம மடந்தாய்! மற்றுமோர் கதை சொல்வேன்.—முனிவர்கள் கைலயங்கிரியை யடைந்து சிவபிரானை நோக்கி, மோகன நூலைச் செய்தருள வேண்டும் என்று ஏவினர்.

---

## ௲ வது, அப்பிராமணப்புலையர் பரிச்சேதம்.

அப்பொழுது உங்கள் சிவபிரான் தபோதனர்களை நோக்கிச் சொல்லத்தொடங்கினன்.— நல்ல சோலை சூழப்பெற்ற ஒரு ஆசிரமத்தில் சில ரிஷிகள் வசித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது காலக்கொடுமையால் பன்னீராண்டு மழை பெய்யாதிருந்தது. அதனால் முனிவர்கள் மிகவும் வருத்தமுற்று இனி என் செய்வதெனத் தமக்குள் ஆலோசித்துச் செழிப்புற்ற கௌதமர் வசிக்கும் ஆசிரமத்தை யடைந்தனர். அப்பொழுது கௌதமர் எதிர்சென்றழைத்து இன்சொற்பகர்ந்து, 'யான் செய்த தவம் இன்றல்லவோ சபலமாயிற்று' என்று விருந்தோம்பி அவர்களைப் பன்னெடுநாட் போற்றி வந்தனர்.

பின்னர், பஞ்சகாலமொழிய நாடெங்கும் மழை பெய்தது. முனிவர்கள் தத்தம் இருப்பிடஞ்செல்ல விரும்பினர். பன்னெடுநாள் தம்மைப் பாதுகாத்தவரிடத்திற் செய்ந்நன்றி பாராட்டாமல், 'இவருக்கு ஏதேனும் இன்னல் இழைத்துச் செல்வோம்' என்று கருதி மாயையினால் ஓர் பசுவை யுண்டுபண்ணி மாதவன் பயிரை

யேயும்படி செய்தார்கள். அப்பொழுது கௌதமர் தே! தே!! என்று அப்பசுவை ஓட்டினர். அது உடனே மரித்து விழுந்தது. இதனைக் கண்ணுற்ற முனிவர், 'அந்தோ! பசுகத்தி செய்தோம்; இதற்கென்செய்வது?' எனக் கவன்று அருகு நின்ற முனிவர்களை நோக்கி, 'இதற்கோர் பிராயச்சித்தஞ் சொல்லிக்காணீர்' என்று கேட்டனர். அந்த வஞ்சனை முனிவர்கள், 'முனிவரே! இந்தப் பசுவுக்கு இன்னும் உயிர் போகவில்லை; கங்கை நீரைத் தெளித்தால் விடாய் தீர்ந்து உயிர்பெற்றெழும்' என்றனர். அப்படியே முனிவரும் செய்ய, பசு உயிர்பெற்றெழுந்து துள்ளியோடியது.

அப்பொழுது அந்த மார்க்கமாகச் சென்றுகொண்டிருந்த சப்தரிஷிகள் சிரித்தனர். இதனைக் கௌதமர் கண்டு தம் யோகத்தால், 'இஃதென்னை?' என்று ஆராயலுற்றனர். முனிவர்கள் செய்த மாயச்செயலென்றறிந்தனர். கோபமுண்டாயிற்று. கண்கள் சிவந்தன. இந்நிலைமைகண்ட எல்லோரும், 'இனி என் விளையுமோ?' என்று நடுங்கினார்கள்.

கௌதமர் இங்ஙனம் மாயை செய்தவர்கள், 'விரத ஈனராய் இழிதொழில் புரிபவராய் சரீரத்தில் பூதி பூசி விரிசடைதரித்து வேதபாகியர்களாய் அப்பிராமாணிக வேஷபாஷண்டர்களாய்த் திருமாலுக்கன்புசெய்யும் நெறியில் தப்பி இப்பூமியில் திரிந்துழலக் கடவர்கள்' என்று சபித்தனர்.

இவ்வாறு சபித்ததைக்கண்ட சப்தரிஷிகள் அந்த வஞ்சக முனிவர்கட்கு இச்சாபம் கலியுகத்திற் பலிக்கக்கடவது; என்றுரைத்து, தூபதீபங்களும், நன்மலர்களுஞ் சொரிந்து தேவர்கள் வணங்கும் தேவனாகிய யான் வாழ்கின்ற கைலயங்கிரியை அடைந்தனர்.

அப்பொழுது யான் முனிவர்களை நோக்கி, 'யாது கருதி இங்குவந்தீர்கள்?' என்று கேட்டேன். அவர்கள் 'கௌதமர் சாபத்தால் சில முனிவர்கள் பூமியிற் பிறந்து பூதியுஞ் சடையுந் தரித்துப் பாஷண்டப் புலையர்களாய் வருவார்கள். அவர்கட்குப் பாதகமார்க்க மோகனநூலைப் பலவகையாகச் செய்யக்கடவாய்'

என்றனர். நல்லது அப்படியே செய்கிறோம்; என்று வேதத்திற்கு விரோதமாக வைதாளம், காண்டிலம், கௌளம், சுவாதம் முதலான பலவகையான மோகன நூல்களை யுரைத்தனம்; இவை ஒரு கோடி கிரந்தங்களாம். இவற்றுள் ஒன்றுக்கொன்று அனேக விகற்பமுண்டு. இவற்றுள் சொல்லப்பட்டவையெல்லாம் அவைதிகாசாரங்களாம்; என்று அவர்கள் உள்ளந்தெளிந்திட வுரைத்தனன். இதனை ஆதித்யபுராணம் முப்பதாவது அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்.

ஆகமமடந்தாய்! இன்னும் சொல்லுகிறேன்.— மலையரையன் மடந்தையாகிய உமாதேவி ஒரு சமயம் இடைச்சி வடிவந்தாங்கி யாவரும் இயங்குகின்ற ஒரு பெரும்வழியிலிருந்து இரண்டு சட்டியில் தயிரைநிறைத்துக் கடைந்துகொண்டிருந்தனள். அவ்விடத்தில் கௌதமர் சாபவசப்பட்ட வஞ்சனையுடைய முனிவர்கள் கையில் தடியைத்தாங்கிக்கொண்டு நடுப்பகலில் விடாய்த்துப்போய்ச் சேர்ந்தனர். அப்பொழுது உமையவள் அருள் சுரந்து அவர்களை நோக்கி, 'உச்சிவெயிலில் விடாய்த்து வந்த உங்களது வருத்தமகல இந்தத் தயிரை விருப்புடன் நுகர்வீர்கள்' என்று கொடுத்தனள். அவர்களும் அவ்வாறே நுகர்ந்து உன்மத்தர்களாயினர்.

அவ்வேளையில் அங்குச் சிவபிரான் வந்து தோன்றினர். அம்முனிவர்களும் மங்கைபாகன் அடிபணிந்து 'எந்தையே! எங்கட்கு இப்பெருஞ்சாபம் எப்பொழுது ஒழியும்' என்று கேட்டனர். சங்கரன் அவர்களை அன்புடன் நோக்கி, அவர்கள் பொருட்டாகச் செய்த மோகனநூல்வகை யெல்லாம் உபதேசித்து, 'இன்றுமுதல் இந்த நூல்களிற்கூறிய நெறியினின்றும் வழுவாது எம்மை ஆராதனைபுரிந்து நுஞ்சுற்றத்தாரும், நீவிரும் குருபரம்பரையாக இவற்றைப்பயின்று வருவீர்களாக' என்று கற்பனகதைகளைக் கட்டுரை செய்தனன்.

ஆகமமடந்தாய்! வேறுமோர் கதை கூறுவேன்.— இந்தப் பாஷண்ட வேஷதாரிகள், ஒருசமயம் திருமால், சங்கரன் என்ற இவ்விருவரையும் பணிந்து நின்று 'கௌதமரிட்ட கொடிய சாபங்

தனையகற்றிப் பேறெமக்கருளத் தேவரீர்கட்கே கடமைபாகும்' என்று பிரார்த்தித்தார்கள்.

அப்பொழுது அச்சுதனை அரன் நோக்கி, 'அமலனே! இவர்கள் புண்ணியத்தைத் விருப்புகின்றனர்; இதற்குபாயம் என்ன?' என்று வினவினன். அதற்கு மாதவன், 'நீலகண்டனே! இவர்கள் செய்துள்ள நல்வினைப்பயன் அற்பமுமில்லை; கெட்ட ஒழுக்கமுடையவர்கள்; ஆயினும் ஒருபாயமுரைக்கிறேன்.— இவர்கள் நிமித்தமாக அளவற்ற மோகன நூல்களைச் சொல்லுதி' என்றனன். சங்கரனும் அதற்கு இசைந்து இலாகுளம் கபாலம் வயிரவம் வாமம் முதலான பல ஆகமங்களையுண்டாக்கினன். அதன்மேல் அவர்களை யழைத்து அவ்வாகமங்களை யெல்லாம் உபதேசித்து, 'இவற்றை நீவீர்கள் அநுஷ்டிப்பீர்களாக' என்றனன்.

அவர்களும், மகப்பிரசாதம் என்று மகிழ்வுற்று அவ்வாகமங்களைக் கைக்கொண்டார்கள். இதனைக் கூர்மபுராணம் பதினைன்காம் அத்தியாயத்திற் காணலாம்.

ஒருசமயம் திருமால் சிவனை நோக்கி, 'பூமியில் அசுரர்கள் மோகிக்கும் நிமித்தமாக மோகன நூல்கள் பலபட விரித்துரைப்பாய்; முனிவர்கள் வாக்காலும் சொல்விப்பாய்' என்று செப்பினன். இதனைப் பாஞ்சராத்திரம் என்ற நூலிற் காணலாம்.

இங்ஙனமுரைத்தவை யெல்லாம் ஒருபுறமிருக்க; 'பசுபதி மதத்தைக் கைக்கொள்ளலாகாது' என்று வேதாந்த சூத்திரம் விளக்கமுறக் கூறியது. இந்த வேதாந்த சூத்திரத்திற்குப் பாஷ்யஞ் செய்தவர்களும் அந்தச் சூத்திரப்பொருளை அப்படியே கூறினர்கள். ஆதலால் சிவாகம நூல் அவைதிகமாகையால் அதிற் கூறியவை யெல்லாம் அப்பிரமாணமாகும்; என்பதை விரித்துரைத்தேன். அந்த வேத விருத்த ஆகமங்களிற் கூறிய நெறியினிற்பலர் பாஷண்டராவர். அவர்களது இயல்புகளை முன்னரும் சில பல மொழிந்தேன்.

௪-வது, பாடண்டர் கண்டனப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! எவன் நாராயணனைக் காட்டிலும் சிறந்த தேவனுண்டு என்று கருதுகின்றானோ அவன் பாஷாண்டியாவானென்று பிரசாபத்தியஸ்மிருதி கூறுகிறது. திருமாலையும், அவன்றன் அன்பரையும் நிந்திப்பவர் கொடிய நரகெய்தும் பாஷண்டராவாரென்று வாமன புராணம் வகுத்துரைத்தது.

உங்கள் உமாபதியாகிய சிவன் முனிவர்களைநோக்கி, 'தேவரையும் அந்தணரையும் வேதத்தையும் நிந்தை செய்யுமவரும், நாராயணனே ஜகத்காரணன் என்றுரையாதவரும், என்னை நாராயணனைக்காட்டிலும் சிறந்தவன் என்பவரும் அநாசாரராகிய பாஷண்டராவார்கள். அவர் முகத்தைப்பார்ப்பது பாபமாகும். அப்பாபத்தை அகற்றிக்கொள்ள வேண்டுமானால் மாதவனைத் தரிசனை செய்ய வேண்டும்; இவ்வுரையெல்லாம் சத்தியமாகக்கொண்மின்' என்றுரைத்தனன். இதனைப் பௌடிகபுராணத்திலுள்ள பராசர சங்கிதையிற் காணலாம்.

அந்தணர்வகுப்பிற் பிறந்தும் திருமாலை நிந்தித்துத் தினந்தோறும் வெண்ணீறும் உருத்திராக்கமும் சடையுந் தரித்து, 'சிவபிரானை மகிழ்வித்தோம்' என்று இறுமாப்புறுவார் பாஷண்டராவாரென்று பரதகாண்டம் பகுத்துரைத்தது. மற்றத் தெய்வங்களும் மாதவனுக்கொப்பாகுமென்று சொல்பவர் பாஷண்டராவாரென்று பிரமாண்ட புராணம் புகன்றது. வேத சாஸ்திரங்களை நன்கு பயின்ற விற்பன்னனாயிருந்தாலும் அவன் திருமாலிடத்தில் அன்பில்லாதிருப்பானேல் பாஷண்டனாவானென்று நாரதீய புராணம் நவின்றது.

ஆகமமடந்தாய்! நான் இதுவரையுங்கூறிய நூல்களில் மாத்திரமே பாஷண்டர்களது இயல்பைப்பற்றிக் கூறியதாக நினைக்க வேண்டாம். சகல சாஸ்திரத்திலும் இப்பாஷண்டரது இயல்பு விரிவாகச் சொல்லப்பட்டுளது. அதனை ஒருவரால் அளவிடலாகுமோ? இந்தத் துராசாரமுள்ள பாஷண்டிகளைத் தீண்டினாலும் பார்த்தாலும் பேசினாலும் மிகவும் பாபம் விளைந்திடும்; என்று

ஸ்மிருதிகள் முறையிடுகின்றன. சைவர், பாசுபதர், நாஸ்திகர், பதிதர் என்ற இவர்களைத் தொட்டுவிட்டால் உடுத்திய ஆடையுடன் நீரில் முழுகி ஸ்நானஞ் செய்யவேண்டும்; என்று விஞ்ஞானேச்சுவரம் பிராயச்சித்த காண்டம் விரித்துரைத்தது.

மடந்தாய்! மேலும் விரித்துரைப்பேன்; கேட்பாயாக.—காசிவேந்தன் என்பவன் பாஷண்டர்களைப் பார்த்ததினால் அவன் நாயாயும் ஓந்தியாயும் கழுகாயும் செந்நாயாயும் மயிலாயும் பிறந்தான். இவ்விவாத்தைப் பராசர புராணத்தில் மூன்றும் பஞ்சகம் பதினெட்டாம் அத்தியாயத்திற் காணலாம். முன்னாளில் சில ரிஷிகளைக் கௌதமர் குற்றங்கண்டு சபிக்க, அப்பொழுது சப்தரிஷிகள் அந்தச் சாபம் அவர்கட்குக் கலியுகத்திற் பலிக்கக்கடவது; என்றுரைத்த விவரத்தை முன்னர் உரைத்தேன். அந்தக் கௌதமர் சாபவசப்பட்ட பாஷண்டரும், அவருக்கியைந்த மோகன நூலும் இப்பூமியில் கலியுகத்தில் பிரவிருத்தி பெற்று விளங்காநிற்கும். இதில் ஐயப்பாடு சிறிதுமில்லை. வேத விருத்தங்களை வகுத்துரைத்த மோகன நூல் முறைப்படி நிற்பவர் பாஷண்டராவர்.

மேலும் கலிகாலத்தில் அன்னிய தெய்வத்தைப் பரதெய்வமென்றும், பரம்பரனைச் சாமானிய தெய்வமென்றும் முறைபிறழ்ந்திசைப்பர்; என்றனள். இதனைக்கேட்ட ஆகமவல்லி ஆரணவல்லியை நோக்கி முனிவர் சாபத்தால் பாஷண்டர்களும், மோகன நூலும் கலியுகத்தில் உண்டானாலும், யுகதர்மத்தால் பரவஸ்துவைப் பரனன்றென்றும், பரனல்லாதவனைப் பரனென்றும் மனிதர்கள் வாழ்கின்ற லோகத்தில் வழங்கப்படுமோவென்று வினவினள். அதற்கு ஆரணவல்லி சொல்லத் தொடங்கினள்.—

---

ரு-வது, கலியுகப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! கலிகாலத்தினியல்பைச் சொல்வேன்; கேட்பாயாக.— பூமியில் பாஷண்டர்கள் மிகுதியும், சிறந்த பெரியோர்கட்குத் துன்பமும், திருமாலின் திருவாராதனைக் குறைவும், யாகங்களின் தேய்வும் எப்பொழுதுண்டாகுமோ, அப்பொழுதே கலியுகந் தோன்றியதென்றறியலாம்.

அகிலகாரணனன நாராயணன் திருவாராதனை குறைந்து பாஷண்டர்கள் மிகுவர். அப்பொழுது புவியில் வாழ்கின்ற மாந்தர்கள், 'வேதத்தால் என்ன பயனுண்டு; பிராமணர்கள் எவ்வாறுயர்ந்தவராவர்? மனிதர்களைக் காட்டிலும் மகிமையுடைய தெய்வமொன்றுண்டோ?' என்று வீண் வாதஞ்செய்வார்கள். திருமாலின் மெய்யன்பர்களாகிய பரமபாகவதரைக் கொடிய வெங்கலி வந்தடைந்திடாது. இவ்விவரத்தை விஷ்ணு புராணத்தின் ஐந்தாம் அத்தியாயத் தொடக்கத்திற் காணலாம்.

கலியில் வாழ்கின்ற மாந்தர்கள் பலபேத புத்தியுடையவர்களாய், காமபரவசராய், ஞானந்தகராய் செங்கண்மாலை மெய்யன்பால் வாழ்த்தி வணங்கி வழிபடாமல், அன்னிய தெய்வங்களைப் பற்றி அன்புடன் ஆராதனை செய்வார். பூமியில் ஞானக்குறைவில்லாத பரமபாகவதர்கள் செம்மையான நெறியில் ஒழுகுவதைக் கண்டும், நல்லறிவுடையவர்களாயிருந்தும், திருமாலின் பெருமையைப்பேசியும், அவனைத் திருவாராதனை செய்தும் அவ்விறைவனைப் பராபரனென்று தெளிவடைவார்கள். சிலர், துர்மதியால் குதர்க்கப்பொருளைச் சொல்லி, வேதநெறியில் நடக்கின்றவர்களின் சிந்தையைக் கலக்குவார்கள். வேதத்திற்கு விபரீதப் பொருளுரைத்து திருமாலிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றவர்களின் அன்பை மாற்றுவார்கள். சிலர் தீவினைவசத்தால் துர்மார்க்கநெறியைப்பற்றி விடாது பரம்பரையாக ஒழுகுவார்கள். இங்ஙனமுரைத்தவையெல்லாம் கலிகாலத்தில் தவறாது நிகழுமென்று பாரத்துவாச சங்கிதை பகுத்துரைக்கும்.

கலியுகத் தொடக்கத்தில் தருமம் காற்கூறும், முக்காற்கூறு அதர்மமுமே நிகழும். அந்தக் காற்கூறும் மெதுவாக நழுவிப் பாபமே வளரும்.

> "நிலமெலாம்விளைவுகுறைந்திடுங்கடையர்நீசரேதலைமையாய்நிற்பார்
> அலகிலாமருந்தும்பலித்திடாவரசனறந்தவிர்ந்தரும்பொருளேவெஃகும்
> புலமைசேர்மறையோர்நிட்டையைமறந்துபுன்றொழிலேபுரிந்திடுவோர்
> வலிமைசொன்மடவார்கணவரைப்பேணார்மைந்தருந்தந்தையைமதியார்"

அதருமத்தின் மிகுதியால் மழை பெய்யாதொழிய அதனால் விளை நிலமெல்லாம் விளைவுகுன்றும். கீழ்மக்களே தலைமையான பதவியை வஹிப்பார்கள். வியாதியை யகற்றும் எண்ணற்ற மருந்துகளும், தம் காரியத்தைச் செய்யமாட்டா. அரசன் தருமநெறியினின்று வழுவிப் பொருள் வேட்கையுடையவனாகவேயிருப்பன். அறிவினையுடைய அந்தணாளர் தம் தர்மாநுட்டானங்களை மறந்து இழிந்த தொழிலைச் செய்வார்கள். கணவன் உரை திறம்பும் வன்சொல்லையுடைய மனைவியர் தம் தலைவர்களைப் போற்றார்கள். புத்திரர்களும் தம் தந்தையர்களை ஒரு பொருளாகக் கருதமாட்டார்கள். மந்திரத்தையும் மந்திரத்தை உபதேசித்த குருவையும் மந்திரத்தாற் சொல்லப்படுகிற தேவதையையும் உண்மையென்று உள்ளந்தெளியார்கள். தெளிவு பிறந்தாலும் வேதவிருத்த நூலல்லது விரும்பார். வைதிக மார்க்கத்தில் ஒழுகினாலும் மாயனை பரதத்துவப்பொருளாக மதித்தது போலப் பாவனை செய்வாரேயன்றி உண்மையாக மதிக்கமாட்டார்கள். அவப்பொருளைப் பரம்பொருளாகவே எண்ணுவர்.

வேதாந்தஞானம் மாந்தருக்குண்டாவது அருமையிலும் அருமையாம். சிறந்த மெய்யறிவையுடைய ஞானிகளே நாராயணனையுபாசனை செய்வார்கள். 'பிறரும் அவ்வுபாசனை செய்கிறார்க' ளென்ற சொல்லைக் கேட்பதும் அருமையாகும். எவரும் உக்கிர தேவதைகளை உபாசிப்பதிலே மனக்களிப்புடையவராவர். பூமியில் சாத்துவிக குணங்குன்றித் தாமதகுணமே மேன்மேலும் விர்த்தியாகும். புண்ணிய விரோதமான காரியத்தைச்செய்து பாபிகளாய்த் திரிவார். கலியுகாந்தத்தில் எவர்க்கும் தஞ்சமாகிய சாத்விக சாத்திரம் இலமாகி வஞ்சன மோகன நூல் ஒன்று நூறாகவே தழைத்திடும். வேத முழுவதும் தமக்குப் பிறப்பிடமாகிய ஓங்காரத்தில் லயமடையும். இவ்விவரங்களைப் பதுமபுராணத்து உத்தரகாண்டத்தும், வாயுவியத்தும், மரீசியுரைத்த நூலிலும், கலியினியல்பு கூறத் தொடங்கிய வேறு பல நூல்களிலுங் காணலாம்.

பூமியில் சத்தியம் பொறுமை தயை தரும முதலிய எல்லாம் நாசமாய் விடும். மாயம் குத்திரம் மூர்க்கம் காமம் மோகம் பசி என்ற இவையெல்லாம் மிகுதியாகும். தனமே குலமாக விளங்கும்.

வலியோர் செய்கையே நியாயமாய் ஓங்கும். ஆடவருக்கும் பெண்களுக்கும் மனப்பொருத்தமே மணமாக (விவாகமாக) நிலவும். வைதிக விவாகமெல்லாம் மாய்ந்திடும். வேதியர் சூத்திராசாரமுடையவராய்த் திரிவர். சன்னியாசவேடம்பூண்டார் குடும்பதாரிகளாயலேவர். நியாய ஸபைகளில் அநீதியே நிலைநாட்டப்படும். பொய் முதலியவற்றைப் புகன்று வாழ்வதே மாந்தருக்கு வாழ்வாய் விடும். சிலர் தருமதானங்கள் செய்யத்தொடங்குவரேலும் புகழின் பொருட்டே செய்வர். மாந்தர்கள் பூமியில் முப்பதாண்டளவே ஜீவித்திருப்பர். பெண்கள் எட்டாவது வயதிலே பிள்ளைகளைப் பெறுவர்.

தம்மைப் பேணிய அரசன் வறுமை யடைந்து விடுவானேல் அவனைவிட்டு அகன்று விடுவார்கள். பலநாட் பணிவிடை செய்த சேவகன் மெலிவடைவானேல் அவனை விரும்பமாட்டார்கள். வனத்தில் வசிக்கும் துறவியர் வீட்டிலே வாழ்வர். அந்தணர் ஈனர்க்கு அடிமை செய்வார். உபகாரமாயிருக்கிற பசுவை வருத்திப் பால் கறப்பார்கள். பால் வற்றியபிறகு அப்பசுவைச் சிறிதும் பேணார். இத்தனை கொடுமையும் பாடண்டர் மிகுவதாலே யுண்டாகும். உலகினைப் பாதுகாப்பதற்குரிய அரசனே கள்வனாய்ப் பொருள்களைக் கவர்வன். பெண்கள் சுத்தியற்றவராயிருப்பர். மின்னுதல் மாத்திரமேயன்றி மழை பெய்யமாட்டா. விளைவெல்லாம் விபலமே யாகும். பல தானியங்களும் அணுவடிவினதாய் விடும். இங்ஙனமாகும் கலியுகாந்தத்தில் திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் ஆழியங்கை எம்பிரான் ;

---

## ௧0-வது, கற்கியவதார விபவப் பரிச்சேதம்.

பூமியில் அருகிப்போன தருமத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்று திருவுள்ளம்பற்றிச் சம்பளக் கிராமத்திற் கதிபதியாகிய ஓர் அரசர் தம் குலத்தில் விஷ்ணுசர்மனார் மனக்களிப்புற அவருக்குக் குமரனாக அவதரித்து, துரகவீரசிங்காரகற்கி என்ற பெயரை யடைவன். அதன்மேல் கற்கியென்ற எம்பிரான் கையில் விஜயவாளேந்திக் குதிரையின்மீது ஆரோகணித்து, அதனைக் காற்றினும் கடிய வேகமாய்ச் செலுத்தி, நாடுநகரங்களினும் அரணினும் காட்டினும்

நிறைந்துள்ள கொடியவர்களை ஒழித்துத் தேய்ந்தொடுங்கிய அறம் சிறந்தோங்கும்படி செய்வான். அப்பொழுது கலி சிதைந்துபோம். இங்ஙனம் தருமத்தை நிலைநாட்டிய இவ்விறைவனை வேதம் புகழ்ந்து கொண்டாடாநிற்கும். இந்தப் பரமார்த்தத்தைச் சுகப்பிரமமுனிவர் பரீக்ஷித்து மகாராஜனை நோக்கி அருளிச்செய்தனர். இவ்விவரத்தைப் பாகவதம் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் இரண்டா மத்தியாயத்திலும், மூன்றுமத்தியாயத்திலும் காணலாம். ஆகமமடந்தாய்! இங்ஙனம் புராண சாஸ்திரங்கள் அடைவுறச் சொல்லியபடியே பூமியில் வாழ்கின்ற மாந்தருக்கு அச்சுதனாகிய இறைவனிடத்தில் பக்தி குன்றுவதும், விபரீத ஞானத்தால் உக்கிரதேவதைகளிடத்தில் அன்பு விர்த்தியடைவதும் கலிக்கு இயைந்த சுபாவங்களாம்; என்றனள்.

---

## எ-வது, சிவபுராண கண்டனப் பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! நான் இங்குரைத்த சிவாகமெல்லாம் வேதவிருத்தமென்று சொல்லிக் கண்டனஞ்செய்தாய். அப்படியானால் உன்னால் இங்குரைக்கப்பட்ட புராணங்களிலும் எங்களுடைய சிவபிரான் மகிமை பேசப்படுகின்றனவே, அவையெல்லாம் பிரமாணங்களாதற்குத் தடையாதுளது? என்று வினவினள். அதற்கு ஆரணவல்லி விடையளிக்கத் தொடங்கினள்.—நான் இங்குரைத்த புராணங்களும், கற்பவகையும், தேவதையடையும், சாத்விக இராஜஸ தாமஸ * சங்கீரண வகையும், இவ்வுலகில் நிகழ்ந்திடும் செய்திகளும் செவ்வனே எடுத்தியம்புவேன்.— திருமாலே சாத்விக தெய்வமென்றும், பிரமதேவனை இராசதக்கடவுளென்றும், சிவபிரானைத் தாமதப்புத்தேளென்றும் மைத்திராவருணியோபனிடதத்தில் வகுத்துக்கூறியது.

வேதாந்தத்திற் கூறிய பொருளுக்கேற்றவாறு கூருமபுராணத்தில் நாற்பத்தைந்தாம் அத்தியாயத்தில் பிரமாணங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றையும் இங்கெடுத்தியம்புவேன்.— தாமதம், இராஜசம், சாத்விகம், சங்கீரணம் என்ற பெயரினையுடைய நான்கு

---

* சங்கீரணம்—கலப்பு.

கற்பங்களுண்டு. இவற்றுள் தாமத கற்பமெல்லாம், சங்கரன்றன்னையே புகழ்ந்துரைக்கும். நான்முகன்றன்னை இராஜசகற்பம் நயந்துரைக்கும். சாத்விக கற்பமெல்லாம் சார்ங்கபாணியையே போற்றும். சங்கீரணகற்பம், சரஸ்வதி தேவியையும், பிதுர்தேவதைகளையும் தோத்திரஞ்செய்யும். இங்ஙனஞ் சொல்வதெல்லாம் புராணத்தியற்கையாம். ஆயினும் சாத்விகமேமுத்தர்க்குரியதென்றிசைத்தது.

மாபுராணத்திலும் இந்த நான்கு கற்பங்களின் இயல்பு சொல்லப்பட்டுளது. முன்னுரைத்தபடியே மச்சிய புராணத்திலும், சாத்விககுண சம்பந்நனாகிய திருமாலைப் புகழ்வதெல்லாம் சாத்விக புராணங்களாம். இராஜச குணமுடைய நான்முகனைப்பற்றிப் பேசுவதெல்லாம் இராஜச புராணங்களாம். தாமதகுணமுடைய சங்கரனைக் குறித்துரைப்பதெல்லாம் தாமத புராணங்களாகும். கலைமகள் முதலானார்களைக் குறித்து நவில்வதெல்லாம் சங்கீரணமாகும்; என்ற விவரங்கள் ஓதப்பட்டுள்ளன.

மேலும் இங்குரைக்கப்பெற்ற புராண வகைகளுள் சாத்விக புராணம் உத்தமமென்றும், இராஜசபுராணம் மத்திமமென்றும், தாமத புராணம் அதமமென்றும் விஷ்ணுதருமோத்தரம் விரித்துரைத்தது. சாத்விககுணத்தால் பரமஞானம் விளைந்திடும். இராஜசகுணத்தால் லோப முதலிய துர்க்குணங்களுண்டாகும். தாமதகுணத்தால் விபரீதஞான முதலியவை உண்டாகும். என்ற இவ்விவரங்களை நாரதீயத்திலும், பகவத் கீதையிலுங்காணலாம். சாத்விககுணமுடைய திருமாலே முக்தியளிக்கவல்ல பரதேவதையாவானென்று சங்கரன் அகஸ்தியமாமுனிவருக் குரைத்த வாய்மையை வராகபுராணத்திற் காணலாம். சிறந்த சத்வகுணத்தினர் தேவராய் விளங்குவர். இராஜசகுணத்தினர் பூமியில் மனிதராய்ப் பிறப்பர். தாமதகுணத்தினர் மிருகங்களாயும், பறவை முதலியவைகளாயும் பிறப்பார்களென்று மனுதருமசாஸ்திரம் வகுத்துரைத்தது. தாமதகுணத் தெய்வத்தை வழிபட்டவர்களை பிறவிப் பெருங்கடலிற் கிடந்து கரையேறாது உழல்வார்களென்று ஆதித்தியபுராணம் அறையாநிற்கும்.

சங்கரன் உமாதேவியை நோக்கி, 'சாத்விக தெய்வம் செங்கண் மாலேயாவன். நான்முகத்தோன் இராஜசகுண தேவதையாவன்,

யான் தாமதகுணத்தினன். சாத்விக தெய்வத்தை உபாசனை செய்தவர் முத்திப்பேற்றை யடைவர். இராஜச தேவதையை வழிபட்டோர்கள் சுவர்க்கலோகத்தைப் பெறுவர். தாமதகுணத்தினோர் நரகில் வீழ்ந்துழல்வர்' என்று எடுத்தியம்பினன். இவ்விவரத்தைப் பதுமபுராணத்தில் உத்தரகாண்டத்திற் கண்டு தெளியலாம்.

மூன்று குணங்களோடு கூடிய பிரகிருதியின் காரியமான சரீரங்களும் ஆன்மாக்களின் புண்ணியபாபங்கட்கு ஏற்றவாறு மூன்று வகையாக உண்டாகின்றன. அவை: சாத்துவிக சரீரம், இராஜச சரீரம், தாமத சரீரம் என்பன. உலகிற் பிறக்கின்ற காலத்தில் திருமாலின் திவ்விய அருள்பெற்ற சரீரம் சாத்விக சரீரமாகும். பிரமதேவன், சங்கரன் என்ற இவ்விருவரின் அருள்பெற்ற சரீரங்கள் முறையே இராஜச தாமத சரீரங்களாம். சாத்விக சரீரத்தைப் பெற்றவர்களே முத்திப்பேற்றை யடைவர், இராஜச தாமத சரீரங்களைப் பெற்றவர்கள் முத்தியடையமாட்டார்கள். இவ்விவரத்தைப் பாரதத்திலுள்ள மோக்ஷதருமம் நூற்றெழுபத்தைந்தாம் அத்தியாயத்திற் காணலாம். ஆதலால் நிறைந்த புகழுடைய திருமாலே சுத்த சாத்விகத் தெய்வமாவான்.

ஆகமமடந்தாய்! மூன்று குணங்களையுங் கடந்துள்ளவனைச் சாத்விகத் தெய்வமென்பது எங்ஙனமென்று கேட்பையேல், கூறுவேன்.—பிரமன், சிவன் முதலியவர்களைப்போல் பிரகிருதிவசப்பட்டவனில்லை யாதலால் திருமாலை முக்குணமுங் கடந்தவனென்பர். அளவிடுதற்கரியதாய், ஒப்புயர்வற்றதாய் அப்ராக்ருதமாய் செழிப்புற்றிலங்கும் தெய்வத்தன்மையுடையதாய் விளங்கும் கல்யாண குணங்கட்கெல்லாம் விளைநிலமாயிருக்கின்றுனதலாலே செங்கண்மாலே சுத்தசாத்விகப் பரம்பொருளாவானென்று வேதம் தெளிவுறச்செப்பியது. உலகத்தில் குற்றமற்ற சாத்விககுலத்தினர்க்கெல்லாம் திருமாலே புகலிடமாதலால் இவனே சுத்த சாத்விகப் பரதேவதை யாவானென்பது துணிபு. ஆதலால் இராஜச தாமத புராணங்கள், வேதப்பொருளோடு விரோதமுடையன வாதலால் அப்பிரமாணங்களாம். மூதறிவாளராகிய முத்தர்கள் இவற்றைக் கையாளமாட்டார்கள்.

௬-வது, வேத விரோத நூல்வர்க்கக் கண்டனப்படலம் முற்றும்.

---

ஸ்ரீ:

# சவது, ஸ்ரீமத்வேதபரமார்த்த காண்டம்.

## க-வது, பரமார்த்தப் படலம்.

—*—

### க-வது, பாஞ்சராத்திர வைபவப் பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணவல்லி விரித்துரைத்ததை அமைவுறக்கேட்ட ஆகமவல்லி இயம்பத்தொடங்கினள்:—ஆரணநங்காய்! புராணங்களுள் ஒன்று நன்றென்றும், ஒன்று தீதென்றும் வகுத்துரைத்தாய். இங்ஙன முரைத்த இவையெல்லாம் ஒருபுறமிருக்க, இனி, உன்னுடைய மனம் பொருந்துமாறு ஒன்றுரைப்பேன்; கேட்பாய். யாவரும் புகழ்கின்ற கூர்மபுராணம், உங்கள் சம்பிரதாயத்தவர் கையாள்கின்ற பாஞ்சராத்திரத்தை நீ முன்புரைத்த அப்பிரமாணமாம் மோகனநூல் வரிசைகளுள் சேர்த்தெண்ணியது. அதனால் அது, அப்பிரமாணமென்பது சொல்லாமலே பெறப்படும். இது மாத்திரமோ, உத்தமமாகிய வேதசாஸ்திரத்திற் சொல்லப்படாத ஜீவோற்பத்தி உண்டென்று அப்பாஞ்சராத்திராகமம் நாட்டுகின்றதே. இஃதென்ன விந்தை! ஜீவன் நித்யனென்பதை யாவரும் மறுக்காரன்றே. இங்ஙனமிருக்க, இவற்றிற்கெல்லாம் விரோதமாக மொழிகிற அந்தப் பாஞ்சராத்திரம் அப்பிரமாணமென்பதை நீ எவ்வாறு மறுக்கப்போகின்றாய்; என்றனள்.

இதனைக்கேட்ட ஆரணப்பாவை சொல்லத்தொடங்கினள்.—ஆகமப்பாவாய்! பாஞ்சராத்திர நூலினை நீயாதென்று மதித்தாய். அது, வேதத்தொடு சமானமாகக் கருதும் பெற்றியதன்றே. இங்ஙன மொப்பற்ற அவ்வாகமத்தை முன்பின் நன்காராயாமல் மொழிந்தாய். அந்த நூலில் ஜீவோற்பத்தி சொல்லவேயில்லை.

பகவச்சாஸ்திரமென்று வழங்கப்படுகிற பாஞ்சராத்திரம், பரவாசுதேவனிடத்திற் *சங்கர்ஷணன் என்ற ஜீவன் அவன் கடா

---

* சங்கர்ஷணனாகிய நிலை, ஸர்வேசுவரன் வியூஹநிலைகளுள் ஒன்றாம். ஸர்வேசுவரன், சங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்தரூபமாய் நின்று சிருஷ்டி

க்ஷத்தாற் ரேன்றினன் என்று சொல்லியது. சங்கர்ஷணன் எல்லாச் சீவர்களையும் தனக்குரிமையாக வுடையவனாதலால் அவர்களை உய்விக்க **அவதரித்தான்.** உற்பத்தியானனென்பதில்லை. ஆனால் இங்குச் சங்கர்ஷணனைச் சீவன் என்று சொல்லியுள்ள விஷயத்தில் ஐயமுண்டாகலாம். அதற்குச் சமாதானம் வருமாறு காண்க.—ஜீவன் என்பதற்கு ஜீவிப்பான் என்றும், ஜீவிப்பிப்பான் என்றும் இரண்டு பொருளுண்டு. இவ்விரண்டு பொருள்களுள் இங்கு ஜீவிப்பிப்பான் என்ற பொருளையே கொள்ளவேண்டும். கொள்ளவே பரவாசுதேவனது அம்சமாய் உலகத்துயிர்களை உய்விக்க அவதரித்தனனென்பது நன்கு புலனாகும்.

இங்ஙனம் சங்கர்ஷணன் அவதரித்தனன் என்று கொள்ளாமல் ஜீவோற்பத்தியைப் பற்றித்தான் சொல்லியதென்று கொண்டால், எல்லா வுயிர்களும் வாசுதேவனிடத்திற் ரேன்றின; என்றுரைத்திருக்கவேண்டும்; சங்கர்ஷணன் தோன்றினனென்று ஒருமைப்பாலால் உரைத்திருக்கலாகாது. ஆதலால் இந்நூலில் ஜீவோற்பத்தி சொல்லவில்லை யென்பது தெளிவு.

---

ஸ்திதி சம்ஹாரங்களைச் செய்தருள்கிருனென்று சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டுளது. இதைக்குறித்தே பாஞ்சராத்திரம், வாசுதேவனிடத்தில் சங்கர்ஷணன் பிறந்தானென்று சொல்லியதேயன்றி வேறில்லை. உண்மை இங்ஙனமிருக்க, சங்கரர் முதலானவர்கள் பாஞ்சராத்திரம், ஜீவோற்பத்தியைக் குறித்துப் பேசுகின்றதினுல் அப்பிரமாணம் என்றுரைத்துள்ளார்கள். இவ்வாறு இவர்கள் கூறுவதைக் கண்டிப்பதற்காகவே ஸ்ரீ ஆளவந்தார் "ஆகம ப்ராமாண்யம்" என்ற நூலை அருளிச்செய்தார்.

இந்தப் பரிச்சேதத்தில் வியூஹமுறை பேசப்படுகின்றதினுல் அதன் விவரமும் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததே. இதனைத் தெளிவாக லோகதேசிகன் அருளிச்செய்துள்ளார். அது வருமாறு.—

"வ்யூஹமாவது—ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும், ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண நிற்கும் நிலை."

"பரத்வத்தில் ஜ்ஞாநாதிகள் ஆறும் பூரணமாயிருக்கும். வ்யூஹத்தில் இவ்விரண்டு குணம் ப்ரகடமாயிருக்கும்." (பிரகாசமாயிருக்கும்).

மேலும் இந்தப் பாஞ்சராத்திரத்திலுள்ள பரமசங்கிதையில் ஒப்புயர்வற்ற பரம்பொருளாகிய இறைவன் நித்தியனுயிருப்பது போல ஜீவர்களும் நித்தியர்களென்று சொல்லப்பட்டுளது. இந்த நூலில் ஜீவோற்பத்தியைப்பற்றிப் பேசுமானல் இங்கு ஜீவன் நித்தியன் என்றுரைத்திருக்கக் கூடாது. இதனுலும் ஜீவோற்பத்தி சொல்லவில்லையென்று தெளியலாம்.

இந்நூலில் ஜீவோற்பத்தி சொல்லியுள்ளதென்று எவரும் கருதாதிருத்தற்கென்றே வேதவியாசர், 'இதில் உயிரெலாமுடையவனுகிய இறைவன் அவதாரமே குறிப்பிடப்பட்டுளது' என்று சந்தேகம் நீங்க வேதாந்த சூத்திரத்தில் அருளிச்செய்துள்ளார். இதனை யறியாது, இந்நூலில் ஜீவோற்பத்திதான் சொல்லப்பட்டுளது; என்று பிடிவாதமாகக்கொண்டால் முரண்பாடுண்டாகும். இதற்கு உதாரணமாகச் சில எடுத்தியம்புவேன். கேட்பாய்.— இந்தப் பாஞ்சராத்திரத்தில் சங்கர்ஷணன் பிறந்தான் என்று சொல்லப்பட்டுளதுபோல திருமால்பால் எல்லா வேதங்களும் பிறந்தனவென்று சிறந்த புருஷசூக்தம் கூறுகிறது. இதுமாத்திரமோ கானபேத முறைகளைக் கூறுகின்ற சாமவேதத்தில் ஏனைய மூன்று வேதங்களும் பிறந்தனவென்று சொல்லப்பட்டுளது. வேதம்

---

"அதில் ஸங்கர்ஷணர், ஜ்ஞாந பலங்கள் இரண்டோடுங்கூடி ஜீவதத்வத்தை அதிஷ்டித்து, அதை ப்ரக்ருதியினின்றும் விவேகித்து, ப்ரத்யும்நாவஸ்தையையும் பஜித்து, சாஸ்திர ப்ரவர்த்தனத்தையும், ஜகத் ஸம்ஹாரத்தையும் பண்ணக்கடவராயிருப்பர்."

"ப்ரத்யும்நர், ஐசுவர்ய வீர்யங்களோடுங்கூடி மநஸ் தத்வத்தை யதிஷ்டித்து, தர்மோபதேசத்தையும், மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்தவர்க்க ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பர்."

"அநிருத்தர் சக்தி தேஜஸ்ஸுக்க ளிரண்டோடுங்கூடி, ரக்ஷணத்துக்கும் ஜ்ஞாந ப்ரதானத்துக்கும் கால ஸ்ருஷ்டிக்கும் மிச்ர ஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்."

வியூஹ வாசுதேவர், பரவாசுதேவர்க்குரிய எல்லாக் குணங்களுமுடையவராயிருப்பர். அதனல் வியூஹமூர்த்திகளை மூன்ருகவும், நான்காகவும் வழங்குகிற வழக்குண்டு.

நித்தியம் ; ஒரு புருஷனாலும் செய்யப்பட்டதில்லை யென்பதற்குப் பல பிரமாணங்களுள. இங்ஙனம் ஒன்றற்கொன்று விரோதங்கண்ட விடத்து அதற்குப் பொருத்தமாக ஆதியில் திருமால் வேதங்களைப் பிரமதேவன் வாயிலாக வெளியிட்டானென்பதுபற்றி, அவை அவனிடத்திற் பிறந்தனவென்று சொல்லியதே யன்றி வேறில்லை யென்று கொள்வதுபோல, இதிலும் ஜீவோற்பத்தி சொல்லியதில்லை யென்றே கொள்ளவேண்டும்.

வாசுதேவர் சங்கர்ஷணர் பிரத்யும்நர் என்ற நான்கு வியூஹ மூர்த்திகளும், அளவற்ற அண்டகோடிகளைப் படைத்துக்காத்து அழித்தலாகிய காரியங்களைச் செய்வதோடு பல சாஸ்திரங் களையும் வெளியிடுவார்களென்பதற்குப் பலபிரமாணங்கள் உள்ளன. அவற்றையும் இங்கெடுத்தியம்புவேன்.—வாசுதேவர், சங்கர்ஷணர், பிரத்யும்நர், அநிருத்தர் என்ற நான்கு வியூஹ எம்பெருமான்கள் அவதரித்துக் கணக்கற்ற அண்டகோடிகளையெல்லாம் சிருஷ்டித்துக் காத்துச் சாஸ்திரங்களையு முண்டாக்கி முடிவில் சங்கரித்தலாகிய தொழிலையுஞ்செய்வார்கள்; என்று பாரமான்மியம் என்ற உபநிஷத் திலுள்ள இரண்டாம் அநுவாகமும், மற்றுமுள்ள வேதாந்தமும் இனிதெடுத்திசைத்தன. * பாரத கீதையிலும், பிரமாண்ட புரா ணத்திலும் இந்த நால்வகை வியூஹத்தின் விவரம் சொல்லப்பட் டுளது. பாகவதம் நாலாவது ஸ்கந்தத்தில் இருபத்துமூன்றும் அத்தியாயத்தில், சிவன் பிரசேதசர்க்குத் திருமாலின் பெருமை தோன்றக்கூறிய பருவத்தில் நால்வகை வியூஹத்தையும் போற்றி முறைமுறையாகப் பணிந்த தன்மையும் பகரப்பெற்றுளது. இஃ தல்லாமலும் பாகவதம், மூன்றாவது ஸ்கந்தத்தில் காபிலயோகத்தில் வாசுதேவர் முதலான வியூஹமூர்த்திகளின் வகையினை இப்புவியி லுள்ளார் சிந்தையிற் பதியுமாறு எடுத்தியம்பியதைக் காணலாம்.

இப்புவியிலுள்ளவர்கள் கண்போற் போற்றத்தகும் பெற்றிய தாகிய சூரியசித்தாந்தத்தில் உலகசிருஷ்டியுரைக்கு மத்தியாயத்தில்

---

* பாரதகீதை யென்பது ஓர் நூல். பாரதத்திலுள்ள கீதை யென்று பொருள் கொள்ளற்க.

வியூஹ மூர்த்திகளின் தன்மை விரித்துரைக்கப் பெற்றுளது. ஏமாத்திரி என்ற கற்பமானது, நாராயணன் அவதார ஸ்தானங்களையும், காப்பாற்றுகின்றமுறையினையும் எடுத்தியம்பி, அவதாரங்களில் வாசுதேவன் முதலான வியூஹம் நான்கும் உத்தமமாகும்; என்றுரைத்தது. விஷ்ணு சஹஸ்ரநாமமும் இவ்வரலாற்றினை விரித்துரைத்தது. மற்றுள்ள புராணங்களும், ஸ்மிருதிகளும், உபநிஷத்தும் உலகத்தினியல்பை எடுத்தோதுகின்றவிடத்தில் வியூஹமூர்த்திகளைப்பற்றியும் விரித்துரைக்கின்றன.

---

உ-வது, சதுர்வேத பரத்துவவிளக்கமென்கிற பாஞ்சராத்திரப்பரிச்சேதம்

ஆகமமடந்தாய்! வாசுதேவர், சங்கர்ஷணர், பிரத்யும்நர், அநிருத்திரர் என்ற நான்கு வியூஹமூர்த்திகளின் உண்மையினை விரித்துரைத்த பாஞ்சராத்திரம், நித்தியமான வேதத்தோடொப்பாமென்ற விவரத்தையும் விரித்துரைப்பேன்.—மறைநாலோடைந்தென்று யாவருமொப்புக்கொள்கின்ற மகாபாரதத்திலுள்ள (தருமமுறையினை யெல்லாம் தெளிவாய்க் கூறுகின்ற) மோக்ஷதருமமானது, (பாரதக்கடலை அறிவாகிய மத்தாற் கடைந்தெடுக்கப்பட்ட) வெண்ணெய்போல்வதாகும். அத்தகைய மோக்ஷ தருமத்திற்கு இந்தப் பாஞ்சராத்திரம் இருதயமாகும். ருக்கு, யஜுர், சாம, அதர்வணம் என்ற நான்கு வேதத்திலுஞ் சொல்லப்பட்ட விஷயங்களையே இந்தப் பாஞ்சராத்திர நூல் பகர்கின்றதினால் இது வேதத்தோடொப்பாம். இஃதல்லாமலும் ஒப்புயர்வற்ற நாராயணனே இதனை எடுத்தியம்பினன்; என்ற பெருமையும் இதற்குண்டு. முன்பு இந்த நூலின் பெருமையெல்லாம் பிரமதேவன் சிவபிரானுக் கெடுத்தோதினன். நாரதமுனிவரும் பூமியிலுள்ள ஏனைய முனிவர்கட்கு இதன் சீர்மையை எடுத்திசைத்தனர். ஐந்தாம் வேதமாகிய மகாபாரதத்திற்கு இந்தப் பாஞ்சராத்திரமே உபநிஷதமாகும்.

சங்கர்ஷணன் என்ற பெயரையுடைய திருமால் உலகினர்க்கெல்லாம் பாடமாயிருக்குமாறு அருளிய பாஞ்சராத்திரமென்ற நன்னூல், ஒப்புயர்வற்ற நாராயணனுடைய அருச்சனைக்குரியதா

மென்று பாரதத்திலுள்ள பீஷ்மபருவம் விரித்துரைத்தது. முன்னாளில் திருமால் மகாமேரு பருவதத்தின்மீதிருந்து இந்தப் பாஞ்சராத்திர நூலை ஆராய்ந்தருளினனென்று சாந்திபருவம் சாற்றியது. ஞானகாண்டததில் மூன்றும் அத்தியாயத்தில் வசுவின் செய்கை விரித்துரைக்கின்றவிடத்தில் நாராயணனுடைய ஆராதனைக்குச் சிறந்தது பாஞ்சராத்திரமாமென்று சொல்லப்பட்டுளது.

உலகில் இந்தப் பாஞ்சராத்திர விதிப்படி * நைமித்தியாராதனஞ்செய்தால், ஒன்றே கணக்கற்றபலனைத் தரும். வேதத்தின் முடிபினையறிந்தோரும், பாஞ்சராத்திரத்தின் சீர்மையை ஆராய்ந்தவரும் திருமாலையடைந்தின்புறுவர். வேதம், யோகசாங்கியம், பாஞ்சராத்திரம் என்ற இவை, பண்டுதொட்டு ஒன்றினையொன்று விளக்கும் பாகங்களாயிருக்கும். ஆதலால் இந்நூலெல்லாம் கருத்தொற்றுமையுடையன வென்பது விளங்கும்.

நாரதமுனிவர் முதலான மேலோர் நாராயணனை யடிவணங்கி, தேவாதிதேவரே! தேவரீரை அர்ச்சிக்கு முறையை அடியேங்கட்கருளிச்செய்யவேண்டும்' என்று வேண்டினர். அப்பொழுது அவ்விறைவன் அவர்களை நோக்கி, 'புருஷசூக்தத்திலும், பாஞ்சராத்திரத்திலும் செப்பிய நெறி வழுவாது அர்ச்சிப்பதே உத்தமாம்' என்று மொழிந்தனன். இவ்விவரம், அகஸ்தியமாமுனிவர் உரைத்ததாக வராகபுராணம் அறுபத்தெட்டாமத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. இந்தப் பாஞ்சராத்திரம் வேதத்திற்கொப்பாய் விளங்கும் பெற்றியதாதலால் இதனை மறையவரே கற்றற்குரியவராவார். இந்நூல் தத்துவஞானத்தை விளைப்பதாயிருப்பதால் முத்திக்குச் சாதனமாயிருக்கும். பகவத் விஷயத்தில் பக்தியும், தவவேள்வி செய்தலும், வேதம், பாஞ்சராத்திரம் என்ற நூல்களைப் பயிறலும் என்ற இவையெல்லாம் எண்ணித் தொலையாத ஜன்மங்களிற் செய்த பாபமெல்லாம் நீங்கப்பெற்றவர்கட்கே ஸித்திக்கும். மேலும் வராகபுராணம் எழுபத்தொன்றுமத்தியாயத்தில் பாஞ்சராத்திரக்கிரமத்தால் திருமாலை ஆராதனை செய்வது விசேஷமாமென்று சொல்லப்பட்டுளது.

* நைமித்தியம் - நித்திய பூஜாவிதியிற்றாழ்வு தீரச் செய்வது.

யோகநிலையுடைய பெரியார், வேதத்தாலும் வேதார்த்தத்தை வெளியிடுகிற புராணத்தாலும் சிறந்த பாஞ்சராத்திரத்தாலும் விதிக்கப்பட்ட முறைப்படியே தியானியாநிற்பரென்று ஸ்ரீராமாயணம் சாற்றுகிறது. திருமாலைப் பாஞ்சராத்திரத்திற்கூறிய அங்க விதிப்படி அர்ச்சனை செய்வதே சிறந்ததாமென்று சமதக்கினி செப்பிய ஸ்மிருதி சொல்கிறது. அங்ஙனமே விதேகன் சொன்ன சங்கிதையுஞ் சாற்றுகிறது. நான்கு வேதங்களும், சிறந்த புராணங்களும், ஸூக்ஷ்மார்த்தத்தை வெளியிடுகின்ற பாஞ்சராத்திரமும், ஸ்ரீராமாயணமும், மகாபாரதமும் என்ற இவைகளே உலகிற்குத் திடமானபிரமாணங்களாம். இந்த நூல்கட்கு மாறுபாடான நூலை மேற்கொண்டவர்கள், முத்திப்பேற்றை யடையமாட்டார்கள்; என்று பிரமாண்டபுராணம் உரைக்கிறது.

பாஞ்சராத்திரம், மெய்ப்பொருளைத் தெரிவிக்கும் நூலாமென்று தெளிந்து வேதவியாசர் நிச்சயித்துள்ளார். மேலும், இந்தப் பாஞ்சராத்திரம் வேதப்பொருளையே வெளியிடுகின்றதினால் சிறந்த பிரமாணமென்பது தெளிவு. இங்ஙனம் ஆரணவல்லி பல பிரமாணங்களெடுத் தியம்பி பாஞ்சராத்திரம் வேதசாரமாமென்று ஸ்தாபித்தனள். இதனைக்கேட்ட ஆகமவல்லி சொல்லத் தொடங்கினள்.

---

## ௬-வது, பரமார்த்த நூல் வைபவப்பரிச்சேதம்.

ஆரணமடந்தாய்! இனிமேலும் இந்தப் பாஞ்சராத்திரமென்கிற சார்புநூலை மேற்கொண்டே சொல்லத்தொடங்குகின்றனையா? அன்றி பொதுநூன் முதலியவைகளிற் சொல்கிற பிரமாணங்களை மேற்கொண்டு உரைக்கக்கருதுகின்றாயா? என்று வினவினள். அதற்கு ஆரணமடைந்தை மொழியத் தொடங்கினள்.—ஆகமப்பாவாய்! பாஞ்சராத்திரம் உலகம்புகழ் பிரமாணமாமென்று அதன் சிறப்பினை யெடுத்தியம்பினேன். இஃதொன்றினையே யெடுத்தோதிப் போதுபோக்கிவிடுவேனென்று கருதற்க. வேதத்தால் நிறுவப்பெற்றதும், யான் இதுகாறும் பன்முறைஎடுத்து விளம்பியதுமாகிய விஷயத்தை நாட்டுவதற்கு அறச்சிறந்த பிரமாணங்களாகி, அறிஞர்

களாற் போற்ற விளங்கும் நூல்கள் எத்துணையோ உள்ளன. அவற்றையும் ஈண்டெடுத்தியம்புவேன்.—

* மானிடம் ‡ ஆரிஷங்கள்போலன்றி நித்தியமாய், அதனால் குற்றமற்றதாய் விளங்குகின்ற வேதம் சொல்வதெல்லாம் உண்மையாமென்று சகல சாஸ்திரங்களும் சாற்றுகின்றதனால், அவ்வேதம் உத்தமப்பிரமாணமாகும். எசுர்வேதம் பன்னிரண்டாம் பருச்சம் பத்தாமநுவாகத்திற் கூறிய விஷயத்தையே மனுஸ்மிருதியுரைக்கின்றதினால், அது திடமான பிரமாணமாகும். ஒரு வடிவைப்பற்றி நீங்காத நிழலைப்போல வேதத்தின் பொருளைப்பற்றி நீங்காதிருக்கும் தருமசாஸ்திரங்களெல்லாம் பிரமாணங்களாகும்.

† வேதத்தாலறியப்படுகிற பிறப்பிலியாகிய ஸர்வேசுவரன், தசரதனுக்குப் புதல்வனாய் வந்தவதரித்ததுபோல நித்தியமாகிய வேதமும் வால்மீகிமகரிஷி வாயிலாக ஸ்ரீராமாயண வடிவாக அவதரித்தது. மேலும், பிரமதேவன் வால்மீகிமகரிஷியை நோக்கி, 'உமக்கு எவ்வகையான § இராசியம் ¶ பாராசியம் முதலியவெல்லாம் உம்முடைய ஞானத்திற்கு விளங்கக்கடவன' என்று வாமீந்தனன். அந்த மகிமையால் வால்மீகிபகவான் ஸ்ரீராமாயணம் இயற்றினர். அது, % நூறுகோடி கிரந்தமாக விளங்கியது. அவற்றுள் ஏதேனும் ஒரெழுத்தை உச்சரிப்போர்க்கும் மாபாதகம் நாசமாகும். இத்தகைய மகிமையுடைய ஸ்ரீராமாயணமும் பிரபல பிரமாணமாகும்.

விஷ்ணு புராணத்தில் பராசரர் மைத்திரேயனை நோக்கி, 'நீ வேதவியாசனை விஷ்ணுவென்றே கருதுவாய்; அவன் விஷ்ணு வல்லனேல் அரிய மஹாபாரதத்தைச் சொல்லவல்லவனோ?' என்றனர்.

---

* மானிடம்—மனிதர்களாற் செய்யப்பட்டது.

‡ ஆரிஷம்—ரிஷிகளாற் செய்யப்பட்டது.

† "𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑍍𑌯𑍇 𑌪𑌰𑍇 𑌪𑍁𑌂𑌸𑌿 𑌜𑌾𑌤𑍇 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑍇 ।
𑌵𑍇𑌦𑌃 𑌪𑍍𑌰𑌾𑌚𑍇𑌤𑌸𑌾𑌦𑌾𑌸𑍀𑌤𑍍 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌰𑌾𑌮𑌾𑌯𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ॥

§ இராசியம்—மறைவான இரகசியப் பொருள்.

¶ பாராசியம்—அறிஞர் பலரறிந்த பொருள்.

% "𑌚𑌰𑌿𑌤𑌂 𑌰𑌘𑍁𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌶𑌤𑌕𑍋𑌟𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌂"

சூரியஞல் சந்திரஞல் மகாபாரத கதையாலல்லது உலகிலுள்ள இருள் அகலுமாறெங்ஙனம்? ஏனைய புராணத்திலுள்ள எல்லாப் பொருள்களும் பாரத்தின்கண் நிரம்பியுள்ளன. இதிலில்லாதபொருளொதிலுமில்லை. மேலும், இது பஞ்சமவேதமென்று உலகில் பிரசித்திபெறுகிறது. உலகில் புகழ் சிறந்து விளங்கும் பெருமை இஃதொன்றற்கேயுளது. வேதவியாசபகவான் முன்ஞளில் வேதத்தையும் புராணமனைத்தையும் வெளிப்படுத்துவதற்காக உலகத்தில் மஹாபாரதத்தை இயற்றியருளினன்; என்று சூதபுராணிகர் உரைத்தனர். மேலும் வளப்பமுற்ற உண்மையான உரையாளரென்று போற்றத்தக்க வியாசருளிச்செய்கையாலும், இதனைப் பிரமதேவன் கேட்டுச் சம்மதித்தருளிஞமைகையாலும் இந்தப் பாரதமும் சிறந்த பிரமாணமாகும்.

முன்பு பிரமதேவன் பல புராணங்களை இயற்றினன். பின்னர் அவன் றன்வாக்கினின்றும் வேதம் தன்னிச்சையாலே தோன்றியதென்று வாயுபுராணம் வகுத்துரைத்தது. ஆதலால் பழமையான வேதப்பொருளிற்கு மாறுபடாத புராணமெல்லாம் புவியில் வாழ்கின்ற மாந்தர்க்குப் பிரமாணமாகும். பராசரமுனிவரின் தந்தையராகிய சத்தி யென்பவரைக் கொடிய அரக்கர் கொன்றனர். அதஞல் பராசரமுனிவர் கோபமுற்று, 'இனி அரக்கரது குலக்கருவெல்லாம் அறுப்பேன்' என்று ஒரு வேள்வி செய்யத் தொடங்கினர். அப்போது புலஸ்தியரும் வசிஷ்டரும் தோன்றிப் பராசரமுனிவரை நோக்கி, 'கோபத்தை யகற்றுவீர்' என்று மொழிந்தனர். அவரும் அவ்வாறே செய்தனர். அதன்மேல் அவ்விருவரும் பராசரமுனிவரிடத்தில் அன்புற்று 'இனி உம்முடைய ஞானத்திற்கு வேதத்தின் பரமார்த்தங்கள் விளங்கக்கடவன' என்று வரமீந்தனர். எசுர்வேதம் முதற்படலம் ஒன்பதாம் அநுவாகத்தில் வியாசமகரிஷின் பெருமை சொல்லப்பட்டுளது. அத்தகைய வியாசரும் பராசருடைய புதல்வராவர். இந்தப் பராசரரும், அவர் புதல்வராகிய வேதவியாசரும், அவர் புதல்வராகிய சுகப்பிரமரிஷியும் பகவதவதாரமென்று லிங்கபுராணம் விரித்துரைக்கின்றது.

மைத்திரேயர், பராசரரை நோக்கி, 'இந்தப் பூமி எதனிடத்திற்றோன்றியது? எதனிடத்தில் ஒடுங்கும்? எவனது சொரூபம்? என்று வினவினர். அதற்குப் பராசரர் 'இந்த அண்டகோடியெல்லாம் அரிமயமாகும். அந்த அரிரூபியாகிய நாராயணனே உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்பவற்றைத் தனக்கு *லீலையாகக்கொண்டுள்ளான்; என்று விடையளித்தனர். இங்ஙனம் விடையளித்தவராகிய பராசரர் அருளிய விஷ்ணு புராணமும் சிறந்த பிரமாணமாகும்.

ஆகமமடந்தாய்! இன்னமும் கையிலங்கு நெல்லிக்கனி போலக் கொள்ளத்தக்க சிறந்த பிரமாணமுளது. அதனையுஞ்சொல்வேன்; கேட்பாய்.—முற்றத்துறந்தவருள் முதன்மையாக எண்ணத்தக்கவரும், முனிவர்களால் தொழவும் துதிக்கவும்பெற்றவருமாகிய சுகப்பிரமரிஷி எல்லோரும் சம்மதிக்குமாறருளிய ஸ்ரீபாகவதமும் உயர்ந்த பிரமாணமாகும். மேலும், சாத்விக புராணமெல்லாம் வேதப்பொருளிற்கு மாறுபடாத பொருளை எடுத்தோதுகின்றமையால் சிறந்த பிரமாணங்களாம். பிரமாணங்களாகாவென்று நீக்கத்தக்க அருகநூல் புத்தநூல்களுள்ளும் 'எவ்வுயிர்களையுங் கொல்லலாகாது' என்று மொழிகின்ற கொள்கை வேதவிரோதமில்லாததினால் பிரமாணமாகக் கையாளத்தக்கது. இராஜச புராண தாமச புராணங்களுள்ளும் வேதத்திற்கு விரோதமாகக் கூறப்படாதவையெல்லாம் பிரமாணங்களாமென்று ஏற்றுக்கொள்ளலாகும்.

---

## ச-வது, திருநாம விவரணப் பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணமடந்தை சொல்லக்கேட்ட ஆகமமடந்தை ஆரணமடந்தையை நோக்கி மாதுநல்லாய்! நீ நன்கு மொழிந்தனை. நான்கு வேதங்கட்கு விரோதமாகாதவை எவையுண்டோ அவையெல்லாம் பிரமாணங்களாக ஒப்புக்கொள்ளலாகுமென்றனை. இவற்றைப் பிரமாணமன்றென்றுரைப்பாரில்லை. ஆயினுமொன்றுரைப்பேன்; கேட்பாய்.—

* லீலை—விளையாட்டு.

நான்குவேத தாத்பரியமாம் பரமார்த்தத்தைச் செம்மையாகத் தெரிவதென்றால் எவர்க்கும் அரிதாகும். இங்ஙனம் அரிதிலுணர் வனவற்றை பூமியில் எங்கள் சைவசமயத்தை நிலைநாட்டிய மேலோர் உரைத்துள்ளார்கள். அவற்றை எடுத்துரைப்பேன்.—

எவன் பொருட்டு வணக்கமுரியதாகும்? இப்பூமியில் குணங் களாலுயர்ந்தவன் எவன்? நாரணோபநிடதத்தாற் சொல்லப்படு மவன் எவன்? உபாசனையை உவந்து உபாசனை செய்வோரின் புத்தியை முயல்விப்பதற்குக் கருதுபவன் எவன்? வேள்விக்கு நாயகன் எவன்? அவனாகும் நீலகண்டனாகிய இறைவன். ஈசுவர னுவான் உலகமாகிய ஐசுவர்யத்தையுடையவன். அவன் உலகில் காணப்படும் வஸ்துக்களைக்காட்டிலும் வேறுபட்டவனென்று சாங் கியர்களும் யோகியர்களும் ஆய்ந்தாய்ந்து சொல்லப்பட்ட ஈசுவர நாமம், பிரமதேவனோடு விஷ்ணுவையும் குறிப்பிடுவதில்லை. அந்த ஈசுவரநாமத்திற்குரியவன் எங்கள் பிறைசூடியாகிய இறைவனே யாவன். அவனே நமஸ்காரமனைத்தையும் கொள்வதற்குரிய தேவ னுவான் என்றனள்.

அப்பொழுது ஆரணவல்லி சொல்லத்தொடங்கினள்.—உயர் ந்த நாமத்தாற் றாழ்ந்தவர்களையும் இடுகுறியாய்ச் சுட்டியுரைப்பது உலக வழக்கன்றே. இதற்கு ஒரு உதாரண முரைப்பேன்.— கள்ளியை மஹாவிருக்ஷமென்று வழங்குவதை நன்கு கண்டறிவை யல்லவா. அதுபோல ஈசுவரநாமத்தால் உங்கள் சிவபிரானைச் சுட்டி யுரைத்ததென்றறிவாய்.

ஈசுவரனென்ற சொல்லிற்கு முக்கியப் பொருளாய் விளங்கு கின்றவன் முகுந்தனே யாவன். அன்னவனையே இந்தச் சொற் சுட்டியுரைக்கின்றதென்பதற்குப் பிரமாணங்கள் பலவுள. அவற் றுள் சில ஈண்டெடுத்துரைப்பேன்.— தேவர் மனுஷ்யர் விலங்கு தாவரம் என்று நான்கு வகையாகச் சிருஷ்டிக்கப்பட்ட பொருள் களை நியமிக்கின்ற காரணத்தால் ஈசுவரன் என்று வழங்கலாகும். இந்தச் சொல்லிற்குரியவன் நாராயணனே யாவனென்று தைத்திரி யோபநிடதம் சாற்றுகிறது.

உந்திக்கமலனாகிய முகுந்தனே நித்யனும், நியமிப்பவனும், எல்லா ஐசுவர்யங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமும், எல்லா ஐசுவர்யங்களும் பூரணமுற வாழ்பவனும், அவற்றைப்போற்றுமவனும், அருள்பவனுமாவான்; என்று பாரமாற்பவுபநிடதம் முதலநுவாகம் பகராநின்றது.

கண்ணன் கீதையில் அர்ச்சுனனை நோக்கி * இரத்தினங்கள் கோர்க்கப்பட்ட நூலைப்போல எல்லா உலகங்களையும் படைத்து, படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களிலும் புகுந்து நியந்தாவாகவு மிருக்கிறேன்; என்னைக்காட்டிலு முயர்ந்த ஈசுவரன் ஒருவருமில்லை யென்றருளினன். ஆயிரம் புயமுடைய வாணாசுரனோடு கண்ணபிரான் யுத்தஞ்செய்கின்றகாலத்தில் உங்கள் சிவபிரான் எதிர்த்துத் தோல்வியுற்று இரதத்தின் மேல் ஆரோகணித்திருந்த கண்ணபிரானை நோக்கி ஒப்பற்ற ஈசுவரனும், பிறப்பிலியும், பரமாத்மாவும் புருடோத்தமனும் நீயே யாவாயென்பதை நன்கறிந்தனனென்று துதித்து இறைஞ்சினன். எல்லாவற்றிற்கும் காரணனாய் விளங்குகிற நாராயணனைத் திருவாராதனை செய்திடாதவர் வைதிகநெறியொழுகாப் பாடண்டராவார். நாராயணனே எல்லாச் சிருஷ்டிப் பொருள்களையும் நியமிப்பவனாவான்; என்று பராசரர் விஷ்ணுபுராணத்தில் விரித்துரைத்தனர். கர்மபாசங்கள் கடந்த மேலோர் தியானித்தற்குரிய திருமாலே ஈசுவரனென்ற சொல்லால் வழங்கப்படுமவனாவானென்று யாச்சவற்க முரையாநின்றது. வெண்ணெயுண்ட செவ்வாயனே ஈசுவரனாவானென்று பிரஜாபதிஸ்மிருதி விளக்கியது. நாராயணனே ஈசுவரனென்ற சொற்குரியவனாவானென்று கந்தபுராணம் கழறியது. மகாபாரத கதை முதனடுவிறுதியிலும் திருமாலே ஈசுவர சப்தவாச்சியனாவானென்று சொல்லப்பட்டுளது. திருமாலுக்கு வழங்கப்படுகிற ஆயிரநாமங்களுள் ஈசுவரனென்பதும் ஒரு பெயராகுமென்று ஆநுசாசனபருவம் அறையாநின்றது.

---

* "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥

பகவ-7-ம், அத், 7-ம் சுலோகம்.

சிவன் உமாதேவியை நோக்கி, 'வானவர்க்கீசனுகிய கண்ணனே எனக்கீசனுவான்' என்றுரைத்தனன். இவ்விவரத்தைக் கர்ணபருவத்திற் காணலாம். மகாபாரதத்திலுள்ள சப்தரிஷி சம்வாதத்திலும் ஈசுவர சப்தவாச்சியன் திருமாலே என்று சொல்லப்பட்டுளது. ஸர்வேசுவரனென்ற சொல்லும், அடைமொழியில்லாத ஈசுவரனென்ற சொல்லும் நாராயணனையே சுட்டியுரைக்கும். இஃதல்லாமலும் * எல்லாச் சொல்லும் இந்த நாராயணனையே குறிப்பிடுமென்ற உண்மையை உரைப்பேன்.

அரியாகிய அச்சுதனே சிவசப்தவாச்சியனுவானென்று நாராயணோபநிடதம் நவின்றது. பீஷ்மாசாரியரிடத்தில் தர்மபுத்திரர் கேட்ட ஸஹஸ்ரநாமத்திலும் நாராயணனுக்குச் சிவனென்ற பெயருண்டென்று சொல்லப்பட்டுளது. திருமால் திரிவிக்கிரமாவதாரஞ் செய்தகாலத்தில் மேலுலகஞ்சென்ற திருவடியைப் பிரமதேவன் திருவபிஷேகஞ்செய்த செய்தியை ஆராய்ந்தால் சிவனைப் பரிசுத்தனுக்குவதற்காமென்பது தெளிவாக விளங்குகிறதென்று ருக்குவேதம் புகழ்ந்துரைக்கிறது. திருமாலின் திருவடியினின்றிழிந்த தீர்த்தத்தைச் சிவன் சடையிற் றரித்ததாலன்றோ ‡ சிவனுக விளங்கினன்; என்று சுகர் தாமருளிய பாகவதத்தில் அருளிச்செய்துள்ளார். ஆதலால் சுத்த மங்கலமாஞ் சிவசப்தமானது சூலபாணியை எவ்வாறு சுட்டியுரைக்கும்? கருடவாகனனுகிய இறைவனே சம்புவாவான். (சம்பு-சுகந்தருபவன்) உண்மையை அறிந்தவர் சங்கு சக்கரக்கையனுகிய இறைவனே சுகந்தரும் பரமனென்றறிவர். திருமாலையொழிந்த அந்நிய தெய்வங்கள் பரமாநந்தமாகிய முத்திப்பேற்றை யளிக்கவல்லவராகார்; முகுந்தன் ஒருவனே முத்திப்பேற்றை யருளும் சக்தியுடையவனுவானென்று பாகவதமுரைக்

---

* சாமானிய விசேஷ நியாயத்தாலே எல்லாச் சொல்லும் சிறப்புடைய சொல்லையே குறிப்பிடும். சாமானியம்—பொது. விசேஷம்—சிறப்பு. வேதாந்தத்தில் சச்சப்தத்தாலும், ஆத்மா என்ற சொல்லாலும், ப்ரஹ்ம சப்தத்தாலும் சொல்லப்பட்டவை யெல்லாம் நாராயணனையே குறிப்பிடுமென்று வேதப்பொருளுணர்ந்த நிபுணர் கூறுவர்.

‡ சிவன்—மங்கலமுடையவன்.

கிறது. கல்யாணகுணபூரணனான நாராயணனே சம்பு சப்தத்தாலும் சொல்லப்படுமவனென்று நாராயணோபநிடதம் நாட்டுகிறது. ஆநு சாசனபருவமும் திருமாலைச் சம்புவென்றுரைக்கிறது. அப்படி யானால் நிகண்டு நூல் பிரமதேவனுக்கும், சங்கரனுக்கும் சம்பு வென்ற பெயருண்டென்று செப்பியதற்குக் காரணம் யாதென்று வினவுவையேல், கூறுவேன்.—

பிரமதேவனும், சங்கரனும் தம் சக்திக்கேற்றவாறு நிலை பேறற்ற சுகத்தைத் தருவார்கள். ஆனதுபற்றி அவர்களும் * சம்பு வென்ற சொல்லிற்குரியவராவாரென்று நிகண்டு நூல்கள் விரித் துரைத்தன. ஞானம் இச்சை கிரியைகளையுடைய அச்சுதனே § மூவருக்கும் முதல்வனாதலால் திரியம்பகனென்று சொல்லப்படு கின்றனன். இவ்விவரத்தை அமலனருளிய அஹிர்புத்ன ஸம் ஹிதையிற் காணலாம். பழமையான நூலறிவில்லாதவர்கட்கு இத் தகைய விஷயம் விளங்குமாறில்லை. திருமாலாகிய இறைவனே ஞானசக்தி இச்சாசக்தி கிரியாசக்திகளை யுடையவனாவானென்று யாவரும் சம்மதப்படுமாறு எசுர்வேதமும் அதர்வண வேதமும், மஹோபநிடதமும் உரையாநின்றன.

அச்சுதனே ருத்திர சப்தத்திற்கும் உரியவனாவான். ருத்திர சப்தத்திற்குப் பல பொருளுண்டு. அவற்றுள் நோயகல்வித்தலும் அழுவித்தலும் பொருள்களாம். சிந்தையிலுண்டாம் துயர்களைக் களைபவன் திருவின்னாயகனாகிய இறைவனேயாமென்று பிரமாண்ட புராணம் விரித்துரைத்தது. பிரளயத்தில் பிரமன் சதாசிவன் முத லானவர்களைப் பெரும் பயங்கர ஸ்வரூபனாயிருந்து அழிப்பவன் அச்சுதனேயென்று கமலப்புராணம் கழறியது. பிரமதேவனிடத் திற்பிறந்து, 'என் பாபமகலப் பெயரிடவேண்டும்' என்றழுத

---

* அமரர் என்ற சொல், எப்பொழுதும் மரணமில்லாமல் பரமபதத்தில் வாழ்கின்ற நித்தியசூரிகளைக் குறிப்பிடும். அங்ஙனமிருக்க, மனிதர்களைக் காட்டிலும் சிறிதுகாலம் மரணமில்லாதிருக்கின்ற இந்திரலோக வாசிகளும் அமரராவாரென்பதுபோல, சம்பு என்ற சொல்லும் பிரமருத்திரர்களைக் குறிப்பிடும்.

§ மூவர்—பிரமன் சிவன் இந்திரன்.

சங்கரனுக்கு ருத்திரனென்ற பெயர் வழங்கலாயிற்று. இவ்விவரத்தைச் சுபாபலோபநிஷத்திற் காணலாம். மஹாருத்திரன் என்ற சொல் மாதவனையே யுணர்த்துமென்று பாரதத்திலுள்ள ஸஹஸ்ரநாமம் சாற்றுகிறது.

துன்பங்களைக் களைகின்றவனாதலால் ருத்திரனெனவும், எல்லோருக்கும் பெரியவனாதலால் மஹாதேவனெனவும், சுகரூபியாதலால் சம்புவெனவும், ஐசுவர்யத்தால் விளங்குகின்றவனாதலால் இந்திரனெனவும், தோலினால் போர்த்த உடம்பினைச் சூத்திரப் பாவையைப்போலச் செலுத்துகின்றானாதலால் கிருத்திவாசனெனவும், எல்லா உலகங்களிலுமுள்ளவர்களை நியமிப்பவனாதலால் ஈசுவரனெனவும், † நாகமடைவித்தலால் பினாகி எனவும், தன்னையடைந்தவர்களைப் பெருமையுடையவராம்படி செய்பவனாதலால் பிரமனெனவும், வசவின்றிச் செய்பவனாதலால் விரிஞ்சியெனவும், பல கண்களையுடையவனாதலால் விருபாக்ஷனெனவும், லோக சிருஷ்டியைச் செய்பவனாதலால் விசுவனெனவும், எல்லா அண்டங்களையும் தன் வயிற்றில் வைத்துக்கொள்பவனாதலால் இரண்யகர்ப்பனெனவும், எல்லா லோகங்களையும் அழியாமல் நிலையுறச் செய்பவனாதலால் சர்வனெனவும் திருமாலே வழங்கப்படுகின்றனன். இஃதல்லாமலும் வேதம் காரண சப்தவாச்சியனாகச் சொல்வதற்குரியவன் செங்கண்மாலே யாவன். இவ்விவரமெல்லாம் பிரமாண்ட புராணத்திற் காணலாம்.

அரிமுகுந்தன் அநந்தன் பராபரன் என்ற பெயர்கள் எவனைக் குறிப்பிடுகின்றனவோ அவன் ஒருவனே அந்தகனும், உயிர்கட்குள்ளே வசிப்பவனும், ருத்திரனென்ற பெயருக்குரியவனும், நியமிப்பவனும், சுவாமியும், பிராணதாரியுமாவான்; என்று சுபாலோபநிடதம் கூறுநின்றது. அளவற்ற சாகைகளையுடைய வேதாந்த நூல்களிலுள்ள அக்ஷரக்கூறெல்லாம் திருமாலின் நாமங்களேயாமென்று ஸ்மிருதிகள் துதித்துக் கூறுகின்றன. இப்பொருள் விளங்க உலக திருஷ்டாந்தமாக அந்தணர் தினந்தோறும் மத்தியான வந்தனத்திற் செப்புகின்றனர்.

---

† நாகம்—தெளிவிசும்பாகிய பரமபதம்.

சிவன் உருத்திரன் சம்பு மகேசுவரன் முதலான நாமங்கள் திருமாலைக் குறிப்பிடுவனபோல, நாராயணன் முதலான சொற்கள், நான்முகன் சங்கானுதியர்களைக் குறிப்பிடமாட்டா என்று வாமனீயம் வகுத்துரைத்தது.

பிரமதேவனும். சிவனும் நாராயணனை அன்புடன் போற்றி, 'இறைவ! கருணைகூர்ந்து எங்கட்கு அசாதாரணப்பெயர் அளித்தருளவேண்டும்' என்று வேண்டினர். அப்பொழுது திருமால் அயனுக்குச் சதானந்தன் நான்முகன் அம்புயவரோதயன் பிரமனென்ற பெயர்களை யிட்டனன். உமாபதிக்கு நீறணிமுதல்வன், உக்கிரமூர்த்தி, கபாலி, நக்கனென்ற நான்கு பெயர்களை யிட்டனன். இவ்விவரத்தைக் கையிலங்கு நெல்லிக்கனிபோலப் பிரமாண்டபுராணத்திலும், கந்தபுராணத்திலும் காணலாம்.

---

ரு-வது, வந்தனையோக்கியப் பரிச்சேதம்.

ஆரண—ஆகமமடந்தாய்! உங்கள் உமாபதிக்கும், பிரமதேவனுக்கும் நாராயணனாகிய இறைவன் அசாதாரண நாமம் சாற்றினன். இஃதல்லாமலும் எல்லாப் பொதுச்சொல்லிற்கும் பொருளாய் விளங்குகின்றவனும் இவனே. உலகத்தில் வந்தனைக்குரிய பாத்திரனாய்த் திகழ்கின்றவனும் இவ்விறைவனே.

ஆகம—ஆரணப்பாவாய்! எங்கள் சிவபிரானைப் பிரமதேவனிடத்தில் தோன்றினன் என்றனை. இதனை மறுத்துரைப்பேன்.— எங்கள் பிறைசூடிக்கு ஆகமத்தில் அநந்தகோடி நாமங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஒன்றிலும் குறைவில்லாதவனாதலால் வந்தனைக்குரியவனும் எங்கள் இறைவனே. இதற்குத்தக்க பிரமாணமும் உன் மனதிற்பதியுமாறு எடுத்தியம்புவேன்.— சிறந்த சூலகவேள்வியிற் *பசுவைப் பலியிடுகின்றதினால், இந்த வேள்விக்கு உமாபதியே தெய்வமாவான். வந்தனைக்குரியவனும் இவனே. சதவுருத்திரியமென்ற நூலில் ஸ்தாணுவாகிய பரம்பொருளிற்குப் பலவந்தனை யுரைக்கப்படுகின்றதினாலும் இவனே நமஸ்காரத்திற்குரிய நாயகனென்றறியலாம்.

---

* பசு - யாகபசுவாகிய வெள்ளாடு.

ஆரண—மடந்தாய்! உங்கள் பிறையேறுசடையானை வந்தனைக் குரியவனென்று சதவுருத்திரியம் கூறியதின் கருத்தையெடுத் தியம்புவேன்.—உங்கள் சிவபிரான் உக்கிரஸ்வரூபனாய் விளங்கு கின்றானாதலால் இடையூறு செய்யாதிருக்கவேண்டுமென்ற பயபுத்தியினால் பலவிடங்களிலும் வந்தனை சொல்லியதே யன்றிப் பரத்துவ நிச்சயத்தால் வந்தனை சொல்லவில்லை. இவ் விஷயம் அந்தச் சதவுருத்திரியம் இடையிலுள்ள அநுவாகத் திற் சொல்லப்பட்டுளது. பூமியில் இங்ஙனம் பயபுத்தியினால் பணிவதற்குப்பாத்திரனாய் விளங்கும் உக்கிர வடிவினனாகிய சிவனைச் சூலகவேள்வியில் நமஸ்காரத்திற்குரியவனென்று சொல்லப்பட்டுளது. இதனால் உமாபதிக்குப் பரத்துவநிச்ச யம் செய்யவொண்ணாது.

ஆகம—பாவாய்! இந்த உலகமனைத்திற்கும் சுவாமியாயிருப்பவன் எவனோ? அவனேதான் உக்கிரஸ்வரூபனாய் விளங்கக்கூடும். இங்ஙனம் உக்கிரஸ்வரூபனா யிருப்பவனைக் கண்டுதான் உல கினர் பயப்படுவர். வந்தனையுஞ்செய்வர்.

ஆரண—எசுர்வேதம் ஐந்தாம்காண்டாம் ஐந்தாம்பருச்சத்தில் அக் கினிதேவனை நோக்கி, 'புலிபோன்ற கடுங்கோபம் பொருத் தருள்வாய்; உனக்கு நமஸ்காரம்' என்று சொல்லப்பட்டு ளது. இந்த வந்தனையும் பயபுத்தியால் ஏற்பட்டதாம். இஃ தல்லாமலும் இருடிக்குழாத்திற்கும் வந்தனை சொல்லப்பெற் றுளது. * நாமகரணம் † சௌளம் முதலிய சுபகர்மங்கள் தொடங்குகின்ற காலத்திலும் சில தெய்வங்கட்கு வந்தனை குறிப்பிடப்பெற்றுளது. கல்யாணச்சடங்கு தொடங்குகின்ற காலத்திலும், யாத்திரை செய்யும்போதும் தீங்கணுகாதிருக் கும் வண்ணம் சகுணப்பக்ஷிக்கும் வேதத்தில் வந்தனையுரைக் கப்பட்டுளது. இங்ஙனம் பயங்கர புத்தியாற் பணியப்பட்ட பொருளெல்லாம் பரத்துவமாகுமோ?

---

* நாமகரணம் - பெயரிடுவது.

† சௌளம் - குடுமி வைத்தல்.

ஆகம—சதவுருத்திரியத்தில் எல்லா ஓமங்களைக்குறித்துச் சொல்லப் பட்ட வந்தனைக்கெல்லாம் எங்கள் பிறைசூடியே இடையே சேர்தலால் இவனை சர்வாந்தர்யாமி என்பதற்கு ஐயமில்லை யன்றோ!

ஆரண—ஆகமப்பாவாய்! உங்கள் ஆலகண்டனை அந்தர்யாமி யென்று எந்த நூலும் இயம்பியதில்லை. நான்முகன் சிவனுக் குத்தந்த வரத்தினால், சிவன் § எண்வகை மூர்த்தியாய் விளங் கினன். அதனால் மூவுலகத்திற்கும் சம்பந்தம் அவனுக்குண் டென்பது பற்றி நூல்களில் வந்தனை சொல்லப்பட்டுளது.

ஆகம்—பராபரனல்லாத விஷ்ணுவை, 'நீயே ஜகத்ஸ்வரூபியாவாய்' என்று மாமறை எங்ஙனம் கூறும்?

ஆரண—எசுர்வேதமானது, மேகநீரைக் குறித்து 'நீயே ஆவியா யும், அண்டமாயும், அண்டரண்டமாயும், அன்னமாயும், அமிர் தமாயும், பற்பல தெய்வங்களாயும் விளங்குகின்றனை' எனப் புகழ்ந்துரைத்தது. இஃதல்லாமலும் அக்கினியையும் அந்தண ரையும் சிறந்த தேவதைகளென்று புனைந்துரைத்தது. அது போல உங்கள் முக்கண் மூர்த்தியையும் வேதம் புகழ்ந்துரைத் ததேயன்றி வேறில்லை.'

ஆகம—மடந்தாய்! அந்தணாளரையும், அக்கினிதேவனையும், மேக நீரையும் வேதம் புகழ்ந்துரைத்ததுபோல எங்கள் முக்கணம் மானையும் புகழ்ந்துரைத்ததென்றனை. நீ இங்ஙனம் அறியாது புன்மையுரைத்தாய். எங்கள் திரிபுரசங்காரியாகியவனே ஏக நாயகனாவான். என்பதை மற்றோர் வகையால் விளக்கு வேன்.—எங்கள் ஸ்தாணுஸ்வரூபியாகிய சிவபிரான் நீங்க, மற் றெல்லாத் தெய்வங்களையும் சிம்சுமாரப்பிரஜாபதியின் அவய

§ எண்வகைமூர்த்தி - மண் நீர் தீ காற்று ஆகாயம் சந்திரன் சூரியன் யாகஞ்செய்யும் எஜமானன். காளிதாசர் தாமியற்றிய சாகுந்தலத்தில் "யா ஸ்ருஷ்டி" என்ற மங்கள சுலோகத்தில் சிவன் இந்த அஷ்டமூர்த்தி வடிவா யிருக்கின்றனன் என்றுரைத்ததுங் காண்க.

வங்களாகத் தைத்திரியோபநிடதம் சாற்றியது. இதனால் எங்கள் சிவபிரானே அந்தப் பிரஜாபதியின் சிரசின் ஸ்தானமாவானென்பதும், இங்ஙனம் விளங்குகின்ற இவனே வந்தனைக்குரியவனுவானென்பதும் விளங்குகின்றனவன்றோ!

ஆரண—யான் முன்னுரைத்தபடி வந்தனைக்குரிய தேவர்களும் பலருண்டு. அம்முறைப்படி சிவனையும் வந்தனைப்பாத்திரமாகச் சொல்லியதேயன்றி இவன் ஒருவனே வந்தனைக்குரியவனுவானென்பதில்லை. மேலும் அந்தச் சிம்சுமாரப்பிரஜாபதிக்கு உங்கள் சிவன் சிரஸ்தானமாவானென்று சொல்லவுமில்லை. வந்தனைக்குரிய பாத்திரமாய் விளங்குகின்ற சிம்சுமாரப்பிரஜாபதியைத் திருவஷ்டாக்ஷர ஸ்வரூபியாகவும், மெய்யில் வீறுபுனையும் மூர்த்தியாகவும் விவரிக்கப்பட்டுள்ளன. பாவாய்! நீ முன் மொழிந்தபடி சிவனைச் சிம்சுமாரன்றன் சிரசாக வைத்துக்கொண்டாலும், சிரவுறுப்புக்கு மேலான உச்சி அக்கினி தேவன் என்று சொல்வதினுல் சிரவுறுப்பானவன் முக்யப் பெயரால் மொழியப்பெருனன்றோ! இவையெல்லாம் ஒருபுறமிருக்க, அந்தச் சிம்சுமாரன்றனக்கு இன்னுயிர்க்கிடமாமிதயத்தலத்தை விஷ்ணுவாகச் சொல்லியது. விஷ்ணு புராணத்திரண்டாம் அஞ்சகத்தில் நான்காம் அத்தியாயத்தில் அரி, அவதாரமாய்ச் சிம்சுமார சரீரத்திலிருந்து சிறந்த ஆக்ஞை செலுத்துகின்றுனென்று சொல்லியது. இதனுல் தேவரெல்லாம் சரீரமென்பதும், சரீரி (ஆத்மா) யாய் விளங்குகின்றவன் அரியென்பதும் தெளிவாகின்றனவே. செங்கண்மாலின் அவதாரமாகிய சிம்சுமாரன்றன்னைத் தியானஞ் செய்வார்க்கெல்லாம் வீடுபேற்றை அவன் அருளுவான். சகல வந்தனைக்கும் தாரகனுக விளங்குகின்றவன் இவனே; என்று தைத்திரியம் தெளிவாக எடுத்தியம்பியது. ஆதலால் நாராயணனேவந்தனைக்கெலாம் இறைவனுவான்.

ஆகம—பாவாய்! ருக்குவேதமானது தேவர்களை நோக்கி நீங்கள் முக்கணீசனுக்கு எல்லாவற்றையும் அர்ப்பணஞ்செய்து 'நிஷ்காமியங்களைக் கைக்கொள்வீர்' என்று மொழிந்தது. அதனுல்

வந்தனைக்குரியராகிய தேவர்கட்கும் சிவபிரானே சரண்யனுவான். வேறு வந்தனைக்குரியார் யாருளர்?

ஆரண—ஆகமக்கொடியே! தேவர்களை நோக்கி 'நீங்கள் நமஸ்கார பனைத்தையும் கண்ணுதலோனுக்குச்செய்வீர்க'ளென்று வேத முரைத்ததாகக் கூறினையே. இவ்வுரை வேதத்திலில்லை. தேவர்களை நோக்கி, 'உங்கட்குக் கண்ணுதலோன் தருவன்' என்றது காமியபலனை யாகும். வீடுபேற்றைத் தருவானென்றுரைத்த தில்லை. தேவர்களெல்லாம் வந்தனை செய்வதற்கு உங்கள் உமா பதி உரியவனுவான். அந்த உமாபதியும் வந்தனை செய்வதற்கு எங்கள் இறைவனுகிய நாராயணனே உரியவனுவான்.

ஆகம—எங்கள் முக்கணீசனே யாவர்க்கும் இறைவனுவான். இவனைத் தேவர்களுள் ஒருவனுக மதித்துப் பணிந்திடிற் சீறுவானென்றல்லவோ இவன்றன்னைத் தனியே யழைத்ததாக ருக்கு வேதத்திற் காணப்படுகிறது. மேலும், இந்திரன் பிருகஸ்பதி அக்கினி வாயு வருணன் சந்திரன் அசுவினி தேவர்கள் முதலானவர்களை யெல்லாம் புகழ்ந்து ஒருங்கழைத்து எங்கள் சிவபிரானை மாத்திரம் தனியாக அழைத்ததாக எசுச்சாகை உரைக்கின்றது. இங்ஙனம் எங்கள் இறைவனைத் தனித் தழைத்ததினுல் இவனே ஒப்பற்ற நாயகனென்பது தெளிவாக வில்லையா. அறச்சிறந்தோரையன்றோ பிரித்தழைப்பது.

ஆரண—ஆகமப்பாவாய்! வேதமந்திரத்தில் உங்கள் உமாபதியைத் தனித்தழைத்ததினுல் இவனே பரனுவானென்றனையே. அப்படியானுல் அந்த எசுச்சாகையில் இந்திரனையும், வருணனையும் தனித்தனியே அழைத்ததாகச் சொல்லப்பட்டுளதே. அதனுல் இவர்களும் பரம்பொருள்களாவரோ? நீ இங்கு விரித்தோதிய மந்திரத்தின் பொருளைக் கேட்பாய்.—கொடிய நோயனுகாமல் பிரார்த்தனை செய்துகொள்ளும் சிலர் சிவனை நோக்கி, 'நீயே வைத்தியருக்கும் வைத்தியனுவாய் என்பதை யறிந்தோம்; தேவர்களோடு உன்னையும் சமமாக மதித்து வணங்கவும் மாட்டோம்; அத்தேவக்குழாங்களுடன் உன்றன்னைச்

சேர்த்து அழைக்கவும் மாட்டோம்; இவ்வாறுசெய்வோமாகில் உனக்குக் கடுங்கோபமுண்டாகுமன்றே; இப்பொழுது மருத்துவ வித்தையால் நாங்கள் இன்பமடையும்படி செய்வாய்' என்று இரந்தார்கள். இதனால் சிவனைப் பரதேவதையென்று சாதிக்கலாகுமோ? ஒரு கூட்டத்தவரை யழைத்தபிறகு, அக்கூட்டத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவர்களைத் தனித்தனியே யழைப்பது வழக்கன்றோ! உங்கள் சிவனை அந்த மந்திரம் வைத்தியனென்று சொல்வதால் வானவர்க்குப் பின்னழைப்பது வேதநீதியில் விரும்பிய முறையேயாகும். வைத்தியரான அச்சுவினிதேவதைகளை வேள்வியில் சோமபானச்சுவையருந்தாதிருக்க இவ்வுலகினில் புறக்கணித்திட்டார்கள்; என்று வேதமியம்பும். இது நிற்க, முக்கணீசனை முக்கியனென்றது அங்கழைத்தவர் தம்முள் முக்கியனென்றே கொள்ளத்தக்கது.

ஆகம—மின்னிடைமடவாய்! அபிநயங்களின் விகற்பங்களைத் தெரிவிக்கிற பரதசாத்திரத்தில் நாராயணனுக்குச் சங்கடையாளமும், நான்முகனுக்குத் தாமரைக்குறியும், இந்திரனுக்கு வச்சிரலாஞ்சனையுமான அபினயங்கள் செய்யவேண்டுமென விதித்து, எங்கள் செஞ்சடைச் சிவனுக்கு அஞ்சலி முத்திரை அபினயனஞ்செய்யத்தக்கதென்று விளக்கப்பட்டுளது. இதனால் நமஸ்கார பாத்திரன் எங்கள் சிவபிரான் என்பது தெளிவாகின்றதன்றோ.

ஆரண—ஆகமப்பாவாய்! கடலிலுள்ள ஓடத்தைக் கைவிட்டு மிதக்கின்ற சுரக்குடுக்கையைத் துணையாகக்கொள்ளும் அறிவீனர்களைப்போல் சிறந்த வேதபுராணத்துறைகளால் விடைகூறுதற்காற்றாத நீ பரதசாத்திரங்கொண்டு வெற்றிகொள்ளக் கருதினைபோலும். உன் மதியை என்னென்பேன். திருமாலிற்கு வலம்புரிச்சங்கும், நான்முகனுக்குத் தாமரையும், இந்திரனுக்கு வச்சிரக்குறியும் பரதநூலிற் காணப்படுவனவென்று நீ கூறியதுபோல அந்தப் பரதநூலில் உங்கள் சிவனுக்கு நெற்றிசேர் அதோமுக (கீழ்நோக்கிய) * சூசிமுத்திரை அபிநயம்

* சூசி - ஊசி.

ஓதப்பட்டுள்ளதை நீ யறிந்திலைபோலும். மேலும், பரத சாஸ்திர அபிநயவிகற்பத்தில் சிரஞ்சேர் அஞ்சலி தேவர்க்கும், நெற்றியஞ்சலி சிறந்த குருக்களுக்கும், மார்பில் அஞ்சலி வேதியர்களுக்கும் செய்யத்தக்கனவென்று அஞ்சலி முத்திரை பொதுப்பட வகுத்தோதியது. இன்னும் வராகி என்ற பெண் தேவதைக்கும் அஞ்சலி முத்திரை சொல்லப்பட்டுளது. நாடகசாலையில் பிரமஸ்தான மூர்த்தியாய்ச் சொல்லப்பெறும் நான்முகற்கு விசேடமாகப் புஷ்பாஞ்சலி சொல்லப்பட்டுளது. இங்ஙனம் பொதுப்பட கூறப்பட்ட அஞ்சலி முத்திரையைக் கைக்கொண்டோ உங்கள் முக்கணப்பனுக்குப் பரத்வம் நாட்டப்பார்க்கின்றாய்.

இவை ஒருபுறமிருக்க, நடனம் புரிகின்ற கோயிலில் வாழ்பவன் நாராயணனென்றும், தாளத்திற்றோன்றும் நாதமே சிவன் ஸ்வரூபமென்றும், அந்த நாதத்தினுள்ளுயிராவான் நாராயணன் என்றும், அந்த நாதநல்லிசையினால் அந்த நாரணற்கு அன்பு செய்யலாகுமென்றும், அந்த இசையே அவ்விறைவனை மகிழ்விக்குமென்றும், புனிதமான கானவின்பத்தை நுகர்வார்களெல்லாம் வந்தனைக்குரிய திருமாலின் அருளினால் முக்தி யடைவார்களென்றும், இசையின் வகையனைத்தும் சாமகான விகற்பங்களாமென்றும், சாமத்தின் சுரம் திருமாலின் ஸ்வரூபமென்றும் பஞ்சதாளேசுர நூலில் இராகப் பிரகாணத்தில் வகுத்தோதப்பட்டுள்ளன.

---

சூ-வது, வந்தனைக்குரிய தாரகப்பிரம சோருபத்தைச்
சிவனுக்குபதேசித்த பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! எண்ணுதற்கரிய வந்தனைக்கெலாம் சிறந்த பாத்திரனாய் விளங்குகின்றவன் திருவின் நாயகனாகிய இறைவனே யாவானென்பதை வகுத்துரைப்பேன் :—

பிரமதேவனும், திருமாலும் சிவனும் எவ்வகைத் தேவர்களும் வேதங்களும் † வேதாங்கங்களும், உபநிடதங்களும், பல புராணங்

---

† வேதாங்கங்கள் - சிக்ஷை வியாகரணம் சந்தம் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம்.

களும் சூர்ய சந்திரர்களும், அசுரர்களும், மனிதர்களும் ‡ பன்னிரு சூர்யர்களும் § எட்டு வசுக்களும், * பதினொருருத்திரர்களும், † எட்டுத்திக்குப் பாலகர்களும் காலமும் காலனும் யாகமும் மகாதேவனும் மயேச்சுரனும் மச்சாவதார முதலான ¶ பத்து அவதாரங்களும் இயங்குதிணைப்பொருள்களும நிலைத்திணைப் பொருள்களும் எல்லா வுலகங்களும் மனம் சித்தம் புத்தி அகங்காரமென்ற அந்தக் கரணம் நான்கும் பிராணனும் சர்வாந்தர்யாமியும் பிரணவாக்ஷரமும் தாரகப்பிரமமும் எழு வியாகரணமும் % கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் யோகமும் ஞானமும் அண்டத்தினுள்ளும் புறம்பும் உலாவுவானும் இலக்குமியும் சரஸ்வதியும் அளவற்ற ஆநந்தத்தை விளைவிக்கின்ற அப்பிராகிருத திவ்வியமங்கள விக்ரஹத்தையுடையவனும் நீயே. இங்ஙனம் ஒத்தாருமிக்காரு மில்லாது விளங்குகின்ற அரிரூபியாகிய பகவானைத் துதித்து, அவனது அங்கலக்ஷணங்களைக் கூறத்தொடங்கிப் பதந்தோறும் நம: நம: என்று நாட்டிச் சென்னி வந்தனைக்குரியவன் அந்தத் திருமாலே யென்று யாச்சவற்கியோப நிடதம் பரத்துவத்தைத் தெரிவித்தது.

சிறந்த பெரிய வேள்வியின் வடிவான நாராயணனை அன்பினால் பணிந்து 'அரியே! உன்னைப் பணியும் இந்த வந்தனைகளன்றியும்,

‡ பன்னிரு சூரியர்கள் - தாத்துரு சக்கரன் அரியமான் மித்திரன் வருணன் அஞ்சுமான் இரணியன் பகவான் திவாச்சுரன் பூடன் சவித்திரு துவட்டன்.

§ எட்டு வசுக்கள் - தரன் துருவன் சோமன் ஆபச்சைவன் அனலன் அனிலன் பிரத்தியூசன் பிரபாசன்.

* பதினொரு ருத்திரர் - மாதேவன் சிவன் உருத்திரன் சங்கரன் நீலலோகிதன் ஈசானன் விசயன் வீமதேவன் பவோற்பவன் கபாலி சௌமியன்.

† எட்டுத்திக்குப் பாலகர் - இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன்.

¶ பத்து அவதாரம் - மச்சம் கூர்மம் வராகம் வாமனம் நரசிங்கம் பரசுராம ஸ்ரீராம பலராம கிருஷ்ண கற்கி.

% கிரஹங்கள் - சூரியன் சந்திரன் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி இராகு கேது.

அந்தர்யாமியான உனது சரீரபூதர்களாயிருக்கின்ற தேவர்களை வணங்கிய வந்தனை யனைத்தும் உன் பொருட்டே யாம்' என்று எசுர்வேதம் எட்டாம் அட்டகம் இருபத்தொராம் பருச்சம் மூன்றும் அநுவாகம் இனிதெடுத்தோதியது. பிர்ம்மஸ்வரூபனாய் விளங்கும் விஷ்ணுவுக்கே நமஸ்காரமென்று பிரமசத்து மந்திரம் சொல்லியது. திருமாலின் அவதாரமாகிய சிஞ்சுமாரப்பிரஜாபதியே எல்லா வந்தனைக்குரிய பாத்திரனுவானென்று தைத்திரியோபநிடதம் சாற்றுநின்றது. அச்சுதனாகிய இறைவனே சிறந்த வந்தனைக்குரியவனுவானென்று பாரதகாதை பகர்ந்தது. பிரமதேவன் திருமாலின் பரதத்துவத்தைப் பரக்கப் புகழ்ந்துரைத்து அவனடி வணங்கினன் என்பதைப் பாகவதத்திற் காணலாம். முத்தொழிலும்வல்ல பராபர மூர்த்தியாய்த் திகழ்பவன் விஷ்ணுரூபியான இறைவனேயென்று விஷ்ணு புராணம் விரித்துரைத்தது.

சிவன் ஓர் பொய்கைக்கரையிற் பிரசேதர்கள் முன்னிலையில் செம்பொன்மலைபோல் வந்துதோன்றி, அவர்களை நோக்கி நாராயணன்றன் மகிமையனைத்தையும் துதித்து உபதேசித்தான். அது வருமாறு.—

உலககாரணனேநமமிக்கபேரோதுபேர்பெறுமுத்தமனேநம
அலகிலாதுயருஞ்சருவாந்தரியாமியேநமவச்சுதனேநம
இலகுமுத்தொழினாயகனேநமவெர்தையைத்தருமுந்தியனேநம
பலவுயிர்க்குயிராகயிருந்துமோர்பற்றிலாதபராபரனேநம

மங்கலக்குணபூரணனேநமவாய்த்தமுத்தியளிப்பவனேநம
துங்கவேள்விச்சொரூபகனேநமசுத்தசாத்துவிதச்சொரூபாநம
சங்குசக்கரப்பாணியனேநமசச்சிதானந்தமேநமவென்றுகொண்டு
அங்குநின்றுபணிந்தமையாழிசூழவனியோர்நின்றறியப்பகருமே

ஜகத்காரணனும், அவன்றன் சிறந்த நாமத்தைத் துதிக்கின்றவர்களால் அடையப்பெறுமுத்தமனும், அறப்பெரியனும், எங்கும் நிறைந்தவனும், தன்னையடைந்தவர்களை என்றும் நழுவவிடாதவனும், முத்தொழிற்குங் கர்த்தாவாயும், என் தந்தையாகிய பிரமதேவனைத்தந்த உந்தியையுடையவனும், எவ்வுயிர்க்கும் உயிராய்ப் பிரியாதிருந்தும் அவற்றின் தோஷம் தன்னைச் சாராதிருப்பவனு

யும், சமஸ்த கல்யாணகுணபூரணனையும், முக்தியை யளிப்பவனையும், வேள்வி வடிவினனையும், சுத்தசாத்விக ஸ்வரூபனையும், சங்குசக்கரக் கையனையும், அழியாத ஆநந்தத்தை யுடையவனையும் விளங்கும் இறைவனே! உன்றன்னை நமஸ்கரிக்கின்றேன்; என்று துதித்தனன். இங்ஙனம் துதி செய்ததைப் பிரசேதர்கள் கேட்டு நாராயணனே பரதேவதையெனத் தெளிவுற்றார்கள். இவ்விவரத்தைப் பாகவதம் நாலாம் ஸ்கந்தம் முப்பத்து மூன்றாம் அத்தியாயத்திற் காணலாம்.

தர்மபுத்திரர் சரசயனத்திலிருக்கிற பீஷ்மாசார்யரைத்துதித்து நின்று அவரை நோக்கி, 'உலகிற் பராபரனாய் விளங்குகின்றவன் யாவன்? முத்தியை யடைவதற்கு மார்க்கம் எது? எல்லா வந்தனை யும் எவர்க்குரித்தாகும்? ஆராதனைக்குரியவன் யாவன்? என்று வினவினர். அப்பொழுது பீஷ்மாசார்யர் தர்மபுத்திரரை நோக்கி, 'உலகிற்கெல்லாம் மூலகாரணனான முகுந்தனே துதிக்க நினைக்க அர்ச்சனை செய்ய முக்யபாத்திரனாவான்; முக்திபெறுகைக்கு அவ் விறைவனே நற்றுணையாவான்; இவனையொழிய வேறுபாயம் யான் கண்டதில்லை' எனப் பகர்ந்தனர். இதனைப் பாரதத்திலுள்ள ஆநுசாதனத்தில் தெளிவாகக் காணலாம்.

இஃதன்றியும் ஆகாயத்தினின்றும் விழுகிற மேகநீர்த்திவலைகள் பெருக்கிட்டுக் கடலைச்சார்வதுபோல, * பல தேவர்களைக் குறித்து இறைஞ்சிடும் வந்தனையெல்லாம் கேசவனையே சாரும். இவ்விஷய மும் பாரதத்திற்கண்டது. மேலும், பிராமணர் அநுதினமுஞ்செய் கிற சந்தியாவந்தனகாலத்தில் வெவ்வேறு தேவதைகளை மனத்தினால் வந்தனை செய்தபிறகு சொல்கிற ‡ சுலோகார்த்தமும் இங்குரைத்த விஷயத்தை வலியுறுத்தும்.

---

* "நும்மின்கவிகொண்டுநும்மிட்டதெய்வமேத்தினால்
செம்மின்சுடர்முடியென்திருமாலுக்குச்சேருமே"

என்று பெரியார் பணித்ததும் இதனை வலியுறுத்தும்.

‡ "ஆகாசாத்பதிதம் தோயம் யதா கச்சதி சாகரம்
ஸர்வதேவ நமஸ்காரம் கேசவம் ப்ரதிகச்சதி"

ஆகமமடந்தாய்! நீ இங்கு நமஸ்கார பாத்திரனுகக் கூறிய சிவனுலும் வணங்கத்தக்க பெருமையுடையவன் நாராயணனே யாவன் என்ற உண்மையை வேத இதிஹாஸ புராணுதிகளால் நிறுவினேன்.

---

எ-வது, மங்கலகுணப் பரிச்சேதம்.

இங்ஙனம் கூறக்கேட்ட ஆகமவல்லி சொல்லத்தொடங்கினுள்.—பாவாய்! மாயனுகிய திருமாலே வந்தனைக்குரிய பாத்திரன் என்றுய். எங்கள் சிவபிரான் வந்தனைக்குரிய பாத்திரனல்லனுகில், அவன் சத்குணமமைந்த போற்றத்தக்க மேலோர் புகழ்ந்திடும் பகவற்சப்தவாச்சியனுவனே? என்றுள். இதனைக்கேட்ட ஆரணவல்லி நகைத்து ஆகமவல்லியை நோக்கி, மின்னே! இரவலாக ஆபரணத்தை வாங்கி யணிந்துகொண்டு, 'இஃதெமக்குப் பொருத்தமாயிருக்கிறது' என்று தெருவினில் உலாவித்திரிபவர்போலச் சிவனையும் பகவானென்றுய். நீ இங்ஙனம் உரைத்த புதுமையை உள்ளவாறுணர்வாயாக, என்றனள்.

அப்பொழுது ஆகமவல்லி எங்கள் முக்கட்பிரானே பகவானென்ற சொல்லிற்குரியவனுவானென்ற உண்மையை உனக்கேற்க ஈண்டு விரித்துரைப்பது மிகையேயாம். நீ இங்குரைத்த உவமை உனக்கே யமையுமென்று மேலுஞ் சொல்லத்தொடங்கினுள்.—பகவானென்ற சொல்லிற்கு ஐசுவர்யம் வீரியம் ஞானம் கீர்த்தி வைராக்கியம் சம்பதையென்ற ஆறு மங்கலகுணங்கள் பொருளாம். இக்குண மனைத்தும் எங்கள் சிவபிரானுக்கே அமைந்துள்ளன வென்பதை ஈண்டெடுத்து விளக்குவேன்.—ஈசுவர சப்தத்தால் ஐசுவர்யத்தைச் சொல்லும். உருத்திர சப்தத்தால் வீரியம் விரித்துக்கூறும். சர்வ சப்தமானது வரம்பிலாத ஞானத்தைக் குறிப்பிடும். சிவ சப்தமோ கீர்த்தியை விரித்துரைக்கும். * காமரி சப்தம் வைராக்கிகத்தைப் போதிப்பிக்கும். சிரேஷ்ட சப்தம் சம்பதையைக் குறித்துணர்த்தும். இந்தச் சொல்லால் எண்ணிய குணங்களாறும் உமாபதியாகிய எங்கள் இறைவனுக்கே யுள்ளனவாம்.

---

* காமாரி என்று சிவனுக்கோர் பெயருண்டு.

இங்ஙனங்கூறிய குணங்களன்றி நியமனம் § திருதி சிருஷ்டி தவம் பொறுமை சாந்தம் சத்தியம் தருமம் முதலிய அளவிடமுடியாத குணங்களெல்லாம் எங்கள் பிரானுக்கே இயல்பாக அமைந்துள்ளன. ஆதலால் பகவன் என்றுரைக்கின்ற நாமம் எங்கள் உமாபதி தன்னையே சாரும் என்றனள்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி சொல்லத் தொடங்கினள்.—ஆகமப்பாவாய்! பிறையேறு செஞ்சடையானை மங்கலகுணங்களாலே அளவிடுதற்கு அரியவனென்றும், அவனே பகவானென்றும் வேத முதலிய சிறந்த பிரமாணங்காட்டி நிறுவாமல் கற்பனைக் கதை சொல்வாரைப்போல் பெயர்கள்கொண்டு உவமையாற் பொருளைக்கூட்டிச் சூழ்ச்சியாலுரைத்தால் அதனை மெய்யெனக் கொவ்வாருண்டோ?

பெயர் மாத்திரத்தால் பரத்துவத்தை நிச்சயித்துரைப்பது பொருந்தாது. இதனை விளக்குவேன்.—சர்வன் சித்தன் பகவன் என்ற பெயர்கள் அருகனுக்கும் புத்தனுக்கும் வழங்குவதுண்டு. இதனால் இவர்களையும் பரதேவதைகள் என்று சொல்லிவிடலாமா? நக்கனாகிய உங்கள் சிவனைப் பகவானென்று நீ நிலைநாட்டிக் கூட்டிவைத்த ஈசுவரன் சிவன் முதலிய சொற்களுக்கும் முக்கியப் பொருளாய் விளங்குகின்றவன் முகுந்தனேயென்று முன்னரே விரித்துரைத்தேன். அதனை இப்பொழுதும் எடுத்து விளக்கினால் ஸபையிலுள்ளோர்கட்கு அடுக்காதன்றோ!

நாராயணனே குற்றமற்ற கல்யாணகுணங்களாலே பூரணன் என்பதற்கு வேத இதிஹாஸ புராணங்களினின்றும் பிரமாண மெடுத்துரைப்பேன்.—நக்ஷத்திரக் கூட்டங்களை ஒரு வகையான் எண்ணினாலும் நாராயணனுடைய கல்யாணகுணங்களை எண்ணுதற்கரிதாகும்; என்று ருக்குவேதம் இரண்டாம் அட்டகம் இரண்டாமத்தியாயம் இருபத்துநான்காம் வர்க்கத்திற் குறிப்பிடப்பெற்றுளது. உலகிற்பிறந்தவர்களும் இனிப் பிறப்பவர்களும் ஒருங்கு

§ திருதி—களிப்பு.

திரண்டு செம்மையுற்ற மனத்தினராய்த் திருமாலின் திவ்யகுணங்களைப் பெருக்கிக் கணக்கிடுவதற்கு முயன்றாலும், அவை எண்ணற்கரியனவாம்; என்று ருக்குவேதம் மற்றோர் பகுதி எடுத்தோதியது.

விஷ்ணுவின் வீர்யகுண முதலியவற்றை 'எண்ணிக் காண்கின்றோம்' என்று துணிவது, புழுதிமணலை எண்ணிக் கணக்கிடுவது போலாகும்; என்று எசுர்வேதம் முதற்காண்டம் எடுத்தோதியது. நாராயணனாகிய இறைவனே பாபம் பந்தம் துன்பம் பசி முதலியவை யற்றவனென்றும், கல்யாணகுணமெலா முடையவனென்றும், இக்குணங்கள் அவன்றனக்கு இயல்பாகவே அமைந்துள்ளனவென்றும் சாவித்தை என்ற நூல் விரித்துரையாநின்றது. எல்லா வுலகத்தவராலும் புகழ்ந்துகொண்டாடப்பெற்ற இராமபிரானை நாற்பத்தாறு முறை வேறு வேறு மந்திரங்கடோறும் வகைபெற வுரையாநிற்குமென்று யாச்சவர்க்க உபநிடதம் நாட்டியது. கணக்கற்ற கல்யாண குணமெல்லாம் நாராயணனுக்கே உள்ளனவென்று எண்ணித் துணிகின்றவரே முத்தராவரென்று சுபாலோபநிடதஞ் செப்பாநிற்கும். திருமாலே பகவற்சப்த வாச்சியனுவானென்று கெர்ப்போபநிடதம் உரையாநிற்கும்.

கடல் எங்கும் சூழ்ந்துகிடக்கின்ற மணலெலாம் எண்ணினாலும் பற்பநாபன்றன் கல்யாணகுணங்கள் எண்ணற்கரிய என்று மச்சியபுராணம் வகுத்துரைத்தது. வில்லையேற்றி ஆகாயத்தை லக்ஷ்யமாக்கித் தொடுக்கப்பெற்ற அம்பானது அந்த ஆகாயத்திற் சிறிது மிடமின்றிச்செல்லச் சக்தியற்று அழிவதுபோல, நன்கு கற்றுணர்ந்த பெரியார் நாராயணன்றன் கல்யாணகுணங்களைத் தம் புத்திக்கேற்றவாறு புகழ்ந்துரைப்பார்களென்று விஷ்ணு தர்மம் விரித்துரைத்தது. செங்கண்மாலே! உன்றன் திருவவதாரம் அநந்தத்தில் ஒரு திருவவதாரத்தில் அமைந்துள்ள கல்யாணகுணங்களை ஐயமற்ற திடங்கொண்ட ஞானியர் பல்லாண்டுகள் முயன்றெண்ணினாலும் அவை யெண்ணலாகா; உலகில் எண்ணுவதற்கரிய மணல் பனித்திவலை நக்ஷத்திரக்கூட்டம் முதலியவற்றை எண்ணினாலும் எண்ணலாம்; திருமாலின் திவ்யகுணங்கள் எண்ணுதற் கெளியன

வாமோ என்று * பிரமதேவன் பூமியில் வந்து கண்ணபிரானைத் தோத்திரஞ் செய்தனன். இதனை, பாகவதம் பத்தாம் ஸ்கந்தம் பதினாலாமத்தியாயம் வகுத்துரையாநிற்கும். சகல மங்கலகுணங்களால் அளவிடப்பெறாதவனும், அணிமா முதலிய ‡ அஷ்டஸித்தியாகிய ஐசுவர்யத்தையுடையவனும், சுத்தசாத்விக சம்பன்னனும், பகவானென்ற பெயருக்குரியவனும், முடிவற்றவனும் திருமாலேயாவனென்று சத்திரயாகஞ்செய்தகாலத்தில் சரஸ்வதி நதிதீரத்தில் முனிவர்கள்கூடி நிரூபணஞ் செய்தார்கள். இவ்விவரத்தைப் பத்தாம் ஸ்கந்தம் எண்பத்துநான்காம் அத்தியாயத்தில் பிருகுவிஞ்ஞானத்திற் காணலாம்.

பாகவதத்திற் சுருதி துதிப்பதாகச் சொல்கிற சுருதி கீதையானது திருமாலே அளவிடுதற்கரிய கல்யாணகுணங்களையுடையவனென்றும், அவனே பகவற்சப்தவாச்சியன் என்றும், முகில்வண்ணனென்றும், பிரமதேவன் முதலானவர்களையும் பிரகிருதி சம்பந்தராக்குமவனென்றும், எல்லாப் பொருள்களிடத்தும் நிறைந்து விளங்குகின்றவனென்றும், இங்ஙனம் நிறைந்து விளங்கியும் அப்பொருள்களின் தோஷமில்லாதிருப்பவனென்றும் இவ்வாறு பலவாறாகப் போற்றித் துதித்தது. பிரமதேவன் பசுக்கன்றுகளைக் கவர்ந்துசென்றநாளில் மீண்டுவந்து கண்ணபிரானை நோக்கி நீயே மங்கலகுணங்கட்கெல்லாம் பதியாய் விளங்குகின்றனை என்று புகழ்ந்துரைத்தனன். இவ்விவரத்தைப் பதுமபுராணம் ஐம்பத்தொன்றும் அத்தியாயத்திற் காணலாம்.

---

* பிரமதேவன் கண்ணபிரான்றன் மகிமை யறியாமல் அப்பிரான் மேய்த்துக்கொண்டிருந்த பசுக்களைக் கவர்ந்துகொண்டுபோய் ஒரு தனியிடத்தில் மறைத்து வைத்திருந்தான். அதன்மேல் கண்ணபிரான் தன் சங்கற்பத்தால் பசுக்களைச் சிருஷ்டித்து எப்பொழுதும் மேய்த்துக்கொண்டிருப்பது போலிருந்தான். இங்ஙனம் நாட் பல சென்றபிறகு பிரமதேவன் தானறியாது செய்த செயலுக்கு வருத்தமுற்றுக் கண்ணபிரானை வணங்கிப் பிழையைப்பொறுத்தருள வேண்டுமென வேண்டினன்.

‡ அஷ்டசித்தி – அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

ஆறு திவ்யகுணங்களாற் சிறந்து விளங்குகின்றவன் திருமாலே யாவன்; உண்மையாக இவனன்றிப் பிறரொருவரும் பகவானுவாரில்லை; என்று அகிர்ப்புத்னசம்மிதை அறையாநிற்கும். சாண்டில்ய ஸ்மிருதியிலும், விஷ்ணு புராணத்தில் துருவனுக்குபதேசித்தவிடத்திலும், மகாபாரதத்திலும் § திருத்துவாதசாக்ஷர மந்திரமாகிய பிரம வித்தையினில் பெரியோரருளிச்செய்கிற பகவனமம் திருமாலுக்கே அசாதாரணமாகவுள்ளதாமென்று தெளிவாகச் சொல்லப்பட்ட விஷயம் உலகமறியுமன்றே. ஞானம் சக்தி பலம் ஐசுவர்யம் வீர்யம் தேஜஸ் என்ற ஆறு குணங்களும் திருமாலுக்கேயுள்ளனவென்று மந்திரசாஸ்திரம் தந்திரப்பிரகரணம் சாற்றும். ஜன்ம மரண முதலிய தீக்குணமில்லாதவனும், மங்கலகுணம் நிறைந்துள்ளவனும் நாராயணனே யாவனென்று பிரமாண்ட புராணம் விரித்துரைத்தது. மங்கலகுணம் நிறைந்து விளங்குபவன் மாலேயென்று இராமகாதையும் விரித்துரைத்தது. ஞானவிருத்தராகிய முன்னோர், 'எல்லா நற்குணங்களும் நிறைந்து விளங்குபவன் திருமாலே யாவன்' என்றெனக்குபதேசித்தனர்; அத்திருமாலும் அசோதை குமரனாகிய கண்ணபிரானே யாவன் என்றறுதியிட்டிருப்பேன் என்று பீஷ்மாசாரியர் உரைத்தனர். இவ்விவரத்தைப் பாரதம் சபாபருவத்திற் காணலாம்.

திருப்பாற்கடலில் அறிதுயிலமரும் அமலன்றன் கல்யாண குணங்களை எல்லா வுலகத்தவரும் ஒருங்குதிரண்டிருந்து அநேகமாயிரகாலம் ஆய்ந்தாய்ந்தெண்ணினும் அக்குணங்கள் கணக்கிட முடியா என்று பலதேவன் அருளினன். இதுவும் பாரதத்திற் கண்டது. நான்முகப்பிரமனைப்போலப் பல வாழ்நாட்களும், அநேக முகமும், நாவும், மாச்சரியமில்லாத நெஞ்சுமுடையவர்களாயிருந்தாலும் திருமாலின் மங்கலகுணங்களில் பதினாயிரத்தொருபாகமேனும் சொல்லவல்லாருளரோ? என்று சிவபிரான் துதித்துரைத்தனன். இவ்விவரத்தை வராகபுராணம் எழுபத்தைந்தாம் அத்தியாயத்திற் காணலாம்.

---

§ திருத்துவாதசாக்ஷர மந்திரம்—ஓம் பகவதே வாசுதேவாய நம:

அ-வது, பகவற்சத்தார்த்த விவரணப் பரிச்சேதம்.

புருஷோத்தமன் என்கிற பெயரும், பகவானென்ற நாமமும் வாசுதேவனுக்கே யுரியனவாமென்றும், ஞானம் சக்தி பலம் ஐசுவர்யம் வீர்யம் தேஜஸ் என்ற ஆறு குணங்களும் பகவற்சப்தத்தின் பொருள்களாமென்றும், இக்குணமெல்லாம் துளபமாலுக்கே இயல்பாகவுள்ளனவாமென்றும், இந்தத் திருமால் நீங்கிய ஏனையோர்களைப் பகவனென்பது உபசாரமாமென்றும் பராசரபுராணம் பகுத்துரைத்தது.

வேதமும் இவ்வாறுரைத்த உரையினாலும், ஸ்மிருதிகள் அதற்கேற்ப விளம்பிய விவரத்தாலும், புராணமெல்லாம் சொல்லிய கட்டுரையினாலும் இதிஹாஸத்திற்கண்ட பிரமாணத்தாலும், பகவத்சம்பந்தமென்றும், பரமபாகவதரென்றும், பகவத்கீதையென்றும், பாகவதமென்றும் திருமாலின் சம்பிரதாயம் தன்னை வழங்குகின்ற உலக திருஷ்டாந்தத்தாலும் பகவன் என்ற நாமம் நாராயணனுக்கே அசாதாரணமாகவுள்ளதொன்றாம். இந்தப் பகவன் என்ற நாமம், மங்கையோர்பாகனாகிய சிவனையும் குறிப்பிடுமென்பது, சூரியபகவான், சந்திரபகவான், அக்கினிபகவான் என்று பிறரைச் சொல்வதுபோல உபசாரமாகும்.

---

## உ-வது, உபாசனைப் படலம்.

---

### க-வது, சிவவுபாசனைப் பரிச்சேதம்.

ஆரணவல்லி இவ்வாறுரைத்ததைக்கேட்ட ஆகமவல்லி சொல்லத்தொடங்கினாள்.— ஆரணநங்காய்! பகவான் என்ற நாமம் செங்கண்மாலினைக் குறிப்பிடுமாகில் வேதம் எங்கள் சிவபிரானை உபாசனைப் பொருளென்று செப்புமோ என்றாள்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி அவளை நோக்கி, அணங்கே! உங்கள் தாழ்சடைச்சங்கரனை வேதம் உபாசியன் என்று சொல்லியதுளதேயானால் அதனைத் தெளிவாய் நிரூபித்துரைப்பாய். அங்ஙனமுரைப்பையேல் வெற்றியுமுனதே; அந்த முக்கண்ணனே பரதேவதையாவானென்றாள்.

இவ்வுரைகேட்ட ஆகமவல்லி அகமகிழ்ந்து, மறைநங்காய்! வேதமனைத்தும் எங்கள் சிவபிரானே உபாசியன் என்றுரைத்ததை நீ ஒப்புக்கொள்ளும்படி எடுத்துரைப்பேன். அதனை நீ மறுத்துரைப்பையேல், கல்வியுமுனதே; கேள்விக்கருத்துமுனதே; சொல்லும் சொல்வன்மையுமுனதே; ஞானத்துணிவுமுன்றனதே; வெற்றியுமுனதே; உங்கள் விஷ்ணுவும் பரனே; என்று பல பிரமாணங்களை எடுத்துரைக்கத் தொடங்கினாள்.—

பல வேதசாகைகளிலும் உபநிடதங்களிலும் சொல்லப்பட்ட உபாசிய வஸ்துவை ஒப்பற்ற நாராயணோபநிடதம் துணிந்து அவ்வுபாசிய வஸ்து இத்தன்மையதென யாவரும் ஒப்புக்கொள்ளும்படி உரைத்தது. நன்குணர்ந்த பெரியோர்களாற் புகழப்பெற்ற மூன்றநுவாகத்தில் முதலநுவாகம், அன்பருக்குச் சிறந்த முக்தியை யளிப்பவனும், ஜகத்துக்குக் காரணனாயிருப்பவனும் எவனோ? அவனேதான் ஒப்புயர்வற்றவனாயிருத்தல்வேண்டுமென்று பொதுவாக வுரைத்தது. அதன்பிறகு அவ்வொப்புயர்வற்றவன் பிரணவ வாச்சியனாகிய மகேச்சுரனாவானென்று தெளிவுறச் சிறப்பாக எடுத்தோதியது. இதனால் உபாசியத்துவம் எங்கள் சிவபிரானுக்கே உள்ளதென்று தெளிவாயிற்று.

இங்ஙனமுரைத்ததற்கேற்ப ஏனைய மூன்றநுவாகங்கள், உபாசியவஸ்துவின் ஸ்வரூபத்தை நிர்ணயித்துரைக்க வந்தவிடத்தில் கிருஷ்ணபிங்கலன் விருபாக்ஷன் என்ற பெயர்களால் சுட்டியுரைத்தன. முதலநுவாகமும், இறுதியநுவாகமும் எங்கள் கண்ணுதலோனையே உபாசியனெனச் செப்பின. இடையநுவாகம் மாத்திரம் நாராயணன் உபாசியனென வுரைத்தது. இதனை ஆராய்ந்து பார்ப்போமாகில் உபாசியத்தும் எங்கள் மகேச்சுரனுக்கு இயல்பாகவே அமைந்துள்ளதென்பதும், நாராயணனுக்கு அத்தர்மம் மகேச்சுரனடியாக வந்துள்ளதென்பதும் வெளியாகும். மகேச்சுரனடியாக நாராயணனுக்கு உபாசியத்துவம் எவ்வாறுவந்ததென்பதை விளக்குவேன். மகேச்சுரனது ஐக்கிய பாவனையினால் நாராயணனுக்கு உபாசியத்வமுண்டாயிற்று. இதனால் இவனைப் பரனெனப் பகர்கின்றனர். ஆனால் ஐக்கிய பாவனையால் ஒன்றன் தர்மம் மற்றொன்

றற்கு எப்படி உண்டாகுமென்று சந்தேகமுதிக்கக்கூடும். அதற்குச் சமாதான முரைக்கின்றேன்.— மந்திரவாதியர் கருடபாவனையால் கருடனாவதைக் காட்டலாமன்றே.

இவையொருபுறமிருக்க, ஈசுவரோபாசனையை யாவரும் விரும்புவதற்கு மகேச்சுரபாவனையால் திருமாலும் பரனெனப்பட்டானென்று உபநிடதம் துதிபரமாய்ச் சொல்லியதென்று பொருள் கொள்வதற்குப் பொருந்துகின்றதனாலும், இஃதல்லாமலும் நாராயணனை முன்னருரைத்து, அதற்குமேல் தாமரைகோசமாகிய இருதயத்திலும், அக்கினி மத்தியிலும் பரமாத்மா தங்கியிருப்பனென்று தெளிவாய்ச் சொல்கின்றதனாலும், இங்கு இருதயஸ்தானம் நாராயணன் என்று சொல்லாதிருந்தாலும் அந்த ஸ்தானம் நாராயணனேயென்று பொருள் கொள்வதற்கு உசிதமாயிருப்பதாலும், கண்ணன் அருச்சுனனை நோக்கி, 'நான் உனக்குச் சிறந்த ஞானக்கண்ணைக் கொடுத்தேன்; உன்னைத் தூண்டுகின்ற என்னுடைய ஈசுவரபாவனையைப் பார்ப்பாய்' என்றுரைத்தமையாலும், நாராயணோபநிடதம் சங்கரனை உபாசியனெனவும், திருமாலை உபாசகனெனவும் நாட்டியுரைத்தது. இதனை இவ்வுலகம் நிச்சயமாயறியுமன்றே.

முன்னுரைக்கப்பெற்ற உபநிடதங்கள் பிறைசூடியாகிய இறைவனுக்கு உபாசியத்துவமுள்ளதென் றுரைத்திருக்குமேல், பிரமன் இந்திரன் என்ற சொற்களும் சிவனைச் சுட்டியுணர்த்துமோவென்னில்;— கூறுவேன்.— எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பதற்குக் கர்த்தாக்களா யமைந்த மூவரில் ஒருவனைத் தொழிற் கதிகாரம் பூண்டு சிவனெனும் பெயர்படைத்து உயிர்களை யழிப்பன். அவனையே அவ்வுபநிடதங்கள் தோத்திரஞ்செய்தன. இங்ஙனம் தோத்திரம் செய்தற்குரியவனாகிய இவனே பிரமன் இந்திரன் என்ற சொற்களாலும் சொல்லப்படுவான். இங்ஙனம் பிரமன் இந்திரன் என்ற சப்தங்கள் சிவனைக் குறிப்பிடுமானால், நாராயணன் என்ற சொல்லும் சிவனைச் சுட்டியுணர்த்துமோவென்னில்;— உணர்த்தாது. நார+அயநம் = நாராயநன் என்று வரற்பாலது ஒருவற்குப் பெயராயிருக்குமேல் வருமொழியிலுள்ள

நகாம் ணகரமாகி நாராயணனென்று வருமென * விதியிருப்பதால் இந்த நாராயணன் என்ற சொல் சிவனைக் குறித்துணர்த்தாது.

இஃதல்லாமலும் நாராயணனை விசுவம் (உலகம்) என்றும், சிறந்த வேள்வியென்றும் சொல்லிய வேதங்கள் எங்கள் சிவபெருமானை விசுவநாதன் என்றும், வேள்வியின் பதியென்று முரைத்துப் பரனென நாட்டும். வைஷ்ணவதந்திரத்தில் திருமாலைப் பிரகிருதியென்று சொல்லியிருப்பதால், வேதத்தில் நிமித்தகாரணனென்று சொல்லப்பெற்ற ஒருவன் எங்கள் உமாபதியாகிய இறைவனே என்பது நிச்சயம். திருமாலையும் வேதங்கள் விசுவபதியென்றும், வேள்வியின் பதியென்றும் உரைத்ததை ஆராய்வோமாகில், அவை உபசாரவழக்காமென்பது விளங்கும். எங்கள் சங்கரனையும் வேதங்கள் விசுவம் என்றுரைத்தன. இவன் விசுவகாரணனாயிருக்கையால் காரணத்தைக் காரியமாக உபசரித்துக் கூறியதேயன்றி இஃதோர் புதுமையில்லை.

உமாபதியின் உபாசனையைத் தெளிவாகச்செப்பிய சாகைக்கு நாராயணோபநிடதமென்று பெயர் வழங்குவது பொருந்துமோ வென்னில்;—நாராயணமுனி காண்கையாலே அந்தச் சாகைக்கு அப்பெயர் வந்ததேயன்றி, நாராயணனைப் பரத்துவம் நாட்டுவதால் அப்பெயர்பெற்றதில்லையென் றறியத்தக்கது. சதவுருத்திரியத்தில் நமசிவாய என்ற பஞ்சாக்ஷர மந்திரம் சொல்லப்பெறுவதால் அது

---

* "பூர்வபதஸ்தாந்நிமித்தாத்பரஸ்ய நஸ்ய ணஸ்ஸம்ஜ்ஞாயாம்"........உ-ம்—கர+நஸ: = கரணஸ:.

(இ-ள்.) நிலைமொழியிறுதியிலுள்ள ரகரத்தின் முன்னர் வருமொழியிலுள்ள நகரமானது ணகரமாகவரும்; ஒருவனுக்குப் பெயராயிருக்குமாகில்; எ-று. கர+நஸ: = கரணஸ: என்ற உதாரணத்தாலறியலாம். "விஷ்ணுர் நாராயண கிருஷ்ண:" என்று நிகண்டில் நாராயணன் என்ற பெயர் திருமாலிற்கேயுரியதென்று குறிப்பிடப்பெற்றுளது. அதனால், நார+அயநம் = நாராயநம் என்று வாராமல் அயநம் என்ற வருமொழி, ரகரவிறுதியினையுடைய நிலைமொழியின் பின்வந்ததினால் இம்மொழியிலுள்ள நகரம் ணகரமாகி நாராயணன் என்று வழங்கப்பெற்றது. இந்த நாராயண நாமத்திற்குப் பாஷியஞ் செய்தவர்களும் இது, திருமாலிற்கே அசாதாரணமான திருநாமமென்று நிரூபித்துள்ளார்கள்.

மேன்மை பெற்று விளங்கியதுபோல, நாராயணேபநிடதத்தில் பஞ்சப்பிரமம் சொல்லப்பட்டுள்ளதால் அது மேன்மை பெற்று விளங்குகிறது. அந்த நாராயணேபநிடதத்தில் உருத்திரனிடத்திற் பிரமதேவன் தோன்றினனென்று தெளிவாக ஓதப்பெற்றுள்ளதினால், நான்முகன் செங்கண்மாலிடத்தில் தோன்றினனென்பது தகாது.

கடந்துபோய ஓர் கற்பகாலத்தில் பிரமதேவன் திருமாலுடைய வயிற்றிற் புகுந்து வேறு புறப்பட வழி தெரியாமல் மயங்கி, அந்தத் திருமாலின் நாபிகமலத்தின் வழியாகப் புறப்பட்டான். ஆதலால் பிரமன், தாமரையிலிருந்து தோன்றினவனெனப் பெயர் பெற்றனன். மாயனாகிய திருமாலும் பிரமதேவன் வயிற்றிற்புகுந்து ஓர் பிலத்தின் வழியாக வந்தனனாதலால், அவன் கசனெனும் பெயருடையவனாயினன். இந்தப் பிரமன் விஷ்ணுவென்ற இருவரும் ஒருவருக்கொருவர் சரீரம் மாறிப்புகுந்து புறப்பட்டனரேயன்றிச் சம்பந்தத்தால் ஒருவருக்கொருவர் தோன்றினவரல்லர். இவ்விருவரும் எங்கள் உருத்திரனிடத்திற் றோன்றினர். இவ்விவரமெல்லாம் சிவாகமத்திற் காணலாம். இதற்கேற்பச் சிவபிரானது இரண்டு தொடைகளிலிருந்து பிரமனும் விஷ்ணுவும் தோன்றினரென்று லிங்கபுராணம் விரித்துரைத்தது. எல்லா வுலகங்களிலுமிருக்கின்ற இயங்குதிணை நிலைத்திணைப்பொருள்களெல்லாம் அழிந்தவிடத்திலும் அழியாது நித்தியனாயிருக்கிற சிவபெருமானை நான்முகனிடத்திற் றோன்றினனென்று சில அறிவிலாப்பேய்கள் பிதற்றுகின்றன.

நெஞ்சு, கண்டம், பிரமரந்திரம், நா, புருவம் என்ற இடங்கள் தியானஸ்தலங்களாம். யோகியர்க்கு இவ்விடங்களினின்று இறைவன் காட்சியளிக்கின்றானென்று யோகநூல் ஓதுகிறது. பிரமதேவனுடைய புருவத்தினிடையே யோகசாஸ்திரமுறைப்படி எங்கள் இறைவனாகிய சிவன் தோன்றினனென்பதுண்டு. இதனை யறியாதார் அப்னிடத்தில் எங்கள் அரன் பிறந்தானென்கின்றனர். ஆரணப்பாவாய்! பல சொல்லியென்? உங்கள் விஷ்ணுவுக்கு உமாபதி உபாசியனாவானென்பதறிவாய்.

---

உ-வது, சிவவுபாசனை மறுப்புப் பரிச்சேதம்.

இவ்வாறு சொல்லக்கேட்ட ஆரணவல்லி தன் கங்கணம் ஒலிக்கக் கைகொட்டி நகைத்துச் சொல்லத்தொடங்கினாள்.— ஓர் அதிபதியாயுள்ளவன் தொன்றுதொட்டு தனக்குரிமையாய் ஆண்டு வந்த ஓர் நகரினை இழிந்ததொழிலைச்செய்கின்ற சிலர், 'இஃதெமக் குரியது' என்று ஸ்வதந்திரம் பாராட்டிச் சொல்லும் கதைபோலத் திருமாலே பரனென நாட்டுகின்ற நாராயணோபநிடதத்தை நீ யாதென்று கருதி இங்ஙனம் முரண்பட்டாய்; * சிவபிராந்தே!

நீ தாழ்சடைச்சங்கரன் உபாசனையை நாராயணோபநிடதத் தால் நிர்ணயித்துரைக்கின்றேனென்று முன் மொழிந்துகொண்டு, உன்றன் யுக்தி கல்பிதமாய்ச் சில சொல்லியும், வேதவிருத்தமென்று இகழ்ந்து சொல்லப்பட்ட ஆகமப்பிரமாணங்களாற் சில கூட்டியும், நுண்ணறிவிலாச் சின்மதிப்பேதையர் மதிப்பதற்காக இங்ஙனம் சில சொற்களை யுரைத்தாய்.

மாதே! அந்த நாராயணோபநிடதம் நாராயணன்றன் உபா ஸனையே நாட்டியதென்பதற்கும், நாராயணனை அர்ச்சித்து உங்கள் சங்கரன் மகத்துவம் பெற்றுளான் என்பதற்கும், சிவன் பிரமன் முதலானவர்கட்கெல்லாம் தோற்றமொடுக்க முண்டென்பதற்கும் பிரமாணமெடுத்துரைப்பேன்; கேட்பாயாக.—

எந்த நூலின் பொருள் நிர்ணயஞ்செய்யவேண்டுமேல் ஆறு வகைத் † தாற்பர்யலிங்கத்தால் அந்த நூலின் பொருள் முடிவு

---

* சிவபிராந்தே—சிவன்பால் மயக்கவுணர்வு கொண்டவளே!

† புகையால் அக்கினி யறியப்படுவதால் புகை அக்கினியின் லிங்க மெனப்படுவதுபோல இந்த வாறுவகையால் வைதிகவாக்கியங்களின் தாற் பர்யமறியப்படுதலால் இவை தாற்பர்யத்தின் லிங்கமெனப்படுகின்றன.

"உபக்ரமோபஸம்ஹாராவப்யாஸோ பூர்வதா ஃபலம்।
அர்த்தவாதோபபத்தீ ச லிங்கம் தாத்பர்யநிர்ணயே"

என்பதுங் காண்க. இங்கு உபக்கிரமோபஸம்ஹாரத்தை ஒரு லிங்கமாகக் கொண்டு உபபத்தியைச்சேர்த்து ஆறு லிங்கமென்று கணக்கிடப்பட்டது.

காணவேண்டுமென்பது ஆன்றோர்கண்டமுறை. அறுவகைத் தாற்பர்யலிங்கமாவன—உபக்கிரமம், உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, புகழ், பலமென்பன. நீ முன்னுரைத்த நாராயணோபநிடதம், அறுபத்துநான்கு அனுவாகங்களையுடையது. இதன் பொருண் முடிவுகாண வேண்டுமேல், முதனடுவிறுதிகளை நன்கு பரிசீலனை செய்து உணரவேண்டும். அங்ஙனஞ் செய்தற்காற்றாத நீ இடையிலுள்ள மூன்றனுவாகங்களை மாத்திரமெடுத்துக்கொண்டு உன்றன் மனத்திற்கிசைந்தபடியெல்லாம் பொருள்கொள்ளத் துணிவையேல் அதனை உயர்ந்தோர் ஏற்றுக்கொள்வரோ?

நாராயணோபநிடதத்திலுள்ள முதலனுவாகமானது, ஒத்தாருமிக்காருமில்லாதவனும் ஜகத்காரணனாய் விளங்குமவனும் எவனோ அவனே நாராயணனென்றுரைத்தது. இதனால் உபக்கிரமமாகிய லிங்கம் பெறப்பட்டது. மேலும் அந்த வனுவாகம், அந்த நாராயணனாகிய இறைவனே முக்தியைக் கொடுப்பவனென்றுரைத்ததோடு புருஷசூக்தத்திற் கூறியபடியும் புகழ்ந்துரைத்தது. இதனால் † அர்த்தவாதமென்ற தாற்பர்யலிங்கம் பெறப்பட்டது. முதலனுவாகத்திற்கூறிய பொருளிற்கிசைய உத்தரத்தனுவாகமும், நான்முகன் வசிக்கும் திருவயிற்றினனெனவும், இலக்குமிதேவியும் பூமிப்பிராட்டியும் எப்பொழுதும் இரண்டு பக்கமும் விளங்கப்பெறுமவனெனவும் உரைத்தது. இத்தன்மையுடையவனை வாழ்த்தி வணங்குவதுதான் பலனென்ற கருத்து வெளிப்படுவதால் பலமென்ற தாற்பர்ய லிங்கம் பெறப்பட்டது. இங்கு ஸ்ரீ பூமிகளுக்கு நாயகனாய் விளங்குமவனென்றுரைக்கப்பெற்றவன் எவனோவென்று ஐயுறு

---

இந்நூலானது உபபத்தியை நீக்கி உபக்கிரமோபஸம்ஹாரத்தை உபக்கிரமம், உபஸம்ஹாரமெனப்பிரித்து இரண்டு லிங்கமாகக் கணக்கிட்டது. இவ்வாறு இரண்டு முறையாகவும் கொள்வதுண்டு. [லிங்கம்—அடையாளம்]. உபக்கிரமம்—ஆரம்பம். உபசங்காரம்—முடிவு. அப்பியாசம்—குறிப்பிடப்பட்ட விஷயத்தைத் திடப்படுத்துவதற்கு அடிக்கடி சொல்லுதல். அபூர்வதை—வேதமொழிந்த வேறு பிரமாணங்களாலறியப்படாமை. உபபத்தி—சொல்லப்பட்ட பொருளிற்கு அநுகூலமான யுக்தி.

† அர்த்தவாதம்—புகழ்.

திருக்க, இடையிலுள்ள அநுவாகம் பதந்தோறும் பதந்தொறும் நாராயணன் என்ற பெயரை நாட்டிப் பரதத்துவ நிச்சயஞ்செய்தது. இதனால் அப்பியாசமென்ற லிங்கம் பெறப்பட்டது. இறுதியனுவாகமும் நாராயணன்றன்னையே யுரைத்துப் பூர்த்தி செய்தது. இதனால் உபசங்காரமென்ற தாற்பர்ய லிங்கம் பெறப்பட்டது.

இங்ஙனம் நாராயணோபநிடதத்தை முதனடுவிறுதிகளை நன்காராய்ந்து பார்க்குமிடத்து நாராயணனே உபாசியனாவானென்ற பொருள் தெளிவாக விளங்குகிறதன்றே. இங்ஙனமிருக்க, நீ பிறைசூடியாகிய சிவன்தான் உபாசியனென்று அவ்வுபநிடதம் செப்பியதாக மொழிந்தனையே. அவ்வாறு அவ்வுபநிடதம் கூறவேயில்லை. சாமர்த்தியமுடையார், வயலிலுள்ள முதற்சாலை உழாமுன்னம் மூன்றும் மேழியை உழத்தொடங்குபவர்போல, நாராயணோபநிடதத்தின் முதனடுவிறுதிகளையெல்லாம் விட்டு இடையிலுள்ள மூன்றனுவாகங்களை மாத்திரம் சுழித்தெடுத்தனை. நீ கருதுகிறபடி அவற்றிலும் உங்கள் சந்திரசேகரன் உபாசனை சொல்லவில்லை. அந்த மூன்றனுவாகங்களினு முரைக்கப்பெற்ற மெய்ப்பொருள் இன்னவென்று ஐயமற விளங்க உரைப்பேன்; கேட்பாயாக.—

---

## ௩-வது, உபாசியனிருணயப் பரிச்சேதம்

ஆகமமடந்தாய்! நீ முன்புரைத்த மூன்றனுவாகங்களுள் முதலனுவாகமானது உங்கள் மகேச்சுரனாகிய சிவனே உபாசிக்கப்படும் பொருளாவானென்று சாதுர்யமாகக்கூறினை. இங்குரைக்கப்பெற்ற மகேச்சுரன் என்ற சொற்பொருட்குரியவன் பிறைசூடியாகிய சிவனில்லையென்பதை விளக்குகிறேன்.—

அந்த அனுவாகத்தில் பிரணவாக்ஷரத்தினாதியா யமைந்த திவ்யாக்ஷரமாகிய அகாரவாச்சியன் எவனோ அவனே மகேச்சுரனாவானென்றுரைக்கப்பட்டது. அந்த மகேச்சுரன் என்ற சொற்பொருளிற்குரியவன் திருமாலே. வேதங்களும், ஸ்மிருதி இதிகாச புராணங்களும் நாராயணனாகிய இறைவனே அகாரவாச்சியனாவானென்றுரைத்தன.

சங்குசக்கரங்களைத் துறந்து, குதிரையோட்டுங் கோலைக் கையிற்கொண்டு, அர்ச்சுனற்குச் சாரதியா யமைந்துநின்ற கண்ண பிரான் அர்ச்சுனனை நோக்கி, 'அக்ஷரங்களுள் அகாரமாக விருப் பவனும் யானே' என்றருளிச்செய்தான். இதனைப் * பகவத்கீதை யிற் காணலாம்.

சங்குசக்கரங்களைக் கையிற்றரித்தவனே அகாரவாச்சியனுவா னென்று இராமசகஸ்ரநாமத்தில் உங்கள் உமாபதி தெளிவாக ஓதி வைத்தனனே. பிரணவவாச்சியனுன மகேச்சுரன் இன்னுனெனத் துணிந்திடுமிடத்து ஒப்பற்ற நாராயணனே யாவானென்றுரைத்திட வேண்டும். இதிற் சிறிதும் ஐயமில்லை. இனி, இதற்குவேண்டிய பிரமாணங்களையும் எடுத்தியம்புவேன்.—

அதருவசிரசில் பிரணவ பூர்வகமாக அஷ்டாக்ஷரத் தொகுதி யுங்குறிப்பிட்டு, இவ்வக்ஷரங்களுள் பிரணவவாச்சியனுய் விளங்கு கின்ற நாராயணனை உபாசிப்பார் ஸ்ரீவைகுண்டமாநகரடைந்து இன்புறுவரென்று சுட்டியுரைக்கப்பெற்றது. ஜனன மரணமாம் துன்பங்களைத் தவிர்க்கும் இராமசந்திரனைப் பிரணவவாச்சிய னென்று தாரகப்பிரமோபநிடதம் சங்கைதீரச் சாற்றியது. இஃ துலகத்திலுள்ளவர்கட்கெல்லாம் பாடமன்றோ! பிரணவப்பொரு ளாய் விளங்குகின்றவன் விஷ்ணுவாவானென்று சுபாலோபநிடதம் சுட்டியுரைத்தது. இங்ஙனம் வேதங்கள் இயம்பியதற்கேற்பப் பல புராணங்களும் பகர்ந்தபடியைக் கேட்பாயாக.—

உலகிற்கெல்லாம் ஒருயிராயும், பிரணவப்பொருளாயும் விளங்கு மவன் விஷ்ணுவேயென்று பிரகலாதன் பகர்ந்தனன். இவ்விவரத்தை விஷ்ணு புராணம் முதல் அம்சகம் பதினுருமத்திபாயத்திற் காண லாம். சூரியமண்டலமத்தியில் விளங்குகின்றவனும் பிரணவப்பொரு ளாய்த் திகழ்பவனும் நாராயணனே. இவனே பரனுவானென்று அந்த விஷ்ணு புராணம் இரண்டாம் அம்சகம் எட்டாமத்தியாயத் திற் சொல்லப்பட்டுளது. இதுமாத்திரமன்றி இந்த இரண்டாம் அம்சகத்தின்மேல் மூன்றுமத்தியாயத்தில் மற்றோர் விஷயமும் குறிப்பிடப்பெற்றுளது. அது வருமாறு.— மயித்திரேயர் பரா

* "அக்ஷராணும் அகாரோஸ்மி"

சரரை நோக்கி, 'மறை பிரித்தவாறெப்படி? என்று வினவினர். அதற்கவர் 'முறை முறையாக வியாசப்பட்டத்தில் முன்னிருந்தோர் இருபத்தெண்மராவர்; இனி வியாசப்பட்டத்தை அசுவத்தாமா வென்பவரே பெறுவர்; இந்த வியாசப்பட்டத்திற்குவரும் வேதியர்களே துவாபராந்தந்தொறும் வேதத்தைப் பாகுபாடு செய்வர்கள்; பூமியில் இங்ஙனம் பாகுபாடு செய்யப்பட்ட வேதம் மறைந்தகாலத்தில் பிரணவ மாத்திரமே நிலைபெற்று விளங்கும்; இந்த அருமையான பிரணவாக்ஷரமே உலோகோற்பத்தியாம் பொருளாம். இந்தப் பிரணவப்பொருளாய் விளங்குமவன் நித்தியனாகிய நாராயணனே என்று சிந்தையிற்கொள்வாய்' என்று விடையளித்தனர். இதனைக்கேட்ட மைத்திரேயரும் தெளிவுற்றார்.

'பிரணவப்பயனாய் விளங்கும் என்னையே தியானஞ்செய்வாய்' என்று கண்ணன் கீதையில் அருளிச்செய்துள்ளான். பிரணவப் பொருளாய் விளங்குகின்றவன் திருமாலேயென்று உமாபதியும் உரைத்தனன். இதனைப் பிரமாண்ட புராணத்திற் காணலாம். திருவஷ்டாக்ஷரத்தில் ஒன்றாகிய பிரணவாக்ஷரத்தின் பொருளாய் விளங்குகின்றவன் அரியேயென்று சுகமுனிவர் தெளிவுற்றுப் பரீக்ஷித்து மகாராஜனுக்குபதேசித்தார். இது, பாகவதத்திற்கண்ட தொன்றாம்.

திருத்துவாதசாக்ஷரப் பிரமவித்தையிலும் பிரணவத்தையே முதலாக வைத்தோதியதென்று பாரதம் பகராநிற்கும். இங்ஙனமே விஷ்ணு புராணமும் விரித்துரைத்தது. உமாபதி, முனிவர்களை நோக்கி, கண்ணபிரானைச் சுட்டிக்காட்டி, 'இவனே பிரணவப் பொருளாவான்; இவனை உபாசித்து முத்திப்பேற்றைப் பெறுவீர்கள்' என்று உபதேசித்தனன். இதனைப் பாரதத்திலுள்ள அரிவம்சத்திற் காணலாம். பிரணவப்பொருளாய்த் திகழ்பவன் திருமாலே யென்று இந்திரனுரைத்தனன். இதுவும் அரிவம்சம் ஐம்பத்தொன்றா மத்தியாயத்திற் கண்டதே. இவ்வாறே பதுமபுராணமும் பகர்ந்தது. பிரணவத்தாற் சொல்லப்படும் பொருள் மாதவனே யென்று மாதவமுடைய நாரதர் நாட்டினர். இதுவும் பாரதத்திற் கண்டது.

ஆகமப்பாவாய்! இங்ஙனமுரைத்தற்கேற்ப உலக திருஷ்டாந்த முரைக்கின்றேன்.— தெண்ணீர்ப்பொன்னித் திரைக்கையால் அடி வருடப் பள்ளிகொள்ளும் திருவரங்கத்துறை அமலனுக்குப் பிரண வாகிருதி விமானம் அமையப்பெற்றுள்ளதை நீ யறிவாயன்றோ! பிரணவப்பொருளாயிருப்பவன் அங்கெழுந்தருளி யிருக்கின்றா னென்பதற்கு அறிகுறியாகவன்றோ பிரணவாகிருதி விமானம் அங் கமையப்பெற்றது. இதுவரை, பிரணவப்பொருளாயிருப்பவன் திருமாலேயாவன் என்பது உன்னெஞ்சிற்படுமாறு ஒரு கோவை யாகச் சில பிரமாணங்களை யெடுத்தியம்பினேன். இனி மகேச்சுர னென்ற சொற்பொருளிற்குரியவன் இன்னன் என்பதை விரித் துரைப்பேன்.—

மகேச்சுரன் என்ற சொல் உங்கள் சிவனைக்குறிப்பிடுமென்று கருதிவிடாதே. அந்தச் சொல் நாராயணனையே நிலைபெற நாட்டும். கர்ப்போபநிடதமானது அச்சுதப் பெயர் அமலனே மகேச்சுரனுவா னென்று நிச்சயித்துரைத்தது. பதுமபுராணத்திலுள்ள வாசுதேவ ஸஹஸ்ரமும், ஐமுகன் இரண்ய கர்ப்ப ஸ்மிருதிகளும், பாரதத்தில் பீஷ்மருளிய விஷ்ணுஸஹஸ்ரநாமமும் மகேச்சுரன் என்ற நாமம் நாராயணனுக்கே உரியதென்று நாட்டும். திருமாலே மகேச்சுரப் பெயர்ப் பெரியோனென்று இந்திரன் துதி செய்தானென்று பதும புராணம் ஐம்பத்தொன்றும் அத்தியாயம் அறையாநிற்கும். 'மகேச் சுர நாமத்தையுடையவனுகிய என்னை யறியாதவர்கள் அஞ்ஞானி களாவர்' என்று கண்ணன் கீதையில் அருச்சுனனை நோக்கி அருளிச்செய்தான்.

ஆகமப்பாவாய்! புலன்களை யடக்கிச்செய்யும் யோகமுறை யைக் கீதையிற் குறிப்பிடவந்தவிடத்துச் சங்கு சக்கரம் கதை வாள் வில் என்ற பஞ்சாயுதங்களையும் தரித்திருக்கின்ற மகேச்சுரனை நுண்ணறிவால் தியானிக்கத்தக்கது என்று ஓதப்பட்டுளது. இடப வாகனனுகிய சிவன் வாணுசுரனுக்காகக் கண்ணனேடெதிர்த்துப் போர்செய்தற் காற்றாது நின்றபோது, 'மகேச்சுரனே! பிழை பொறுத்தருள்செய்யவேண்டும்' என்று பிரார்த்தித்தான். இவ்

விவரத்தைப் பதுமபுராணம் உத்தரகாண்டம் ஐம்பத்தைந்தாம் அத்தியாயத்திற் காணலாம்.

சிவன் பசுபதியாம் வரத்தைத் தேவர்களிடத்திற் பெற்ற தன்மையைப் பேசும் வேதத்திற்கேற்ப, அந்த முக்கண்ணனுக்கு மகேச்சுரன் என்ற வரமும் பட்டமும் தேவர்களே சூட்டினார்களென்பதனை, பாரதம் கன்னபருவத்தில் திரிபுரபிரசங்கம் செய்கிறவிடத்திற் காணலாம். ஆதலால் மகேச்சுரனென்ற பெயர் உமாபதிக்கு வரபலத்தாற் கிடைத்ததேயன்றி வேறில்லை யென்பது தெளிவு. இதனால் மகேச்சுரனென்ற சொல்லிற்கு முக்கியப்பொருளாய் விளக்குகின்றவன் மாதவனே யென்றுணரலாகும். இதற்கு விரோதமாக நீ முக்கண்மூர்த்தியே மகேச்சுரனுவான் என்று சொல்வதற்கு வழியேயில்லை. நீ முன்னுரைத்த அநுவாகத்தில் மகேச்சுரனை, உலககாரணனெனவும், முக்தியை யளிக்கும் தலைவனெனவும் சொல்லியிருப்பதால் அத்தன்மைகள் பிறைசூடிய மகேச்சுரனுக்கு இல்லையென்று வேதம் செப்பியது. இஃதன்றி உங்கள் ஆகமத்தில் சதாசிவனிடத்தில் மகேச்சுரனுக்குத் தோற்றமும் ஒடுக்கமுஞ் சொல்லப்பட்டிருப்பதால், அவனுக்கு உலக காரணத்துவம் சொல்வது பொருந்தாக்கூற்றாகுமன்றோ! உலக காரணன் செங்கண்மாலே யாவானென்ற உண்மையை இனிமேல் வேதப்பிரமாணத்தால் விரித்துரைப்பேன். இப்பொழுது நல்ல புராணவசனங்களாற் புலன்கொளப் புகல்கின்றேன்; கேட்பாயாக.—

---

## கசேந்திரவுபாசனைப் பரிச்சேதம்.

ஒரு தாமரைத் தடாகத்தில் ஒருநாள் கஜேந்திரன் என்ற யானையானது இறங்கியது. அப்பொழுது அங்கிருந்த முதலை இதன் காலைப்பிடித்திழுத்தது. யானையுந் தன் வலிமையால் கரையை நோக்கி இழுத்தது. இங்ஙனம் இவ்விரண்டிற்கும் அநேக மாண்டுகள் யுத்தம் நிகழ்ந்தன. யானைக்குத் தன்னிலமில்லாமையால் வலிமை குன்றியது. உயிர் துறக்கும் ஆபத்து வந்துற்றது. 'இனிக் கரையேறுதலரிது' என்று கருதிப் பரம்பொருளைச் சரணம்புகத் தொடங்கியது.—

அகிலகாரணனையும் சகலஜீவ தயாபரனையும் உலகிற்கு ஒப்பற்ற நியந்தாவாயும் வேதங்களால் துதிக்கப்படுமவனையும் முதனடுவிறுதி யற்றவனையும் மோக்ஷமருளுமவனையும் சிதசித் விலக்ஷணனையும் உயிர்க்குயிராய் விளங்குகின்றவனையும் பிரகிருதி சம்பந்தமான பிறப்புப் பெயர் உருவமற்ற அரூபியாயும் கெட்ட குணமில்லாதவனையும் புருஷோத்தமனையும் அருவாயும் உருவாயுமமைந்து விளங்குகின்றவனையும் ஒத்தாரை மிக்காரையிலனையும் பகவனையும் பரப்பிரமமாயும் விமலனையும் ஆண் பெண்ணலியல்லனையும் பிரகிருதி சம்பந்தமற்றவனையும் எல்லாப் பொருள்களுள்ளும் புறம்பும் விளங்கும் வியாபகனையும் பிறப்பிலியாயிருந்து தன்னிச்சையால் பல பிறப்பெடுத்து தருமத்தை நாட்டுகின்றவனையும் ஆதிமூலமாயும் விளங்கும் இறைவனே! உனக்கபயமெனப் பொதுப்படத் துதிக்கையை நீட்டி ஓலமிட்டது.

இங்ஙனம் கஜேந்திரனுரைத்த சொற்களனைத்தையும் பிரமன் சிவன் முதலானவர்கள் கேட்டு இந்தச் சொற்கட்குப் பொருள் 'யாமலோம்; யாமலோம்' என்று கஜேந்திரனைக் காத்தற்காற்றாது அகன்றனர். அப்பொழுது எங்கும் நிறைந்து விளங்குகின்றவனாகிய எங்கள் மாதவன் தோன்றிச் சக்கராயுதத்தால் முதலைச்சேதித்துக் கஜேந்திரன் முக்தி பெறும்படி அருள்செய்தான். அந்த வேளையில் அந்தர துந்துமி முழங்கப் பிரமன் சிவன் முதலானவர்கள் துதி செய்து பூமழை பொழிந்தனர். இவ்வரலாற்றினைப் பாகவதம் எட்டாம் ஸ்கந்தம் ஆறும் அத்தியாயத்திற் காணலாம்.

---

### பலவுபாசனைப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! உலகிற்கு ஒப்பற்ற காரணனாவான் பிரமதேவனைப் படைத்த உந்தியையுடைய நாராயணனே யென்பதை எடுத்துரைத்தேன். மேலும் நீ நன்குணர்ந்து கொள்ளுமாறு எடுத்துரைப்பேன்.— வேதங்கள் நாராயணனை ஜகத்காரணனெனவும், முக்தியையளிக்கும் முழுமுதற் பொருளெனவும் பற்பலவிடங்களினும் நிலைநாட்டி யுரைத்தன. இஃதல்லாமலும் அகாரவாச்சியனும் இவனேயென வுரைத்தன. மகேச்சுரநாமத்தைச் சொல்வதற்கு

முன்னர் அலைகடலிற்றுயிலும் அச்சுதனை யுரைத்து, அதன்பின்னர் மகேச்சுரநாமத்தை யுரைத்தன. இதனால் அலைகடலிற்றுயிலும் அண்ணலே மகேச்சுரநாமத்திற் குரியவனுவானென்பது தெளிவாகும். அலைகடலில் அறிதுயிலமரும் இயல்பு அரனுக்கில்லையாதலால் மகேச்சுரசப்தத்திற்கு முக்கியப்பொருள் சிவனுகானென்பது வெள்ளிடைமலை.

மாதே! இதுவரை மகேச்சுரன் என்ற சொல்லுக்குப் பொருளாய் விளங்குகின்றவன் மாதவனேயென உள்ளவாறெடுத்தியம்பினேன். இனி, நீ முன்னுரைத்த மூன்றநுவாகத்தில் வழங்கப்பெறும் விருப்பாக்கனென்ற நாமமும் நாராயணனையே சுட்டியுரைக்குமென்பதையும் விளக்குவேன்.—

விருபாக்ஷன் என்பதற்கு மூன்று பொருளுண்டு. அவை: பல கண்களையுடையவன், கருடவாகனன், இந்திரியமில்லாதவன் என்பன. ஆயிரங்கண்களையுடையவன் அச்சுதனேயென்று புருஷசூக்தம் புகலும். நாராயணனே கருடவாகனனென்பதை நாடறியும்; யானெடுத்தியம்ப வேண்டாம். இவன் பிரகிருதிப்பற்றில்லாப் பரம்பரன்; இந்திரியங்களும், உருவமுமில்லாதவனென்று வேதவேதாந்தம் உச்சரிக்கும். ஆதலால் விருபாக்ஷனென்ற சொல் நாராயணனையே குறிப்பிடும்.

நீ இங்ஙனம் உரைத்ததற்கு விரோதமாக எங்கள் முக்கண் மூர்த்தியையே விருபாக்ஷனென்ற சொல்லுரைக்குமென்பையேல், அந்த மூன்று கண் எங்கள் இறைவனுகிய நரசிங்க முதலான மூர்த்திகளுக்கு முண்டென்று பல புராணமும் முறையிடுமன்றே! இஃதல்லாமலும் பிராமியபாராசரியமென்ற சிறந்த சிற்பசாஸ்திரமானது சயனுசனமூர்த்தி பேதத்தில் நாராயணனை முக்கண்ணனென்று சொல்லியது.

இஃதன்றியும், இந்த மூன்றனுவாகத்தின் இறுதியனுவாகமானது, நாராயணனுக்கு அடையாளம் சொல்லப்புகுந்து, பரப்பிரம சப்தத்தாலும், புருஷசப்தத்தாலும் சொல்லியது. இந்த இரண்டு சொல்லும் விருபாக்ஷனையே குறிப்பிடும். இவன் நாரா

யணனே யென்பதற்கு ஐயமில்லை. இந்த அனுவாகத்தின் ஆதியில் இங்குப் புருஷசப்தத்தாலும், பரப்பிரம சப்தத்தாலும் குறிப்பிடப் பெற்றவனுக்கு ஸ்ரீதேவியும், பூமிப்பிராட்டியும் பத்தினிமாராவா ரென்று சொல்லப்பட்டுள்ளது. ஆதலால் விருபாக்ஷசப்தம் பூதி பூசிய சிவனைக்குறிப்பிடாதென்பதைத் தெற்றென்றறியலாம்.

உபநிடதங்களில் கிருஷ்ண பிங்கல நிறமுடையவனென்று குறிப்பிடப்பெற்றவனும் நாராயணனே. முன் குறிப்பிடப்பெற்ற அனுவாகங்களுள் இடையனுவாகமானது, உபாசனைக்கு ஹ்ருதய புண்டரீகத்தை ஸ்தானமாக வகுத்து, அங்கு ஸூக்ஷ்மாம் பதத்தில் * மின்னலை விழுங்கிய மேகம்போன்ற திருமேனியையுடைய நாராயணனாகிய பரமாத்மா விருப்புடன் எழுந்தருளியிருக்கிறானென்று செப்பியது. இவ்விஷயம் உலகத்தவர்கட்கு முகபாடமன்றே. நாராயணனுக்குப் பலநிறமுண்டென்று வேதங்கள் பலவும் வகுத்துரைக்கும். கண்ணனுக்குப் பலவர்ணமுண்டென்று பாரதம் பலவிடத்திலும் எடுத்தோதியது.

நாராயணனுடைய திருமார்பில் எப்பொழுதும் அகலாது பெரியபிராட்டியார் வசிக்கின்றதினாலும், விந்தை முதலாக விளங்கும் விக்கிரகம் நாராயணனுக்குண்டென்று பல புராண முரைக்கின்றதனாலும் இந்த நாராயணனாகி இறைவனது † இருபத்து நான்கு அவதார மூர்த்திகளிடத்தில் தியானம் குறிப்பிடுமிடமெங்கணும் பல நல்ல வர்ணமுண்டென்று சிறந்த நூல்கள் உரைக்கின்றமையாலும் கிருஷ்ண பிங்கலனானவான் திருமாலே. இவனே உபாசினையும், சாதனமாயுமிருப்பானென்று முன்னரே நிச்சயிக்கப் பெற்றுளது.

---

* "நீலதோயத மத்யஸ்த வித்யுர்லேக விபாஸ்கர".

† இருபத்துநான்கு அவதார மூர்த்திகள்—விராட்புருஷன் ஸ்ரீவராகம் நாரதர் நரநாராயணர் கபிலர் தத்தாத்திரயர் ஸ்ரீயக்யமூர்த்தி உக்கிரமர் பிருதுசக்கரவர்த்தி மச்சம் கூர்மம் தன்வந்திரி மோகினி நரசிங்கம் வாமனம் திரிவிக்ரமர் பரசுராமர் வேதவியாசர் ஸ்ரீராமர் பலராமர் கிருஷ்ணன் புத்தன் கற்கி.

## ௬-வது, வேதங்க ளிதரதேவதைகட்கு உபாசனையில்லையென்ற பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! நீ முன்புரைத்த இடையனுவாகமும் நாராயணனே பரனுவானென்று நிச்சயித்துரைத்தது. அதனையும் ஈண்டெடுத்துரைப்பேன்.—

வேதசாகைகள், பரஞ்சோதி யென்றும், ஆகாசமென்றும், ஸத்தென்றும், சம்புவென்றும், சிவனென்றும், பரப்பிரமமென்றும், பரமாத்மாவென்றும் எடுத்தியம்பின. இங்ஙனம் இயம்பிய சொற்களினுல் சொல்லப்பட்ட உபாஸ்யவஸ்துவாமொருவன் இன்னுனென்று உலகினர் நன்கறிந்துகொள்வதற்கு எடுத்துரைக்க முற்பட்டபோது * பரமாத்மா வென்பவனும் நாராயணனே. பரப்பிரமப் பெயரானும் நாராயணனே. சம்புசப்தப்பொருளுடையவனும் நாராயணனே. சிவனென்பவனும் நாராயணனே. பரஞ்சோதியும் நாராயணனே. பரதத்துவப்பொருளும் நாராயணனே. விசுவமும் நாராயணனே; என்று பதந்தொறும் நாராயணன்; நாராயணனென்று ஆய்ந்தாய்ந்துரைத்தன.

இங்ஙனம் உரைத்ததற்குப் பின்னர், கண்ணுற் காணப்படுவனவற்றிலும், காதாற் கேட்கப்படுவனவற்றிலும் உள்ளும்புறம்புமாக நீக்கமின்றி உறைபவனும், ஜகத்காரணனும், பரிபூரணனும், நிர்மலஞானனும், எல்லா லோகங்களையுந் தாங்கும் மிடுக்குடையவனும், ஒப்புயர்வற்றவனும், தனக்கோர் தலைவனில்லாதவனும், அனைத்துயிர்க்கும் ஒருயிராயிருப்பவனும், மனத்திற்பொருந்தி முயற்சி

---

* 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌃 ।
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌪𑌰𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌃 ॥

𑌯𑌚𑍍𑌚 𑌕𑌿𑌂𑌚𑌿𑌜𑍍𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇𑌽𑌪𑌿 𑌵𑌾 ।
𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌬𑌹𑌿𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥

𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌚
𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ।
𑌶𑌿𑌵𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌶𑌿𑌵𑌶𑍍𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ॥

வகுத்திடுவானுமெல்லாம் நாராயணனே யென்றுரைத்து முடிவு கூறும். இவ்வாறு இந்த நாராயணநுவாகம் திருமாலின் பரத்துவத்தைச் செப்பியதற்கிசைய வேதவியாசரும் பிரமசூத்திரத்தில் விளக்கமுற ஓதிவைத்தனர்.

ஆகமப்பாவாய்! வேதத்தில் இங்ஙனம் திருமாலிற்கு அடையாளம் கூறப்பட்டதுபோல இதர தேவதைகட்கு இல்லையென்பது ஒருதலையன்றோ! ஆதலால் நாராயணனே ஒப்புயர்வற்ற பரம்பொருளாவான். இன்னும் அநந்தன்மேற்றுயிலும் அச்சுதனே பரமாத்மாவென்பதைத் தெளிவுற உரைப்பேன்.—

பிரபஞ்சசாரமென்ற நூலானது, பிரணவத்துக்கு ருஷியும், சந்தமும் இன்னவென்று முன்னர் மொழிந்து, பின்னர் அம்மந்திரத்திற்கு அதிதெய்வம் பரமாத்மாவென்றிசைத்தது. இவ்வாறு பொதுச்சொல்லாகச் சொல்லியதைச் சிறப்பித்துரைக்கத் தொடங்கியபோது, அந்தப் பரமாத்மாவாகிய ஒருவன் கரத்தினிற் சங்கு சக்கரம் கதை வாள் விற்களைத்தரித்துப் பீதகவாடை பூண்டிருப்பவனும். அவன் விஷ்ணுவெனப்படுவான்; என்றிசைத்தது.

இவ்வாறு அந்நூல் பரமாத்மா நாராயணனேயென்று விடையளித்துவந்தபின்னர், பிரமன் சிவன் இந்திரன் நித்தியசூரிகள் முதலியவரெல்லாம் அந்த நாராயணனே யென்றதுபோல, நாராயணனையும் மற்றத்தேவர்கள் வரிசையிலெண்ணியபின்னர் அவனும் பரமாத்மாவென்று சொல்லாததினால் பரமாத்மா தாழ்சடைச்சிவனெனச் சாற்றலாகாது.

ஆகமப்பாவாய்! உன் கருத்தால் பரமாத்மாவென்பவன் தாண்டவம்புரியும் சிவனென நிச்சயிப்பையானால் தேவர்களை யெண்ணுகின்ற வரிசையில் சிவனையுஞ் சேர்த்து எண்ணியிருக்கலாகாது. படைத்துக் காத்து அழிக்கும் தொழில்களைச் செய்யுமவர்களுள் சிவனுமொருவனென்றுரைப்பதுங் கூடாது. உங்கள் சைவசித்தாந்த முறைப்படி பார்ப்போமாகில் உருத்திரனே உயர்ந்தோனெனச் சொல்லப்பெற்றதறியலாம். அந்த உருத்திரன் சிவனென்று சொல்லலாகாது.

முன்பு பிரமன் சிவன் இந்திரன் நித்தியசூரியென்று கூறிய வரிசையில் நித்தியசூரி யென்ற சொல்லால் நாராயணன் குறிப்பிடப் படுகிறானென் றுரைப்பையேல் ;—அதுவும் பொருந்தாது. அப்படி யானால் இந்திரனுக்குப்பின்னர் உரைத்திருக்கலாகாது. எல்லாச் சொல்லும் * அபர்யவஸாந விர்த்தியால் நாராயணனைக் குறிப்பிடு மன்றோ! இங்ஙனமிருக்க இந்த நித்தியஸூரி யென்ற சொல் அவ் விறைவனைக் குறிப்பிடாதோ வென்னில் ;—பிரமன் சிவன் முதலிய சொற்களைத் தனித்தனியே உச்சரித்தால் அச்சொல் அபர்யவஸாந விர்த்தியால் நாராயணனைக் குறிப்பிடும். பிரமன் சிவன் இந்திரன் என்று வரிசையுறச் சொன்னால், அவ்வரிசையிற் குறிப்பிடப்படுகிற பிரமன் முதலிய சொற்கள் நாராயணனைக் குறிப்பிடமாட்டா. ஆதலால் நித்தியசூரியென்ற சொல் திருமாலைச் சுட்டியுணர்த் தாது. பரமாத்மா சப்தம் நாராயணனையே யுணர்த்துமென்பதற்கு ஐயமில்லை.

---

* சொற்களுக்கு இரண்டுவகையாகப் பொருளுணர்த்தும் ஆற்றலுண்டு. அவை: பர்யவஸாந விர்த்தி சக்தி, அபர்யவஸாந விர்த்தி சக்தி யென்பன. அவற்றுள் பர்யவஸாந விர்த்தி சக்தியாவது—முக்ய விசேஷ்யத்தைப் போதிப் பியாமல் விசேஷண மாத்திரத்தால் முடிவுபெறும் சக்தியாம். இது, அமுக்ய விர்த்தியெனப்படும். உலகவழக்கில் வழங்கப்பெறுவது. இங்கு விசேஷண மென்பது தேவ மனுஷ்யாதி சரீரத்தை. இந்த வடிவங்கட்கு விசேஷ்யம் இந்த வடிவங்களைத் தாங்கிக்கொண்டிருக்கின்ற ஆன்மாக்கள். பசு பக்ஷி மனுஷ்யன் என்ற சொற்கள் பசு சரீரத்தையும் பக்ஷி சரீரத்தையும் மனுஷ்ய சரீரத்தையுமுடைய ஆன்மாக்களை யுணர்த்தும். இதுவே பர்யவஸாந விர்த் திக்கு உதாரணமாம். அபர்யவஸாந விர்த்தியாவது—முக்ய விசேஷ்யபர்யந்த முணர்த்தியன்றி முடிவுபெறாதிருக்கை. இது, முக்ய விர்த்தியெனப்படும். வேதாந்தங்களில் வழங்கிவரற்பாலதாம். பர்யவஸாந விர்த்தியில் ஜீவன் சரீரத்தைத் தாங்குகின்றவனாயிருப்பதால் சரீரத்திற்கு விசேஷ்யமாயினன். இந்த அபர்யவஸாந விர்த்தியில் அந்த ஜீவனுக்கும் ஆதாரமாயிருக்கின்ற பரமாத்மா விசேஷ்யமாகிறான். இங்ஙனமாம்போது மனுஷ்யன் என்பதற்கு மனுஷ்ய சரீரத்திற்கு ஆதாரமாயிருக்கின்ற ஜீவாத்மா; அந்த ஜீவாத்மாவுக் கும் ஆதாரமாயிருக்கின்ற பரமாத்மாவென்று பொருள் கொள்ளவேண்டும். இங்ஙனம் பொருள்கொள்ளும்போது எல்லாச் சொற்களும் முக்ய விசேஷ்ய மாயிருக்கின்ற பரமாத்மாவையே குறிப்பிடும்,

பாரதகீதையில் அருச்சுனனுக்குக் கண்ணபிரான் 'எனது ஈசுவரபாவனையைப் பார்ப்பாய்' என்றுரைத்த வாசகத்திற்கு மாறுபாடாக, 'சூரியன் மின்மினிப் பூச்சியிடத்து மிக்க வொளியை இரந்து பெற்றனன்' என்பதுபோல் கண்ணன் சிவோகம்பாவனை செய்தனனென்றனை.

பாவாய்! நீ குறிப்பிட்டபடி கண்ணன் அருச்சுனனுக்கு யோகசக்தியைக் காட்டினன் என்பது உண்மையானல் நீ குறித்திடும் அத்தியாயம் விசுவரூபாத்தியாயமென்று சொல்லலாகாது. அருச்சுனன் கண்ணபிரானை நோக்கி, 'இறைவ! உன்னுடைய விசுவரூபத்தைக் காண ஆசைப்படுகிறே னென்றுரைத்தனன், கண்ணபிரானும் அவன் விரும்பியபடி அவனை நோக்கி, 'நீ என்னுடைய வடிவத்தில் ஒரு பகுதியுள் அனைத்துலகுமிருக்கின்றவற்றைப் பார்ப்பாய்' என்று திவ்விய ஞானக்கண்ணைக் கொடுத்தனன். அதனைப்பெற்ற அருச்சுனன் 'பிரானே! நின் திருமேனியில் அண்டகோடிகளையும், நான்முகன் ஐமுகன் தேவர் இயக்கர் நாகர் முதலானவர்களையுங் கண்டுகொண்டே' னென்றனன். அப்பொழுது கண்ணபிரான், 'அருச்சுன! நீ ஞானக்கண்ணால் என்னுடைய விசுவரூபத்தைப் பார்த்தனையே; அந்த விசுவரூபத்தைச் சிறந்த தவம் தானம் தியான முதலிய உபாயங்களாலுங் காண்பதரிது; என்றனன்.

இஃதன்றியும் ஞானக்கண்ணை முக்கண்ணன் செங்கண்மால் பாற்பெற்று நாராயணன்றன் விசுவரூபத்தின் வளத்தினைக்கண்டு மகிழ்ந்தனன். இதனை வராகபுராணத்திற் காணலாம. இங்ஙனம் இப்புராணத்திலுரைத்ததுபோல உங்கள் முக்கண்ணன முகுந்தன் அருளால் விசுவரூபத்தைக்கண்டு ஆநந்தங் கொண்டானென்று இரணியகர்ப்ப சங்கிதை ஓதுகின்றது. பகவத்கீதையும் பார்த்தன் விசுவரூபங்கண்டதை விரித்தோதும். இதனால் யோகசக்தியைக் கண்ணன் காட்டினன் என்பதற்கு * உத்யோகத்தால் விசுவரூபத்தைக் காட்டினன் என்று பொருள்கொள்ளவேண்டும். இங்ஙனங்

* உத்தியோகம்-முயற்சி.

கொள்ளாமல் கண்ணபிரான் தன்னின்மிக்க ஈசுவரயோகபாவனை யைக் காட்டினனென்று கொள்ளலாகாது.

மந்திரம்வல்லவர்கள் கருடபாவனையினால் கருடனாக விளங்குவதுபோல உங்கள் முக்கண்ணனுடைய ஐக்கியபாவனை யினால் எங்கள் முகுந்தன் பரனாக விளங்கினான்; என்றுரைத்தாய். திருப்பாற்கடலினின்றெழுந்த விஷத்தைக் கருடபாவனை செய்து உங்கள் சிவன் உட்கொண்டனனென்று காருடகவசத்திலும், பது மத்திலும் கூறிய விஷயத்தை முன்னரே மொழிந்தேன். உங்கள் நீலகண்டன் பரத்துவப்பொருளானாலன்றோ எங்கள் திருமால் அவனைத் தியானித்து விளங்குவன். நான்கு கடலும் திருப்பாற் கடலானாலன்றோ, அவை அமுத முதலிய சிறந்த பொருள்களைக் கொடுக்கவல்லன வாகும். உங்கள் சிவனுக்கு அந்தர்யாமியாய் விளங்குகின்றவன் திருமாலேயென்று யான் மொழிந்ததற்கு மாறு பாடாகக் கூறினாய். இனி உங்கள் முக்கண்ணன் அந்தர்யாமி பாவனை செய்தானென்பதற்குப் பிரமாண மெடுத்தியம்புவேன்.—

---

## எ-வது கிருத்திவாசனுபாசகனென்ற பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! வானுலகில் * கிருத்திவாசன் தனியாகத் தியானஞ் செய்துகொண்டிருந்தனன். ஆங்கு இந்திரன் முதலான தேவர்கள் சென்று கிருத்திவாசனைக்கண்டு 'நீ யார்?' எனவினவி னார். அதற்குகிருத்திவாசன், பரத்துவப்பொருளாகியநாராயணனும் யானே; நான்கு முகங்களையுடைய பிரமதேவனும் யானே; அக் கினியும் சந்திரசூரியர்களும் யானே; ஸ்தாவரப்பொருளோடு சங் கமப்பொருளும் யானே; ஐம்பெரும்பூதமும் யானே; என்றனன். இவ்விவரத்தை ‡ அதருவசிரசில் முதற்கண்டத்திற் காணலாம்.

---

* கிருத்திவாசன்-சிவன்.

‡ அதருவசிரசில் ருத்திரன் தன் வைபவத்தை மிகவும் கொண்டாடிப் பேசினான். இங்ஙனம்பேசியது தன்னியல்புக்குப் பொருந்தாததாயிருந்தது. 'இவன் இங்ஙன முரைப்பதற்குக்காரணம் யாது?' என்று அந்த வேதமே சங்கித்து, "ஸொऽந்தராதந்தரம் ப்ராவிசத்" என்று பரமாத்மா பிரவே

பாவாய்! சர்வகாரணனாகிய எங்கள் செங்கண்மாலின் ஐக்கிய பாவனையால், 'எல்லாப்பொருள்களும் யானே' என்று உங்கள் சிவன் மாத்திரம்தான் மொழிந்தனன்; என்று கருதற்க. இவ்வாறே பலருமுரைத்திருக்கின்றார்கள். இவ்விவரங்களையும் இங்கு எடுத்துரைப்பேன்.—

இருதயசுத்தியிற் சிறந்த பிரதத்தனென்பவன் இந்திரனை யடிபணிந்து நின்று, 'முக்திக்குபாயம் ஏது?' என்பதை அடியேற்குரைத்தருளவேண்டும் என்று வேண்டினன். அதற்கு இந்திரன் 'இந்த ஜகத் சிருஷ்டிக்குக் காரணம் யானேயாதலால் என்னையே உபாசனை செய்வாய்' என்றிசைத்தனன். இவ்விவரத்தைக் கவுவிக்கிய மந்திரமென்ற நூலிற் காணலாம்.

வாமதேவ ரென்பவர் பரப்பிரமத்தின் ஐக்கியபாவனை செய்து * சூரியனும் யானே; மனுவும் யானே; என்றுரைத்தனரென்று வேதமுறையிடுகிறது. பிறப்பிறப்புடைய இவர்கள் பராபரனென்று சொல்வது எங்ஙனமெனின்;—இவ்வாறு இவர்களிசைப்பது நூல் வழக்காறுமென்று வியாசசூத்திரம் விரித்துரைக்கும். இங்ஙனம் கூறியதற்கேற்பப் பிரகலாதனும் ‡ என்னிடத்திலே

---

சத்தால் இப்படிக் கொண்டாடிப் பேசினான் என்று தீர்மானித்தது. இதனால் எவரெவர்க்கு ஈசுவரபாவனையுண்டாகுமோ அவரவர் தம்மை ஈசுவரனாகவே சொல்வர்களென்பது பெறப்பட்டது. ஆழ்வாரை ஈசுவரன் ஆவேசித்தானதலால் அவர்,

"கடன்ஞாலஞ்செய்தேனும்யானேயென்னும்
கடன்ஞாலமாவேனும்யானேயென்னும்
கடன்ஞாலங்கொண்டேனும்யானேயென்னும்
கடன்ஞாலங்கீண்டேனும்யானேயென்னும்
கடன்ஞாலமுண்டேனும்யானேயென்னும்........."

என்று ஈசுவரன்செய்த செயலெல்லாம் தாமே செய்ததாக அருளிச்செய்தார்; "அவனாகப் பாவித்தால் பின்னை அவன் சொல்லும் வார்த்தை சொல்லலாயிருக்குமிறே" என்று ஈட்டிற்கண்ட வாக்கியமும் இங்கறியத்தக்கது.

* "അഹം മനുരഭവം സൂര്യശ്ച"

‡ "മത്തസ്സർവമഹം സർവം"

எல்லாமுள்ளன; எல்லாப்பொருளும் யானே; என்று கூறினன். இதனை நாரசிங்கம் முதலான புராணங்களிற் காணலாம்.

ஆகமநங்காய்! இவையெல்லாம் ஒருபுறமிருக்க, நாராயணனே பராபரன் என்பதற்கும், உங்கள் உமைபங்கன் உபாசகனென்பதற்கும் பலபிரமாண மெடுத்துரைப்பேன். தேவலோகத்திலுள்ளவர்கள் சிவனைநோக்கி, நீ நாராயணன்றன் றிருவருளிற்குப் பாத்திரனாய் விளங்குகின்றாய்; உன் மனதில் அவன்றன் மந்திர ரஹஸ்யத்தை வைத்தாய்; அவன்றன் ஸ்ரீபாததீர்த்தத்தையும் ஏற்றுக்கொண்டிருக்கின்றாய்; மிக்க மகிமையுடைய வாமனன் உலகளந்தகாலத்தில் அவனுடைய திருவடியைப் பிரமதேவன் மங்கலமுடைய கங்கை நீரால் அபிஷேகஞ் செய்ததும் உன்னைப் புனிதமாக்குவதற்காக வன்றோ! அதனால் நீயும் புண்ணிய ஜன்மத்தைப் பொருந்தினாய்' என்றுரைத்தனர். இவ்விவரத்தை ருக்குவேதம் மூன்றாம் அட்டகம் எட்டாம் அத்தியாயம் பதினொன்றாம் வருக்கத்திற் காணலாம்.

சிவனுக்கு நாராயணன் உபாசியனென்று யாச்சவற்கியோபநிடதம் உரையாநிற்கும். அதருவசிரசில் நாராயணனைச் சிவன் தியானித்தற்குரியவனென்று சொல்லப்பட்டுளது. எல்லா ஜீவர்களிடத்திலும் நிறைந்து விளங்கும் பரமாத்பாவாயும், பரஞ்சோதியாயுமிருப்பவன் நாராயணனே; இங்ஙனம் விளங்கும் விஷ்ணுவை வேதம் ஒரு விருக்ஷமாக உருவகஞ்செய்தது. இந்த விருக்ஷத்திற்குக் கிளைபோல்பவன் உருத்திரன் என்றுஞ்சொல்லியது. இந்த உருத்திரன் பல வேள்வி செய்து மகத்துவம் பெற்றனன். இவ்விவரத்தை ருக்குவேதம் ஐந்தாமட்டகம் ஐந்தாம் பருச்சம் ஆறுமநுவாகத்திற் றெளிவாகக் காணலாம். கருடவாகனனாகிய இறைவனே பிரணவப்பொருளாய் விளங்குபவனென்றும், அந்தப் பிரணவ வாச்சியனைச் சிவன் உபாசிப்பதற்குரியவனென்றும் பல விடங்களிலும் பாரதம் பகர்ந்தது.

சிவன், 'யான் சர்வமேதஞ்செய்து எல்லாப் பொருள்களையும் சர்வாந்தர்யாமியான நாராயணனுக்கு அர்ப்பணமாக்கி, அவன்றன் றிருவருளால் மகத்துவமடைந்தேன்; அதனால் ஜகத்துக்குப் பிரபு

வாக விளங்குகிறேன்' என்றுரைத்தனன். இதனை இராஜதர்மம் என்ற நூலிற் காணலாம். சிவனைத் தேவர்கள் வணங்குவார்கள்; சிவன் பிரமதேவனைத் துதிப்பான்; அந்தப் பரமன் உகந்தென்னை வழிபடுவான்; யாஞ் தொழுவதற்குரியோன் எவனுமில்லை; என்று கண்ணபிரான் அருளினன். சிவனைப் பிரமதேவன நோக்கி, 'மிக்க புகழினையுடைய நாராயணனே எனக்கும், உன்றனக்கும் அந்தர் யாமியாய் விளங்குகின்றான்' என்றுரைத்தனன். இது அசுவமே தத்திற்கண்டது.

---

அ-வது, கிரீமடந்தை யுபாசனைப் பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! உமையவள் சிவனைநோக்கி, 'சர்ப்பாபரணம் அணிந்திடும் அமலரே! அகிலலோகங்கட்கும் தலைவரே! நீர் இரவும் பகலும் ஒழிவின்றித் தியானம் செய்கின்றீரே; உம்முடைய தியா னத்திற்கு விஷயமாயிருப்பவர் யாவர்? மிக்க மகிமையுடைய உமது இயல்பை உரைக்குமிடத்து, உம்மினும் பெரியாரொருவருமில்லை யென்று தோற்றுகிறது; நீர் இடைவிடாது தியானஞ் செய்கின்ற குறையை நோக்குமிடத்தில் உம்மினுஞ் சிறந்தார் எவரேனும் இருக்கவேண்டும் என்று ஐயமுண்டாகிறது; ஆதலால் உம்மினும் மிக்கார் யார்? என்று வினவினள். அதற்குச் சிவன் உமை நங்காய்! *அஞ்ஞானமாகிய கடலைத்தாண்டுவதற்கு ஓடமாயிருப்பவன் நாரா யணன். இவனன்றி இந்தச் சம்சாரக்கடலைத்தாண்டுவதற்குச் சாத னமாயிருப்பது வேறொன்றுமில்லை; கருமகாண்டம் முதலத்தியாயம் கூறுகிறது. ஆதலால் உமை நங்காய்! என்னுடைய தியானத்திற்கு விஷயமாயிருப்பவன் நாராயணனே; என்பதை நீயுமறிவாயென்று நவின்றனன்.

பின்னர் இமவான் மகளாகிய பார்வதியுடன் சிவன் யோக சமாதியை யடைந்து மஹாபுருஷமந்திரத்தைச் செபித்துச் சங்கர் ஷணத்தியானஞ்செய்து 'எந்தையாகிய பிரமனையுந்தந்த எந்தையே!

---

* "ஸம்ஸாரார்ணவ மக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம் ।
விஷ்ணுபோதம் விநாநாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம் ॥

அரியே !!' எனத் துதித்தனன். இதனைப் பாகவதம் ஐந்தாம் ஸ்கந்தம் பதினேழாமத்தியாயத்திற் காணலாம். சர்வமங்கலமுடையவனாகிய திருமாலைப் பிரமன் சிவன் முதலானவர்கள் அர்ச்சனை செய்து தத்தம் பதவியை அடைந்தார்களென்று நரசிங்கபுராணம் நவிலாநின்றது. அலைகடலிற்றுயிலும் அண்ணலாகிய இறைவனைப் பிரமன் சிவன் இந்திரன் முதலானவர்களெல்லாம் உபாசனை செய்தார்களென்று நாரதீயம் நாட்டுகிறது. செங்கண்மாலை உபாசனைசெய்து நான்முகன் ஐமுகன் இந்திரன் முதலானவர்கள் நல்ல பதவியைப் பெற்றுள்ளார்களென்று இலிங்கபுராணம் இசையாநின்றது.

சிவன் உமையைநோக்கி, 'நங்காய் ! மாதவஞ்செய்த புண்ணியமுடையவர்க்கல்லது ஏனையோர்கட்குச் செங்கண்மாலின் திருவடித் தாமரைகளில் மனஞ்செல்லாது ; இப்பொழுது உனக்கு அவ்விறைவனுடைய தியானம் வாய்த்தது; கொண்டாடத்தக்கதே ; இன்னும் கேசவன் முதலான பன்னிருநாமம், நூற்றெட்டு நாமம், ஆயிர நாமங்களின் சிறப்பினையும் நன்கறிவாய் ; யானும் இராமநாமத்தை மறவாமல் தியானஞ்செய்துகொண்டிருக்கிறேன் ; நீயும் அந்த உபாசனையின் வழியில் நிற்பாய்' என்றனன். இதனைக் கூர்மபுராணத்திற் காணலாம்.

---

### ௯-வது மார்க்கண்டனுபாசனைப் பரிச்சேதம்.

சிவபிரானை மார்க்கண்டன் சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு, 'சதாசிவனே ! நின்றொண்டனாகிய யான் முக்திபெறும்படி அநுக்ரஹிக்கவேண்டும்' என்று வேண்டினன். அதற்குச் சிவனும், 'அன்பனே ! இப்பொழுது யான் திருமாலை ஆராதனை செய்கிறேனாதலால் ஒரு நாழிகைப்பொழுது தாமதிப்பாய்' என்று சாற்றினன். இதனைக் கேட்ட மார்க்கண்டன், "பராபரனே! நீ பதினான்குலகத்திலுள்ளவர்கட்கும் வந்தனைக்குரிய பொருளாய் விளங்குகின்றனையென்றன்றோ யான் மதித்துளேன் ; இங்ஙனமிருக்க 'சிரீதரனை யாராதனை செய்கின்றேன்' என்றுரைக்கின்றனையே ; நின்னிலும் சிறந்தாருளரோ ? இதன் உண்மை அடியேற்கொன்றும் தெரியவில்லை ; விளக்கியருள வேண்டும்" என்று வேண்டினன். அதற்குச் சிவன், 'அன்பனே !

மௌனவிரதத்தை மேற்கொண்டவர்களும், மூவுலகத்திலுள்ளவர் களும் என்னை அர்ச்சனை செய்வார்கள்; யான் நாராயணனையே உபாசனை செய்வேன்; இந்த இரகசியத்தை இப்பொழுது உனக் குபதேசித்தேன்; இதனைக் கைக்கொள்வையேல் முக்திப்பேற்றைப் பெறுவாய்' என்றனன். இவ்விவரத்தைப் பதுமபுராணத்திற் றெளிவாய்க் காணலாம்.

சிவபிரான் முருகவேளை நோக்கி, யான் திருமாலைத் திருவாரா தனஞ்செய்து, துக்கத்தினின்று நீங்கிச் சுகமுற்றேன்' என்றுரைத் தனனென்று கந்தபுராணம் கழறுகிறது. பிறைசூடியாகிய சிவன் தன் மனைவியாகிய உமையைநோக்கி, 'யான் செங்கண்மாலைத் திரு வாராதனஞ் செய்தேன்' என்றிசைத்தனனென்று பதுமபுராணம் பகர்கிறது. முக்கண்ணன் இராமபிரானைப் பதினாலாயிரங் கல்பம் அர்ச்சனை செய்து மகத்துவமடைந்தனனென்று அகத்தியச் சங் கிதை அறையாநிற்கும்.

ஆகம மடந்தாய்! இத்துணையுங்கூறி திருமாலே பரதேவதை யாவானென்பதையும், உங்கள் சிவன் உபாசகனுகானென்பதையும் வேத சாஸ்திரப்பிரமாணங்களால் நிலைநாட்டினேன்.

---o---

## ௩-வது, சர்வசிருட்டிவத்து நிருணயப்படலம்.

---

### க-வது பெரியபிராட்டியார் பிரமருத்திராதிகளைச் சிருட்டித்த பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! திருமாலின் உபாசனைநிற்க, அந்தத் திரு மாலின் மார்பைவிட்டகலாது நித்திய வாசஞ்செய்கின்ற பெரிய பிராட்டியாரின் திருவருளினால் பிரமன் சிவன் முதலானவர்களெல் லாம் தத்தம் பதவிகளைப்பெற்றுள்ளார்கள். இவ்விவரத்தை வேதத் திற்காணலாம். இதனை உன் மனத்திற் பதியுமாறு சொல்வேன்:—

இருக்கு வேதம் எட்டாம் அட்டகம் இறுதி வருக்கத்தில் பெரியபிராட்டியை ஒப்பற்ற காரணியெனவும், * நியாமகியென வும், இப்பிராட்டியாரது திருவுள்ள உகப்பிற்குப் பாத்திரபூதராய் விளங்குகின்றவரெவரெவரோ அவரவரைப் பிரமன் சிவன் இந்தி

ரன் வசுக்கள் ஆதித்யராகச் செய்கின்றாளெனவும் சொல்லப்பட்டுள்ளன. மேலும் அந்த இருக்கில் அந்த அட்டகத்தில் இந்தப் பிராட்டியார் திருமாலின் திருமார்பில் அமரும் பெருமையுடையவளென்றுஞ் சொல்லப்பட்டுளது. முப்புரங்களை எரிப்பதற்கு முக்கண்ணற்குப் பினகமென்ற வில்லைக்கொடுத்தவளும் இப்பிராட்டியே. இவளே உலக சிருஷ்டியாம் தொழிலை நடத்துவதற்கு முக்கணீசற்குத் தந்தையாகிய நான்முகனைப்படைத்தாள். இவளுக்கிருப்பிடம் திருப்பாற்கடலாகும். அந்தப்புரம் திருமாலின் திருமார்பாகும். 'பாவாய்'! இந்தப்பிராட்டியின் மகிமையை மேலும் உனக்கேற்கும்படி எடுத்துரைப்பேன்.—

———

உ-வது வேள்வி விச்சுவநாயகப்பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! நீ முன்பு வேதம் எங்கள் திருமாலை விசுவமெனவும், வேள்வியெனவும் ஓதி, சிவனை வேள்வியின் பதியென்றும், விசுவபதியென்றும் சொல்லியது. ஆதலால் சிவனே பரனுவான். இது நிற்க, இங்ஙனங் கூறியதற்கு விரோதமாகச்சிவனை விசுவம் என்று சொல்லியது யாதுபற்றியென்பையேல்; விசுவகாரணமாயிருக்கின்ற எங்கள் சிவனை விசுவமென்றிசைத்தது காரணத்தைக் காரியமாகக் கூறுவதோர் வழக்குப்பற்றியாம். அதுபற்றிக் கூறியதேயன்றிவேறில்லை. திருமாலை விசுவநாதனென்றிசைத்தது உபசாரமாகும். பஞ்சராத்திரம் திருமாலைப்பிரகிருதியென்று சொல்லியதனுல் உலகிற்கு எங்கள் சிவபெருமானே நிமித்த காரணமாவானென்பது தெளிவு என்று இங்ஙனம் பலகூறினுய்.

திருமாலை வேள்வியினுல் சிவன் உபாசனை செய்து மகிழ்வுற்றான்; என்று ருக்குவேதம்சொல்கின்றதனுல் அந்தச்சிவன் வேள்வியின் பதியாகான். உங்கள் சிவன் * அபிசாரவேள்விக்கு அதிபதியாயிருப்பது பற்றி வேள்வியின் பதியாவா னென்றிசைத்தனை போலும்.

* அபிசாரவேள்வி—மாரணவேள்வி.

நான்முகன் ஈந்த வரத்தினல் அஷ்டமூர்த்தியாகவும், அம்மூர்த்திகளில் அதிபனுகவும் பட்டமெய்திய முக்கண்ணனை வேதம் விசுவநாதனென்று சொல்லியது. (இங்ஙனம் ஒருபதவியை இரந்து பெற்ற சிவனை விசுவபதியென்பது) உபசாரமாமேயன்றி அரிய பதவியை அளிப்பவனுகிய அரியை விசுவபதியென்பது உபசாரமாகாது. பாஞ்சராத்திரம் திருமாலைப்பிரகிருதியென்று சொல்லியதின் கருத்தாராயாமற் கூறி உன்னறியாமையைப் புலப்படுத்தினுய். பாவாய்! பாஞ்சராத்திரம் என்ற நூலில் ஜகத்பரிபூரணனுகி ஆதியும் அந்தமுமில்லாது விளங்குகின்றவன், வாசுதேவனென்று வழங்கப்பெறும் பெரியோனே; என்று சொல்லப்பட்டுளது. இவ்வாறு விளங்குகின்ற வாசுதேவனுடைய இச்சையினல் வெகுவாக விரிந்துள்ள பிரகிருதி * அவ்யக்தமாம் நிலையடையும். இங்ஙனமிருக்கின்ற பிரகிருதியும், அதில் மெழுகில் ஒட்டிய பொன்போலப் பதிந்து கிடக்கின்ற ஜீவசமூகமும் வாசுதேவனுக்குச் சரீரமாகவிருக்கின்றன. இவைகளே பல்வேறு தத்துவங்களாக விளங்குமாறு அவ்விறைவன் சிருஷ்டிக்கின்ருன். இங்ஙனம் சிருஷ்டிக்கப்பட்டவை அந்த வாசுதேவனுக்குப் பந்துமுதலிய விளையாட்டுக் கருவிகளாக விளங்கும். இந்த வாசுதேவனே சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களைச் செய்வதற்குச் சங்கர்ஷண, பிரத்யும்ன, அநிருத்தனுகவும் விளங்குவான். இந்த மூர்த்திகளே மனம் அஹங்கார முதலிய தத்துவங்கட்கு அதிதெய்வமாக விளங்குவார்கள்.

உலகத்தோற்றம் ஒடுக்கம் காத்தல் என்றமுத்தொழிற்கும் கர்த்தாவாயிருப்பவன் வாசுதேவனே. மற்றெல்லாப் பொருள்களும் அவன்றனக்கே சரீரமாகவிருக்கின்றன. இங்ஙனம் இவை சரீரமாகவிருக்கின்ற ஒற்றுமைபற்றி எல்லா உலகமும் அவனேயென்று சொல்லியது. சரீரத்தை உயிரென்றுசொல்வது தகுமோவெனின்; உலகில் ஆத்மாவானவன் தேகாபிமானத்தால் 'யானிளைத்தேன்; பருத்தேன்' என்று சொல்வதுபோலத் திருமாலை உலகென்று சொல்லியது. பஞ்சராத்திரம் வேதப்பொருளாய் விளங்குகின்றதினல் வேதம் சொல்லிய நிமித்தகாரணனும் வாசுதேவனேயாவன்.

* அவ்யக்தம்—கண்ணுக்குத்தோன்ருதிருக்கும் பரமஸூக்ஷ்மமாகிய நிலை.

## ரு-வது, சகத்காரணத்துவ விவரணப்பரிச்சேதம்.

ஆகம மடந்தாய்! அருள்நீங்காத இருதயத்தையுடைய திருமாலே * உபாதானகாரணமாயும், நிமித்தகாரணமாயும் விளங்குகிறான். இவ்விஷயம் யாவர்க்குமேற்கவும், உனதுள்ளம் தெளியவும் எடுத்துரைப்பேன்:—

---

* உபாதான காரணம்—காரியபதார்த்தமாய்ப் பரிணமிக்கும் காரணம். உலகத்தில் காரியோற்பத்தியைக்குறித்துக் காரணம் நிமித்தோபாதான சககாரி வடிவத்தினால் மூன்றுவகையாயிருக்கும். இவற்றுள் நிமித்த காரணமாவது—உபாதானமான வஸ்துவைக் காரியவடிவமாக விகாரமடையும்படி செய்யும் கர்த்தாவாகிய வஸ்து. மண்ணுருண்டையைக் குடமாகச்செய்கின்ற குயவன் நிமித்தகாரணம். உபாதான காரணமாவது—காரியவடிவமாகப் பரிணமிப்பதற்கு யோக்கியமான வஸ்து. மண்ணுருண்டை குடமாகப் பரிணமிப்பதற்கு யோக்கியமுள்ளதாயிருப்பதால் மண்ணுருண்டை உபாதான காரணம். சககாரிகாரணமாவது—காரியோத்பத்திக்கு உபகரணமான வஸ்து. தண்டம் சக்கா முதலியவை குடஞ்செய்வதற்கு உதவியாயிருக்கின்றமையால் இவை சககாரிகாரணங்களாம். உலகத்தில் இம்மூன்று காரணங்களும் வெவ்வேறாயிருக்கும்.

இம்மூன்று காரணமும் நாராயணனேயென்பது விசிஷ்டாத்வைத சித்தாந்திகளின் கொள்கையாம். உபாதான காரணத்துவம் ஈசுவரனுக்குண்டென்று சொல்லலாகாதென்று வாதிக்கின்றார்கள். ஏனென்றால் ஈசுவரனே உபாதானகாரணமானால் அவனுக்கு விகாரப்பாடுண்டென்று சொல்லவேண்டும். அவன் விகாரமற்றவனாதலால் உபாதான சாரணத்துவம் மூலப்பிரகிருதிக்கேயுளது; என்கின்றனர்.

உலகத்தில் நிமித்தகாரணமாயிருக்கும் குயவன் முதலானவர்கட்கு எல்லாமறியுந்தன்மையில்லாததினாலும், மண்ணுருண்டை முதலானவைகட்குச் சர்வசக்தியில்லாததினாலும் இவை வெவ்வேறு காரணங்களாயின. ஸர்வேசுவரன் எல்லா மறிந்தவனாயும், எல்லாம் வல்லவனாயுமிருக்கின்றானாதலால் இவனே எல்லாக் காரணமாயுமிருக்கலாம். வேதமானது பரப்பிரமஞானமொன்றினால் எல்லாமறிந்ததாகும். எவ்வாறெனின்;—மண்ணுருண்டையையறிந்தால் அதினின்றுமுண்டாகும் குட முதலானவை மண்பிண்டத்தின் விகாரமென்றறிவதுபோல; என்று திருஷ்டாந்தங்காட்டியது. இங்குவேதம் ஒன்றையறிந்தால் எல்லாமறிந்ததாய்விடுமென்ற பிரதிக்ஞைக்கும், மண்ணுருண்டை திருஷ்டாந்தத்திற்கும் விரோதம்வாராதிருப்பதற்காக ஈசுவரனுக்கு உபாதான காரணத்துவமும் ஒப்புக்கொள்ள வேண்டும். நிமித்தோபாதான

நாராயணனுக்குச் சித்து அசித்து என்ற இரண்டும் சரீரமாக விருக்கின்றன. அவ்விறைவனைச்சொல்லுகிற சொல்லினுள் இவை யடங்கும். அதனால் இவனே ஜகத்தாகப் பரிணமிக்கிறானென்றும், அதனால் உபாதான காரணமும் இவனேயென்றும் வேதம் முறையிடுகின்றன. இந்த நாராயணனே உபாதானகாரணமானால் விகாரமுடையவனாகானோ வெனின் ;—ஆகான். சிலந்திப் பூச்சியானது தன்னுளிருக்கின்ற நூலினை வெளியிட்டு மறுபடியும் அதனைத் தன்னுள்ளே யடக்குகின்றது. நூலினை வெளியிட்டபோது தன்சரீரம் சுருங்கியும், அதனை யடக்கியபோது தன் சரீரம் பெருத்துமிருப்பதில்லை. இந்தச்சிலந்திப்பூச்சிக்கிருக்கின்ற சக்தியானது ஸர்வசக்தியுடைய இறைவனுக்கில்லையென்பதில்லை. ஆதலால் தன் ஸ்வரூபத்திற்கு விகாரமில்லாமலே ஜகத்தாகப் பரிணமிக்கிறான். தனக்குச் சரீரமாக விருக்கின்ற சித்து அசித்துக்களுக்கே பரிணாமமுள்ளது. எல்லா உலகங்களும் அவ்விறைவனிடத்திலே தோற்றமும், ஒடுக்கமுமாகின்றன; என்று வேதம் செப்புகிறது.

நாராயணனாகிய இறைவனே 'யானே ஜகத்தாகிறேன்' என்று சங்கல்பித்துக்கொண்டு ஜகத்தாகிறானதலால் அவனே நிமித்த கார

---

காரணங்கள் வெவ்வேறாக ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் நிமித்தமாகிய குயவ ஞானத்தினால் குடமுதலியகாரியம் இன்னஸ்வரூபமென்றறியப்படமாட்டா. உபாதானமான மண்ணுருண்டை ஞானத்தினால் குட முதலிய காரியங்கள் மண்ணென்றறியப்படுகின்றன. ஈசுவரன் உபாதானகாரணமானாற்றான் இந்த ஈசுவர ஞானத்தால் உலகமும் அறியப்பட்டதாகும். ஆதலால் ஜகத்துக்கு ஈசுவரனே உபாதான காரணமுமாகிறான். இவன் உபாதான காரணமானாலும் விகாரமடைவதில்லை. சரீரத்திற்குள்ள பால்யம் யௌவன முதலிய விகாரங்கள், சரீரத்தோடு கூடியிருக்கிற ஆத்மாவுக்கு வருவதில்லை. அது போல ஸர்வேசுவரன் சிதசித்துக்களைச் சரீரமாகக் கொண்டுள்ளானதலால் அவனை ஜகத்தாகும்போதுண்டாகும் விகாரப்பாடுகள் விசேஷணங்களாகிய சித்து அசித்துக்களுக்கே உரியனவாகும். சிதசித் விசிஷ்டனாகிய ஈசுவரனுக்கு விகாரம் வருவதில்லை. ஸர்வேசுவரன் 'பஹுஸ்யாம்'' (வெகுவாக ஆகக்கடவேன்') என்கிற சங்கல்ப விசிஷ்டனாய் நிமித்த காரணமாயும், ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனாய் உபாதானகாரணமாயும் ஞானசக்தியாதி விசிஷ்டனாய் ஸஹகாரிகாரணமாயுமிருக்கிறான். ஆதலால் இம்மூன்று காரணமும் இறைவனேயென்பது தெளிவு.

ணனுயும், உபாதான காரணனுயுமாகிறுன். ஒரு வஸ்துவே நிமித்தோபாதான காரணமாக விருக்கிறதென்பது உலகிற் கண்டதில்லையாதலால், இது உலக வழக்கின்றி நூல்வழக்காக விருக்குமென்று கொள்ளத்தக்கது. உபாதான காரணமாயிருப்பதால் வருகின்ற விகாரப்பாடு, இறைவன்றன்னை விட்டுப்பிரியாது அவன்றனக்குச் சரீரமாகவிருக்கின்ற சித்து அசித்துக்களுக்கே யுண்டென்று பாகவத முதலான நூல்கள் பகர்கின்றன.

---

ச-வது, பீதாம்பரனைப் பிறப்பிலியென்ற பரிச்சேதம்.

ஆகமநங்காய்! இங்ஙனமுரைத்தவையெல்லாம் ஒருபுறமிருக்க, நாராயணேபநிடதத்தில் உருத்திரசப்தவாச்சியனுகிய ஆதிகாரணனிடத்தில் பிரயதேவன்றேன்றினுனென்று சொல்லப்பட்டுளது. இங்ஙனமுரைத்தபொருளையாராயாமல் நீலகண்டனுகிய உருத்திரனிடத்தில் பிரமன்றேன்றினுனென்றுகொண்டாய். பூமியில் *ஒஷதி முளைப்பதைக்கண்டதன்றி, ஒஷதியின்மேல் பூமிமுளைப்பதைக்கண்டறிவாரில்லை. அதுபோல நான்முகனிடத்திற் சிவன் றேன்றினனென்று வேதங்கள் முறையிடுவதைக் கண்டறிவதன்றிச் சிவனிடத்தில் நான்முகன் றேன்றினுனென்பதையறிவாரில்லை.

கற்பபேதத்தில் பிரமதேவனிடத்தில் உருத்திரன்றேன்றினனென்று சொல்லப்பட்டுளது. இந்தப்பிரமதேவன் நாராயணனிடத்திற்றேன்றினன். ஆதலால் இந்தப் பிரமன் சிவனென்ற இவ்விருவரும் திருமாலிற்கு மக்களாவார். இங்ஙன முரைத்தற்கு விரோதமாகச் சிவனிடத்திற் பிரமதேவன் றேன்றினுனென்றுல், அதுவேதசாஸ்திரங்கட்கு விரோதமாயொழியும். இலிங்கபுராணத்தில் சிவனிடத்தில் பிரமன் விஷ்ணு என்ற இவ்விருவரும் தோன்றினரென்று சொல்லப்பட்டுள்ளதென்றனை. அது தாமதபுராணமாதலால் அதிற்கூறியது பிரமாணமாகமாட்டாது. வேதத்தில் எவ்விடத்திலாவது திருமாலிற்குப் பிறப்புச் சொல்லவில்லை. சாத்விக புராணங்களும் இவ்வாறே திருமாற்குப் பிறப்பில்லை யென்றுரைத்தன.

---

* ஒஷதி—மருந்துச்செடி.

திருமால் பிரமன் என்ற இவ்விருவரும் ஒருவருக் கொருவர் சரீரமாறிப்புகுந்தனரேயன்றி ஒருவரிடத்தில் மற்றொருவர் பிறந்தி லரென்று * இந்திரஜாலங்காட்டினுய். நாராயணனிடத்தில் நான் முகன்றோன்றினனென்று பிரசித்தமாயிருக்க, அதற்கு விரோதமாக அந்த நாராயணனிடத்திற் பிரமதேவன் பிறந்திலனென்று சத்தி யஞ்செய்தால் சகல சாஸ்திரங்களும் சிறப்புடையன வன்றென்று புதிதாக வேறு நூல் செய்யவேண்டும்படி நேருமன்றே!

நாராயணன் நான்முகனிடத்திற் பிறந்த காரணத்தால் அவன் அதோக்ஷசனென்று பெயர்படைக்கப் பெற்றனனென்றிசைத்தாய். அது பொருந்தாது. இங்கு அதோக்ஷசனென்ற சொற்குப்பொ ருள் விரித்துரைப்பேன்; கேட்பாய்.—எவ்வளவு சிறந்தவராயிருந் தாலும் அவரது பஞ்சேந்திரியங்களால் அறிதற்கரியானென்பதும், அஷ்டாங்கயோகியர் ஞானக்கண்ணினுல் காண்டற்குரியனென்பது பற்றியும் நாராயணனுக்கு அதோக்ஷசனென்று பெயர் வழங்க லாயிற்று.

இதுநிற்க, மஹாபாரதம் மோக்ஷதர்மம் அறுபத்தொன்பதாம் அத்தியாயத்தில், ஞானபூர்த்தியுடையவர்களால் தியானிப்பதற்குரி யவனுயும், உற்பத்தி நாசமில்லாதவனுயும், மனத்திற்கெட்டாதவனு யுமிருக்கின்றுனுதலால் நாராயணனுக்கு அதோக்ஷசனென்றுபெயர் வழங்கலாயிற்றென்றுசொல்லப்பட்டுளது. இத்தகைய நாராயணன் † பிறவாதிருந்தும் வெகுவாகப்பிறக்கிருனென்று வேதம் புகலாநிற் கும். திருமால் தன்னிச்சையால் அவதரித்தருளும் விவரமெல் லாம் இனிமேல் விரித்துரைப்பேன். இப்பொழுது திருமாலிடத்தில் நான்முகன் பிறக்கவில்லை யென்று நீ கூறிய உரையினை மறுத் துரைப்பேன்.

---

* இந்திரசாலம்—அற்புதங்களைக்காட்டும் மாயவித்தை.

† "அஜாயமானோபஹுதா விஜாயதே"

"பிறப்பில் பல்பிறவிப்பெருமான்" என்று ஆழ்வாருளியதும்காண்க.

ரு-வது, ஐமுகன் அயன் மகனேன்ற பரிச்சேதம்.

ஆகம மடந்தாய்! நான்முகன் நாராயணனிடத்தில் தோன்றினனென்றுநாராயணோபநிடதமும், புருஷசூக்தமும், எல்லாவேதங்களும் எடுத்தியம்பும். இங்ஙனம் ஓதியதற்கேற்ப, நான்முகன் திருமாலைநோக்கி, 'எந்தாய்! இருதயம் நேத்திரம் வாக்கு செவி நாசி அண்டம் நாபிகமலம் என்ற ஏழு இடங்களிலிருந்து என்னை ஏழுமுறை பெற்றனை' என்றனன். மேலும் பிரமதேவன் நாராயணனைத் தியானித்து வணங்கி வாழ்த்தினனென்ற விவரத்தைப் பாரதத்தில் அயக்கிரீவோபாக்கியானத்திற் காணலாம்.

அயன் அரியை நோக்கி, 'ஐம்பெரும்பூதங்களையும், மாயாசப்த வாச்யமாகிய மூலப்ரக்ருதியையும், ஒடுக்கிய எந்தையே! நீ ஆதி சிருஷ்டியில் என்னையுண்டாக்கினை' என்றுரைத்தனன். இதனை வால்மீகி ராமாயணத்திற் காணலாம். யமதருமன் ஸ்ரீ ராமபிரானை நோக்கி, 'உம்மிடத்தில் உமக்குப்புதல்வனுப் நான்முகன்றோன்றினன்' என்று துதிசெய்தான். இவ்விவரத்தை உத்தர ராமாயணத்திற்காணலாம். மேலும், விஷ்ணுபுராணமும், சூரியசித்தாந்தமும், பாகவத முதலிய நூல்களும் பிரமதேவன் திருமாலிடத்திற்றோன்றினன் என்று விரித்துரைத்தன.

மடந்தாய்! நான்முகன் நாராயணனிடத்திற்றோன்றினன் என்பதை இனிமேலும் எடுத்துரைப்பேன். இஃதொருபுறமிருக்க, உங்கள் சிவன் இச்சையால் பிரமதேவனிடத்திற்றோன்றினனென்றும் அவன் தோன்றிய நெற்றி தியானஸ்தலமென்றும், ஆதலால் அவன் பிறப்பிலியென்றும் மிகவும் வருத்தமுற்றுச் சிவனுக்கு இவ்வளவு பெருமையினை யேறிட்டுக்கூறினை. இன்னும் எத்தனை சூழ்ச்சியாலும் சிவனுக்குச்சிறப்புரைக்கத் தொடங்கினாலும் சிறப்புண்டாவது எங்ஙனம்? பித்தளை என்ற உலோகம் பசும்பொன்னுமோ?

நெற்றியானது தியானஸ்தலமென்றுரைக்கில், அந்த நெற்றியிடத்திற் பிரமதேவன் தியானித்ததுபோல, யோகியர் எல்லாம் தினந்தோறும் தவறாமல் தியானிப்பார்களன்றே. இங்ஙனம் தியானிப்பாரனைவரிடத்திலும் உங்கள் வெண்மதிச்சடையன் தோன்று

திரானன்றோ. அங்ஙனமாம்போது நான்முகற்குச்சிவன் புதல்வனுவானென்றிசைத்த வேதங்கள் யோகியர்க்கும் அவன் குமரனுவானென்று சொல்லாதொழியுமோ? சிவன் தோன்றிய நெற்றியை தியானஸ்தலமென்று சாமர்த்தியமாகச் சொல்வையேல், விஷ்ணுபுராணத்தில் நான்முகன் தொடையில் நாரியோர் பாகனுகிய சிவன் றோன்றினுனென்று சொல்லப்பட்டுளதே. இந்தத் தொடையையும் தியானஸ்தலமென்று சொல்லத்துணிந்துவிடுவைபோலும்.

ஆகம அணங்கே! உங்கள் முக்கண்ணப்பன் பிரமனிடத்திற் றோன்றினுனென்பதில் ஐயமில்லை. இந்தப்பிரமன் சிவன் என்ற இருவரும் திருமாலிடத்திலொடுங்குவார்கள். இவ்விருவரும் பிரகிருதி வசப்பட்டவர்களென்பதையும், கர்மச்சார்புடையாரென்பதையும், இச்சையாற் பிறந்திலரென்பதையும் தெளிவாக எடுத்துரைப்பேன் :—

---

சூ-வது, * மூவர் முகுந்தனிடத்திலுற்பத்திப் பரிச்சேதம்.

ஆகம மடந்தாய்! பிரமதேவனுக்கும், சிவனுக்கும் பிறப்புண்டென்று இருக்குவேதம் இசையாநிற்கும். இவ்விவாதத்தைப்பெரியபிராட்டியாரின் மகிமையெடுத்துரைக்கின்றவிடத்தில் யாவருக்குந் தெரியுமாறு எடுத்தியம்பினேன். நிலம் நீர் தீ காற்று ஆகாசம் என்ற பஞ்சபூதப்பரப்பும், பேரண்டமும் தேவர்முதலானவர்களும் மாண்டொழிந்த ஊழிக்காலத்தில் திருமாலொருவனே இருந்தான். இந்தத் திருமாலின் நாபிகமலத்தில் நான்முகன் உற்பவித்தான். இந்தப்பிரமதேவன் சிவனைப்பெற்றனனென்று தெளிவாக இருக்குவேதம் முறையிடுகிறது.

கடலை ஆடையாகக்கொண்ட பூமிதேவிக்கு நாயகனுக விளங்கும் ஆகாய சப்த வாச்சியனுயிருக்கின்ற அரியிடத்தில் தேவகுருவாகிய வியாழபகவானும், சிவனும் ஜன்மித்தனரென்று எசுர்வேதம் முதற்பருச்சம் பத்தாமனுவாகம் பகாாநின்றது.

சந்தோக சாமவேத முறையையும், ஜைமினி சாம முறையையுங்கைக்கொண்டு சிறந்த புகழினையுடைய பெரியோர்கள் இப்பூமி

---

* மூவர்—பிரமன், சிவன், இந்திரன்.

யில் சுபகர்மம் நடத்துந்தோறும், கொன்றைவேய்ந்த சிவனைப்பிரம தேவன் பெற்ற மைந்தனே! உன் பொருட்டு நம: என்று போற்று கின்றார்கள். இம்மந்திரத்தின் பொருளை இனி மறக்கலாமோ? தேவ மானிடகணங்களும், அண்டமும், நிலைத்திணை இயங்குதிணைப் பொருள்களும் எல்லாம் அழிந்துபோன காலத்தில் பரப்பிரமம் என்ற ஒரு பொருளே இருந்தது. அந்தப்பிரமத்தின் திருநாபி கமலத்தில் வேதப்பொருளறியும் பிரமதேவன் வந்து தோன்றினன். அந்தப்பிரமதேவனிடத்தில் உருத்திரமூர்த்தி பிறந்தனன் என்பதை அதருவண வேதத்தில் தெளிவாகக் காணலாம்.

பிரமன் சிவன் முதலான அமரகுழாங்களும், சந்திர சூரியர் களும், பஞ்சமாபூதங்களும், வேறு பிறவொன்றுமில்லையென்று சொல்லத்தக்க மகாப்பிரளாயந்த காலத்தில் ஒத்தாரும் மிக்காரு மில்லாத நாராயணன் தானே சிருஷ்டிக்கவேண்டுமென்று இச் சித்து முதலில் * பதினொரு இந்திரியங்களையும் சிருஷ்டித்தான். நாராயணனுடைய நெற்றியினின்றும் வேர்வை தோன்றியது. அந்த நீரில் நான்முகன் தோன்றினன். மீண்டும் அவ்விறைவன் சங்கற் பிக்க நெற்றியினின்றும் சிவன் பிறந்தனனென்று மஹோபநிடதம் உரையாநின்றது.

நாராயணனிடத்தில் பன்னிரு சூரியர்களும், பதினொரு உருத் திரர்களும், சிவனும், பிரமதேவனும், பஞ்சமாபூதங்களும், அருந் தவ முனிவர்களும், எண்ணிறந்த தேவர்களும் பிறந்து வளர்ந்தார் கள். மஹா பிரளயகாலத்தில் இவர்களனைவரும் ஒடுங்கி, அந்த நாராயணனிடத்தி லிருப்பார்களென்று சுபாலோபநிடதம் கூறு கின்றது.

பிரமதேவன் சிவன் இந்திரன் முதலானவர்களையும், மற்றும் எல்லா அண்டத்திலுள்ளவர்களையும் நாராயணனே படைத்தான். சிருஷ்டிக்கப்பட்ட அவ்வுயிர்கடோறும் அந்தர்யாமியாயும், அவ் வவ்வுயிர்களின் சக்திக்குத் தானே காரணமாயும் விளங்குகின்றான்.

---

* பதினொரு இந்திரியங்கள்—மெய் வாய் கண் மூக்குச்செவியென்ற ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு பாணி பாதம் பாயுர் உபத்தம் என்ற கர் மேந்திரியம் ஐந்தும், மனமொன்றுமாம்.

ஆதலால் பிரமதேவனும் சிவனும் இந்திரனும், எல்லா அண்டங்களில் வாழ்கின்றவர்களும் நாராயணனேயென்று சுபாலோபநிடதம் வகுத்துரைத்தது.

இவ்விஷயத்தைக்குறித்துச் சிவாகமும், ஏனைய நூலும் நன்கு தெரிவிக்கும். இஃதல்லாமலும் இன்னும் சுபாலோபநிடதமுரைப்பதைக் கேட்பாயாக.—உலக சிருஷ்டிக்குமுன் நாராயணன் தன் திருமேனியிற் பாதியினின்று சிவனைச் சிருஷ்டித்தான். அதன்மேல் தேவர்களையும் முனிவர்களையும் ஏனையோர்களையும் சிருஷ்டித்தான். கண்ணும், கண்ணால் காணப்படுவனவும் நாராயணனே; காதும் அதனால் கேட்கப்படுவனவும் நாராயணனே; நாவும் அதனாலறியப்படும் சுவையும் நாராயணனே; மூக்கும் அதனால் நுகரப்படும் பொருள்களும் நாராயணனே; சரீரமும் அதனால் தொடப்படுவனவும் நாராயணனே; மனமும் அதனால் நினைக்கப்படுவனவும் நாராயணனே; மற்றும் சொல்லப்படுவன எல்லாம் நாராயணனேயென்று சொல்லியது.

மஹாபிரளயகாலத்தில் பரப்பிரமம் ஒன்றே இருந்தது. அந்தப் பரம்பொருள், பிரமதேவனையும் சிவனையும் இந்திரனையும் ஈசானனையும் யமதருமனையும் மற்றுமுள்ளாரனைவரையும் சிருஷ்டித்தது. இவ்விவரத்தைப் பிருகதாரண்யம் விரித்துரையாநிற்கும். ஒன்றுமில்லாத பெரும் பிரளயகாலத்தில் பரப்பிரமம் ஒன்றே இருந்தது. அந்தப் பிரமத்தினிடத்தில் முதன்முன்னம் அவ்யக்தம் தோன்றியது. அதினின்றும் சிவன் தோன்றினனென்று லிங்கபுராணம் விரித்துரைத்தது.

பிரமதேவனும் சிவனும் ஒடுங்கிய காலத்தில் நாராயணன் ஒருவனே இருந்தான். இந்த நாராயணன் பின்னர் நான்முகன் ஐமுகன் இந்திரன் யமன் அக்கினிதேவன் முதலானவர்களைச் சிருஷ்டித்தான். இந்த நாராயணன் அவ்வக்காலத்திற் கேற்றவாறு * வெண்மை செம்மை பொன்மை கருமை நிறமுடன் விளங்குவானென்று வேதத்திலுள்ள குளிர்ப்பங்கிரகசியம் விரித்துரைத்தது.

---

* "திருவடிவில் கருநெடுமால் சேயனென்றும்
திரேதைக்கண் வளையுருவாய்த் திகழ்ந்தானென்றும்
பெருவடிவில் கடலமுதங் கொண்டகாலம்
பெருமானைக் கருநீல வண்ணன்றன்னை

## எ-வது, சிவன் பிரகிருதிகர்மபாசபிந்துயோனிசம்பந்த பரிச்சேதம்.

ஆகமநங்காய்! பிரமதேவன் உஷையென்ற மடந்தையிடத்தில் தன் வீரியத்தைவிட்டான். அதனால் உருத்திரன் தோன்றிப் பிரமதேவனை நோக்கி, 'எந்தாய்! யான் பாபியாய்ப்பிறந்தேனாதலால் என் பாபம்நீங்கப் பெயரிட்டருளவேண்டும்' என்று வேண்டினன். இது, சதபதப்பிரமாணத்திற்கண்டது. இந்நூலிற்கூறும் உண்மையுரையைக்கேட்பாயாக:—

பிரமதேவன் மக்களைப்பெற வேண்டும் என்று அருந் தவஞ் செய்துமுடித்து,முன்னர் அக்கினிதேவன்முதலியதேவர்களைக்களிப்புடன் பெற்றனன். பின்னர் மிகவும் உயர்ச்சிவிலையுடைய செம்பொன்னால் இயன்ற செப்பில் தன் வீரியத்தைச் செலுத்தினான். அதினின்றும் ஆயிரமுகமும் விழியும் கைகாலுடனும் ஒருவன் தோன்றினன். அன்னவனை நான்முகன் உற்றுநோக்கி, 'நீ இத்தகைய உருபெற்றெழுந்தற்குக் காரணம் யாது' என்று வினவினன். அதற்கு அவன், 'உலகத்தில் யான் அளவில்லாத பாபத்தைச் செய்

---

ஒருவடிவத் தோருருவென் றுணரலாகா
ஊழிதோ றூழிநின் றேத்தலல்லால்
கருவடிவிற் செங்கண்ண வண்ணன்றன்னைக்
கட்டுரையே யாரொருவர் காண்கிற்பாரே''.

அந்தந்த யுகத்திலுள்ளவர்களின் குணங்களுக்கேற்றவாறு வெவ்வேறு நிறமுடையவனாய் அவதரிக்கிருனென்று திருமங்கைமன்னன் அருளிச்செய்ததும், இங்கறியத்தக்கது.

இவ்வாறே திருமழிசைப்பிரானும்,

"பாலினீர்மைசெம்பொனீர்மைபாசியின்பசும்புறம்
போலுநீர்மைபொற்புடைத்தடத்துவண்டுவிண்டுலா
நீலநீர்மையென்றிவைநிறைந்தகாலநான்குமாய்
மாலிநீர்மைவையகம்மறைத்ததென்னநீர்மையே''

என்றருளிச் செய்தார்.

"க்ருதே ஶுக்லஶ்சதுர்பாஹு:, த்ரேதாயாம் ரக்தவர்ணோர்வஸள,
த்வாபரே ஹரிவாநு ஶ்யாம:, கலௌ க்ருஷ்ணம் த்விஷாக்ருஷ்ணம்''

என்பதும் காண்க.

தேன்; அப்பாபம் நீங்குமாறு எனக்கு நல்ல பெயரை யளித்த ருளவேண்டும்; இக்கணத்தில் அதைச்செய்யாதுவிட்டால் யான் உய்யுமாறில்லை' என்று வேண்டினன். அப்பொழுது பிரமதேவன் அந்தச்சிவனுக்குப் பவனென்றும், அஷ்டமூர்த்தியென்றும் பெய ரிட்டான். இதனால் சிவனுக்கு அமலத்துவம் இல்லையென்பது சொல்லாமலே பெறப்படும். சிவன் பிரமதேவனுடைய வீர்யத் தினால் வந்து தோன்றினனென்று மந்திரமறைகளின் வருக்கம் வகுத்துரைப்பதால் அந்தச்சிவனுடைய உடல் பிரகிருதி சம்பந்த முடையதென்பது தெளிவு.

ஆகம மடந்தாய்! இங்ஙனம் உரைத்ததற்கேற்பப் புராண திருஷ்டாந்தமும் உரைப்பேன்.—நாரதீயத்தில்சிருஷ்டியுரைக்கின்ற பிரகரணத்தில் நாராயணன், பிரகிருதி, வியக்தம், காலம், ஜீவ னென்ற நான்குவகைத்தேகியாகி, ஓர் மாதினை விரும்ப அவளிடத் தில் எட்டுக் கண்களையுடைய பிரமதேவனும், மூன்று கண்களையு டைய சிவனும் தோன்றினர் என்று சொல்லப்பட்டுளது. பிரம தேவனுடைய புத்திரனாகிய சிவன் பாசுபதநூலைக் கூறினனென்று லிங்கபுராணம் விரித்துரைத்தது. நான்முகன் சங்கரனைச் சிருஷ் டித்து, அவன்றனக்குரிய மனைவியாகக் கௌரியையும் படைத்தா னென்று வராகபுராணம் இருபத்தொன்றும் அத்தியாயம் இனி தெடுத்தியம்பியது.

ஸ்ரீவராகமூர்த்தியைப் பூமிப்பிராட்டி நோக்கி, 'ஸ்வாமீ! உல கத்திற்சிலர் அரியே பரனென்றிசைக்கின்றனர்; சிலர் அயனையே கர்த்தாவென்று மொழிகின்றனர்; சிலர் அரனையே பெரியோ னென்று சாற்றுகின்றனர்; இந்த மூவரில் பரம்பொருளாவான் யாவன்' என்று வினவினள். அப்பொழுது வராகமூர்த்தி பூதேவியை நோக்கி, 'நங்காய்! திருமாலிடத்திற் பிரமதேவன் பிறந்தான். அந்தப் பிரமன் சிவனைச் சிருஷ்டித்தான். சிவன் சிறந்த அருந்தவங்களைச் செய்து பேரறிவு படைத்தவனாய் விளங்கினன். ஆதலால் இந்தப் பிரமன், சிவன் என்பவர்கட்கும் காரணனாயிருக்கும் அரியே பர தேவதை யாவான் என்றறிவாய்' என்று மொழிந்தனன். இவ்விவ ர்த்தை வராகபுராணம் தொண்ணூற்றிரண்டாம் அத்தியாயத்திற்

காணலாம். இஃதல்லாமலும் அந்நூலில் அறுபத்தேழாம் அத்தியா யத்தில் ஆலிலையிற்றுயிலும் அச்சுதனிடத்தில் பிரமனும் சிவனும் தோன்றினரென்று விரித்துரைக்கப்பட்டுளது.

நாராயணன் உந்திக்கமலத்தில் தோன்றிய பிரமதேவன் தசப் பிரஜாபதிகளையும், சிவனையும்சிருஷ்டித்தான். அப்பொழுது சிவன் பிரமனை நோக்கி, 'எந்தாய்! என் பாபம் ஒழியும்படி பெயரிட்ட ழைக்கவேண்டும்' என்று எட்டுமுறை தேம்பியழுதான். அவன் தேம்பியழுததற்கிரங்கிய பிரமதேவன், 'குழந்தாய்! வருந்தற்க' என்று தேறுதல் கூறி அவனுக்கு எட்டுப்பெயர்கள் இட்டனன். அப்பெயர்கள்.—பவன் சர்வன் ஈசானன் பசுபதி வீமன் உக்கிரன் மாதேவன் உருத்திரன் என்பன. இந்த எட்டுப்பெயர்களுள் பவன் என்பவன் சூரியனுக்கும், சர்வன் என்பவன் நீருக்குப், ஈசா னன் என்பவன் பூமிக்கும், பசுபதியென்பவன்வாயுவுக்கும், வீமன் என்பவன் அக்கினிக்கும், உக்கிரன்என்பவன் ஆகாயத்திற்கும், மா தேவன் என்பவன் தீக்ஷதனுக்கும், உருத்திரன் என்பவன் சந்திர னுக்கும் அதிதெய்வங்களாவார்.

இவர்களுள் சூரியனுக்குச் சுவர்ச்சலையும், ஜலத்திற்கு உஷை யும், பூமிக்குச் சுகேசியும், வாயுவுக்குச்சிவாவும், அக்கினிக்குச்சுவா காதேவியும், ஆகாசத்திற்குத் திசையும், தீக்ஷதனுக்குத்தீக்ஷையும், சந்திரனுக்கு உரோகிணியும், மனைவியராவர். சூரியனுக்குச் சனி யும், ஜலத்திற்குச் சுக்கிரனும், பூமிக்குச் செவ்வாயும், வாயுவுக்கு அநுமானும், அக்கினிக்குக் கந்தனும், ஆகாசத்திற்குச் சுவர்க்க னும், தீக்ஷதனுக்குச் சந்தானனும், சந்திரனுக்குச் சௌமியனும் புதல்வராவார்கள். இவ்விவரங்களை விஷ்ணுபுராணம் எட்டாமத்தி யாயத்தில், பதினான்காம் வித்தையில், சிருஷ்டி வகுத்துரைக்கின்ற விடத்தில் பராசரர் மைத்திரேயரை நோக்கி அருளிச்செய்துள் ளார். இதனை நீ கேட்டறியாய்போலும்.

மேலும், பிரமதேவன் சங்கரனை நோக்கி, 'எல்லா உலகங்கட் கும் நாராயணனே முழுமுதற் கடவுளாவான். அப்பெரியோனி டத்தில் யான்றோன்றினேன்; நீயும் நெற்றிவிழியுடன் என்னிடத்

திற்பிறந்தாய்; சராசரப் பொருள்களும், வேதங்களும் என்னிடத்திற்றோன்றின' என்றுரைத்த விவரமும் விஷ்ணுபுராணத்திற்கண்டதொன்றே.

திருமால் வசிஷ்டமாமுனிவரையழைத்துப் பிரமதேவனைக் காட்டி, 'இவனே உலகத்திற்குக் குருவாயிருப்பான்; உம்மைப்பெற்றவனும் பிதாமகனும் இவனே; எம்மிடத்திற் பெற்ற வரத்தினால் எல்லோருக்கும் நல்ல பலன்களைக் கொடுக்கிறான்; எமது நெற்றியிற்பிறந்து இவனுக்குப்பின்னேனாகிய உருத்திரனும் இவனுடைய நியமனத்தால் உலகினர்கட்கு வரமளிக்கின்றான்' என்றுரைத்தனன். இவ்விவரத்தை மனுஸ்மிருதியிற் காணலாம்.

பண்டைநாளில் நாராயணமுனிக்கும், சிவனுக்கும் போர் விளைந்தவிடத்து, நான்முகன் அங்குத்தோன்றி அந்த நாராயணமுனிவரை வேதமந்திரத்தினால் போற்றிச் சிவனுக்குப் புத்திகூறத் தொடங்கினான்.—அண்டமுதலிய எல்லாப் பெயரும் அற்றொழிந்த பிரளயகாலத்தில் பரப்பிரமமாகிய நாராயணன் திருநாபியில் ஓர் தாமரை மலர் தோன்றியது; அதில் அவ்விறைவனுடைய மகிழ்ச்சியினால் யான் தோன்றினேன்; பின் அவ்விறைவன்றன் வெகுளியினால் அவன்றன் நெற்றியினின்றும் நீ பிறந்தாய்; அதனால் சங்கார கர்த்தாவா யமைந்தாய்; அந்த நாராயணனுடைய மகிழ்ச்சியினாலும் கோபத்ாலும் நாமிருவரும் வந்துதோன்றினோமாதலால் சிருஷ்டி சங்காரங்கட்கு மாத்திரம்உரிமைபூண்டுளோம்; அந்தநாராயணனே எல்லா ஜகத்தையும் படைத்துக் காத்துத் துடைக்கும் ஒப்புயர்வற்ற சக்திவாய்ந்துளோனுவான்; அன்னவனே இங்குத் தவவேடந் தாங்கியிருக்கின்றான்; இவ்விவரத்தை நீஉணர்ந்திலைகொல்லோ' என்று புகன்றனன். இதனை வேதங்களின் வரம்பினைக்கண்ட வியாசர் அருளிச்செய்த மகாபாரதம் மோக்ஷதர்மத்திலுள்ள நாராயணீயோபாக்கியானத்தில் நூற்றொருபதாம் அத்தியாயத்திற் காணலாம்.

நாராயணன் தன் திருநாபியினின்றும் நான்முகனைத்தோற்றுவித்து, 'நீ உலகத்தைச் சிருஷ்டிப்பாய்' என்று நியமிக்க, அப்பொழுது அவனும் சனக சனந்தனாதியரைப்படைத்து, 'நீவிர் பல

வகைச் சிருஷ்டிகளையும் செய்வீர்கள்' என்று நியமித்தான். அவர்கள் பிரமபாவனையுடையவர்களாதலால், அந்தத்தொழிலைச் செய்வதற்கிசையாது மறுத்துவிட்டார்கள். இதனைக்கண்ட பிரமதேவன் மனவருத்தமுற்றுத் தன்றொடையினின்றும் சிவனைத்தோற்றுவித்தனன். இவ்விவரத்தை நாரசிங்கபுராணத்திற் காணலாம்.

திருமாலின் திருநாபியில் ஓர் கமலந்தோன்றியது. அதில் நான்முகன் பிறந்தான். அந்த நான்முகன் சங்கரனைப் படைத்தான். அவன் கந்தனைப் பெற்றானென்ற விவரத்தை வைகுண்ட சங்கரவாதமென்ற நூலில் சிருஷ்டிக்கிரமம் உரைக்கின்றவிடத்தில் தெளிவாகக் காணலாம்.

இத்துணையுங் கூறியதனால் சிவன் கர்மபாசத்திலடங்கியவனென்பதும், அவனுக்குப் பிரகிருதி சரீரசம்பந்தமுண்டென்பதும், அவன்றன் பிறப்பும், ஒடுக்கமும் திருமாலிடத்திலாமென்பதும் பெறப்பட்டன. இனி, உங்கள் சிவன் மானிடவடிவாய்ப் பிறந்த முறையினையும் எடுத்தியம்புவேன்; கேட்பாய்.—

---

அ-வது, சிவன் பற்பல பிறப்புப் பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! அத்திரி மகரிஷியின் பத்தினியை உங்கள் சிவன் கற்பழிக்கச்சென்று அவள் சாபமிட அவளிடத்தில் துருவாசமுனியாயும், துரோணாச்சாரியரிடத்தில் அசுவத்தாமாவாகவும், வியாசபகவானிடத்தில் சுகப்பிரமரிஷியாகவும், உருவரிடத்தில் துனிவனையும், சிகிரிடவரிடத்தில் சைகிடவியனையும் பிறந்தனன். இவ்விவரங்களை இன்னும் நன்கியம்புவேன்.—

சத்தியோசாதன், வாமதேவன், அகோரன், தர்புருடன் என்போர் முறையே துர்வாசன், அசுவத்தாமா, உருவன் சைகிடவியன் என்ற நால்வராய்ப் பூமியில் தோன்றினர்; என்று பிரமாண்டபுராணம் உரையாநிற்கும். சிறந்த பிரமாணமாகக்கொள்ளத்தகும் புராணங்களிலும் இவ்விவரங் குறிப்பிடப்பெற்றுளது. அதனையும் விரித்துரைப்பேன்.—திருமால் தத்தாத்ரயராயும், பிரமதேவன் அமுதகலையுடைய சந்திரனையும், சிவன் துருவாசமுனியாயும் வந்து

தோன்றினரென்பதைப் பாகவதம் விரித்துரைத்தது. புராணரத்தினம் என்று கொண்டாடப்படுகிற விஷ்ணுபுராணம், சிவன் துருவாசமுனியாய்ப் பிறந்தனன் என்பதை விரித்துரைத்தது. துரோணுசாரியர் திருமாலின் அம்சமென்றும், அசுவத்தாமா சிவாம்சமென்றும், பீஷ்மாசாரியர் அஷ்டவசுக்களில் ஒருவரென்றும் பாரதம் பகாநிற்கும். மேலும், பாரதத்தில் ஓரிடத்தில் ஞானமுடைய சுகரும், அசுவத்தாமாவும் தாமதகுணமுடைய சிவனுடைய அம்சமென்றும் ஓதப்பெற்றுளது. விசுவகர்மாவுக்குச் சிவன் வைச்சுவானுய்வந்து தோன்றினன் என்ற விவரம், உங்கள் சைவசமயத்தவரால் கொண்டாடப்பெறும் காசிகாண்டத்திற்கண்டதொன்றன்றே! சிவன் சமதக்கினியாய்வந்துதித்தனனென்று கந்தபுராணம் கழறுநிற்கும். இதன் உண்மை நிரம்ப உணர்ந்தார்க்கன்றி ஏனையோர்கட்கு நன்கு புலப்படமாட்டாது. நீராம்பல் (அல்லி) நீரளவாயிருப்பது போல் தாம் தாம் கற்ற நூலளவே அறிவுண்டாகுமென்பது பிரசித்தமன்றே!

மடந்தாய்! உங்கள் சிவனுக்குள்ளமெய்ப்பிறப்பெல்லாம் வேதவேதாந்தங்கள் ஒன்றுரைத்தபடியே மற்றென்றுரையாததினுல் உண்மை இன்னதாமென்று நிச்சயிக்கமுடியாதன்றே; என்று சந்தேகப்படவேண்டாம். இங்ஙனம் வெவ்வேறு வகையாகவுரைத்தவையெல்லாம் மெய்யேயாம். கற்பபேதத்தாலே இவ்வேறுபாடுண்டாமென்று தெளிவாயாக.

---

### கூ-வது, *அப்பிராகிருத திருவவதாரப்பரிச்சேதம்.

ஆகம அணங்கே! உங்கள் சிவனுக்கு யான் இங்குரைத்த அளவின்றி இன்னும் பல பிறப்புகளுண்டு. அவற்றை ஈண்டுரைத்தால் விரியும். இதுநிற்க, வேதவேதாந்தங்கள் கூறிய முறைப்படி நாராயணன்றன் திருவவதாரம் கர்மவசப்பட்டதில்லையென்பதை முன்

* அப்பிராகிருதம்—மாயை என்கிற மூலப்பிரகிருதியின் பரிணமமான பஞ்சபூதங்களாலுண்டாக்காதது. நித்தியவிபூதியாகிய பரமபதத்திலுள்ள வஸ்துக்களும், இராமகிருஷ்ணுத்யவதாரங்களின் திவ்யமங்கள விக்ரஹங்களும் அப்பிராகிருதங்களாம்.

னியம்பினேன். இனி, அவ்விறைவன் றிருவவதார விக்கிரஹங்களும் லோகாநுக்ரஹத்தின் பொருட்டேயாமென்பதையும், அப்பிராகிருதமாமென்பதையும், நித்தியமென்பதையும் விரித்துரைப்பேன். மகிழ்ச்சியுடன் கேட்பாயாக.—

உலகத்தைப்படைத்தல், காத்தல், ஒடுக்கலாகிய காரியங்களைச் செய்வதற்கு அகில காரணனாகிய நாராயணன், வாசுதேவ சங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்தர்களென்ற நான்கு வியூஹ மூர்த்திகளாகவும், மச்ச கூர்ம வராக வாமன நரசிம்ம பரசுராம ஸ்ரீராம கிருஷ்ண கற்கி என்ற பத்து விபவங்களாகவும் திருவவதாரஞ்செய்தனன். இங்ஙனமுரைக்கப்பெற்ற பதினான்கு அவதாரமின்றி, அவன் இச்சையாற்கொள்ளும் அவதாரங்கள் நூறு ஆயிரம் பதினாயிரம் அநந்தங்களாம். அவையெல்லாம் நித்தியங்களும், சுத்த சத்துவ மயமாகிய அப்பிராகிருதங்களுமாம். இவ் விவரங்களை வேதாந்தம் முறையிடும். திருமால் தத்துவங்கடந்த விலக்ஷண வஸ்துவாமென்று பிருகுதாரண்யோபநிடதம் புகலாநிற்கும். தெளிவிசும்பாகிய பரமபதத்தில் நாராயணனுடைய அப்பிராகிருத திவ்விய உருவினைக்கண்டு நித்தியசூரிகள் சேவித்துமகிழ்கின்றார்களென்பதை வேதாந்தங்களெங்கும் காணலாம்.

ஜோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருருவென்று வியப்புறத்தக்கதாயும், மிக்கசக்தியுற்றதாயும்; அளவிடக்கூடாத மகிமையுள்ளதாயுமிருக்கிற அப்பிராகிருததிவ்வியமங்களவிக்கிரஹம் பரமபதத்தில் நிலைபெற்றிருக்கும். இத்தகைய திவ்வியமங்கள விக்கிரஹத்தையுடையவன், தன்னை நியமிப்பார் ஒருவருமின்றித் தன்னிச்சையால் தேவ மானிட விலங்கு தாவரங்களாக அவதரிப்பன். அந்த அவதார திருமேனிகளும், அப்பிராகிருதங்களாமேயன்றிப் புண்ணிய பாபத்தொடர்பால் வந்த எலும்பு தோல் இறைச்சி முதலியவைகளாலாய சரீரங்களாகா. உலகில் அறத்தை நிலைநிறுத்துவதற்கு நாராயணன் தன் கருணையால் அவதரிக்கின்றானேயன்றி, வேறு காரணமொன்றுமில்லை. இவ் விவரமெல்லாம் விஷ்ணுபுராணத்திற் காணலாகும்.

* அப்பிராகிருத திவ்வியமங்களவிக்கிரஹம், கண்ணால் காணப்படுவதன்று; வாயால் சொலலப்படுவதன்று; மனத்தினால் எண்ணப்படுவதன்று; மூக்கினால் நுகரப்படுவதன்று; செவியால் கேட்கப்படுவதன்று; நிழலுள்ளதன்று; கருப்பு சிவப்பு முதலிய நிறமுள்ளதன்று; கிட்டி நிற்பதன்று; அகல்வதுமன்று; அகத்துளமன்று; புறத்துளதன்று; உயிருமன்று; காலமுமன்று; †தன்மாத்திரையுமன்று. இஃதல்லாமலும், கர்ப்பம் ஜன்மம் பால்யம் யௌவனம் வார்த்திக்யம (கிழத்தனம்) மாணமென்கிற ஆறு விகாரங்களற்றதாயும் மங்களகுணமுடையதாயுமிருக்கும். இந்த திவ்வியமங்கள விக்கிரஹத்தோடே பூமியில் திருவவதரிக்கிறான்.

நீதியோரை வளர்க்கவும் கொலைநீசர் தம்மை நெருக்கவும்
ஓதுநீ டருமத்தை யாக்கவும் உண்மையாக யுகந்தொறும்
சாதமாவ திலாத நானென தாமுருக்கொடு தரையிலுற்
பூதராகுவெ னென்ற மான்மொழி பொங்குகீதையி லுள்ளதே.

இறைவனாகிய என்னிடத்தில் மிகுந்த அன்புடையவர்களாய், என்னுடைய அநுபவமொழிய ஒரு கணப்பொழுதேனும் தரிக்கப்

---

* "விக்ரஹந்தான் ஸ்வரூபரூபகுணங்களிலுங் காட்டில் அத்யந்தாபிமதமாய், ஸ்வாநுரூபமாய், நித்யமாய், ஏகரூபமாய், சுத்த ஸத்வாத்மகமாய், சேதநதேஹம்போலே ஜ்ஞாநமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே, மாணிக்கச்செப்பிலே பொன்னையிட்டு வைத்தாப்போலே இருக்கப் பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாசகமாய், நிரவதிகதோஜோரூபமாய், ஸௌகுமார்யாதி கல்யாணகுண கணநிதியாய், யோகித்யேயமாய், சகல ஜநமநோகரமாய், ஸமஸ்த போக வைராக்ய ஜநகமாய், நித்யமுக்தாநுபாவ்யமாய், வாசத்தடம்போலே ஸகலதாபஹரமாய், அநந்தாவதாரகந்தமாய், ஸர்வ ரக்ஷகமாய், ஸர்வாசிரயமாய், அஸ்திரபூஷண பூஷிதமாயிருக்கும்" என்று லோகதேசிகன் அப்பிராகிருத திவ்யமங்கள விக்ரஹத்தின் விவரம் அருளிச்செய்ததும் இங்கறியத்தக்கது.

† தன்மாத்திரை-பஞ்சமாபூதத்தின் சூக்ஷ்மமான நிலைமை.

பெருதவராய், என்னைக் காணவேண்டுமென்கிற பேரவாவுடைய வராயிருக்கின்ற சாதுசனங்களைக் பாதுகாப்பதற்காகவும், விரோதி யாயிருப்பவர்களை அழிப்பதற்காகவும், மறைந்து கிடக்கின்ற என்னுடைய ஆராதன ரூபமான தர்மத்தை ஆராதிக்கப்படுகின்றவனுகிய என்னுடைய ஸ்வரூபத்தைக்காட்டி நிலை நிறுத்துவதற்காகவும், பிறப்பிலியாகிய நான் என்னுடைய $ அப்பிராகிருதவுருவுடன் யுகங்கடோறும் அவதரிக்கிறேன் என்று கண்ணபிரான் ‡கீதையில் அருளிச் செய்தான்; எ-று.

பாரதயுத்த முடிந்தவுடன் தேவர்கள் கண்ணபிரானை யடி பணிந்து, 'தேவதேவ! நீ கருவின் சம்பந்தமின்றி அப்பிராகிருத திவ்யமங்கள விக்ரஹத்தோடே இம்மாநிலத்தில் அவதரித்து, வஞ்சகருடைய ஆவியைப் பருகித் தர்மத்தை வளர்த்தாய்; உன்னுடைய திருமேனி பிராகிருத சம்பந்தமுடையதில்லை; நிர்மல ரூபமே; ஒப்புயர்வற்ற சக்தியுடைய நீ எளியோர் போல, சிவனையும், முனிவர் முதலானவர்களையும் அடி பணிந்து, அவர்கள்பால் வரங்களையும் பெற்றாய்; இவையெல்லாம் இவ்வுலகத்தாரை மயக்க நீ செய்த மாய நாடகங்களன்றோ! எங்களுடைய பிறவிக்குக் காரணங்களாகிய கர்மங்களையும் போக்கி உபகரித்தருளினாய்; மேலும், இந்த அப்பிராகிருத திருமேனியோடே எங்களை வாழும்படி செய்தருள்வாய்; இனித் தெளிவிசும்பாகிய திருநாட்டிற்கெழுந் தருள்வாய்' என்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது

---

$ "அப்ரக்ருத திவ்யமங்களவிக்ரஹத்தை இதர ஸஜாதீயமாக்கி வந்தவதரிக்கின்றான்" என்று நம்பூர்வாசார்யர்கள் பலவிடங்களிலும் அருளிச் செய்வார்கள்.

‡ "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச து³ஷ்க்ருதாம் ।
த⁴ர்மஸம்ஸ்தா²பநார்தா²ய ஸம்ப⁴வாமி யுகே³ யுகே³ ॥

இதனால் அவதாரத்திற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார். இதன் பொருள் மேலே குறிப்பிடப்பெற்றது. யுகங்கடோறும் அவதரிக்கின்றேன் என்பதற்குக் கிருத யுகமென்றும், திரேதாயுகமென்றுஞ் சொல்லப்படுகிற யுகவிசேஷ நியமமில்லையென்று பாஷ்யத்திற்கண்ட பொருளாகும்.

கண்ணபிரான் தன்னுடைய அப்பிராகிருத திருமேனியில் ரோகிணி தேவகி முதலான தாய்மார்களையும், பலராமர் முதலானவர்களையும், ருக்மணி சத்தியபாமை முதலான தேவிமார்களையும் அந்தர்ப்ப விக்கும்படி செய்து அப்பிராகிருத லோகமாகிய ஸ்ரீவைகுண்டத் திற் கெழுந்தருளினான். இவ்விவரத்தைப் பஞ்சம வேதமாகிய பாரதத்தில் தெளிவாய்க் காணலாம்.

அப்பிராகிருத லோகத்தையுடையவனாய், திருமார்பில் திருவும், ஸ்ரீவத்ஸமென்ற மறுவும் விளங்கப் பெற்றவனாய், அருள் குடியிருக்கும் திருக்கண்களை யுடையவனாய், சங்கு சக்கரம் கதை வாள் தண்டுவில் என்ற பஞ்சாயுதங்களையும் தரித்தவனாய், வேதங்களால் கொண்டாடப் பெற்றவனாய், உலகினை யுண்டருளினவனாயிருக்கிற ஸர்வேசுவரன், தன்னிடத்தில் வந்து வேண்டிநின்ற தேவர்களின் துன்பங்களைப் போக்குவதற்காகத் தசரதற்கு மகனாக வந்தவதரித்து இராவணன் முதலான பகைவர்களது ஆவிகளைக் கவர்ந்து, அப்பிராகிருத திருமேனியுடன் பரமபதத்திற் கெழுந்தருளினான் என்று வால்மீகம் ஓதுகிறது. தேவலோக பூலோகங்களிலுள்ளவர்களின் அச்சம் அகலும்படி நாராயணன் தன்னிச்சையால் திருவவதாரங் கொண்டு, பாபகாரிகளின் உயிருண்டு நல்லோரைப் பாதுகாப்பானென்று அரிவம்சம் அறையாநிற்கும். அகில காரணனாகிய நாராயணன் அழியும் பிராகிருத விகாரமில்லாது, சகல சக்தியுமுடைய பரமஞான சொரூபமாகிய அப்பிராகிருத திவ்ய வுருவுடன் எவ்விடத்திலும் வந்து திருவவதரிப்பான் என்று வராகபுராணம் வகுத்துரைத்தது.

நந்தகோபன் குமாரனாகிய கண்ணபிரான், தெளிவிசும்பாகிய பரமபதத்திற் கெழுந்தருள்கிற காலத்தில் தன் திருமேனி போல ஒரு பிசாச உடம்பை வைத்து, இந்திரசாலம் விளைத்தகன்றனனென்று கந்தபுராணம் கழறியது. வஞ்சனை மிக்க கஞ்சனைக் கொன்ற கண்ணபிரானை இப்பொழுதும் சிவன் முதலானவர்கள் உபாசிக்குமாறு அப்பரமன் தன்னுடைய அப்பிராகிருத லோகத்

தில் எழுந்தருளியிருக்கின்றான். இந்த விவரமும் கந்தபுராணத்திற் கண்டதே.

சிவன், கண்ணபிரானை நோக்கி 'கருணாகரனே! நீ நல்லோரைப் பாதுகாப்பதற்காகவும், துஷ்டர்களை வதைக்கவும், தர்மத்தை நிலை நாட்டவும் இச்சையால் அவதரித்த இது, என் போன்றவர்கள் செய்த புண்ணிய பயலேயாம்' என்று கொண்டாடினுனென்று பாகவதம் பகராநிற்கும். சிவன் முனிவர்களை நோக்கி, கண்ணபிரானைச் சுட்டிக் காட்டி, 'இவன் இந்திர சாலங்கள் காட்டுவார் போல ஏதோ மாயநாடகம் நடித்தனன்; என்று உதாசினமாகக் கருதாதீர்கள்; இவனே உலகினர் செய்யும் தவம் தானம் யாகம் முதலிய சத் கர்மங்களை யுகந்து பலத்தைத் தரும் பெற்றியினன்; எல்லா உயிர்களிடத்திலும் அந்தர்யாமியாயிருப்பவனும் இவனே; இவனுக்கு ஒத்தாரும், மிக்காருமொருவருமில்லை; மாசற்ற நெஞ்சினையுடைய முமுக்ஷுக்கள் வழிபடும் கடவுளும் இவனே; என்றறிவீர்களாக' என்று புகழ்ந்துரைத்தனன். இதனை அரிவம்சத்தில் தெளிவாய்க் காணலாம்.

திருமால் பஞ்சமாபூதங்கட்கெல்லாம் காரணனாய் விளங்கினாலும், இவனுடைய திருமேனி பஞ்சபூதத்தின் கலப்புடையதில்லை; என்று ஸ்மிருதி விளக்குகிறது. திருமாலே துக்க லேசமுமில்லாத பரம்பொருளாவான். இவன் அசித்தாகிய பிரகிருதியையும், ஜீவனையும் சார்ந்தவனாகான். மிகவும் விலக்ஷணப்பொருளாய் விளங்குகிறானென்று வேதவியாசர் அருளிய ஸ்மிருதி விரித்துரைத்தது. நாராயணன் உலகில் மானிட வடிவத்துடன் திருவவதரிப்பான்; அப்பொழுது எல்லாமறியும் தன் தன்மையை மறைத்து மறதியுடையவனென்று சொல்லும்படியும், அழியாதிருக்கும் தன் அப்பிராகிருத திருமேனி அழிந்ததென்று சொல்லும்படியும் உலகினருக்கு ஓர் மாயையைப் பிறப்பிப்பான்; என்று பிரமாண்டபுராணம் புகன்றது.

நாரதமாமுனிவர், பிரமதேவனை யடைந்து வணங்கி நின்று, 'தேவ! பாபத் தொடர்ச்சி சிறிதுமில்லாத நாராயணன் மனிதர்கள் வாழ்கின்ற உலகத்தில் வந்து பிறந்து மோகமடைந்தும், தன் திரு

மேனியில் புண்ணுற்று வருந்தியும், பல சூது மாயையில் மூழ்கியும், அயர்வு பசி தாகங்களை யடைந்தும், யுத்தகளத்தில் பகைவர்களால் தாக்கப்பட்டு ஓடி வெயர்வுற்றும், இன்னும் படாத பாடெல்லாம் பட்டும் அல்லமாலுற்றனனே; இங்ஙனம் இப் பெரியோன் அடைந்ததற்குக் காரணம் இன்னதெனத்தெளிவாக, அடியேற்கு அருளிச் செய்யவேண்டு'மென வேண்டினர். அப்பொழுது பிரமதேவன் புன்முறுவல் கொண்டு நாரதரை நோக்கி, 'முனிவ! திருமால் புருஷர்களது வீர்யத்தாலுண்டாகின்ற பிராகிருத சரீரத்தை அடையவில்லை; அப்பிராகிருத திவ்யமங்களவிக்கிரஹத்தோடே சூரியோதயம் போல உலகத்திற்றோன்றுவான்; இங்ஙனம் தோன்றியவன் மாயவலையிற்பட்டு மயங்குபவர்களைப்போல நடிப்பான்; அசுரர்களாயுள்ளவர்களின் மதியை மயக்குவதற்காகவே, இவன் இவ்வாறு மாய நாடகம் செய்வான்; அதனால் அவன் பசி தாக முதலியவற்றை யுடையவனென்று கருதலாகாது' என்றுரைத்தனன். இதனை வராக புராணத்திற் காணலாம்.

௩-வது சர்வ சிருட்டிவத்து நிருணயப் படலம் முற்றும்.

---

## ௪-வது சர்வ ரட்சகவத்து நிருணயப் படலம்.



### க-வது ஆதித் திருவருளென்கிற மூலப் பிரகிருதி பராபர சத்திப் பரிச்சேதம்.

ஆகம அணங்கே! திருமாலின் திருமார்பில் 'அகலகில்லேனிறையும்' என்று நித்திய வாசஞ் செய்கிற லக்ஷ்மிதேவியின் மகிமை, மதிப்புடைய வேத புராணங்களாகிய நூல்வழக்கினால் இத்தகைய தென்பதை நன்கெடுத்தியம்புவேன். இந்தப் பெரிய பிராட்டியாரின் திருவருட் குரியவர்களே பிரமன் சிவன் இந்திரர்ளாக விளங்குகிறார்கள். இவ்விவரத்தை இருக்கு வேதம் எட்

டாம் அட்டகம் ஏழாம் அத்தியாயம் பத்து பதினொன்றும் வர்க்கத்திற் காணலாம். சிவனுக்குப் பிறைகமென்றவில்லை யளித்தவளும், பிரமதேவனைச் சிருஷ்டித்தவளும் இவளே யென்று விரித்துரைத்தேன்.

எசுர்வேதம் நாலாம் காண்டம் நாலாம்பருச்சதின் இறுதியிலும், இந்தப் பிராட்டியாரின் மகிமை யெடுத்துரைக்கும். வேதங்களிலும் இந்தத் தேவியானவள், அண்டாண்டங்களிலுள்ளவர்களை ஆணையிடுகின்ற காரணியாகவும், விஷ்ணு பத்தினியாகவும், லோக வியாபகையாகவும், எல்லாஜீவகோடிகளையும் சிருஷ்டிக்கின்றவளாகவும் விளங்குகின்றாளென்று சொல்லப்பட்டுளது. இத்தகைய பெருமை வாய்ந்த பிராட்டியே, பூமிதேவியாயும், இலக்குமியாயும், நீளாபிராட்டியாயும் விளங்குகின்றாள்.

இவர்களுள் பூமிதேவியானவள் பூமியிலுள்ள எல்லோர்களையும் தாங்கிக்கொண்டிருக்கும் பெற்றியளாவள். நீளாதேவியானவள் சப்த சமுத்திரங்களையுந் தாங்கிக்கொண்டிருக்கும் பெருமையையுடையவள். இலக்குமியானவள் எல்லாஐசுவர்யங்களையும் நிறைத்திடும் தன்மையளாவள். இவ்வாறு மூன்று வடிவங் கொண்டிருப்பவளாகிய இவள், திருமாலை விட்டகலாமல் நித்தியமாக அவனுடன் கூடி வாழ்வாள். சகல வேத புராண நூல்களெல்லாம் இவள் தன் சொரூபங்களாம். உலகிலுள்ள பெண்களின் குணம் இலக்கணமெல்லாம் இவளருளாலே யுண்டாகும். இவளுடைய கருணையின் பதினாயிரத்தில் ஒரு பங்கினுக்குப் பாத்திரராயிருப்பவர்கள், பிரமன் சிவன் இந்திரன் சந்திரன் சூரியன் முதலான அதிகாரி புருஷர்களாய்த் திகழ்வார்கள். சரஸ்வதி உமாதேவி இந்திராணி முதலானவர்கள் இந்தப் பிராட்டியாருக்குச் சேடியர்களாயிருப்பார்கள். இவ்விவரத்தைப் பதுமபுராணத்து உத்தரகாண்டத்திற் காணலாம்.

திருப்பாற் கடல் கடைகின்ற காலத்தில் தோன்றிய பெரிய பிராட்டியை இந்திரன் முதலானவர்கள் கண்டு வியப்புற்று, புண்டரீகாக்ஷனாகிய திருமாலின்பொன்னடிவணங்கி, 'இப்பொழுது

தோன்றியிருக்கின்றவள் யாவள்? என்று வினவினர். அதற்கு அவ்விறைவன் சொல்லத்தொடங்கினான்.— இந்தப் பராபர சத்தியென்மயமாவாள்; எனக்கு மனைவியாயும் என் மாயையாயும் விளங்குவாள்; யான் எல்லா லோகங்களையும் படைத்துக் காத்து ஒடுக்குவதெல்லாம் இவளுடைய மகிமையாலாகும். இவள் கோடி சூரிய பிரகாசத்தோடும், நான்கு புயங்களோடும் முன்னொரு காலத்தில் ஒரு வேந்தனிடத்திற் றோன்றினாள்.

இவளுடைய கருணைக்கிலக்காயவர்கள் எவரோ அவர்கள் பிரமன் சிவன் இந்திரன் முதலானவர்களாவர்கள். இப் பிராட்டியாரின் மகிமையாகிய கயிற்றிற் கட்டுண்டு மதி மயங்குவார்கள். இவ் விவரத்தைக் கூர்மபுராணத்திலும், மந்திர சாஸ்திரத்திலுங் காணலாம். இவை யொருபுறமிருக்க, இனி வேத சொரூபியாகிய கருடன் மகிமையை எடுத்துரைப்பேன்.

---

### உ-வது வேதரூப விகங்கபூபதி பரிச்சேதம்.

ஆகமப் பாவாய்! கருடனுக்குத் * திரிவிருத்தே சென்னியாம் (தலையாம்) காயத்திரியே கண்ணும். ‡ ஸ்தோமமே ஆத்மாவாம். § வாமதேவிய சாமமே சரீரமாம். † பிரகத்திரதமே சிறகாம். $ எக்ஞாவெக்ஞமே புச்சமாம் (வாலாம்). சந்தஸ்ஸுக்களே உறுப்புக்களாம். ¶ திருஷ்ணியமே பாதமாகும், இவ்விவரத்தை எசுர் வேதம் நான்காங் காண்டம் முதற் பருச்சம் பத்தா மநுவாகத்திற் காணலாம்.

---

* திரிவிருத் - ஒருமந்திர விசேஷம்.

‡ ஸ்தோமம் - மந்திர சமூகம்,

§ வாமதேவிய சாமம் - ஒருவகையான கான விசேஷமுள்ள சாமம்,

† பிரகத்திரதம் - இதுமொரு சாமகான விசேஷம்.

$ எக்ஞாவெக்ஞம் } இவையிரண்டும் சந்தஸ் விசேஷங்கள்.
¶ திருஷ்ணியம் }

வேதத்திற் சிறந்த சாம வேதத்திலுள்ள நான்கு பிரமாணங்களுள் ஆரிஷப் பிரமாணத்தில் இறுதிக் காண்டத்திலுள்ள ஒரு பத்துச் சாமத்தில் கருடனுடைய சிரம் முதற் சாமம். இரண்டாவது சாமம் கழுத்தாம். மூன்றுவது சாமம் தோளாம். நான்காவது சாமம் அவயவமாம். ஐந்தாம் ஆறுவது சாமங்கள் சிறகுகளாம். ஏழாவது சாமம் வடிவமாம். எட்டாவது ஒன்பதாவது சாமங்கள் தொடைகளாம். பத்தாவது சாமம் புச்சமாம். இங்ஙனம் வேதமெல்லாம் மதிப்புடன் கருடனை வேதஸ்வரூபனென்றோதின. இவ்வாறு சொல்லியதற் கேற்ப நாரதீயத்திலும், காருடகவசத்திலும் திருப்பாற் கடல் கடைகின்றபோதுண்டான நஞ்சை சிவன் கருடபாவனை செய்து உண்டு தேவர்களின் இடரைப் போக்கினனென்று சொல்லப்பட்டுளது. இதனை முன்னரும் விளம்பினேன்.

பரமபதத்தில் கருடன் திருவநந்தாழ்வான் (ஆதிசேஷன்) சேனைமுதலியார் முதலான நித்தியசூரிகள், நாராயணனை எப்பொழுதும் தரிசனஞ்செய்து கொண்டிருக்கின்றார்களென்று பஞ்சராத்திரம் தெளிவாயெடுத்துரைக்கும். சிறந்த நித்தியசூரிகளின் இயல்பையும், பரமபதத்தின் சிறப்பையும் எசுர்வேதம் முதற் காண்டம் மூன்றும் பருச்சம் ஆறும் அநுவாகம் எடுத்தியம்பும். இதுநிற்க, மாதவன்றனருளினல் திருவநந்தாழ்வான் சேனை முதலியார் முதலான நித்தியசூரிகள் தம்மிச்சையால் உலகில் அவதரிப்பார்களென்று காருடபுராணம் தெரிவிக்கும்.

திருமாலின் திருக்கைத் தலத்தை விட்டகலாது அவனருளினல் உறைகின்ற சக்கரத்தாழ்வான்றன் இயல்புகளை வேதங்கள் இன்னின்ன விடத்தில் தெளிவாக ஓதின வென்ற விவரத்தை முன்னரே எடுத்தோதினேன. அதனுல் அவ் விவரத்தை இங்கெடுத்தியம்ப வேண்டுவதில்லை. நாராயணன் பிறப்பிலியாயிருந்தானேனும், இச்சையால் பல வடிவினைக் கொள்கின்றுனென்று புருஷசூக்தம் விளம்பாநிற்கும். இங்ஙனம் செப்பியவெல்லாம் உண்மையான பிரமாணங்களாமென்று மனத்துட் கொள்வாய்.

௬-வது * சர்வாந்தர்யாமி பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணவல்லி எடுத்துரைத்தவற்றைக் கேட்ட ஆகமவல்லி சொல்லத்தொடங்கினள்.—ஆரணப்பாவாய்! உங்கள் நாராயணனே பரதேவதையானால் உலகத்தவரின் இருதயத்திலிருந்து நியமிக்கும் சர்வாந்தர்யாமியாயிருக்கவேண்டுமே. அஷ்ட மூர்த்தங்களுள் ஒன்றாகிய சூரியமண்டலமத்தியில் வாழ்வானை, முன்பு குறிப்பிடப்பட்ட சிவன்றனக்குரிய பெயர்களுள் ஒன்றையிட்டு, 'எல்லாருடைய இருதயத்திலிருந்துநியமிக்கும் ஸர்வாந்தர்யாமியே' என்று அந்தணாளர் அநுதினமும் காயத்திரியில் தியானிக்கின்றனரன்றோ! இதனால் சிவனே பரனுவானென்று தெளிவாகுமே; அவனிற் பெரியார் எவருளர்? என்றனள்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி சொல்லத்தொடங்கினள்.—ஆகமப்பாவாய்! சூரியமண்டலத்தில் வாழ்பவனும், அந்தணர் சொல்லும் காயத்திரிப்பொருளாய் விளங்குபவனும், எல்லோருடையஇருதயங்களை முயல்விப்பவனும் சிவனில்லை. நாராயணனே. இதனைத் தெளிவாயெடுத்தியம்புவேன்.—

அந்தர்யாமியாயிருந்து எல்லாவுயிர்களுள் வசிப்பவனும், வேதமயமாம் சூரியன்றன் மண்டலத்தில் உறைபவனும் ஒப்புயர்வற்ற ஒருவனே என்று எசுர்வேதம் இயம்பாநிற்கும். இத்தகைய ஒருவன் விஷ்ணு சப்தவாச்சியனாயிருப்பவனே. இவனே திரிலோகபாலகனென்று கொண்டாடப்படுகிற இந்திரனுக்கும் அந்தர்யாமியாய் விளங்குகின்றானென்று கௌடியம் என்ற நூல் சாற்றுகிறது. ஆனுக்கு அரியே அந்தர்யாமியாவானென்று அதருவசிரசில்தெளிவாக ஓதப்பட்டுளது. இஃதல்லாமலும், சிவன் முதலான எல்லாத் தெய்வங்கட்கும் அந்தர்யாமியாய் விளங்குகின்றவன் நாராயணன் என்பதை வேதங்களில் பலவிடங்களிலுங்காணலாம். மண்முதலாக எண்ணப்படுகிற பஞ்சபூதங்கட்கும், பல ஜீவகோடிகட்கும் அந்தராத்மாவாய்விளங்குகின்றவன் நாராயணனேயென்று அந்தர்யாமிப்

* சர்வாந்தர்யாமீ—சேதநா சேதனங்களுள்ளே யிருந்து நியமிப்பவன். [அந்த:-உள்ளேயிருந்து, யாமீ-நியமிப்பவன்.]

பிராபணம் தெளிவாய் எடுத்தியம்பியது. அமலனாக விளங்கும் அரியே எல்லா லோகங்களிலுள்ளவர்கட்கும் அந்தர்யாமியாய் விளங்குகின்றானென்று மகோபநிடதமும், சுபாலோபநிடதமும் விரித்துரைத்தன.

இங்ஙனம் வேதமுரைத்ததற்குப் பொருத்தமாக நாரசிங்க புராணமும், இரணியன்றன் புதல்வனாகிய பிரகலாதாழ்வானுக்கு மனத் தெளிவைத்தந்து அந்தர்யாமியாய் விளங்கியவன் நாராயணனே என நாட்டியது. சிவன் பிரமன் முதலானவர்கட்கு அந்தராத்மாவாயிருப்பவன் நாராயணனே யென்று பாரதத்திலுள்ள அசுவமேதத்திற்சொல்லப்பட்டுளது. சிவன், திருமாலை அந்தராத்மாவாய்க்கொண்டுள்ள வலிமையால் மேருபருவதத்தைச் சிலையாக வளைத்தானென்று பாரதம் கன்னபருவம் சாற்றுகிறது. சிவன் தன் மனைவியாகிய உமையைநோக்கி, 'மாதே! எல்லாச் சராசரங்கட்கும் அந்தர்யாமியாயிருக்கின்ற நாராயணன்றன் அநுக்ரஹத்தால் ஜீவிக்கின்றே' னென்றுரைத்தனன். இதனைப் பாகவதத்திற் றெளிவாய்க் காணலாம்.

நங்காய்! சூரியமண்டலத்தில் அந்தராத்மாவாய் விளங்குகின்றவன் நாராயணனேயென்று எசுர்வேதம் சொல்லியதற்குத் திருஷ்டாந்தமாகக் காயத்திரிப்பொருளையும் விரித்துரைப்பேன்.—

---

## ௬-வது, காயத்திரிப்பொருள் விவரணப் பரிச்சேதம்.

ஆகம மடந்தாய்! காயத்திரியின் பொருளாய் விளங்குபவன் எங்கள் சிவனேயென்று அறியாதுரைத்தாய். காயத்திரியின் பொருளாய் விளங்குபவன் நாராயணனேயென்று மைத்திராவருணிகோபநிடதம் வகுத்துரைத்தது. இங்ஙனம் உரைத்ததற்கேற்ப, பிரமதேவனை யாச்சவற்கியனார் அடிபணிந்து, 'ஜகத்குருவே! பதினான்குலகங்களையும் படைத்த பெரியோய்!! காயத்திரியிற் சொல்லப்படும் பொருள் இன்னதென்று உள்ளந்தெளிய எடுத்தோதுவாய்' என்று வேண்டினர். அப்பொழுது நான்முகன், மலைகளில் மேருவைப் போலவும், மனிதர்களில் வேதியர்களைப்போலவும், நதிகளிற் கங்

கையைபோலவும், ருதுக்களில் வசந்தருதுப்போலவும், பிரஜா பதிகளில் என்னைப்போலவும், வேதச்சொற்களில் காயத்திரியே சிறந்ததாகும். அதன் மகிமையை என்னென்பேன். மேலும், வேதங்கட்குப் பிரணவமே மூலமாகுமென்பதையும், ‡ வியாகிருதி பேதங்களையும், காயத்திரியின் பிறப்பினையும் பேசிவருகின்ற முறையில் || சவிதாவென்ற பெயருடன் விளங்குகின்றவன் திருமாலேயாம் என்று காயத்திரிஇருதயம் என்ற நூல் விரித்துரைத்தது; என்று விளம்பினன்.

சூரிய மண்டலத்திலிருந்து எல்லோருடைய இருதயங்களையும் முயல்வித்திடுந்தேவன் அளவிடமுடியாத ஒளியுடன்கூடி தியானிப்பவர்கட்குப் பரமானந்தமளிப்பவன். இவன் யாவனோவென்னில்;—எல்லாருடைய இருதயங்களிலும் சூரியமண்டலத்திலும் விளங்குபவனுவானென்று தைத்திரியோபநிடதத்தாற் சொல்லப் படுபவனுவான். இத்தன்மையன் யாரோவென்னில்;—சாந்தோக்கியத்திற் சொல்லப்பட்டபடியே சூரியமண்டலத்தில் விளங்குகின்றவனுவான். இவன் எவ்வடையாளமுடையவனெனில்;—அன்றலர்ந்த செந்தாமரைப்புஷ்பம்போன்ற திருக்கண்களையுடைய திருமாலேயாவனென்று கௌசிக ஸ்மிருதி சாற்றுகிறது.

அகஸ்திய ஸ்மிருதியானது, சூரியமண்டலத்தில் பரமாத்மாவாய் விளங்குகின்ற பேரொளியே காயத்திரியின்பொருளாமென்று சொல்லியது. இங்ஙனம் சொல்லப்பட்ட பேரொளியை உருவாய்த்தியானித்திடு முறைமை உலகினர்கட்கெல்லாம் உள்ளந்தெளிய, திருத்தோள்கள் நான்கும், திருவாழி திருச்சங்கும், செம்பொன்னிறமும், இரண்டு மகரகுண்டலமும், சிரசில் இரத்தின கிரீடமும், அரையில் பீதாம்பரமும், விஷ்ணுவென்ற பெயருமுடைய ஒப்பற்றவனைப் புலன்கள் பிறிதோரிடத்திற் செல்லாமல் அடக்கிச்

‡ பூ:, புவ:, ஸுவ: என்ற மூன்றும் வியாகிருதி பேதங்களாம். இவற்றினின்றும் முறையே அகார உகார மகாரங்கள் தோன்றின என்பர். இந்த மூன்றெழுத்துங்கூடி ஓமென்ற பிரணவமாக ஒலிக்கும்.

|| சவிதா—பிரமனுக்குத் தந்தை. சூரியன் மூலமாக மழை பயிர் முதலியவற்றையுண்டுபண்ணுகின்றவனென்ற பொருளும் இதற்குண்டு.

சாவித்திரியை நூற்றெட்டுமுறை செபிக்கின்றவர்கள் * மும்மலத்தினையும் ஒழித்துப் பரமபதமடைந்து பேரானந்த மடைவார்களென்று நிச்சயித்துரைத்தது.

மிக்க வொளியினையுடைய சூரியமண்டலத்திலும், அமிருதகிரணத்தையுடைய சந்திரமண்டலத்திலும், அக்கினி மண்டலத்திலும் நடுவே பொன்னிறவடிவும், பீதாம்பரமும், கிரீடமும் கையிற்சங்கு சக்கரமும், காதில் மகரகுண்டலமும், மார்பில் ஸ்ரீவத்ஸமென்ற மருவும் கௌஸ்துபமணியும் இங்ஙனம் சர்வாபரணமுடன் விளங்குகின்ற திருமாலின் நான்கு அங்குல விக்ரஹத்தைக் காயத்திரி செபிக்கிற காலத்தில் தியானிப்பவர்கள் மோக்ஷத்தைப் பெறுவார்கள்; என்று ஜனகர் செப்பிய ஸ்மிருதியுரைத்தது. யாஞ்ஞவல்கியரும் சங்கவத்த முனிவரும் உரைத்த ஸ்மிருதிகளும் முன்னுரைத்தவாறே உலகினர் நன்கறிய உரைத்தன.

வரதராசியம் என்பதிற் சொல்லப்பட்ட மந்திர வியாக்யானம் சொல்லிவருகிற விடத்தில் சிலபெயர்களைப்போலக் காயத்திரியிலுள்ள சொற்கட்கும் பலவகையான பொருள்கொண்டு நாட்டிய விவரத்தையும் விரித்துரைப்பேன்.—உள்ளும் புறம்பும் நிறைந்த இருளையகற்றல், பாபத்தையறுத்தல்,காலசொரூபனுயிருந்து பலத்தைக்கொடுத்தல், உலகைப்படைத்தல், தரித்தலென்று சொல்லப்பட்ட பலவகையான தொழில்களையுஞ் செய்யவல்ல திருமால் சூரியமண்டலத்தில் விளங்குகின்றானென்று சொல்லப்பட்டுளது.

உலகத்தைப் படைத்துக் காத்து அளவற்ற இன்பமுடைய முக்திப்பேற்றையருளும் சவிதாவென்ற பெயருடைய திருமாலே காயத்திரியின் பொருளாவானென்று அநிர்ப்புதன ஸம்ஹிதை அறையாநின்றது. இங்ஙனம் சொல்லியதற்கேற்பச் சவிதாவென்ற நாமமும் விஷ்ணுவின் ஆயிரநாமங்களுள் ஒன்றுமென்றறியத்தக்கது. கண்ணபிரான் தருமபுத்திரரை நோக்கி, 'எல்லாருடைய இருதயத்திலிருக்கின்ற என்னை, சூரியமண்டலத்தில் பொன்போலவொளிர்கின்ற மேனியும் நான்கு தோள்களோடும் விளங்குகின்ற

* மும்மலம்—ஆணவம், மாயை, காமம்.

வனுகத்தியாயனஞ்செய்வாய்' என்றருளிச்செய்தான். இதனைப்பார தத்திலுள்ள அசுவமேதத்திற் காணலாம். சூரியமண்டலத்தில் பீதாம்பரதாரியாகிய திருமால் எழுந்தருளியிருப்பதால் ஒளியினை யுடைய சூரியன் விஷ்ணுமயன் என்று சொல்லப்படுகிறான். இவ் விவரத்தை விஷ்ணுபுராணம் இரண்டாம்பஞ்சகம் எட்டாமத்தியா யத்திற்காணலாம்.

நீ அறிவின்மையால் சிவபரமாய்ப் பொருள்கொண்ட காயத் திரிக்குப் பிரபஞ்சசாரமென்ற நூலும், வேதமும் சூரியமண்டல மத்தியில் அளவிடவொண்ணாத வொளியுடன்விளங்கும் திருமாலே பொருளாவானென்று நிச்சயித்தோதின.

---

ரு-வது, அருக்கனந்தரியாமி தரிசனப்பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! யான் இங்ஙனமுரைத்த பொருட்கெல்லாம் இசையும்படி இன்னமும் இயம்புவேன்; கேட்பாயாக.—மயனென் பவன் மனத்தை ஒருவழிப்படுத்தித் தியானித்துக்கொண்டிருந் தனன். அப்பொழுது மார்த்தாண்டன் வசிக்கிற மண்டலத்தினின் றும் ஒரு புருஷன் அந்த மயனுடைய தியானத்திற்கிரங்கிச் சானித் தியமாயினன். மயன், காட்சியளித்த அம்மூர்த்தியை நோக்கி, 'ஞானசொரூபனே! சூரியனுடையமகிமையை அடியேற்கு அருளிச் செய்யவேண்டும்' என்று வேண்டினன். அந்த மாபுருடனும் சூரியன் மகிமையை விரிவாயுரைக்க முற்பட்டான்.—

மயனே! வாசுதேவன் என்பவனே பரப்பிரமம். அந்த வாசு தேவமூர்த்தி பேதங்களுள் சங்கர்ஷணனென்பான் ஒருவனுளன். இந்தச் சங்கர்ஷணன் ஜலத்தைச்சிருஷ்டித்து, அதில் தன் வீர்யத் தை விட்டான். அது, பொன்மயமானதொரு பெரிய அண்டமாய் விளங்கியது. அதிலொரு இருட்டுத்தோன்றியது. அதில் மிக்க வொளிவுடைய அநிருத்தக்கடவுள் தோன்றினன். இக்கடவுளே இரண்யகர்ப்பனென்று வழங்கப்பெற்றனன். இவன் ஆதிபுருஷ னுகையால் சூரியலோகத்தையுண்டாக்கி, அதில் சூரியனாய்த்திகழ்ந் தனன். இந்தச்சூரியனே நான்முகனைச் சிருஷ்டித்து, ஜகத்தைச்

சிருஷ்டிக்கின்ற தொழிலை அவனுக்குரிமையாக்கினன். சிருஷ்டிக் கப்பட்ட உலகத்தைப் பரிபாலனஞ் செய்வதற்காகத்தான் உல கைச்சூழ்ந்து திரியாநின்றான்' என்றுரைத்து மறைந்தனன். இவ் விவரத்தைச் சூரியசித்தாந்தத்திற் காணலாம். பதுமாசனத்துடன் வீற்றிருக்கும் கேயூர கிரீட குண்டல சங்க சக்கரங்களைத்தரித்த நாராயணனே சூரிய மண்டலத்தில் விளங்குகிறானென்று அந்தண ளர் நாடோறும் செபத்தில் துதியாநிற்பர்.

சூரியமண்டலத்தில் காயத்திரிப்பொருளாய், மிக்கவொளியு டன் விளங்குகின்றவன் திருமாலேயாமென்பதுதெளிய சாந்தோக் கிய உபநிடதமும், மயித்திராவருணியமும், தைத்திரியமும் எடுத் தோதின. குசிகர், சங்கவத்தர், அகஸ்திபர், ஜனகர், யாக்ஞவல் கியர் என்ற இவர்களுரைத்த ஸ்மிருதிகளும், பாராசர்யபுராண மும், பாரதமும், பந்திர சாஸ்திரமும், சூரியசித்தாந்தமும் கூறிய முறையினை உலகினர் யாவர்க்கும் சம்மதமாக எடுத்தியம் பினேன். சூரியமண்டலத்தில் விளங்கும் தேவன் சிவனென்று நீ கூறியவுரை வெற்றுரையாம்.

சர்வ ரட்சகவத்து நிருணயப் படலம் முற்றும்.



## ரு-வது சகல வேள்விப்பதி நிருணயப் படலம்.

### க-வது, வேத விபரீதார்த்த வேள்விப் பரிச்சேதம்.

இவ்வாறு ஆரணவல்லியுரைக்கக்கேட்ட ஆகமவல்லி சொல் லத்தொடங்கினாள்.—காயத்திரியின்பொருளாய் விளங்குகின்றவன் எங்கள் சிவனேயாம். இங்ஙனம் காயத்திரியின் பொருளாய்விளங் கும் சிவனே பரனல்லாக்கால் விதிப்படிசெய்யும் வேள்விக்குப்பதி யாய் விளங்குமவன் யாவனோ? கூறுவாய்; என்றனள். இதனைக் கேட்ட ஆரணவல்லி ஆகமவல்லியை நோக்கி, 'நங்காய்! பொருளைத் தோற்றும் சூதாடுதலினின்று நீங்காத பேதைத்தன்மைபோல நீ முன்பு பல கூறியவையெல்லாம் நிற்க, வெற்றியென்று கருதி இத னைச்செப்பினை போலும். இனி உன்றன் மனந்தெளிய இதனை

விரித்துரைப்பாய்; என்றனள். இதனைக் கேட்ட ஆகமவல்லி சொல்லத்தொடங்கினள்.—

ஆரணநங்காய்! ஓர்பெரிய கிணற்றைத்தாண்டவேண்டுமென்று முயல்வார், ஓடிதப்பினும் அதில்வீழ்ந்து அழுந்துவதுபோல யான் இங்குரைக்கும் விஷயங்களில் ஏதேனும் ஒன்றற்கு உத்தரஞ் சொல்வதற்காற்றுதொழிவையேல் எல்லா விஷயத்தையும் தோற்ற வளாவாய்.

* அவியின்பொருளாகிய † சாகபசுவுக்கும், ‡ சோமத்துக்கும், ‖ கவ்வியங்கட்கும் குறிப்பாயிருப்பவன் கிருத்திவாசனாகிய இறைவனே. உலகினர் யாகத்திற் பசுபந்தஞ்செய்யுந்தோறும் எங்கள் முக்கண்ணப்பனைப்போற்றி அநுமதிபெற்றுக்கொண்டு செய்கிறார்கள். இடபக்கொடியனாகிய சிவன் வேள்வி வளர்த்து அதனில் வந்த பசுவெல்லாம் எனக்குரியனவாமென் றுரைத்தனனென்று எசுர்வேதம் சொல்லும். இந்த எசுர்வேதத்திலுள்ள ஒப்பில்லாத ருத்திரசமகத்தில், 'உலகத்திலுள்ள எல்லாப்பொருள்களும் என்னுடையனவே' என்று எங்கள் முக்கண்ணப்பன் அருளினான்.

எசுர்வேதம் முதற்காண்டம் எட்டாம்பருச்சத்தில் பசுக்களை மந்திரத்தினால் வழங்குகிறவிடத்திலிருக்கும் தேவன் உருத்திரனே; இரண்டாவான் மற்றில்லையென்று பரத்துவஞ் சொல்லப்பட்டுளது. இஃதல்லாமலும், 'உமாதேவியுடன் நீயும் அன்புடன் உண்டருள்வாய்' என்று ஆகுபசு கொடுத்தார்களன்றோ! ஆகுவென்னும் சொல் பூமியைக் கல்லுகின்ற வஸ்துவைக்குறிப்பிடும். பன்றி பூமியைக்கல்லும் பொருளன்றோ! வராகாவதாரம் திருமாற்குண்டே. இந்தத் திருமால் சங்கரற்குப் பசுவாயினனென்பது சொல்ல வேண்டுமோ?

ஆரணமடந்தாய்! 'ஆகுவென்றபெயர் பெருச்சாளிக்கமைந்திருக்க, அதனைக்கூறாது திருமாலென்றுசுற்றித்தொடர்ந்து பொருள் கொள்ளும் ஊகத்தாற் பயனென்?' என்பையேல், புருஷ சூக்தத்

* அவி—தேவருணவு. † சாகபசு—வெள்ளாடு. ‡ சோமம்—சோமம் என்ற கொடியிலிருந்தும் எடுத்த ரசம்.

தில் தேவர்கள் யாகத்தாலே யாகத்தை எசித்தார்களென்று சொல்கிறவிடத்தில் புருஷனைப்பசுவாகக் கட்டினார்களென்ற படியாலும், புருஷனென்ற சொல் திருமாலையே குறிப்பிடுமென்ற வழக்குண்மையாலும், அந்தத் திருமால் பசுவாதல் திண்ணமாகையாலும், ஆகுதனையும் அவனே எனத் தகுமாகையாலும் ஈண்டு ஆகு என்பதற்கு வராகமென்றே பொருள் கொள்ளவேண்டும்.

பரமபுருஷனாகிய திருமால் பசுவானதினால் பசுபதியாகிய சிவனே வேள்வியின் சொரூபனாக வேண்டும். சிவாராதனையைச் சொல்லும் புருஷசூக்த மந்திரமாமறையும் பசுபதிமந்திரமாயமைய வேண்டுமன்றே. சூரிய சந்திரர்களும், பஞ்சமா பூதங்களும, திருமால் முதலானவர்களும், சோமமென்ற பெயரால் வழங்கப் பெறுவார்களென்று இருக்கிற் சொல்லுமாகையால், சோம சப்தமும் எங்கள் உமைபங்கனையல்லாது சோமரசத்தைக் குறிப்பிடாது.

சிவபிரான் வில்லினால் வேள்வித்தலையைத் துண்டித்தானென்று எசுர்வேதத்திற் சொல்லப்பட்டுளது. அந்த வேளவிச் சிரந்தான் வேள்வி சப்தத்திற்கு அருகமான திருமால் சிரமேயாகவேண்டும். மேகங்கள் தவழப்பெற்ற கைலயங்கிரியிலுறையும் சிவபெருமானே வேள்விக்கிறைவனாவானென்று எசுர்வேதம் முதற்காண்டம் மூன்றும் பருச்சம் இறுதி அநுவாகம் இனிதெடுத்தியம்பியது.

கண்ணபிரானை அருச்சுனன் செய்த பூஜை சிவபெருமானுக்கே அருகமாயிற்றென்று மகாபாரதம் வகுத்துரைத்தது. இதனால் எலலாத் தேவர்களைக்குறித்துச் செய்யும் அவியின் கூறெல்லாம் எங்கள் பிறைசூடியாகிய பெருமானுக்கே அர்ப்பிதமாய் விடுமென்பது தெளிவாகுமே. சாமவேதத்தில் பிரபதப்பேர் மாமந்திரத்தில் எங்கள் சிவனை அந்தணன் என்று சொல்லப்பட்டுளது. இங்ஙனமுரைத்தற்கேற்ப, திருமால் க்ஷத்திரிய மாபினனென்றும், பிரமதேவன் வணிக குலத்தினனென்றும், இந்திரன் சூத்திர வகுப்பினனென்றும், தேவர்கள் *சங்கரஜாதியரென்றும், சிவபிரான் அந்தணனென்றும் பிரமாண்ட புராணம் விரித்துரைத்தது.

உயர்ந்த குலத்தினனாகிய சிவபெருமானைத் தாழ்ந்த வகுப்பினராகிய திருமால் பிரமன் முதலானவர்கள் ஆராதிக்கக்கடமைப்பட்டவராவார். இதனால் சிவன் இவர்கட்கு உபாசியனாவானென்பது தெளிவாயிற்று. இந்தத் தேவர்கட்குள்ள துயரங்களையகற்றும் உமைபங்கனாகிய இறைவனைக் காட்டிலும் உயர்ந்தவர் இவ்வுலகில் ஒருவருமில்லை யென்று எசுர்வேதமும், சதருத்திரய மந்திரமும் எடுத்தோதின. இவ்வாறுரைத்ததற்கேற்ப உலகதிருஷ்டாந்தமும் செப்புவேன்.— சிவபெருமானுக்கு முதற்சம்பாவனையும், முதற்றிருவிழாவும் நடக்கின்றனவன்றோ! இதனினும் வேறெடுத்தியம்ப வேண்டுவதொன்றுண்டோ? இதனால் சிறந்த வேள்விக்குரிய பரப்பிரமம் சிவபிரானே என்பது தெளிவாயிற்று.

---

## உ-வது வைதிகவேள்விப் பரிச்சேதம்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி மிகவும் நகைத்து ஆகமவல்லியை நோக்கி, 'மடந்தாய்! நீ நன்கு மொழிந்தாய்; உன்னைப்போல் நல்லோரிலை; நீ ஈண்டுரைத்தவற்றில் ஒன்றும் தவறாமல், அவற்றிற்குத் தக்க சமாதானம் கூறுவேன்' என்று சொல்லத் தொடங்கினாள்.— மடந்தாய்! சிவனை வேள்வியென்று வேதங்கள் சொல்லாதிருக்கவும் நீதானே விபரீதார்த்தஞ் சொல்கின்றாய். பூவும் நாருமில்லாதிருக்க மாலைதொடுக்கவல்லாய் போலும். உன்னுடைய வெளிமயக்கை என்னென்பேன்.

வலியற்ற மோகனநூலை வெற்றி யென்றுரைத்த ஆகமப்பாவாய்! பிரமன் சிவன் முதலானவர்கள் புருஷோத்தமனாகிய நாராயணனை வேள்வியாலே ஆராதனை செய்து தத்தம் பதவிகளைப் பெற்றார்களென்பதைத் தெளிவாக யெடுத்துரைப்பேன்.— பசு கவ்யம் சோமம் புரோடாசம் என்ற இவைகளைத் தேவர்களனைவருக்கும் வெவ்வேறாகுதி செய்யும்படி வேதம் விரித்துளதே. இங்ஙனமிருக்க, பசு, சோமாதிகட்கு உங்கள் சிவன் ஒருவன் மாத்திரமே உத்தேசியனென்பது எவ்வாறு பொருந்தும்?

யாகத்தில் பசுபந்தனஞ் செய்யும்போது, சிவனைப் போற்றி அவனிடத்தில் அநுமதி பெற்றுக்கொண்டு தொடங்கி வேள்வியை முடிப்பார்கள். இதுகாரணம்பற்றிச்சிவனுக்குப் பரத்வம் சொல்வதெப்படி? பசுபதியென்ற பெயரும் உங்கள்சிவனுக்கு இயல்பாக அமையவில்லையே. தேவர்கள் கொடுத்த வரத்தால் சிவன் பசுபதியானுனதலால் யாகத் தொடக்கத்தில் இவன்பால் அனுமதி பெற்றுக்கொள்கின்றனரேயன்றி வேறில்லை.

சிவன் வேள்விவஸ்துக்களுக்குக் காவலனுவான். தனது காவற்குள்ளிருக்கின்ற பசுக்கள் விநியோகிக்கப்படுமளவும் 'அவை என்னுடையன' என்று அபிமானிக்கின்ருன். இதனுல் சிவன் காவற்சோர்வில்லாதிருக்கின்ருனென்பது தெளிவாகுமேயன்றி வேறென்றுமில்லையே, உலகிற் பொருள்களெல்லாம் என்னுடையனவே என்று சிவன் உருத்திரசமகத்திலுரைத்தனனென்று அறியாது கூறினுய். அதன் உண்மையைக் கேட்பாய்.— சிவன் அக்கினியைப் போற்றியபின், 'எல்லாப்பதங்களையும் அருள்பவன் திருமாலேயாம்' என்று அவ்விமலனையும் போற்றி, 'அடியேற்கு யாகத்தால் எல்லாப்பொருளுமுண்டாயிடுக' என்று வேண்டிப் பெற்றனன். இந்த வெற்றித் திருமாலின் அருளினுல் சிவனுக்குண்டாயிற்று. இதுபற்றிச் சிவன் எல்லாமுடையவன் என்பதெப்படி? புருஷசூக்தத்தில் உலகெல்லாம் திருமாலுடையன என்று குறிப்பிடப்பெற்றுளது. இங்ஙனமிருக்க, உருத்திரன் 'எல்லாம் என்னுடையன' என்பது கூடாது.

உருத்திரன் ஒருத்தனே இரண்டாவான் மற்றில்லையென்று எசுர்வேதம் முதற்காண்டம் ஆறும்பருச்சத்திற் சொல்லப்பட்டுளது. அதனுல் சிவனே பரனுவானென்று முன் பின் ஆராயாமல் கூறினுய். அங்குரைத்த உண்மைப்பொருளைக் கேட்பாய்.— முன்னெரு காலத்தில் அறிஞர்கள் இவ்வுலகினில் ஓர் யாகமியற்றினர். அப்பொழுது அங்கிருந்த தேவரனைவருக்கும் ஒவ்வொரு கபாலங்கொடுத்தனர். மேலும் யாகசாலையில் ஒரு கபாலம் எஞ்சியிருக்கக் கண்டு, இப்பொழுது இங்கு அவிர்ப்பாகம் பெருதவர் யாவர்? என்று ஆராய்ந்தனர். அது சமயம் அங்குள்ளார்,

'உருத்திரன் ஒருவனுமே இரண்டாவான் மற்றில்லை' என்றனர். அதன்மேல் அங்குச் சந்தித்த சிவனுக்கு §ஆகுப்பசுவைச் சமர்ப்பித்தனர். இதுவேதான் அந்த எசுர்வேத மந்திரத்தின் தத்துவப் பொருளாம். இதனையறியாமல் வாய்வந்தன பிதற்றினுய். புத்தியில்லாதவர் கானலைக்கண்டு நீரென்று மயங்குவாரன்றே.

சிவனுக்கு அங்குச்சமர்ப்பித்த ஆகுப்பசுவை அரியென்று மனமாச்சர்யத்தாற் கூறினுய். அக்கினி புருஷன் ஆகுவாகி தேவரறியாவண்ணஞ் சென்றுனென்று எசுர்வேதஞ் சொல்லியது. நீ முன்பு எங்கள் சிவனே வேள்வியின் சொரூபனுயிருக்கிறுனென்று கூறியபடி ஆராய்வோமாகில், அக்கினி புருஷனும் சிவனே யெனல் வேண்டும். அங்ஙனமாம்போது தனக்குத்தானே பசுவானுனெனல் வேண்டும். இஃதொருபுறமிருக்க, ஆகுவெனும் பெயர் வராகத்திற்குள்ளதென்று இங்குள்ள நிகண்டுகளிலில்லை. வேதத்தில் ஓரிடத்தில் பெருச்சாளிக்கு ஆகுவென்றும், பன்றிக்கு வராகமென்றும் வழங்கியிருப்பதாகக் கண்டதுண்டு. எங்கள் ஆதிவராகமூர்த்தியானவர் வெள்ளத்தில் அழுந்திக்கிடந்த பூமியை எடுத்தனரேயன்றி நிலத்தைக் கிண்டினரில்லை. திருமால் யாகப் பசுவானுனென்பது வேதவிரோதமாகும். இஃதல்லாமலும் ஆகுவென்ற சொல்லிற்குப் பன்றியென்று பொருள்கொண்டு பன்றி வராகமாகும்; வராகம் திருமாலாமென்று இப்படி சுற்றிச் சுழற்றிப் பொருள்கொண்டு பொழுதைப் போக்கினுல் வெற்றியுண்டாகுமென்று கருதினைபோலும்.

புருஷசூக்தத்தில் தேவர்கள் புருஷப்பசுவைக்கட்டி யாகஞ் செய்தார்களென்று சொல்லப்பட்டவிடத்தில் அந்தப்புருஷன் திருமாலென்று சொல்வையேல், புருஷசப்தத்தால் சிவனையுஞ் சொல்லியிருப்பதால் சிவனே பசுவென்றுல் மறுக்கும் உனக்கு வழக்குண்டோ?

---

§ ஆகுப்பசு-பெருச்சாளி.

## ரு-வது, புருடப்பசுவிவேகப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! புருஷப்பசு யார்? என்பதை உனக்கு யான் தெளிவாக எடுத்துரைப்பேன்.— மிக்க புகழுடைய வேதங்கள் பரவாசுதேவனைப் போற்றிய பின்னர் அவன்றன் திருமேனிப்பிரிவாகிய நான்காவது பெருமானை நோக்கி, 'அநிருத்தப் பெருமானே! சூரியமண்டலத்தின் மேலுள்ள பதத்திலுறைபவனே!! ஜோதிமயமானவனே!!! என்று துதித்து உலக சிருஷ்டியின் விவரத்தை அருளிச்செய்யவேண்டும்' என்று வேண்டினன். அப்பொழுது அநிருத்தன் அருளிச் செய்யலுற்றான்.—

பிரபஞ்ச விரிவாகிய சிருஷ்டியிலிச்சை வைப்பதற்கு முன்பு விராட்பகுதியாகிய எனது சொரூபத்தைச் சிருஷ்டித்து, சிருஷ்டிக்கப்பட்ட அதற்குத் துணையாக ஒரு புருஷனையுண்டாக்கினேன். அவன் மந்தபுத்தியுடையவனாயிருந்தான். அவனைநோக்கி 'இந்தப்படி ஏனிருக்கிறாய்' என்று வினாவினேன். அவன் 'எந்தாய்! எனக்கு மனத்தெளிவுண்டாகவில்லை; என் செய்வேன்' என்று போற்றினான். அப்பொழுது யான் அவன்மீது கருணைசெய்து, 'மைந்த! நீ என்னை அக்கினியாகவும், உன்னைப் பசுவாகவும் கருதிப் பூவில் வண்டுகளாகத் தோன்றுவாய்; அந்த வண்டே நெய்யாகவும், பூவின் தேனே அவியாகவும், மண் நீர் தீ காற்று ஆகாயம் புத்தி அகங்காரம் என்ற ஏழும் சூரியனாகவும், தன்மாத்திரை ஐந்தும், கர்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், புலனைந்தும், அந்தக்கரணம் ஒன்றும் ஆக இருபத்தொன்றும் சமித்தாகவும் கொண்டு விதிமுறை தப்பாமல் வேள்வி செய்தால் மனத்தெளிவு பிறந்து ஞானமுண்டாகும்; அதன்மேல் உலகசிருஷ்டியுஞ் செய்வாய்' என்றேன். அவனும் அப்பொழுதே என்னை அக்கினியாகக் கருதிப் பெருவேள்விசெய்து, தன்னைப் பசுவாகச் சமர்ப்பணஞ்செய்து எல்லாச் சிருஷ்டியுஞ் செய்தற்கமைந்தான்; என்றிசைத்தனன். இவ்விவரத்தை முற்கலோப நிடதத்திற் காணலாம்.

---

ச-வது, பரந்தாமனேபசுபதி யென்ற பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! நீ உருத்திரனே பசுபதியென்றாய்; அந்த உண்மையைக் கேட்பாய்.— தேவர்கள் சிவனைப்போற்றி, 'இறைவ நீ கொடிய முப்புரத்திலுள்ளவர்களை வென்று புகழாபரணத்தை அணிந்துகொள்வாய்' என்றனர். அப்பொழுது சிவன் தேவர்களை நோக்கி, 'யான் பசுபதியாக நீங்கள் வரந்தருவீர்களேல், யான் பகைவர்கள் வாழுகின்ற முப்புரத்தைப் பொடியாக்குவேன்' என்றனன். அவர்களும் அங்ஙனமே வரங்கொடுத்தார்கள். சிவன் அதன்பிறகு மாமேருவை வில்லாக வளைத்து முப்புரத்தைப்பொடி செய்தான். அன்று முதல் சிவனுக்குப் பசுபதி யென்ற பெயர் வழங்கலாயிற்று. இவ்விவரத்தை எசுர்வேதம் ஆறும்காண்டம் இரண்டாம் பருச்சத்திற் காணலாம். இதுநிற்க, எசுர்வேதமும் திருமாலே பசுபதியென்று இயம்பியது.

வனத்தில் வாழ்கின்ற சூத்திரப்பசுக்களெல்லாம், இந்திரன் சந்திரன் முதலானவர்களைத் தெய்வமாகக்கொண்டிருக்குமென்று இருக்குவேதம் இரண்டாம் காண்டம் ஐந்தாம் பருச்சம் மொழியிடுகிறது. எசுர்வேதம் முதற்காண்டம் ஐந்தாம்பருச்சம் முதலநுவாகத்திற் சொல்லப்படுகிற பசுக்களுக்குத் துவஷ்டா தெய்வமாவானென்று குறிப்பிடப்பெற்றுளது. இங்ஙனமிருப்பதால் சிவன் 'யானே பசுபதியாவேன்' என்று நவின்றனன். இஃதல்லாமலும் தேவர்கள் வேள்வியால் வேள்வி செய்யுமிடத்தில் சிவன், 'யானே வேள்வியாவேன்' என்றிசைத்தனன். சில மந்தமதிகள் பிறர்க்குரிய நற்பொருளைத் தன்னதென்று இறுமாந்துரைத்தால் அப்பொருள் அவர்களதாய் விடுமோ ?

---

ரு-வது வேள்விப்புருடன்விவரணப் பரிச்சேதம்.

ஆகமநங்காய்! சிவன் வேள்வி சொரூபனாவானென்று வேதத்திற் சொல்லவில்லை. திருமாலே வேள்வி சொரூபனாவானென்ற முறையினை யெடுத்துரைப்பேன்; கேட்பாய்.— பிரமன், உலக

சிருஷ்டி செய்யவேண்டுமென்று கருதி இரவும் பகலும் அத் தொழிலைச் செய்யத் தொடங்கினன். அப்பொழுது பகலில் தேவர்கள் தோன்றினர்கள். இராப்பொழுதில் அசுரர்கள் உற்பவித்தார்கள். இவர்களுள் தேவர்கள் ஸ்வர்க்க பதவியைவிரும்பி †அஷ்டாங்க யோகஞ் செய்தார்கள். அந்த யோகத்தின் பயன் ஸ்வர்க்கலோகமாகப் பரிணமித்தது. மேலும் தவஞ் செய்யத் தொடங்கினர்கள். அதன் பயனாகப் பூவுலகில் இருக்கும், புவர் லோகத்தில் எசுரும், சுவர்லோகத்திற் சாமமும் வெளியாயின. பின்னையுந் தவஞ் செய்யத் தலைப்பட்டார்கள். அதன் பயனாக இருக்கு எசுர் சாமம் என்ற மூன்றினின்றும் முறையே காருக பத்தியம், தக்ஷிணாக்கினி, ஆகவனீயம் என்ற மூன்று அக்கினிகள் தோன்றின.

மேலும், தேவர்கள் ஏகசிந்தையராய் அருந்தவஞ்செய்யத் தொடங்கினர்கள். அப்பொழுது முன்னுரைக்கப்பெற்ற அக்கினி யிலிருந்து, ஆயிரமுகங்கள், ஆயிரங்கண்கள், ஆயிரங்கால்களுடன் ஒருமஹாபுருஷன் றோன்றினன். தேவர்கள் அந்தமஹாபுருஷனை வாழ்த்தி வணங்கி, 'எந்தையே! நீ யார்?' என வினவினர். அதற்கு அப்புருஷன், 'யான் யக்ஞபுருஷ' னென விடையளித்தனன். இவ் விவரத்தைச் சாமவேதம் இருபதாம்ஆகுதியிற் பொருந்தியிருக்கிற பிராமணத்தில் மூன்றும் அத்தியாயத்திற் காணலாம். மேலும் அந்தச்சாமவேதம் இருபதாம் பிராமணம் பதின்மூன்றுமத்தியா யத்தில் அந்த யக்ஞபுருஷன் யாகவிஷ்ணுவென்று சந்தேகமொழி யச் சிறப்பித்துரைக்கப்பெற்றுளது.

மடந்தாய்! நித்யனாய் விளங்கும் திருமாலே வேள்வி ஸ்வ ரூபனென்றுரைக்கும் பிரமாணம் பலவுள. அவற்றையும் ஈண் டெடுத்துரைப்பேன்.— இருக்குப் பிராமணத்தில் முதற்பஞ்சிகை

† அஷ்டாங்க யோகம்-இயமம் நியமம் ஆஸநம் பிராணாயாமம் ப்ரத்யா ஹாரம் தாரணம் தியானம் ஸமாதி யென்ற எட்டு அங்கங்களையுடைய யோகம். [யோகமாவது-சித்தத்தை ஒருவழிப்படுத்தலாம். இந்த எண் வகையுள் ஸமாதி அங்கி, மற்றவை அங்கங்கள்.]

மூன்றுமத்தியாயத்திலுள்ள நாலாங்காண்டத்தில் விஷ்ணுவே வேள்விஸ்வரூபனுவானென்றிருப்பதைக் காணலாம். இவ்வாறே எசுர்வேதம் முதற்காண்டம் ஏழாம்பருச்சம் இரண்டாம் அநுவாகமும், எசுர்வேதம் இரண்டாம் காண்டம் ஐந்தாம் பருச்சம் ஐந்தாமநுவாகமும், எசுர்வேதம் மூன்றுங்காண்டம் முதற்பருச்சம் பத்தாமநுவாகமும், அந்த மூன்றுங்காணடத்தில் ஐந்தாம் பருச்சம் முதலநுவாகமும், ஐந்தாங்காண்டத்தில் இரண்டாம் பருச்சம் எட்டாமநுவாகமும் நன்கெடுத்தியம்பும்.

இன்னும் திருமாலே வேள்வி ஸ்வரூபனென்றுரைக்கும் பிரமாணங்களை யெடுத்துரைக்கத் தொலையாது. மேலும் இங்ஙனமுரைத்த வேதப்பொருட்குப் பொருந்த தேவர்கள் மனமகிழ்ந்து திருமாலை யக்ஞபுருஷனென்று பாராட்டியுரைத்தனர். இதனை விஷ்ணுபுராணம் முதலஞ்சகம் ஒன்பதாமத்தியாயத்திற் காணலாம். தேவேந்திரன் பெரியபிராட்டியாரை நோக்கி, 'உலகமாதாவே! சிறந்த வேள்வியனைத்துமாய் விளங்கும் திருமாலின் திருமார்பில் வாழ்வதற்கு என்ன நோன்பு நோற்றனைகொல்? நீ செய்த தவமே தவமாகும்' என்று பாராட்டினன். இதுவும் விஷ்ணுபுராணம் ஐந்தாமத்தியாயத்திற் கண்டதே. பாதமுனிவர் வேள்வி வடிவினனாகிய நாராயணனை வேள்வியால் வேட்டுப் பரமானந்தமுற்றனர். இதனைப்பாகவதம் ஐந்தாம் ஸ்கந்தம் ஏழாமத்தியாயத்திற் காணலாம்.

---

### கூ-வது, மகபதிதேர்ச்சிப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! வேள்விப்பதி திருமாலே என்பதற்கு இன்னும் பலபிரமாணம் கூறுவேன்.— ஒருகாலத்தில் நாரதமாமுனிவர் கங்கையில் வசித்துக்கொண்டிருந்தனர். இராப்பொழுது கழிந்து சூரியன் உதயமானபோது கூப்பிடுவழியகலமும், அதில் இரட்டிய நீளமுமுமாய், நீரில் நனைந்து உடம்பெங்கும் பாசிபற்றிக் கண்ணுக்குக்காட்சியாயிருப்பதொரு கூர்மத்தை(ஆமையை)க்கண்டு திகைப்

புற்றனர். அதன்பிறகு முனிவர் அந்தக் கூர்மத்தைப் பார்த்து, 'நீ ஆச்சர்யப்படத்தக்க வடிவுடன் விளங்குகின்றாய்; உன் மகத்துவ மன்றோ மகத்துவம்' என்று கொண்டாடினர். இதனைக்கேட்ட கூர்மம், முனிவரை நோக்கி, 'முனிவரரே! என்னை என் கொண்டாடுகின்றீர்; என்னைப்போன்ற பதினாயிரம் வஸ்துக்களை வகித்துக் கொண்டிருக்கின்ற இந்தமாநதியன்றோ மகத்துவமுடையதாகும்; அதைப் புகழ்வதுதான் ஏற்புடைத்தாகும்' என்றது.

அதன் பிறகு நாரதர் அந்த நதியை நோக்கி, 'நங்காய்! உன் மகிமையுரைக்க நாவாயிரம் போதாதன்றே;' என்றனர். இதனைக் கேட்ட நதியானவள், 'முனிபுங்கவரே! என்னை ஏன் இப்படி புகழ்கின்றீர். என்னைப்போன்ற பதினாயிரம் நதிகள் சென்று புகுவதற்கு இடந்தரும் பெருங்கடலன்றோ உம்மால் புகழ்வதற்கேற்ற புகழுடையதாகும்; என்றது.

அதன்மேல் முனிவர் கடலை யணுகி, 'சாகரமே! நீ புகழுடன் விளங்குகின்றாய்' என்று கொண்டாடினர். அப்பொழுது சமுத்திரமானது முனிவரரை நோக்கி, 'முனிவர்பெருமானே! என் போன்ற பலகடல்கட்குமிடந்தருகின்ற பூமியன்றோ மகிமையெல்லா முடையதாகும்; அதனால் அதுவே கொண்டாடத்தகும்பெற்றிய தென்றது. அதன் பின்னர் முனிவரர் பூமியை நோக்கி, 'நிலமங்காய்! மகிமையெல்லாம் உன்னிடத்திலன்றோ நிறைந்து விளங்குகின்றன' என்றனர். அப்பொழுது நிலமங்கை முனிவரரை நோக்கி, 'நீர் புகழ்வதற்கு யான் பாத்திரபூதையாகேன்; என்னையுந் தாங்குகின்ற குலபர்வதத்திற்கன்றோ எல்லாப் பெருமையும் உரியனவாகும். அதன் பெருமைக்குவமை கூறுவதற்கு அருமையாகு'மென்றனள். முனிவரர் குலபர்வதத்தை யணுகி, 'பொற்சிகரத்தையுடைய †பூதரங்காள்! உம்மைப்போல் உலகிற் புகழ்படைத்தார் யாருளர்?' என்றனர். அப்பொழுது குலபர்வதங்கள் முனிவரரை நோக்கி, 'நான்முகனால் சிருஷ்டிக்கப்பட்ட எங்கட்கு இத்தனை பெருமை எங்ஙனமுண்டாகும்? சிருஷ்டிகர்த்தாவாகிய நான்முகனே எல்லாப்புகழுமுடையனாவான்;' என்றுரைத்தன.

---

†பூதரம்-பூமியைத் தாங்குவது; மலை.

அதன்பிறகு முனிவர் பிரமதேவனையடைந்து, 'கமலாசனரே! உமது பெருமையை யானென்னென்று புகழ்வேன்; உம்மையொப் பார் உலகில் யாவருளர்?' என்றனர். இதனைக்கேட்ட பிரமதேவன், 'மாதவமுனிவ! இப்புகழ்ச்சிக்கு யான் அருகனல்லேன்; எனக் கித்தனை யறிவையுங்கொடுத்த வேதங்களே என்னையும் உலகையும் தரியாநின்றன; அதனால்எல்லாப்புகழும் அந்த வேதங்களிடத்திலே பொருந்தியுள்ளன;' என்றனன். இதனைக்கேட்ட முனிவார் வேதங் களையடைந்து வேதங்காள்! உங்கள் புகழ் என்னால் புகழுந்திறத்த தன்று; என்று கொண்டாடினர். அப்பொழுது வேதங்கள்யாங்கள் யக்ஞத்தின் பொருட்டு விதிக்கப்பட்டுளோமாகையால், யக்ஞங் களே பகிமையுடையனவென்று செப்பின. அதன்மேல் நாரதர் இங்ஙனஞ் சொல்லப்பட்ட வேள்வி கண்ணபிரானே யாவனெனத் துணிந்து, துவாரகையை யடைந்து, வசுதேவன் மைந்த! ஒப்புயர் வற்ற பெருமை உன்னிடத்திலன்றோ நிறைந்து விளங்குகின்றது என்று போற்றினர். அதற்குக் கண்ணபிரான் தக்ஷிணையோடு கூடிய யானே பெருமைக்கெல்லாம் உறைவிடமென்று சொல்லப்படுகிறே னென்றனர். பின்னர் நாரதர் தெளிவுற்றகன்றனர்.

அப்பொழுது கண்ணபிரானோடு கூடியிருந்த அரசர் மந்திரி முதலானவர்கள், ஒருவருக்கொருவர், 'இங்கு நாரதமாமுனிவர் வந்தனரே; கண்ணபிரானோடுரையாடினரே; சந்தேகந்தெளிந்தவர் போலகன்றனரே; அதற்குக் கண்ணபிரான் அருளிச்செய்த விஷய மென்ன? ஒன்றும் நமக்குவிளங்கவில்லையே என்று வியப்புற்றுக் கண்ணபிரான் திருவடிகளில் விழுந்து பணிந்து, எம்பெருமானே! விண்ணப்பம்—சந்தேகங்கொண்டநாரதமாமுனிவர்வந்து உம்மிடம் கேட்டவிஷயமென்ன? அதற்கு நீர்அருளிச்செய்த விடை யாது? என்று கேட்டனர். கண்ணபிரான் புன்முறுவல்கொண்டு, 'நீவிர் அந்த நாரதமாமுனிவரையே கேட்டுத் தெளிமின்' என்று ஆங்கு முனிவரை வரவழைத்தனர்.

அப்பொழுது முனிவரர், கண்ணபிரான் தன்னடியிணை வணங்கி அடியேனை இங்கு வருமாறு நியமித்ததற்குக் காரண

மென்ன? என்று வினவினர். கண்ணபிரான் 'முனிவரரே! உமக்கும் பிரமதேவனுக்கும் நிகழ்ந்த சல்லாபத்தை இங்குள்ளவர்களின் உள்ளந்தெளிய நன்கெடுத்தியம்புவீர்' என்றருளிச்செய்தனன். முனிவரர் ஆங்குள்ள சபையோர்களை நோக்கி நிகழ்ந்த விஷயங்களைச் சிறிதும் மறைக்காமல் எடுத்துரைத்தார்.§ அதனைக்கேட்ட அவையினர் கொண்டாடித் தெளிவுற்றார். இவ்விவரத்தைப் பாரதத்திலும், அரிவம்சத்திலும் காணலாம்.

ஆகமமடந்தாய்! இம்மட்டோ? இன்னும் கேட்பாய்.— முன்பு விருத்திராசுரன் என்ற ஓர் அவுணனிருந்தான். அவனை இந்திரன் கொன்றான்; அதனால் இந்திரனைப் பிரமகத்தி சூழ்ந்து கொண்டது. அப்பொழுது இந்திரன் அரவணையிற்றுயிலும் ஆதிதேவனை யடிபணிந்து தன்குறையினை விண்ணப்பஞ் செய்தான். அப்பொழுது அவ்விறைவன் இந்திரனை நோக்கி, 'நீ வேள்விஸ்வரூபனாய் விளங்கும் என்னை அசுவமேதத்தால் ஆராதனைசெய்வையேல், உன்னைத் தொடர்ந்த பிரமகத்தியகலப்பெற்று சுகமுறுவாய்' என்று பணித்தான். இந்திரனும் அங்ஙனமே அசுவமேதத்தால் வேள்விவடிவாகிய திருமாலைத் திருவாராதனை செய்து, பிரமகத்தியினின்றும் நீங்கிச் சுகமுற்றான். இவ்வரலாற்றை உத்தரவால்மீக ராமாயணத்திற் காணலாம்.

---

## எ-வது, வேள்விமறுத்தவேநன்சரிதைப் பரிச்சேதம்.

ஆகமநங்காய்! வேநன் என்றொருவனிருந்தான். முனிவர்கள் அவனை உலகைப் பரிபாலனஞ் செய்யும்படி பட்டாபிஷேகஞ்

---

§இங்கு நாரதர் உபதேசித்த வரலாற்றைப் பெரியாழ்வார்,

''ஆமையாய்க்கங்கையாயாழ்கடலாயவனியாயருவரையாய்
நான்முகனாய்நான்மறையாய்வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான்
சேமமுடைநாரதனார்சென்றுசென்றுதுதித்திறைஞ்சிக்கிடந்தான்கோயில்
பூமருவப்புள்ளினங்கள்புள்ளரையன்புகழ்குழறும்புனலரங்கமே'

என்று அருளிச்செய்ததும் அறியத்தக்கது.

செய்து ஆசீர்வதித்தனர். அவனும் தன்னாணையெங்கும் செல்லு மாறு அரசுசெய்துவந்தான். பின்னர் அவ்வேநனுக்கு அஹங்காரம் தலைமண்டை கொண்டது. அதனால் அவன் வள்ளுவனை யழைத்து 'உலகினர்க்கெல்லாம் யானே தெய்வமாவேன்; வேள்விசெய்வதை யொழித்திடுக; இஷ்டையொழிச; நியமமெல்லாம் துறக்க; என்று எங்கணும் பறை சாற்றுவாய்' என்று ஆக்ஞாபித்தான்.

வள்ளுவனும் அவ்வாறே எங்கணும் பறையறைந்தான். இதனைக்கேட்டமுனிவர்கள், 'ஈதென்ன விபரீதகாலம் வந்துற்றது' என்று விரைவாக வேநனையடைந்து அவனை ஆசீர்வாதஞ்செய்து, 'அரச! எல்லாப் பயனையுந்தரவல்ல வேள்வியைச்செய்யாவிட்டால் உலகில் அநாசாரமன்றோ பரவும்; அதனால் உலகிற்குண்டாகும் இடுக்கண் எண்ணித் தொலையுமோ? இங்ஙனமிருக்க 'வேள்வி தவிர்ந்திடுக' என்று பறை சாற்றுவித்த உன்கருத்தென்ன? என்று வினவினர். அதற்கு அவ்வேநன் உலகிற்கு அரசனாயிருப்பவனே எல்லோருக்கும் தெய்வமாவான்; அதனால் யானே தெய்வமாவேன்; வேள்விப்பதியும் யானே என்பதை அறியீரோ? என்று இறுமாப் புடனுரைத்தனன்.

இம்மொழியினைக்கேட்ட முனிவர்கள் வேநனை நோக்கி, 'வேள்விவடிவினனாகிய நாராயணன்றன் ஆராதனையைத் திடமாக நடத்தினால் அவ்விறைவன் உனக்கும்,உலகிற்கும், எமக்கும் முத்திப் பேற்றையருள்வான்; ஆதலால் வேள்விசெய்வதை மறுக்காதொழி வாய்' என்று இதோபதேசஞ் செய்தார்கள். அவ்வேநன் இந்த இதமொழியைக் கேட்காமல் மறுத்தான். அப்பொழுது முனிவர் கள் அவ்வரசனை வெறுத்துச் சபித்தார்கள். அவனும் விண் ணாட்டையடைந்தான். இவ்விவரத்தைப் பராசரர் அருளிய புரா ணம் முதலஞ்சகம் பதிமூன்றும் அத்தியாயத்திற் காணலாம்.

---

அ-வது, வேள்விநாயகன்பிரசன்ன பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! அகிலலோக காரணனாய் அகண்டபரிபூரண னாய் வேதப்பொருளாய் விளங்குகின்ற திருமாலின் மயமாகவே

வேள்வியிருக்குமாகில், அந்தத்திருமால் உலகில் அவதரித்தபோது வேள்விகளைச் செய்ததற்கு காரணமென்னே? என்றுகேட்பையேல் கூறுவேன்.—

கண்ணபிரான் அருச்சுனனை நோக்கி, 'ஸத்கர்மங்களைச்செய்வதால் எனக்கோர் பலமில்லாவிட்டாலும், உலகினர் நல்லொழுக்கத்தில் ஒழுகிச் சீர்திருந்துவதற்காக யான் எல்லாக் கருமங்களையும் அநுஷ்டிக்கிறேன்;' என்றருளிச்செய்தான். இதனைப் பகவற்கீதையிற் காணலாம். ஆதிபுருஷனும் யானே; வேள்விப்பதியும் யானே; என்று திருமால் அருளிச்செய்ததாக விஷ்ணுபுராணம் இரண்டாம் பஞ்சகம் பதின்மூன்றும் அத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. பகவத்கீதையில் கண்ணன் வேள்விப்பாகனும், வேள்விப்பதியும் யானே யென்றருளிச்செய்தான். திருமாலே வேள்விப் புருஷனென்று பாரதத்திற் பலவிடங்களிலுங் கூறியதை எண்ணியுரைக்கலாகுமோ?

எல்லாவேள்விகளும், வேள்விப்பதியும், வேள்வி செய்வானும், வேள்வித்திரவியங்களும், வேள்வியை வகிக்கின்றவனும், ருத்விக்களும், வேள்வித்துறையும், வேள்விப்பயனநுபவிப்பவனும், வேள்வியைப் புகழ்ந்துரைப்பவனும், வேள்விப்பலனும், அதனைத்தருபவனும் திருமாலேயென்று பீஷ்மருளிச்செய்த ஸகஸ்ரநாமம் சாற்றுகிறது.

அகிலகாரணனும் ஸர்வாந்தர்யாமியான நாராயணனே வேள்விப்பதியாவானென்பதற்கு வேத புராண இதிஹாச சாஸ்திரங்களிலிருந்து பலபிரமாணங்களை யெடுத்தியம்பினேன். முன்பு சாமவேதத்திற் சொல்லப்பட்டவேள்வி நாராயணனைத் தேவர்கள்புருஷசூக்தத்தாலும் எசித்தார்கள். திருமாலிற்கு ஆயிரமாயிர அவயவங்களுண்டென்ற உண்மை துர்ப்புத்தியுடையவர்கட்குத் தோற்றாது. திருமாலின் அவயவங்கள் ஆயிரமாயிரமென்று அளவிட்டவெல்லாம் உபலக்ஷணையால் அவனுடைய அவயவம் ஒவ்வொன்றும் அநந்தமாயிரமென்று கொள்ளவேண்டும். இவ்வாறுகொள்வதற்கேற்ப எசுர்வேதமானது சங்குசக்கரங்களால் விளங்குகின்ற திருமாலுக்கு

எங்குமெங்கும் திருக்கண்கள்; எங்குமெங்கும் முகங்கள்; எங்கு மெங்கும் புயங்கள்; எங்குமெங்கும் திருவடிகள் என்று விரித் துரைத்தது. இராமபிரான் சிவனுக்கு விசுவரூபத்தைக் காட்டிய போது, சிவன் 'உன்னுடைய ஒருவடிவை அநந்தமாகக் கண்டேன்' என்று மகிழ்ந்துரைத்தான். இவ்விவாதத்தை இரணியகர்ப்ப சங்கிதையிற் காணலாம். முகமநந்தம்; முடியநந்தம்; வாயநந்தம்; கண்ணநந்தம்; கையநந்தம்; காலநந்தம்; இன்னும் அநந்தவநந்த விதமாக ஆர்ச்சுனன் கண்ணபிரானைக்கண்டு மகிழ்ந்தனனென்று பகவற்கீதையிற் சொல்லப்பட்டுளது.

---

## ௬௦-வது, புருஷசூக்தவிவரணப் பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! நாராயணன்றன் ஆராதனையைக் குறிப்பிடு கிற புருஷசூக்தம் சிவமந்திரமென்றுரைத்தாய். ஒருவனுடைய பொருளை மற்றொருவன் தோல்வி வழக்கால் 'என்னது' என்ப னேல், அப்பொருள் அவனுடையதாய்விடுமோ? புருஷசூக்தம் விஷ்ணுவின் பரமாகும் என்ற உண்மையை உரைப்பேன்.— புருஷன் என்ற சொல்லிற்கு எங்கும் நிறைதல், உலகிற்கு முன்னே யிருத்தல், எல்லாப்பொருளையுங் கொடுத்தல், எல்லாருடைய இரு தயங்களிலும் பூவின் மணம்போல விளங்குதல் என்ற பலபொரு ளுண்டு. இக்குணங்களெல்லாம் விஷ்ணுவுக்கே உரியன என்பதை முன்னரே நன்கெடுத்திபம்பினேன். புருஷசப்தவாச்சியனாகிய இறைவனே உலகைச்சிருஷ்டித்தானென்று புருஷசூக்தமும், சுபா லோபநிடதமும், வாச்சநேயகமாம் பிராமணமும் முறையிடுகின்றன. வேதங்களுக்கு வியாக்கியானஞ்செய்த ஞானத்தெளிவுடைய தேவ ஸ்வாமி என்பவரும், வேதங்களைப்பிரித்து வெளியிட்டபகரித்த வேதவியாசரும் புருஷன் நாராயணன் என்றே நிச்சயித்துரைத்தார் கள்.

சாமவேதத்திலுள்ள சாமவிதிப்பிராமணத்து நான்காம் காண் டத்தில் பக்தியால் பலரும் விரும்பும் சில மந்திரங்களை வெவ்வே

ருகப்பிரித்தெடுத்து, 'இம்மந்திரங்கள் தேவபரம்' 'இம்மந்திரங்கள் கணேசனைச் சார்ந்தன' 'இம்மந்திரங்கள் சுப்பிரமணியனுக்குரியன' 'இம்மந்திரங்கள் சிவனுக்கேற்றன' என்றுரைத்து புருஷசூக்தமந்திரம் விஷ்ணுவின் பரமாமென்று நிச்சயித்துரைக்கப்பட்டுளது. புருஷசூக்தம் விஷ்ணுவின் பரமாமென்று சாந்தோக்ய உபநிடதம் தெரிவித்தது. வைகானசஆகமமும் திருமாலைப் பிரதிஷ்டிப்பித்து ஆராதனைசெய்யும்போதெல்லாம் புருஷசூக்தஜபம்செய்யத்தக்கதென்று விரித்துரைத்தது,

இஃதல்லாமலும், புருஷசூக்தத்திற்கு ரிஷிசந்தஸ்தேவதைகள் நாராயணனேயென்று வகுத்துரைக்கப்பட்டுளதேயன்றி மற்றோர் தெய்வம் வகுத்துளதோ ? உலகத்தில் திருமால் திருவாராதனைக்குப் புருஷசூக்தம் வழங்கிவருவதுபோல, சிவபூஜாவிதியில் இது வழங்கும் வழக்குண்டோ ? புருஷசூக்தத்திற்கு ரிஷிசந்தஸ்தேவதைகள் நாராயணனென்று எந்தவிடத்திற் சொல்லப்பட்டுளதோ வென்னில்; கூறுவேன்.— சதபதப்பிராமணத்தும், பதுமபுராணம் உத்தரகாண்டத்தும் இவ்விவரம் குறிப்பிடப்பெற்றுள்ளதை நன்கு காணலாம்.

இன்னும் பிரமாணம் எடுத்தியம்புவேன்.— கெட்டவொழுக்கமுடைய பாதகரும், புருஷசூக்தத்திற்குப்பொருளாய் விளங்கும் நாராயணனைக்கருத்துடன் செபிப்பானாகில், அவனிடத்திலுள்ள பாபங்களெல்லாம் அகன்றுவிடும். இதனை மனுதருமம் பதினொன்றாமத்தியாயத்திற் காணலாம். பொருளாசையால் அறிவொழுக்கமுடையஅந்தணனைக்கொன்ற மாபாதகனும், திருமால்விஷயமாகிய புருஷசூக்தத்தைத் தனியாகவிருந்துசெபிப்பானேல், அவனிடத்திலுள்ள பாபமெல்லாம் நாசமாய்விடும். இதுவும் மனுதருமத்திற் கண்டதே.

அதருவத்தில் பதினெட்டு பிராயச்சித்தசாந்திகருமங்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன. இந்தச் சாந்திகருமங்களில் திருமாலைக் குறித்துச்செய்யும் சாந்தி சிறப்படையவேண்டுமானும் புருஷசூக்தத்தைப் பாராயணஞ் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டுளது,

திருமாலை மனமகிழ்ச்சியுடன் திருவாராதனை செய்யும்போது புருஷ சூக்தத்திலுள்ள பதினாறு இருக்கினையும் ஜபித்தால் அவை பிரயோஜனமுடையனவாமென்று ஸ்மிருதிகள் கூறும். புருஷசூக்தமும், அதற்கடுத்த அநுவாகமும் நாராயணபரமாகுமென்று கற்பசூக்த முரைக்கின்றது. இங்ஙனஞ்சொல்லப்பட்ட பொருளிற்கேற்ப, கண் கை கால் முகம் ஆயிரமுடைய மஹாபுருஷன் ஒருவனுண்டு; அவனே உலககாரணமாவான்; அரியமுச்திப்பேற்றையருள்பவனும் அவனே; அவனன்றி முக்திப்பேற்றையடைவதற்கு வேறு வழியில்லை என்று புருஷசூக்தம் தெரிவிக்கிறது. இங்குரைக்கப்பெற்ற மஹாபுருஷன் யாவனோவென்றுஐயுறுவண்ணம் உத்தரநாராயணம், அந்தமஹாபுருஷனுக்கு இலக்குமியும் பூமியும் தேவிமாராவா ரென்று நாட்டி, வீடுபேற்றையருள்பவனும் அவனே; அவனன்றி அதனைத்பெறுவதற்கு வேறுமார்க்கமில்லையென்றும் விரித்துரைத்தது. நாராயணாநுவாகமும், முகம் கை கால் ஆயிரமுடைய மஹா புருஷன் நாராயணனேயென நாட்டியது.

---

## ௰-வது, சதாநந்தன் சதாசிவனுக்குப்புருஷசூக்தமுபதேசித்த பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! திருப்பாற்கடல் நடுவில் விளங்கும் வைஜயந்தம் என்ற பருவதத்தில் பிரமதேவன் மிக்கநியமத்துடன் யோகஞ் செய்துகொண்டிருந்தனன். இந்தப்பிரமதேவன் நெற்றியில் தோன்றினவனாகிய சிவன் ஆகாயமார்க்கமாக அந்தப்பருவதத்தில் வந்திறங்கினன். சலிப்பின்றித்தவஞ்செய்கின்ற தன் தந்தையைக் கண்டு பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான். அப்பொழுது பிரமதேவன் தன்றாளில் பணிந்து கிடக்கிற தன் புதல்வனாகிய சிவனைத் தொட்டு; 'மைந்த! எழுந்திரு' என்று இன்னுரைகூறி, யான் உன்னைக்கண்டு பலநாட்களாயின; உன்றன் தியான தவங்களெல்லாம் குறைவின்றியிருக்கின்றனவா ? என்று வினவினன். அதற்குச் சிவன், 'தேவரீருடைய இன்னருளால் தவத்தியானவழிகளினின்றும் வழுவாது நடக்கின்றேன்; இதுநிற்க, ஸத்தியலோகத்தி

னுள்ள மஹாஸபையை விட்டு, ஏகாந்தமாக இங்குவந்து தவஞ் செய்துகொண்டிருக்கின்றீரே; யாரைக்குறித்துத் தவஞ்செய்கின்றீர்; உரைத்தருளவேண்டுமென வேண்டினன்.

மைந்த! ஸத்தியலோகத்திலுள்ள வைராசதமென்ற ஸபையினின்றும் இங்குவந்து பலநாட்களாயின. இந்தச்சோலை சூழப்பெற்றுள்ள மலைக்கு ஒப்பான புனிதமான ஸ்தலம் பிறிதொன்றுமில்லை; யான் இப்பொழுது ஏகாந்தமாக இருந்து தியானிக்கின்ற தியானத்திற்கு விஷயம் புருஷனுவான்; என்றனன். இதனைக் கேட்ட சிவன் எந்தாய்! சிருஷ்டிகாலத்தில் புருஷரனைவரும் உம்மாலன்றே சிருஷ்டிக்கப்பட்டார்கள்; இங்ஙனமிருக்க, புருஷனைக் குறித்துத் தியானிக்கின்றேனென்கிறீரே?; உம்முடைய தியானத்திற்கு விஷயமாயிருக்கின்ற புருஷன் எத்தன்மையினன்? இதனை அடியேற்குத்தெளிவாய் அருளிச்செய்யவேண்டும்; என வேண்டினன்.

அதற்குப் பிரமதேவன், 'மைந்த! நீ இங்குரைத்த புருஷரனைவருக்கும், என்னுலுரைக்கப்பட்ட புருஷன் பிறப்பிடமாவான். மேலும், அந்தப்புருஷன் உன்றனுக்கும், எனக்கும், உலகத்திலுள்ள எல்லாவுயிர்கட்கும் உயிராகி, சகலகல்யாணகுணபூரணனுய், தீயகுணமில்லாதவனுய்; எல்லோருக்குஞ்சாக்ஷியாய், பகவானுய், பரஞ்சுடராய், பராபரனுய்த் திகழ்பவனுவான். அந்த மஹாபுருஷன் செங்கண்மாலேயாவன். இவ்விஷயத்தை நன்கறிவாய்;என்றனன். சிவனும் இம்மொழியைப் பரமோபதேசமாகக் கைக்கொண்டனன். இவ்விவாத்தைப் பாரதத்திலுள்ள மோக்ஷதர்மத்தில் நூற்றெண்பத்தைந்தாமத்தியாயத்திற் காணலாம். சுருதி இதிகாசபுராண முதலியவை இங்ஙனமுரைக்கின்றமையால் புருஷசூக்தம் விஷ்ணுவின் பரமாம் என்பது தெளிவு.

---

## ௫௧-வது, சோமச்சொல்விவரணப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! புருஷசூக்தம் விஷ்ணுவின் பரமென்பதற்குப் பலபிரமாணமெடுத்தியம்பி முடிவுசெய்தேன். இதுநிற்க, சோமத்

தாலே எல்லாமுண்டாகின்றனவென்றும், வேதம் இதனைச்சிறப்பித் துரைத்ததென்றும் கூறினுய். வேதம் சோமக்கொடியையே சோமம் என்று குறிப்பிட்டது. உங்கள் தோகைபாகனுகிய சிவனேதான் சோமமென்ற சொல்றிற்குப் பொருளாவானெனன்பையேல், சோமக் கொடியை உரலிற்போட்டு, உலக்கையாலிடித்து ரசத்தையெடுத்து அருந்தலாகுமென்று வேதமுரைத்தபடி சிவனையும் இங்ஙனஞ் செய்ய லாகுமோ ?

சோமமென்ற கொடியால் தேவரெல்லாம் உண்டானுர்களென்று நீ கூறலாகாது. உற்பத்தி அங்குரைத்ததில்லை. சோமத்தால் தேவர் கள் திருப்தரானுர்களென்று கொண்டாடியதேயன்றி வேறில்லை. மேலும், இதற்குச் சமாதானம் சொல்கிறேன்; கேட்பாய்.— யாகத் தில் ஆகுதி செய்யப்பட்ட பொருளை அக்கினிதேவன் சூரியனிடத்திற் சேர்ப்பான். சூரியன் அதனைச் சந்திரனிடத்தில் அடைவிப்பான். சந்திரன் அதனைப்பெற்று எல்லாத் தேவர்களும் திருப்தியடையும்படி செய்வான். இவ்விவரத்தை வைகானசசூத்திரத்திற் காணலாம். சோமம் என்ற சொல் சிவனைக்குறித்திடுமென்பையேல், அது சந்திர னையுங்குறிப்பிடுமென்றுல் நீயும் அதற்குச் சம்மதிக்கவேண்டும். உண்மையாதென்பையேல், சோமமென்பது சோமக்கொடியையேயா மென்றுணர்வாயாக. இன்னும் சோமம் என்ற சொல் சிவனைக்குறித் திடாதென்பதற்கு ஒன்று கூறுவேன். அந்தணர்கள் வேதாத்யயனஞ் செய்கிறவிடத்தில் சோமமென்ற சொல் சோமக்கொடியைத்தவிர வேறுபொருள் உணர்த்துமென்று மறுத்து அத்யயனஞ் செய்வதில்லை. இதனையறிவாயாக.

---

## ௫௨-வது உம்பர்கோனுருத்திரவன்னித்தலையைத்துணித்த பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! எசுர்வேதம் ஐந்தாம்காண்டம் முதற்பருச்சத் தில் யாகத்தின்றலை வில்லால் அறுப்புண்டது என்று சொல்லப்பட்

டுளது. ஈண்டு யாகத்தின்றலை யென்றது திருமால் தலையாம். திருமால் யாகசொரூபமன்றோ! என்று வாய்வந்தபடி கூறினாய். யாக கர்மம் செய்த அளவில் உருத்திரன் முன்னிழந்த சிரசைப்பெறுவானென்று எசுர்வேதம் முதற்பருச்சத்தில் சொல்லப்பட்டது. இதனால் உருத்திரன் தன்சிரசைத்தானே துணித்துக்கொண்டானென்று கொள்வதற்கிடமுண்டு. உருத்திராக்கினியாகிய புருஷன் வில் வளைத்து நின்றபோது இந்திரன் கரையானாகவந்து நாணையறுத்தான். அப்பொழுது உருத்திராக்கினியின் சிரம் துணியுண்டதென்று அந்த எசுர்வேதமந்திரமே சாற்றுகிறது. இங்ஙனம் இம்மந்திரம் தெளிவாக வெளியிட்டிருப்பதை முன்பின்னாராயாமற் கூறினாய். மனமாச்சர்யமுடையவர்கள் ஒன்றைமற்றொன்றாகமாற்றிக்கூறுவது இயல்பன்றோ!

---

## ௰ரு-வது, சிவன் கங்காதரனான பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! நீ வெற்றியடைவதற்காக அர்ச்சுனன் கண்ணபிரானை நோக்கிச் செய்த பூஜையானது சிவனைச் சார்ந்தபடியால் சிவனே பராபரனென்றிசைத்தாய். மரத்தினடியிற் பெய்தநீரானது கிளைகளெங்குஞ்சென்று தழைப்பிக்குமன்றே. மரத்தின் ஸ்தானம் திருமாலும், கிளையின் ஸ்தானம் சிவனுமென்று எசுர்வேதத்திற் சொல்லப்பட்டுளது. கேசவனைச் சிவன் யாகத்தால் ஆராதனை செய்தானென்று முன்னருஞ்சொன்னேன். திரிவிக்ரமனாகிய திருமாலின் திருவடியினின்று முண்டாகிய கங்கையைச்சிவன் சிரசாக வகித்தது போல, அர்ச்சுனன் கண்ணபிரான் திருவடியிற் சாத்திய மலரைச் சிவன் தன் சிரத்திற்கொண்டான். இவ்விருவரில் எவன் பெரியவன்? எவன் சிறியவன்? என்பதை நன்கறியலாமன்றே.

மற்றத் தேவர்களை நோக்கிச் செய்யும் ஆராதனையனைத்தும் திருமாலையே சென்றடையுமென்ற முறையைக் கேட்பாய். எசுர்வேதத்தில் தேவரெல்லாம் திருமாலின் சரீரமென்று சொல்லப்பட்டது. சரீரத்துக்குச் செய்யுமவையெல்லாம் சரீரியாகிய ஆத்மாவைச் சென்றடையுமன்றே! இங்ஙனமுரைத்த வேதத்திற்கேற்ப, அருவாயும்

உருவாயும் எல்லாவிடத்தும் எக்காலத்துமிருக்கும் பொருள்களெல்லாம் திருமாலின் சரீரங்களாகுமென்று பராசரர் இயற்றிய புராணம் சாற்றுகிறது. அக்கினியையும் பிதுர்தேவதைகளையும் தேவர்களையும் மனமுவந்து பூஜைசெய்கின்றவர்கள் எவரோ, அவர்கள் எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாய் விளங்குகின்ற திருமாலை உகப்பித்தவராவாரென்று மனுதருமத்தில் வழங்கப்பட்டுளது.

ஒப்புயர்வற்ற விஷ்ணுவே, உலகவியாபகனாய், எல்லாப்பொருள்களுமாய், அவ்வியகவ்வியங்களுமாய் விளங்குகிறானென்று மனுதருமத்திற் கூறியபடி சிராத்தஞ்செய்கின்ற காலத்தில் எவரும் அநுஷ்டிக்கின்றார்களன்றே. அருச்சுனன்றன் தேருக்குப் பாகனாயிருந்த கண்ணபிரான் பார்த்தனை நோக்கி, 'எல்லாத்தேவர்களும் எனக்குச் சரீரமாவார்கள்; அவர்களிடத்திற் பக்தியை விளைப்பவனும் யானே, அவர்தம்வடிவங்களில் பூவின் மணம்போலபுக்கிருந்து பூஜைகொள்பவனும் யானே; மற்றத்தேவர்கட்கு அந்தராத்மாவாயிருந்து யான் கொடுக்கும்பலம் அற்பமாகும்; என்னைநேராக ஆராதனை செய்வார்க்கு அழியாத பதவியைக்கொடுப்பேன்; ஆதலால் என்னை உள்ளபடியறிவார் முத்திப்பேற்றைப் பெறுவார்கள்' என்றருளிச்செய்தான்.

---

## ௫௪-வது, இராசததாமதபுராணஜாதிகள் கற்பிதமென்ற பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! விஷ்ணுவானவன் க்ஷத்திரிய குலத்தினனென்றும், பிரமதேவன் வைசியகுலத்தினனென்றும், இந்திரன் சூத்திரகுலத்தினனென்றும், சிவன் மாத்திரம் பிராமணவகுப்பினனென்றும் மெய்போலப்பிதற்றினாய். நீலகண்டனாகிய சிவன் பிராமணன் என்றுசொல்லுகிற பிரபதப்பெயர்மந்திரமே பிரமதேவனுக்குச் சிவன் புதல்வனானவனென்று சொல்லியது. தந்தை வைசியனானால் தனயன் (புதல்வன்) பிராமணனானதெங்ஙனம்? இஃதோர்புறமிருக்க, தேவருக்குள் ஆங்கிரசன் அந்தணனென்றும், அதிதிபுதல்வர்கள் க்ஷத்திரியகுலமென்றும், மருத்துவர்கள் வணிக

குலமென்றும், மருத்துவருக்குப்பதியாயிருக்கும் அச்வினிதேவதைகள் சூத்திரகுலமென்றும் ஜாதிநிலைமைகளை மகாபாரதம் இவ்வாறு பகர்ந்தது. செங்கண்மாலையும், பிரமதேவனையும் இன்னகுலத்தினரென்று வகுத்தோதவில்லை. மருத்துவர்கள் வணிககுலமாதலால், அவர்களுக்குள் ஒருவனான சிவனை அந்தணன் என்று சொல்வது எப்படி ?

சிவனைப் பிராமணனென்றுரைத்த கந்தபுராணமுதலிய நூல்கள் இராஜசதாமதநூல்களாதலால், அவை பிரமாணமாகமாட்டா. பிரபத மந்திரத்தில் சிவனைப் பிராமணனென்றது பிரமஞானமுடையவனென்பது பற்றியேயாம்,

---

## ௯௩-வது பரமவைதிகதேவசாதுர்வருணவிவரணப்பரிச்சேதம்

பரப்பிரமத்தைச் சிவனறிந்த முறையை முன்னரே தெரிவித்தேன். இனித்திருமாலே பிராமணன் என்பதைத் தெளிவாயெடுத்துரைப்பேன். அதருவவேதம் திருவின்கேள்வனாகிய இறைவனே பிராமணனென்றெடுத்தோதியது. இங்ஙனமுரைத்த வேதப்பொருளிற்கேற்ப, பாரதத்தில் அசுவமேதம் செய்கிற சமயத்தில் எல்லா மஹாஜனங்களும் கண்ணபிரானை வணங்கி, ‘இவனே பிராமண தெய்வமாவான்’ என்று கொண்டாடினார்கள். பாரதத்திலுள்ள சப்தமுனி சம்வாதத்தில் நாராயணனே பிராமணனாவானென்று சொல்லப்பட்டுளது. விஷ்ணுஸஹஸ்ரநாமத்திலும் திருமாலே பிராமணனென்றிசைத்ததையுங் காணலாம். பாராசர்யசிற்பநூல்முதலியவை, விமானத்தினியல்புரைக்குமிடத்தில் திருமால் அந்தணனென்றும், பிரமன் க்ஷத்திரியனென்றும், சிவன் வைசியனென்றும் உரைத்தன.

---

## ௯௪-வது, சிவனை வேள்விப்புறம்பாகச்செய்த பரிச்சேதம்

ஆகமப்பாவாய்! எசுர்வேதம் முதற்காண்டம் மூன்றும்பருச்சம் இறுதிஅநுவாகத்திற் சிவனை வேள்விப்பதியென்று சொல்லப்பட்ட

தென்றுரைத்தாய். அந்த மந்திரத்திலுள்ள உண்மைப்பொருளைக் கேட்பாய். எசுர்வேதம் இரண்டாம்காண்டத்தில் உங்கள் நக்கனாகிய சிவன் அபிசாரவேள்விப்பதியாவானென்றுரைக்கப்பெற்றுளதால், அந்தச்சிவன் எல்லாவேள்விகட்கும் பதியாகான். சோதிஷ்டோம முதலியவைகளில் எல்லாத்தேவர்களும் அவிர்ப்பாகம் பெறுதற்குரியவரென்று சொல்லியதுபோலச்சிவனும் அதனைப்பெறுதற்குரியவனென்று சொல்லவில்லை. மேலும் தேவர்கள் முன்பு வேள்வியையழித்தவனென்று சிவனை வேள்விக்குப்புறம்பாக்கி, 'உச்சிஷ்டபாகத்தை உண்ணக்கடவாய்' என்றுரைத்தனர். இதனை எசுர்வேதம் ஆறும் காண்டத்திற் காணலாம். இஃதல்லாமலும், அந்தக்காண்டத்தில் ருத்திரமந்திரம் சொன்னால் அதற்குப் பரிகாரமாக மற்றோர் மந்திரம் சொல்லும்படி விதிக்கப்பட்டுளது. சாதுர்மாசியகர்மங்கள் செய்கிற காலத்தில் சிவன் பார்க்காதிருக்கவேண்டுமென்று நீரினால் காப்புச் செய்கிறார்கள். சிறந்த சுபகர்மச்சடங்கில் அசுரர்மந்திரத்தையும், சிவமந்திரத்தையும், பிதுரர்மந்திரத்தையும் சொல்லியவிடத்தும், நிலத்தையகழ்தல், உடலைத்தொடுதல், பெருமூச்சுவிடுதல் முதலிய காரியத்தைச்செய்தபோதும் இவற்றிற்குப் பரிகாரமாகப் பரிசுத்தியின் பொருட்டு நீரைப்பரிசிப்பது கடமையாகும் என்று ஆப்பஸ்தம்பம், வைகானசம், போதாயனம், காத்யாயனம், வாச்சிலாயனம் என்ற நூல்கள் முறையிடுகின்றன.

---

### ௰௪-வது, சிவசாமானியதுதி பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! இருக்குவேதம் ஐந்தாம்காண்டம் ஐந்தாம்பருச்சம் இறுதியநுவாகத்தில் பீதாம்பரதாரியாகிய விஷ்ணுவாகிய பெரிய விருக்ஷத்திற்குச் சிவன் கிளைபோன்றவனாவானென்று சொல்லப்பட்டுளது. குற்றமற்ற வேள்விகள் செய்து திருமால் அருள்பெற்றுயர்ந்தார்களென்றும், திருமாலையே பதியாகக்கொண்டு சகலவேள்விகளையுஞ்செய்து சிறப்புற்றார்களென்றும் பாரதத்திலுள்ள இராஜதருமம் பகராநிற்கும். திருமாலே வேள்விநாயகனாயிருக்க அவனைவிட்டுச் சிவனை வேள்விநாயகனென்றால் மறையினையோதிய நல்லோர்கட்கெல்லாம் நகையை விளைவிக்குமன்றே.

நாராயணனே வேள்விக்கு நாயகனுவானென்பதற்குத் திருஷ்டாந்தமாகச் சிவன் வேள்வியினுல் ஆராதித்தானென்பதை உரைத்தேன். புருஷசூக்தத்தில் நான்முகன் யாகஞ்செய்து சிருஷ்டித் தொழிலைக் கற்றமுறையுஞ் சொல்லப்பட்டுளதென்பதையும் உரைத்தேன். பிரமன் சிவன் இந்திரன் தேவர்கள் அசுரர்கள் இராக்கதர்கள் என்ற இவர்களைக் குறித்துச் செய்யும் வேள்விகளில் அவ்ய கவ்யமனைத்தும் திருமாலையே வந்தடையுமென்று நாரதீயம்நவின்றது. என்னுல் படைக்கப்பட்ட நான்முகன் என்னைக்குறித்துப் பரிவுடன் பலயாகங்கள் செய்து, அதனுல் பிரமப்பட்டம்பெற்று ஜகத்குருவாய் வாழ்கின்றுனென்று திருமால் அருளிச்செய்தான். இதனைப்பராசர ஸ்மிருதியிற்காணலாம். பிரமன் சிவன் இந்திரன் முனிவர் முதலானவரெல்லாம் திருமாலை மிக்க அன்பினுல் ஆராதனைசெய்து தத்தமக்குரிய பதவியையடைந்தார்களென்று நாரசிங்கபுராணம் நவின்றது.

புண்ணியதீர்த்தமாடுதல் முதலிய ஸத்கர்மங்களைச் செய்யும் பொழுது திருமாலைத் தியானஞ்செய்வரேல், அவர் பிறப்பிறப்பற்றுச் சிறந்த பரமபதத்திலிருந்து நித்யானந்தமடைவார்களென்று தக்ஷ ஸ்மிருதி உரையாநின்றது. எசுர்வேதத்திலுள்ள சதவுருத்திரியத்தில் சிவனின் மிக்கார் ஒருவருமில்லையென்றுரைக்கப்பட்டுளதேயென்றிசைத்தாய். இதற்குச் சமாதானம் உரைப்பேன்.— வருணன், அக்கினி, வாயு முதலான தேவர்களை வேதங்கொண்டாடியதுபோல உங்கள் சிவனையுங் கொண்டாடியதேயன்றி வேறில்லை. இதனை அர்த்தவாதமென்றறிவாய். முன்பும் இவ்விஷயத்தையறிவித்தேன்.

---

## ௰௮-வது, திருவிழாப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! உலகிலுள்ள திருப்பதிகளில், எங்கள் சிவபிரானுக்கு முதற்றிருவிழாவும், முதற்சம்பாவனையுஞ் செய்கின்றனர்; இவ்வாறு இதரதெய்வங்கட்குச் செய்வதில்லையாதலால் சிவனேபரனுவானென்றிசைத்தாய். இந்தக்காரணங்களால் உங்கள் உமைபங்கனுக்குப் பரத்துவத்தைச் சாதிக்கமுடியாது. இதனை விவரமாகக் கூறுவேன்.—

திருப்பதிகளில் முன்பு முக்கண்ணனுக்குச் சம்பாவனை செய்யா விட்டால், அந்தக் கிராமத்தில் மிகவும் பீடைகளுண்டாகும். அந்தப் பீடாபரிகார்த்தமாக முக்கண்ணனுக்கு வெகுமானஞ்செய்யவேண்டு மென்று அகண்டதெரிசனமென்ற நூல் அறையாநிற்கும். திருமாலிற்குத் திருவிழா நடத்துகிற காலத்தில் உக்கிரதேவதை களின் சாந்தி முன்னர்ச்செய்யவேண்டும். அந்த உக்கிரதெய்வங்க ளுள் முதன்மைபெற்றவன் உருத்திரனன்றோ! அதனால் இவனுக்கு முதற்சாந்தி செய்யத்தக்கது; என்று அகண்டதெரிசனமும், வைகான சாஸ்திரமும் உரையாநின்றன. இங்ஙனம் கூறியதற்குப் பொருத்த மாக உலகதிருஷ்டாந்தம் உரைப்பேன்.— உங்கள் சிவனுக்குத் திரு விழாச்செய்வதற்கு முன்னரே பத்திரகாளிக்குச் சாந்திபுரிகின்று ரன்றோ! அதனால் அந்தப் பத்திரகாளிக்கும் பரத்துவஞ் சாதித்து விடலாகுமோ ? திருமாலே எல்லாத்தேவர்கட்கும் பெரியோனையும், பரதத்துவப்பொருளாயுமிருக்கின்றானென்பதுபற்றி உலகினர் அவ னுக்கு முதற்சம்பாவனை செய்வார்களென்பதற்குப் பலபிரமாணம் எடுத்தியம்புவேன்.

---

## ௰கூ-வது, ஆத்துமநாயகத்துவப் பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! அநுட்டுப்பைக்காட்டிலும் சிறந்த சந்தமில்லை; அசுவமேதத்தைக்காட்டிலும் சிறந்தயாகமில்லை; காமதேனுவைக் காட்டிலும் சிறந்தபசுஇல்லை; திருமாலைக்காட்டிலும் சிறந்த தேவர் கள் ஒருவருமில்லையென்றுசாமவேதம் நமகப்பிராமணம் இருப்பதாரு மத்தியாயத்திற் சொல்லப்பட்டுளது. அக்கினிதேவன் தாழ்ந்தவன்; தேவர்கள் மத்தியமர்; எங்கும் பரிபூரணனாய் விளங்கும் திருமாலே உயர்ந்தோன்; இவனின் மிக்காரொருவருமில்லை; என்று ஐதரேய பிராமண மஹோபநிடதமும், இருக்குவேதம் பிராமணத்தின் முதற் பஞ்சிகையும், இருக்குவேதம் ஐந்தாங்காண்டம் ஐந்தாம்பருச்சம் முதலநுவாகமும் தேவகானத்தால் விளங்கும் சாமவேதமும்முறையிடு கின்றன.

இவை ஒருபுறமிருக்க, பூமிக்கு அதிபதி அக்கினி; நக்ஷத்திரங்கட்குச் சந்திரன் அதிபதியாவான்; பகலுக்குச் சூரியன் அதிபதி; தேவர்கட்கு இந்திரன் அதிபதியாவன், நீருக்கதிபதி வருணன்; வாயு ஆகாயத்திற்கதிபதி; வணிகர்குலத்திற்குக் குபேரன் அதிபதியாவான்; சுப்ரமண்யன் தேவசேனைகட்கதிபதி; பிரேதங்கட்கதிபதி எமன்; சிவன் பூதங்கட்கதிபதியாவன்; பிரமதேவன் உலகங்கட்கு அதிபதி; எல்லாச் சேதனுசேதனங்கட்கும் அதிபதியாய் விளங்குகின்றவன் நாராயணனேயென்று உக்கிரச்சிரமாம் சடங்கோமத்திற் சொல்லப்பட்டுளது. அப்பிராகிருதவடிவும் எங்கும்நிறைந்திருக்கும் இயல்பும், புகழ் வீர்ய முதலிய குணங்களுமுடையனுய், பிரமதேவன் முதலிய பெரியோர்கட்கெல்லாம் பெரியோனுய், அருள் குடியிருக்கும் கண்களையுடையனுய் திருமால் விளங்காநின்றுனென்று வேதப்பொருளைப்பின்பற்றிச்செல்லும் வாமனபுராணம் வகுத்துரைத்தது.

வேதசாஸ்திரமாகிய பெரியகடையிற் சிறந்த அறிவுடையோர் உட்புகுந்து தேவகி புதல்வனுகிய ரத்னத்தைத் தெரிந்தெடுப்பார்கள். ஞானமாகிய கையில்லாதவர்கள், புல்லிய தேவர்களாகிய பரற்கல்லைச் சோதித்தெடுப்பார்கள்; என்று பரத்வாச ஸ்மிருதி பகராநின்றது. நாராயணன்றன் மகிமையைக் கோடிக்கூறிட்டு, அதிலொன்றை அநந்தங்கூறிட்டு, அதிலொன்றைக் கோடிக்கூறிடினும் அதற்குப் பிரமன் சிவன் முதலானவர்கள் ஒப்பாகமாட்டார்களென்று நாரதீயம் நவின்றது.

சகலலோகங்களையும் ஒருதட்டிலும், அதற்குச்சமமாக கண்ணபிரானை ஒருதட்டிலும் வைத்துத் தூக்கினல் கண்ணபிரானை வைத்த தட்டே கனத்திருக்குமென்பதில் ஐயமில்லையென்றும், பூதங்கட்கும் உருத்திரர்கட்கும் சூரியர்க்கும் வேதங்கட்கும் வசுக்களுக்கும் தேவர்கட்கும் கடலுக்கும் காலத்திற்கும் உலகத்திலுள்ள பல்வேறுபேதவுயிர்கட்கும் மற்றுமனைத்துக்கும் திருமாலேபதியாவானென்றும், பிராமணர்கட்கு வேதமும் அக்கினியும் தெய்வங்களாம். மற்றச்சாதியார்கட்குப் பிராமணர் பேசுந்தெய்வமாவர். பெண்கட்குக் கணவன்மார்களே தெய்வம். உயர்ந்தோரனைவருக்கும் தேவர்கட்கும் திருமாலே

தெய்வமாவானென்றும், இந்தத்திருமாலைக் காட்டிலும் சிறந்தோன் இறந்தகாலத்திலும் எதிர்காலத்திலும் நிகழ்காலத்திலுமில்லையென்றும் பாரதம் பகராநிற்கும். ஆதலால் வேதங்களால் புகழப்பெற்ற நாராயணனைக்காட்டிலும் அதிகரானவர் எவருமில்லை.

---

உ௯-வது, முதற்சம்பாவனை முகுந்தனுக்கென்ற பரிச்சேதம்.

ஆகமமடந்தாய்! நாராயணனே பரத்துவப்பொருளாவானென்றறிந்து, அவன்றனக்கே முதற்சம்பாவனை செய்வார்களென்ற முறையைக் கேட்பாயாக.— எசுர்வேதசாகையிலும் திருமாலுக்கே முதற்சம்பாவனையுள்ளதென்று குறிப்பிடப்பட்டுளது. இந்தவேதப்பொருளிற்கேகப, தர்மபுத்திரர்ராஜசூயயாகஞ்செய்துமுடித்தபோது, ஆங்கு முனிகணங்களும் இராஜாக்களும் மந்திரி முதலானவர்களும் குழுமியிருந்தனர். அந்தமஹாசபையில் தர்மபுத்திரர், 'இங்கு முதற்சம்பாவனை பெறுதற்குரியார் யாவர்?' என்று வினவினர், அப்பொழுது பீஷ்மாசார்யர், 'தர்மபுத்திர! பிரமதேவன் சிவன் முதலானவர்களால் துதிக்கப்பெற்ற நாராயணனே பூபாரம் தீர்ப்பதற்காகத் திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்வதினின்றும் நீங்கி, இப்புவியில் வசுதேவற்குப் புதல்வனாக வந்தவதரித்தான். அப்பெரியான் இங்கு வீற்றிருக்கிறான்; இவனிற் பெரியாருண்டோ? ஆதலால் இவனுக்கே முதற்சம்பாவனை செய்வாய்' என்றனர், தர்மபுத்திரரும் அவ்வாறே செய்தனர். இதனைப் பாரதம் சபாபருவத்திற் காணலாம். மேலும், சகாதேவன் அந்த இராஜசூயயாகத்திற் கூடியிருந்த கூட்டத்தினர் நன்கறியும்படி, 'இந்தக்கண்ணபிரானே தேவர்க்கெல்லாம் தேவனாவான்; ஆதலால் இவனே முதற்சம்பாவனை பெறுதற்குரியவன்; இவனையொழிய வேறொருவர் பெறுதற்குரியர் என்பரேல், அவர்கள் தலையில் என்காலை வைப்பேன்' என்றுறுதி கூறினன். அப்பொழுது தேவர்கள் மலர்மாரிபெய்தனர். நாராயணனே பரம்பொருளாவானென்று இவ்வுலகினர் தெளிவதற்கு இவ்விருத்தாந்தம் சான்றாக நிலவுமன்றே!

ரு-வது, சகலவேள்விப்பதி நிருணயப் படலம்,

முற்றும்.

## ௬-வது, சித்தாந்தப் படலம்.

—):(—

### க-வது, நாராயணனையே அனந்தவேதங்களும் பரத்துவங்காட்டுகின்ற பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! இத்துணையுங்கூறியதனால் நன்கறிந்திருப்பாய். வேதப்பொருளைமேற்கொண்டு சிவனுக்குப் பரத்துவங்கூறி வெற்றி கொள்ள உன்னாலாகாது. பரவஸ்து இன்னதென்று நிலைநாட்டுவதற்குச் சைவாகமப் பிரமாணங்களைக் கைக்கொள்ளலாகாதென்பதை முன்னரே தெளிவாய்ச்சொன்னேன் என்றனள்; இதனைக்கேட்ட ஆகமவல்லி சொல்லத்தொடங்கினள்:—

ஆரணப்பாவாய்! நீ எவையோ ஒருசிலபிரமாணங்களால் அரியே பரதேவதையென்று நிரூபித்தாய். வேதங்களோ அநந்தம். அண்டங்களும் அப்படியே. 'அநந்தவேதங்களையும், அநந்தஅண்டங்களில் நிகழ்கிற ப்ரமாணங்களையும் அறிந்துளேன்' என்பையேல் உன்னறியாமை வெளியாகும். இதுநிற்க, வேதம் அநந்தமென்பதையும், அண்டமநந்தமென்ற உண்மையையும் நீ யறிந்திருப்பையானால், அறியார் கூறுவதுபோல ஒருசார்புபற்றித் திருமாலே பரனெனக் கூறியிருக்கமாட்டாய். மேலும், நீ இதுவரையும் உரைத்த நான்குவேதங்களில் நாராயணன்றான்பரதேவதையென்று குறிப்பிடப்பெற்றுளதென்றால், இன்னும் காணப்படாத எத்துணையோ வேதங்களில் எவரைப்பரனென்று குறிப்பிடப்பெற்றுளதோ? தெரியாது. அதனால் பரதத்துவத்தைக் கண்டவர் யார்? என்றனள்.

இதனைக்கேட்ட ஆரணவல்லி சொல்லத்தொடங்கினள்.— ஆகமநங்காய்! அறியப்பட்ட வேதங்களிற் கூறிய விஷயங்கட்குப் புறம்பாக, அறியப்படாத வேதங்களிற்கூறியிருக்குமென்று கருதுகின்றாய். பால் சுவையுடையதாய் இருக்குமென்றால், திருப்பாற்கடலின்பாலும், வேறு தேசாந்திர காலாந்தரங்களிலுள்ள பாலும் சுவையுடையதாய்த் தானேயிருத்தல்வேண்டும். கோ (பசு) த்வதர்மமுடைய கோவினைக்

கண்டால், காணப்படாத தேசாந்தரங்களிலுள்ள கோவுக்கும் அந்தக் கோத்வதர்மமுண்டென்றுகொள்வதுபோல, காணப்பட்ட வேதத்வ தர்மமுடைய வேதத்தில் அரியே பரனென்றுரைத்திருக்கக்கண்டால், காணப்படாத வேதத்வதர்மமுடைய வேதத்திலும் அங்ஙனமே அரியே பரனென்றுதானே உரைத்திருக்கவேண்டும். இதுவிஷயத்தில் நீ சந்தேகப்படுவது வியப்பாக விருக்கிறது. நாராயணனை அநந்த வேதங்களும் போற்றி, அவனே பரதேவதை என்று நிச்சயித்திருப்பதற்குப் பலபிரமாணங் கூறுவேன்.—

எல்லாவுலகங்கட்கும் நியந்தாவாய் விளங்கும் முழுமுதற்பொருள் நாராயணனேயென்று அநந்தவேதங்களும் நிலைநாட்டின என்பதை எசுர்வேதம் மூன்றும் பருச்சம் பதினொன்றும் அநுவாகத்திற் காணலாம். இந்தவேதப்பொருளிற்கிசைய, பிரமதேவனிடத்தில் மதுகைடபர்கள், வேதங்களை அபகரித்துச் சென்றபோது, நான்முகன் மனத் தளர்வுற்றுத் திருமாலைத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினன். 'இறைவ! உன்னை அநந்தவேதங்களுமன்றோ போற்றுகின்றன' என்றுரைத்தனன். அநந்தவேதங்களாலும் 'பரனே' என்று துதிக்கப் படும் பெற்றியினன் நாராயணனே யென்று பாரதத்திலுள்ள மோக்ஷ தர்மத்தில் நூற்றெழுபத்துஒன்காமத்தியாயத்திற் குறிப்பிடப்பெற்றுளது. இஃதொருபுறமிருக்க, வீரனாகிய அர்ச்சுனன்றன் மனந் தெளிவடைய கண்ணபிரான் அவனை நோக்கி, 'எல்லாவேதங்களாலும் அறியப்படும் பரதேவதையானே' என்றிசைத்தனன். இதனை, பகவத்கீதை பதினைந்தாம் அத்தியாயத்திற் காணலாமே. எல்லா வேதங்களாலும் துதிக்கப்படும் பரதேவதை நாராயணனேயென்று ஸ்ரீராமாயணமும், மஹாபாரதமும் நிலைநாட்டின.

வைசம்பாயனர் ஜனமேஜயனை நோக்கி, 'வேதங்களின் முதல் இடை கடைகளாலும் கொண்டாடப்படும் பரதேவதை நாராயணனே என்பதை யறிவாய்' என்றுரைத்தனர். வேதங்களிலுள்ள அக்ஷரங்கள் எத்தனையுண்டோ அத்தனையும் திருமால் திருநாமமே என்பதற்கு உலக திருஷ்டாந்தமாக அந்தணாளர் நாடோறும் நடுப்பகலில் சந்தியா வந்தனத்திலுரைக்கின்றனரன்றோ! இதனை வேதமறியார் உணரா

ரன்றே. எல்லாவேதங்களும் திருமாலே பரனென்றுரைக்குமென்று கூறியபலநூல்களையும் இங்குரைக்கில் விரியும்.

நிற்க, பலகோடி அண்டங்கள் உண்டென்றனையே, அந்த அநந்த அண்டங்கட்கும் இறைவன் திருமாலே என்றுரைக்கும் உண்மையை இங்கெடுத்துரைப்பேன்.

---

### உ-வது, அண்டோற்பத்திப் பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! உலகங்களெல்லாம் நான்குகூற்றில் ஒருகூறாக விளங்கும். மோக்ஷலோகமாகிய பரமபதம் மூன்றுகூறாகத்திகழும். இந்த இரண்டுவிபூதியிலுள்ள எல்லாப்பொருள்கட்கும் உள்ளும்புறம்புமாக நிறைந்து விளங்குகின்றவன் நாராயணனே என்று புருஷசூக்தம் தெளிவாக எடுத்திசைக்கிறது.

திருமாலின் மாயையாகிய மூலப்பிரகிருதியில் எண்ணித்தொலையாத அண்டமெல்லாம் அவன்றன் சங்கற்பத்தால் நீரில் எழுங்குமிழி போலத்தோன்றும். ஒருவித்தில் ஒருமரந்தோன்றி, அதினின்றும் பலவித்துக்களுண்டாகி, அவ்வித்துக்களெல்லாம் பலமரங்களாகத் தோன்றுவது போலவும், காற்றின் விசையாற்றுக்கப்பட்டு அதனால் உண்டாகின்ற நீர்த்திவலைக்கூட்டங்கள் போலவும் திருமாலின் சங்கற்பத்தால் கணக்கிடமுடியாத பலவண்டங்கள் உற்பத்தியாகும். அண்டகோடிக்கும், ஜீவகோடிக்கும் திருமாலே ஆதாரமாய் விளங்குவான்.

மைத்திரேயர்க்குப் பராசரர் விரித்துரைத்த விஷ்ணுபுராணம் இரண்டாம் அஞ்சகம் ஏழாம் அத்தியாயத்தில் அண்டோற்பத்தி முறை தெளிவாக ஓதப்பெற்றுளது. கண்ணபிரான் மகிமையை உணராமல் அவன் மேய்த்துக்கொண்டிருந்த பசுக்களை மறைத்துவைத்த பிரமதேவன், பின்னர்த் தான் செய்த செயலை நினைத்து வருந்தி கண்ணபிரான் திருவடியை வணங்கி நின்று, 'சூரியகிரணந்தாக்கிய சாளரத்தில் (சன்னலில்) தோன்றும் அணுக்கூட்டங்களைப்போல உன்னுடைய திருமேனியில் உரோமக்கூபங்கடோறும் உற்பத்தியாகி

விளங்குகின்ற எண்ணற்ற அண்டங்களில் ஒரு அண்டத்தில் வசிக்கும் எண்சாணுடம்புடைய யானோ மறைமுடிவுகாணுத உன் மகிமையை மதித்துத் துதிக்கும் சக்தியுடையனுவேனென்று போற்றினன். இதனைப் பாகவதம் பத்தாம்ஸ்கந்தம் பதினேழாமத்தியாயத்திற் காணலாம். கணக்கற்ற அண்டமெல்லாம் நாராயணனிடத்திலே தங்கியிருக்கின்றன என்பதை விசுவரூபமுரைத்தவிடத்தில் விரித்துரைத்தேன்.

ஆகமமாதுநல்லாய்! அண்டங்கள் அநந்தமுண்டென்று நீ கூறியது உண்மையே. இந்த அண்டங்கள் உருத்திராண்டம் பிரமாண்டம் கருடாண்டம் முதலிய பலபெயர்களால் வழங்கப்பெறும். இவ்வாறு அவ்வண்டங்கள் வழங்கப்பெற்றாலும், அப்பெயருடையவர்கள் அவ்வவ்வண்டங்கட்கு அதிகாரியாகமாட்டார்கள். ஒவ்வொருநகரத்திற்கும் அதிகாரிகள் வெவ்வேருகவிருந்தாலும் எல்லாநகரங்கட்கும் அதிபதியாயிருக்கும் சக்கரவர்த்தியைப்போல, பலவர்க்கமாய் எண்ணப்பட்ட அண்டங்கட்கெல்லாம் அதிபதியாயிருப்பவன் ஆழியங்கையனுகிய அச்சுதனேயாவன். இங்ஙனஞ் சொல்லியதற்குத் திருஷ்டாந்தம் உரைப்பேன். இந்த அண்டமானது பிரமாண்டமெனப்பெயர்பெற்றாலும், இதற்கும் நாராயணனே பதியாயிருப்பது போலப் பலகோடி அண்டங்கட்கும் நாராயணனே பதியாவானென்று தெளிவாய்.

---

## ரு-வது, சம்மதப் பரிச்சேதம்.

ஆகமப்பாவாய்! இதுவரையும் நீ கேட்ட கேள்விகட்குப் பொருத்தமாகப் பலபிரமாணமெடுத்தியம்பினேன். அதனால் திருமாலே பரனுவானென்பதை நன்கறிவாய். இன்னும் திருமாலே பரனுவானென்பதற்கு வைதிகப்பிரமாணம் பலவுள. அவற்றையெல்லாம் ஈண்டெடுத்துரைப்பின் அளவின்றி விரியும். நாராயணன் சங்கரனுயிர்க்குயிராயிருந்து திரிபுரத்தை எரித்ததும், ஹாலஹாலவிஷத்தையுண்டதும் அவன்றன் லீலையாகும். திருமால் அவதரித்தது

கர்மத்தாலன்று. இச்சையால் அவதரிக்கிறான். அவன்றன் திருமேனி ஒளிமயமாகிய அப்பிராகிருதமே. திருமால் வந்தவதரித்துச் சிவன் தயரதன் முதலானவர்களை வணங்கிய செயலெல்லாம் வரபாலனத்தின் பொருட்டும், அசுரமோகன நிமித்தமுமாம். மேலும், இச்செயல் மானிடனாய் வந்து பிறந்ததற்கும் ஏற்றதாகுமன்றே. பிரமன் சிவன் முதலானவர்கள் சாபத்துவக்கும், கர்மசம்பந்தமுமுடையவராவர். நாபீகமலத்தில் உலகையீன்ற நாராயணனே பிரமருத்திராதியர்களின் ஆபத்துக்குத் துணையாயிருப்பான்.

சிவன் தேவர் முதலானவர்களைத்தியானித்து அவர்கள்பாற் பெறும் பதவி அழிவுடையதாகும். சிவனே பரனென்று சிவபரமாய்ப்பேசுகின்ற நூல்களெல்லாம் வேதவிரோதங்களாம். அருமையுடையமுக்திப்பேற்றை எல்லோருமடையாதிருக்கவேண்டுமென்று ஆகமமுதலான விரிவாகிய நூல்களைச் சிவன் முனிவர் முதலானவர்கள் கலிகாலத்தில் ஓதிவைத்தார்கள். திருமாலைத்திருவாராதனைபுரிவார் இந்த மோகனநூலைக் கையாளமாட்டார்கள். திருமாலின் திருவாராதனை வேதியர்க்குரியது. திருமாலின் தீர்த்தப்ரசாதஸ்வீகாரமும், சங்க சக்கரதாரணமும், திருமண்காப்பணிதலும் முக்திக்குச்சாதனங்களாம். நாராயணனே எல்லாப்பலன்களையுங் கொடுக்கும் தேவனாவான். அவன் உகந்துகொடுக்கும் பதமே அழிவற்ற பதமாகும். இப்பதத்தினையே சிஷ்டர்கள் கொண்டாடுவார்கள். வேதத்தொடு விரோதப்படாத நூலே சாத்விக நூலாம். இந்நூலைக்கொண்டே தத்துவ நிச்சயஞ்செய்யவேண்டும். எல்லாச் சொற்களுக்கும் பொருளாய் விளங்குகின்றவன் நாராயணனே. நான்முகன் சிவன் முதலானவர்கள் அன்பாற் செய்யும் வழிபாட்டிற்குகந்து வரமளிப்பவனும் இவனே. இவன்பால் விளங்கும் கல்யாணகுணங்கள் எத்துணைப்பெரியோராலும் அளவிடுதற்கரியன.

பிரமன் சிவன் முதலானவர் தியானித்து ஆராதனைசெய்தற் கமைந்தபெரியோன் நாராயணனேயென்று நாராயணோபநிடதமுதலிய சாகைகள் நிச்சயித்தன. திருமாலிடத்திலே சிவன் முதலானவர் கட்கும், ஜகத்திற்கும் உற்பத்தி ஒடுக்கங்கள் உண்டாகின்றன. இவன்

ஒருவனே உற்பத்தி நாசமில்லாதவன். மேலும் மஹாபிரளயத்தில் இவன் ஒருவனே தனியாக விளங்குவான். திருமாலின் தேவியாகிய பெரியபிராட்டியார் நித்யையாய் விளங்குவாள். இவளே பிரமருத்தி ராதிகளைச் சிருஷ்டிப்பாள். இப்பிராட்டியாரது கடாக்ஷத்திற்கு இலக்காயிருப்பவர் எவரெவரோ அவரவர் பிரமன் சிவன் இந்திரனாதி யராய் விளங்குவார்கள்.

சூரியமண்டலமத்தியில் வசிப்பவனும், காயத்திரிப்பொருளாய் விளங்குகின்றவனும் இவனே. எல்லா ஜீவாத்மாக்கட்கும் அந்த ராத்மாவாய் விளங்கும் இயல்பும் இவனுக்கேயுளது. வேள்விக்கதிபதி யாயிருக்கும் பெற்றியும் இவனிடத்திலே நிறைந்துள்ளது. கணக்கற்ற மறைகளால் பரதத்துவமுடையபொருளென்று நாட்டப்பட்ட நாரா யணனைப் பிரமன் சிவன் முதலானவர்கள் வேள்வியினால் ஆராதனை செய்து தத்தம் பதவியையடைந்தார்கள். நாராயணனாகிய மரத்திற் குப் பிரமன் சிவன் என்பவர் கிளைகளாவார்கள். திருமாலே பரமோத் தமன். பிரமன் சிவன் முதலானவர்கள் மத்தியமர். அக்கினி முத லானவர் அதமர். நாராயணன் ஆராதனையைத்தவிர முக்திக்கு வேறு மார்க்கமொன்றுமில்லை; என்று புருஷசூக்தம் தெளிவாயுரைத்தது. அநந்தவேதங்களும் போற்றும் பெருமையனும், பிரமன் சிவன் முத லானவர்கட்கு நாயகனும், பெரியபிராட்டியார்பாலன்புடையவனும் நாராயணனே.

உள்ளும் புறம்புமாய் அணுவுக்கணுவாய் மஹத்துக்கும் மஹத் தாய் பற்றற்றபரமாய் வளர்தல் குறைதலற்றதாய் ஜகத்தாய் ஜகத்துக் காதாரமாய் எல்லாக்கல்யாணகுணங்களாய் ஹேய (தோஷ) குணங்க ளற்றதாய் வேதங்கள் சொல்லும் வரம்புக்கெட்டாததாய் உருவாய் உயிருக்குயிராய் உணர்வுக்குணர்வாய் ஒளிக்கொளியாய் துரியாதீத மாய் தோன்றும்பொருளாய் தோன்றாததாய்நிர்மலமாய் மனம் வாக்குக் காயங்கட்கெட்டாததாய் அகண்டபரிபூரணமாய் விளங்குபவன் நாரா யணனே. மேலும், இவன் காலங்கடந்து குணங்கடந்து நிற்கும் விகாரமற்றவனாய் முத்தொழிலை லீலையாகக்கொள்ளும் நித்யேச்சை யுடையவனாய் முதல் இடை முடிவற்றவனாய் முக்தியளிக்கும்

முதல்வனாய் பரத்வப்பொருளாய் அநுக்ரஹஸ்வரூபனாய் பிரகிருதிப்பற்றற்ற அப்பிராகிருத ஸ்வரூபனாய் ஒன்றொழியாத எல்லாஐசுவர்யத்தையுமுடையவனாய் உலககாரணமாய் குற்றமற்றவனாய் தத்துவங்கடந்தபரம்பொருளாய் பிறப்பிறப்பற்ற ஞான ஸ்வரூபனாய்த் திகழ்கின்றவனும் இவனே; என்பதைப் பலநூல்களையும் கற்றுணர்ந்த அறிஞர்கள் ஒப்புக்கொள்வதற்காக வேதங்களாலும் முப்பத்திரண்டு உபநிடதங்களாலும் பதினெண்ஸ்மிருதிகளாலும் பதினெண்புராணங்களாலும் பதினெண் உபஸ்மிருதிகளாலும் ஸ்ரீ ராமாயண பாரதமென்ற இதிஹாஸங்களாலும் பலசங்கிதைகளாலும் வைகானச பஞ்சராத்திர முதலிய நூல்களாலும் சோதிடத்தாலும் வாகடத்தாலும் பரதசாஸ்திரத்தாலும் சிற்பநூலாலும்சொல்லப்பட்ட பிரமாணங்களை நன்கெடுத்தியம்பினேன்.

ஆகமப்பாவாய்! வேதத்தாற் போற்றப்பெற்ற நாராயணனுக்கு எல்லாத்தேவர்களும் சரீரங்களாவார்கள். ஒத்தாருமிக்காருமில்லாத அவன் எல்லாச்சொற்களாலும் சொல்லப்படும் பெற்றியினனாயும் அகாரவாச்யனாயும் திகழ்வான். இவன் எல்லாரிடத்திலும் அந்தர்யாமியாயிருப்பதால் எவரெவர் எந்தெந்தப் பெயரைச்சொல்லி எந்தெந்த வகையாகத் தியானித்துப் பூஜைசெய்தாலும் அந்தந்த மாந்தர்கட்கு அந்தந்தமூர்த்திகளில் அந்தராத்மாவாயிருந்து அவரவர் விரும்பிய பலன்களைக் கொடுப்பான். இந்த விவரங்களைப் பகவற்கீதையில் காணலாம். எல்லாவுலகத்தும் எங்கும் தானாயிருந்து எல்லா ஆராதனங்களையும் ஏற்றுக்கொள்வான். இவனில்லாத இடமில்லையென்ற கவர்படாத ஏகசிந்தையுடையாரின் அறிவே அறிவாகும். இவ்வறிவினையுடையவர்களே பிரமஞானியாவார்கள்; என்றுரைத்தாள். இதனைக்கேட்ட ஆகமவல்லி நீ இங்குரைத்தவையெல்லாம் ஒக்குமொக்குமென்று சம்மதித்தாள்.

இவ்வாறு ஆகமவல்லியும், ஆரணவல்லியும் சம்மதமுற்று அளவளாவியதைக் கண்ட அறிவொழுக்கங்களிற் சிறந்த அவையினர் இங்கு இவ்விருபெண்களும் ஒருவருக்கொருவர் வாதஞ்செய்ததும், அதற்குத் தக்கவிடைபகர்ந்ததும் தம்முள் உடன்பட்டுக்கொண்டதுங்கண்டு

வாறே இந்நூலும் பரமார்த்தத்தை வெளியிடுகின்றதனுல் இதற்கொப்பாகிய நூல் பிறிதொன்றில்லையென்று அவையோருளமகிழ அருளிச்செய்தான்.

வேத சாஸ்திர பாராங்கதரான பெரியோர்களும், அறுசமயவாதியரும், மற்றுமுள்ளவர்களும்சம்மதிக்குமாறு இந்நூலாசிரியர் பரமார்த்தங்களை விரித்து அரங்கேற்றுகின்ற காலத்தில் கரியமாணிக்கப்பெருமாள் உகந்து சம்மானமாக இவருக்கு ஆபரணமளித்தான். இஃதல்லாமலும் வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளையாபரணமணிந்து விளங்காநின்றசரஸ்வதி தேவியானவள் மிக்கமகிழ்ச்சியுந்த, சபையோர் காண ஓடிவந்து உள்ளத்தைத்தெளிவிக்கின்ற இந்நூலைத்தன்மார்பிலணைத்து முறுவல்கொண்டு மகிழ்ந்து தன் சிறந்த கையாலெடுத்து இந்நூலாசிரியரிடத்திற் கொடுத்தாள். வேதகிரியில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான், வேதாந்தத்தெளிவின் பயனைத் தமிழாகச் செய்த இந்தத்திருமுறையைச் சபையோர் காண ஓர் ஸ்தம்பத்தில் ஆவிர்ப்பவித்து, 'அங்கீகரித்தோ' மென்றருளிச்செய்தான்.

சைவர் முதலான பரவாதியர் உள்ளந்தெளிய சிறந்த ஸபையில் கருமாமணிவண்ணன் கோயிலின் முன்னர் பெருந்தீவளர்த்து, அதில் இந்நூலைப்பகற்பொழுது முழுமையுமிட்டுப் பின்னெடுத்துப்பார்த்தவளவில் உருக்கெடாதிருந்தது. அதனுல் இந்நூல்போல் தெய்விகமுடைய நூல் பிறிதொன்றில்லை. இப்பெருநூலிற் சொல்லப்பட்ட பரமார்த்தத்தை முரணின்றி எவருடன்படுவார்களோ அவர்கள் சர்வக்ஞராய்த் திகழ்வார்கள்,

**அரிதைப்பதிவாழரிதாதன் அருமாமறையைத்தமிழ்செய்து**
**விரிவற்றுரைத்தவிருசமயவிளக்கநூலின்பரமார்த்தம்**
**பரிவுற்றுணர்வாரதுகேட்பார்படிப்பார்பாராட்டுதல்செய்வார்**
**இருமைப்பயனென்றுரைக்கின்றவிகழும்பாழும்பெறுவாரே.**

சித்தாந்தப்படலம் முற்றும்.

அரிதாசர் திருவடிகளே சரணம்

---

ஶ்ரீ:

# இருசமய விளக்கத்தின் அட்டவணை.


| காண்டம், படலம், பரிச்சேதம். | பக்கம் |
| --- | --- |
| **க-வது, பாயிரகாண்டம்.** | 1 |
| க-வது, கடவுள்வாழ்த்துப்படலம் ... | ,, |
| உ-வது, நூற்பெயர் விளக்கப்படலம் ... | 2 |
| ங-வது, விடயத்திறப்படலம் ... | 3 |
| ச-வது, புராணவிவேகப்படலம் ... | 14 |
| ரு-வது, நகரப்படலம் ... | 15 |
| சா-வது, நதிப்படலம் ... | 16 |
| எ-வது, தோத்திரப்படலம் ... | 17 |
| அ-வது, கடாவிடைப்படலம் ... | 19 |
| கூ-வது, அந்தணர் சந்நிதிப்படலம் ... | 24 |
| **உ-வது, பூர்வகாண்டம்.** | 26 |
| **க-வது, உலகவழக்கப்படலம்** | ,, |
| க-வது, அறுபத்துமூவர்பரிச்சேதம் ... | ,, |
| உ-வது, சிற்பசாத்திரப்பரிச்சேதம் ... | 27 |
| **உ-வது, வராகாவதாரப்படலம்** | 30 |
| க-வது, திருவாழிமலையென்கிற திருவண்ணுமலைப்பரிச்சேதம் | ,, |
| உ-வது, மோகினிவேடமென்கிற நாச்சியார் திருக்கோலப் பரிச்சேதம் ... | ,, |
| **ங-வது, பலமுனிவர் சாபப்படலம்** | 32 |
| க-வது, தாருகாவனசாபப்பரிச்சேதம் ... | ,, |
| உ-வது, தன்வினை தன்னைச்சூழ்ந்த பிருகுசாபப்பரிச்சேதம் | 33 |
| ங-வது, கண்ணுவகவுசிகச்சாபப்பரிச்சேதம் ... | 36 |
| ச-வது, நாரதமுனிசாபநிவாரணப்பரிச்சேதம் ... | 37 |
| ரு-வது, அம்பரீடர்சாபநிவாரணப்பரிச்சேதம் ... | ,, |
| சா-வது, விகுட்சிசாபநிவாரணப்பரிச்சேதம் ... | 39 |

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.


| படலமும், பரிச்சேதமும். | பக்கம் |
| --- | --- |
| எ-வது, கிருத்திமப்பரிச்சேதம் ... | 41 |
| அ-வது, அச்சுவத்தாமாசாபநிவாரணப்பரிச்சேதம் ... | 44 |
| கூ-வது, பிருகுவிடுசிவசாபசம்பந்தப்பரிச்சேதம் ... | 45 |
| ய-வது, கவுதமர்விடுசிவசாபசம்பந்தப்பரிச்சேதம் ... | 48 |
| யக-வது, பிரமாவிடுசிவசாபசம்பந்தப்பரிச்சேதம் ... | 49 |
| யஉ-வது, விச்சுவசிருட்டியர்கள்யாகத்தில் தக்கன்விடுசிவ சாபசம்பந்தப்பரிச்சேதம் ... | 50 |
| ச-வது, தக்கன்யாகப்படலம் | 53 |
| க-வது, உமையவளுயிர்விடும்பரிச்சேதம் ... | ,, |
| உவது, பிரமகண சிவகணப்போர்பொரு பரிச்சேதம் ... | 54 |
| ங-வது, வீரபத்திரன் சிவன்சடையிலுற்பத்திபரிச்சேதம்... | 55 |
| ச-வது, மாதவன் வீரனமர் மருவாத பரிச்சேதம் ... | 55 |
| ரு-வது, பரப்பிரமதரிசனப்பரிச்சேதம் ... | 57 |
| சு-வது, மருத்துவயாகபங்கப்பரிச்சேதம் ... | 58 |
| ரு-வது, சர்வசங்காரவத்து நிருணயப்படலம் | 59 |
| க-வது, சிவனபசயப்பரிச்சேதம் ... | ,, |
| உபேந்திரனுரகாபரணனை வென்றகதை ... | 59 |
| சிவன் மோகனமடைந்தகதை .... | 60 |
| நாராயணமுனி நக்கன் கழுத்தை நெரித்தகதை .... | ,, |
| உ-வது, சிவனதிடுக்கண்டீர்த்த பரிச்சேதம் ... | 61 |
| பரப்பிரபம் பிரமசாரி வடிவாகிப் பஸ்மாசுரனை வென்ற கதை ... | 62 |
| அந்தகாசுரன் கதை ... | 63 |
| ங-வது, மகா பிரளயத்தில் விதிசிவாதிகளைச் சங்கரித்த பரிச்சேதம் ... | 64 |
| ச-வது, பிரமருத்திரேந்திராதிசரபாவதாரப்பரிச்சேதம் ... | 66 |
| ரு-வது, சரபசங்காரப்பரிச்சேதம் .... | 68 |
| சு-வது, இரணியசமூக சங்காரப்பரிச்சேதம் .... | 69 |
| எ-வது, தெளிசிங்கர் வைரவற்கருள்செய்தபரிச்சேதம் ... | 70 |

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.


| படலமும், பரிச்சேதமும். | பக்கம் |
|---|---|
| ௮-வது, திரிபுரசங்காரப்பரிச்சேதம் ... | 71 |
| ௯-வது, திரிபுரதகனமுயற்சிப்பரிச்சேதம் ... | 72 |
| ௰-வது, விஷ்ணு சிவன்முன்னிலையில் திரிபுரத்தையெரித்த பரிச்சேதம் ... | 74 |
| ௰௧-வது, விருத்திரன் கதையைத்திரபுரதகனத்திற்கு உதாரணப்பரிச்சேதம் ... | 75 |
| இந்திரன் முன்னிலையில் ஸ்ரீய: பதியான ஈசுவரன் விருத்திரனை வென்றகதை ... | 76 |
| ௰௨-வது, உருத்திரனை பாத்திரத்தில் பெருமாள் காளகூட விஷபாரணப்பரிச்சேதம் ... | ,, |
| பகவத் ஸ்வரூபாநுபவத்தில் அரனுக்குக்கிடைத்தது விஷ சமர்ப்பணமென்றறிக. | 77 |
| ௬-வது, வரபாலனப்படலம் | 78 |
| ௧-வது, கைலாயயாத்திரைப்பரிச்சேதம் ... | ,, |
| ௨-வது, அரன் அறவாழியையாராதித்த பரிச்சேதம் ... | 79 |
| ௩-வது, மோகனநூலுற்பத்திப்பரிச்சேதம் ... | 81 |
| ஆதிவராகபுராணத்தில் ஆதிநாராயணர் அம்பிகாபதிக்கு விசுவரூபதரிசனங்கொடுத்து, தனது ஈசுவரத்துவமும் சங்காரத்துவமும் அநுக்கிரசித்த கதை | 82 |
| ௪-வது, வரபாலனத்துக்குதாரணப்பரிச்சேதம் ... | 83 |
| ௫-வது, கண்டாகன்றன் பரிச்சேதம் ... | 85 |
| பேரருளாளன் கண்டாகள்றனக்குச் சிவலிங்கபக்தி விட்டபிறகு அவனதுபிரமகத்தி தீர்த்ததுக்காக உதகரித்த இக்கதை | 86 |
| ௬-வது, நிர்ஹேதுகவைபவப்பரிச்சேதம் ... | 87 |
| ௭-வது, கைலையாளிக்குப்பிரமஅத்தி தீர்த்தபரிச்சேதம் ... | 89 |
| ௮-வது, காசியைக்கபாலிக்குப்பிரசாதித்த பரிச்சேதம் ... | 90 |
| ௯-வது, ஸ்ரீராமதாரகப்பிரமமந்திரோபதேசப்பரிச்சேதம் | 91 |

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.


| காண்டம், படலம், பரிச்சேதம். | | பக்கம் |
|---|---|---|
| எ-வது, சைவாகமவிதிப்படலம். | | 92 |
| க-வது, திருநீற்றுப்பஞ்சாட்சரப்பரிச்சேதம் | ... | ,, |
| உ-வது, உருத்திராக்கப்பரிச்சேதம் | ... | 97 |
| ந-வது, சிவபூஜைப்பரிச்சேதம் | ... | 98 |
| ச-வது, சிவதீட்சைப்பரிச்சேதம் | ... | 104 |
| ரு-வது, பசுபதிபாச சிவயோகப்பரிச்சேதம் | ... | 105 |
| சு-வது, சகளநிட்களப்பரிச்சேதம் | ... | 107 |
| எ-வது, சிவலிங்மாலியவிசேடப்பரிச்சேதம் | .... | 109 |
| அ-வது, வீரமகேச்சுரப்பரிச்சேதம் | ... | ,, |
| ந-வது, உத்தரகாண்டம். | | 111 |
| க-வது, வேதவேதாந்தவிதிப்படலம் | | ,, |
| க-வது, வெண்ணீற்றை மறுத்தபரிச்சேதம் | .... | ,, |
| உ-வது, திருமண்காப்பு என்கிற ஊர்த்துவபுண்ட்ர பரி | .... | 113 |
| ந-வது, திருவிலச்சனைப்பரிச்சேதம் | ... | 120 |
| ச-வது, பஞ்சாட்சர மறுப்புப்பரிச்சேதம் | .... | 126 |
| ரு-வது, எண்ணெழுத்தினென்முன பிரணவப்பரிச்சே | ... | 127 |
| சு-வது, ஸ்ரீமத் அட்டாக்ஷரபெரியதிருமந்திரப்பரிச்சே | ... | 128 |
| எ-வது, தேகநிலைவைதிகதத்துவப்பரிச்சேதம் | .... | 131 |
| அ-வது, அர்ச்சாதிப்பரிச்சேதம் | ... | 135 |
| கூ-வது, சித்துநிலையபேதயாயாவாதகண்டனப்பரிச்சே | .... | 137 |
| உ-வது சைவமோகனுகமமறுப்புப்படலம் | | 139 |
| க-வது, தேகநிலைசைவதத்துவமறுப்புப்பரிச்சேதம் | ... | ,, |
| உ-வது, சிவபூஜைமறுப்புப்பரிச்சேதம் | ... | 142 |
| ந-வது, சிவபதமுத்திமறுப்புப்பரிசேதம் | ... | 143 |
| பவுண்டரிகன் கதை | .... | 144 |
| சாதனையோகஞ்செய்த சங்கரசிவன்கதை | ... | 146 |

